بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

1) இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்
(TABLE OF CONTENTS)↓↓↓↓



விஞ்ஞான விதிகள் பொய்த்துப் போகின்றன !

என் இனிய பொழுதுகள் குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.
ஆதம் அறுபது முழமும் ஆது மக்கள் அறுபது முழுமும்
குள்ளர்கள் யஃஜூது மஃஜூதும் மானிடவியலில் மறைந்து போகிறார்கள்

என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.
கப்பலில் தப்பிய நூஹூ மக்களும் கடல் வெள்ளத்தில்
கால்நடையாய் தப்பியமூஸா மக்களும்
நீரியியல் விதிக்குள் வரவே இல்லை

என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.
மலைப்பாறை பெற்றெடுத்த ஒட்டகமும்
பூமி பிளந்து வந்த தாப்பத்துல் அர்ளும் உயிரியல் விதியில்
இடம் பெறவில்லை .

என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.
நெருப்புக்குள் வசிக்கும் இப்ராஹீமும் பசுமை மரத்தில் வசிக்கும் நெருப்பும்
தெர்மோ டைனமிக் விதிகள் எரிந்து போகிறது

என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.
கன்னி வயிற்றில் உதித்த ஈஸாவும் மீன் வயிற்றில் வசித்த யூனூஸும்
பயோலாஜி விதிகள் பதுக்கிக் கொள்கிறது

என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது
விண்ணில் பிளந்த நிலவும் விண்ணில் ஏறி வித்தகனைக் கண்டதும்
வானவியல் விதிக்குள் இன்னும் வந்து சேரவே இல்லை .
என் இனிய பொழுதுகள்
குர்ஆன் ஆய்வில் மகிழ்ந்து போகிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 /// +91936018103

மீஸான் என்னும் தராசு 04
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் (51)



நன்மை தீமைகள் நிறுக்கப்படும்போது சிலருக்கு இரண்டும் சமமாக இருக்கும் .
காசை சுண்டி பூவா ? தலையா ? போட்டு பார்க்கும் போது காசு பூவையும் காட்டாமல் , தலையையும் காட்டாமல் நெட்டுக்கு நின்றால் எதை எடுத்துக் கொள்வது ?
இந்த மாதிரி நிலை மீஸானில் எடை போடும் போது , தராசின் முனைமுள் எந்தப் பக்கமும் சாயாமல் நட்ட நடுவில் நின்று விடும் .

அப்போது அவர்கள் தம் தம் நன்மை தட்டுக் கனப்பதற்காக ஒரேயொரு நன்மை இல்லாமல் தயங்குவார்கள் .
அல்லாஹூ தஆலா அந்த ஒவ்வொருவரையும் பார்த்து...,
"ஜனங்களிடத்தில் போய் ஒரே ஒரு நன்மையைக் கேட்டு வாங்கு அதைக் கொண்டு நான் உன்னை சுவர்க்கம் நுழைய செய்கிறேன் "
உடனே அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் போய்க் கேட்பார்கள்.

" ஒரே ஒரு நன்மை! .ஒரே ஒரு நன்மை !"

அப்போது எல்லோரும், "ஒரு சிறு நன்மையானாலும் அது எங்களுக்கு வேண்டியது . ஆகையால் தரமாட்டோம்" என்று சொல்லி விடுவார்கள் .
பின்பு அங்கே ஒருவன் ஒரே ஒரு நன்மையைக் கேட்டு அலைபவர்களை பார்த்து , அவர்களில் ஒருவரைக் கூப்பிட்டு ...,
" என் பட்டோலையில் நான் செய்ததாக ஒரே நன்மைதான் உண்டு. அதைக் கொண்டு நான் என்ன சுவர்க்கமா செல்ல முடியும் ? ஆகையால் அதை ஹதியாவாக உனக்கு கொடுத்து விடுகிறேன் . எடுத்துக் கொள் .நீயாவது சுவர்க்கம் செல் "
உடனே அதைப் பெற்றுக் கொண்டு மீஸான் பக்கம் திரும்பி ஓடோடி வருவார் அவரிடம் அல்லாஹூ தஆலா , " உனக்கு ஒரே ஒரு நன்மையை ஹதியாவாகக் கொடுத்தவனை அழைத்து வா " என்று கூறுவான் .
அவன் வந்ததும் ..,

அந்த ஒரே ஒரு நன்மையைக் கொடுத்தவனிடம் அல்லாஹூ தஆலா :
" என்னுடைய கொடை உன்னுடைய கொடையைப் பார்க்கிலும் மஹா பெரியது என்பதை நீயும் அறிந்து கொள்ள, ஒரே ஒரு நன்மையைக் கொடுத்த நீயும், அதை ஹதியாவாகப் பெற்ற பெற்ற அவனும் சுவர்க்கத்திற்குள் நுழையுங்கள் "
அடுத்து , நன்மை , தீமை இரண்டும் சரி நிறையுள்ளவர்களைச் சுவர்க்கத்திற்கும் அனுப்பாமலும், நரகத்திற்கும் அனுப்பாமலும் 'அஹுராப் ' என்னும் தானத்தில் நிறுத்தி வைக்கும் படி கட்டளை பிறக்கும்.

'அஹுராப் ' என்பது சுவர்க்கத்திற்கும், நரகத்திற்கும் மத்தியில் உள்ள மிகப் பெரிய ஒரு மதில் சுவர். அதன் மீது இருப்பவர்களுக்கு சுவர்க்கமும் தெரியும் , நரகமும் தெரியும் . அவர்கள் சுவர்க்கத்தைப் பார்த்து பார்த்து சந்தோஷப்பட்டாலும் , நரகத்தைப் பார்த்து அஞ்சி நடுங்குவார்கள் .

இறுதியில் இம் மதில் சுவர் மீது இருப்பவர்களை சுவர்க்கத்தில் நுழையச் செய்வான் .அதற்கு முன் அவர்களை **"நஹருல் ஹயாத் "** என்னும் ஜீவ நதியில் குளிக்கச் செய்து பின்
சுவர்க்கத்தில் நுழையச் செய்வான் .

இவர்களை அஹுராப்காரர்கள் என்பதற்கு அடையாளமாக ஒவ்வொரு கழுத்துக்களிலும் , வெண்ணிற மச்சம் ஒன்று உண்டாயிருக்கும். இவர்கள் "சுவர்க்கவாசிகள் எளியோர் '' என்று சொல்லப்படுவார்கள் .
وَبَيْنَهُمَا حِجَابٌ وَعَلَى الْأَعْرَافِ رِجَالٌ يَّعْرِفُوْنَ كُلًّا بِسِيْمٰهُمْ وَنَادَوْا اَصْحٰبَ الْجَنَّةِ اَنْ سَلٰمٌ عَلَيْكُمْ لَمْ يَدْخُلُوْهَا وَهُمْ يَطْمَعُوْنَ
(நரகவாசிகளும் சுவர்க்கவாசிகளும் ஆகிய) இவ்விருவருக்குமிடையில் ஒரு மதில் இருக்கும். அந்த மதிலின் சிகரத்தில் சில மனிதர்கள் இருப்பார்கள்.
(நரகவாசி சுவர்க்கவாசியாகிய) ஒவ்வொருவரையும் அவர்களின் (முகக்) குறியைக் கொண்டே இவர்கள் அறிந்து கொள்வார்கள். இவர்கள் சுவர்க்கவாசிகளை நோக்கி "(இறைவனுடைய) சாந்தியும் சமாதானமும் உங்கள் மீது உண்டாவதாகுக!" என்று சப்தமிட்டுக் கூறுவார்கள்.
(சிகரத்தில் இருக்கும்) இவர்கள் (இதுவரையிலும்) சுவர்க்கத்தில் நுழையவில்லை. எனினும், அவர்கள் (அதில் நுழைவதை) மிக ஆவலுடன் ஆசைப்பட்டுக் கொண்டிருப்பார்கள்.
( அல்குர்ஆன்:7:46)
ர.ரா

மீஸான் என்னும் தராசு 05
(இஸ்லாத்தின் அடிப்படைக்
கோட்பாடுகள் 52 )



அன்றைய தினம் நன்மை தீமைகளை
எடைபோடுவது சத்தியம் ஆகவே
எவருடைய எடை (நன்மையால்)
கனமானதோ அவர்கள்தான்
வெற்றியாளர்கள். அல் குர் ஆன் : (7 : 08 )
மறுமையில் அடியானின் மீஸானில்
முதலாவது வைக்கப்படுவது அவன்
தனது குடும்பத்தாருக்கு செய்த
செலவாகும்..
ஒரு தோழர் நபி இடம் வருகை தந்து
சொன்னார் :

"நாயகமே எனது அடிமைகள்என்னிடம் பொய் கூறுகின்றனர் எனது பொருளில் மோசடி செய்கின்றனர் எனக்கு மாறு செய்கின்றனர் .
எனவே அவர்களை நான்
திட்டுகின்றேன்,அடிக்கின்றேன் நான்
இவர்களுடன் இவ்வாறு நடந்து
கொள்வதால் மறுமையில் எனது நிலை
எப்படி இருக்கும் ? "என்று கேட்டார்
அப்பொழுதுபெருமானார் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் .
" பொய் இத்துடன் அவர்களுக்கு
நீ கொடுத்த தண்டனைகளும் அளந்து
பார்க்கப்படும்.அப்பொழுது அவர்களின் பாவங்களும் உனது தண்டனைகளும்
சமநிலையில் இருந்தால் அது உனக்கு
சாதகமும் அல்ல பாதகமும் அல்ல.
அவர்களின் பாவங்களை விடவும் உனது
தண்டனை குறைவாக
இருக்குமானால் , அது உனக்கு சிறப்பு
சேர்க்கும்.அவர்களின் பாவங்களை
விட உனது தண்டனைஅதிகமாக
இருக்குமானால் அவர்களுக்காக
உன்னை பழிவாங்கப்படும் " என்றார்கள்

இதை கேட்டஅம்மனிதர் அழுது விட்டார் அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் ,
"கியாமத் நாளுக்காக நீதியான தராசுகளை நிறுவுவோம். எவருக்கும் சிறிதளவும் அநீதி இழைக்கப்படாது. ஒருகடுகு விதை அளவே இருந்த போதும் அதையும் கொண்டு வருவோம். கணக்கெடுக்க நாமே போதும். (அல்குர்ஆன்21:47)

இந்த வசனத்தை நீங்கள் ஓதவில்லையா? என்று கேட்டார்கள்
“நாயகமே அவர்களை நான் பிரிவது
தான்எனக்கும் அவர்களுக்கும் நலமாகும்எனவே அவர்கள் அனைவரையும் உரிமை விட்டதற்கு நான் உங்களை சாட்சியாக்குகின்றேன் ” என்று கூறி விடுதலை செய்துவிட்டார்
நூல்;மிஸ்காத் பக்கம். 426

ஜாபிர்(ரலி)கூறுகிறார்கள் :
"பெற்றோருக்கும் மனைவிமார்களுக்கும்நம்மிடம் ஜீவனாம்சம் பெறக் கடமைபட்டவர்களுக்கு வசதி இருந்தும்செலவு செய்யாமல் கஞ்சத்தனம் செய்வது மனிதனின் மீஸானையும்
மறுமையையும் அது பாதிக்கும்...
மறுமையில் மீஸான் ஏற்படுத்தப்பட்டு
அதில் ஒரு மனிதனையும் அவன் மீது
பதிவான நன்மை தீமைகளையும்
வைக்கப்படும் அப்பொழுது தராசு
ஒருபக்கமாக சாயும் அதாவது நன்மை
தட்டு லேசாகும் உடனே அவன் நரகிற்கு
அனுப்பப்படுவான் .அவன் அங்கிருந்துசெல்லும் போது அல்லாஹ்வின் அருகில்இருந்து சப்தமிட்டு ஒரு மலக்கு
சொல்வார் :
"அவசரப்படாதீர்கள் அவருக்கு ஒரு நன்மை இருக்கின்றது உடனே அங்கு ஒரு காகிதம் கொண்டு வரப்படும் அதில் "லாஇலாஹ இல்லல்லாஹும் அதனுடைய நன்மையும் இருக்கும் "அதை அந்த தட்டில் அம்மனிதனுடன் வைக்கப்படும் அப்பொழுது மீஸான்
அதனுடன் சாயும் நன்மை தட்டு கனமாகிஅவன் சொர்க்கம் செல்வான்.
நூல் .துர்ருல் மன்சூர்
தாவூது நபி மீஸான் தராசை தனக்கு
காட்டும் படி அல்லாஹ்விடம்

சொன்னார்கள். அல்லாஹ் காட்டினான்அப்பொழுது அதனுடைய ஒவ்வொரு தட்டும் கிழக்குப் பகுதிக்கும் மேற்குப் பகுதிக்கும் இடையில் உள்ள அனைத்தையும் உள்ளடக்கும் அளவு இருந்ததைக் கண்டு மயங்கி விழுந்து விட்டார்கள்

இந்த தட்டுகளை நன்மையைக்கொண்டுநிறப்பும் சக்தியை யார் பெறமுடியும். என்று கேட்டபொழுது அல்லாஹ் சொன்னான் :
"எனது அடியானை நான் பொருந்தி கொண்டுவிட்டால் அவன் வழங்கும் ஒரு பேரித்தகனியின் தர்மத்தைக் கொண்டே அதை நான் நிரப்பிவிடுவேன் "என்றான்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "யார் தனது சகோதரரின் ஒரு தேவையைநிறைவேற்றுகின்றாரோ
அவனுடைய மீஸானுக்கு அருகில்
நான் நிற்பேன் அதுஏற்றமானால் சரி.
இல்லையனால்அவருக்காக நான்
அல்லாஹ்விடம் ஷபாஅத் செய்வேன்
என்றார்கள்.

நூல்: துர்ருல் மன்ஸூர்.
நபி (ஸல்) அவர்கள் . அபூதர்ருல் கிபாரி
(ரலி) அவர்களிடம் அமல் செய்வதற்கு
இலகுவான மீஸானில் கனமானதுமானநன்மைகளை உங்களுக்கு நான்
அறிவித்து தரவேண்டாமா என்று கேட்டு விட்டு சொன்னார்கள். நீங்கள்
நற்குணத்தையும் மௌனத்தையும் பற்றிபிடித்துக்கொள்ளுங்கள். இறைவன் மீதுஆணையிட்டு கூறுகின்றேன். இவ்விரண்டையும் போன்று படைப்புகள்வேறு எந்த அமலையும் செய்வதில்லை.
நூல் : துர்ருல் மன்ஸூர்.
நாவிற்கு இலகுவான மீஸானில் கனமான ரஹ்மானுக்கு பிரியமான வார்த்தைகள் "சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அளீம் "என்பதாகும் என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்
நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
மறுமையில் உலமாக்களின் பேனா மையும் ஷுஹதாக்களின் இரத்தமும் மீஸானில் அளக்கப்படும் அப்பொழுது ஷுஹதாக்களின் இரத்தத்தை
உலமாக்களின் பேனாமை
மிகைத்துவிடும்.
நூல் : துர்ருல் மன்ஸூர்

அறிவிப்பு

இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்



என்கிற நீண்ட நெடிய இவ் ஆய்வு "மரணத்திற்கு பின் ஆன்மாக்களின் நிலை " என்ற முதல் பதிவில் இருந்து இத்தொடர் ஆரம்பித்து 25 பதிவுகளோடு நிறைவு செய்யலாம் என்ற எண்ணத்தில்
1) தௌபா (மீளுதல்)
2) ஸக்றாத் (மரணப்படுக்கையில் மரண மயக்கம்)
3) மவ்த்து (மரணம்)
இந்த தலைப்புகளைத் தவிர்த்தேன் .
"மரணத்திற்கு பின் ஆன்மாக்களின் நிலை " என்று இத்தொடரின் முதல் பதிவை ஆரம்பித்தேன் .
உங்களின் ஆர்வம் கண்டு இத்தொடரை 100 பதிவுகளாக நிறைவு செய்ய இன்ஷா அல்லாஹ் நாடியுள்ளேன்.
இனி வர உள்ள பதிவுகள் :

1) ஸிராத் (பாலம்)
2) ஹௌலு (தண்ணீர் தடாகம்)
3) ஜன்னத் (சுவர்க்கம்)
4) ஜஹன்னம் (நரகம்)
5) ஷபாஅத் (மன்றாட்டம்)
ஷபாஅத் ( சிபாரிசு இத்தொடரின் 6 வது பதிவில் உள்ளது)
6) உறுஸ் (திருக்கல்யாணம்)
7) லியாபத் (விருந்து)
8)தஜல்லி (தோற்றம்)
9) லிகா (தரிசனம்)
வரை இன்ஷா அல்லாஹ் எழுத உள்ளேன் .

தவிர்த்த தலைப்புகளான
1) தௌபா (மீளுதல்)
2) ஸக்றாத் (மரணப்படுக்கை)
3) மவ்த்து (மரணம்)
இம்மூன்று விடுபட்ட தலைப்புகளையும் மீஸான் (தராசு) பதிவுக்குப் பின் தொடர உள்ளேன்.
ர.ரா
இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் பதிவுகள் அனைத்துமே விஞ்ஞானத்தில் காட்டப்படும் உபகர்ணங்களைப் போல அதோ , இதோ என்று எந்த வஸ்துகளையும் காட்ட முடியாது . விஞ்ஞான விதிகள் போல பூச்சி பூச்சியாக கணக்கெழுதி காட்டவும் முடியாத இஸ்லாமிய கோட்பாடுகள் இது.
இது முழுமையாக குர்ஆன் , ஹதீஸ் மூலம் மரணத்திற்குப் பின் தொடரும் ஆன்மாக்களின் போராட்டக் களம் .

1. இதை எல்லா ஆன்மாக்களும் கடந்துதான் ஆக வேண்டும் என்ற கட்டாய நிலை . அப்போது அனுபவிக்க வேண்டிய பயம் கலந்த விஷயங்களை இப்போதைய பாதி வாழ்க்கையில் நாம் முன்கூட்டியே அறிந்து கொள்கிறோம் . அவ்வளவுதான் .

இது ஒன்றும் கட்டுக்கதைகள் அல்ல, சுவராஸ்யம் குன்றாமல் எழுத ;
கொண்ட ஈமானின் அடித்தளக் கோட்பாடுகள் . இதன் மீதுதான் இஸ்லாம் என்னும் மாபெரும் கோட்டையைக் கட்டி , அந்த கோட்டையின் கோமகனாக உங்களையும் , என்னையும் அல்லாஹு தஆலா ஆள வைத்துள்ளான் .
மறுமை வாழ்வு பூலோக வாழ்வு மாதிரி அற்ப நூறு வருடங்களைக் கொண்டது அல்ல ; அது யுக யுகங்களாக என்றும் வாழும் பெருவாழ்வு அது . இதற்குரிய பிரயாசனங்கள் எடுத்தே ஆக வேண்டும் . எடுப்போம் அழிவில்லாத பெருவாழ்வை அடைந்தே தீருவோம் .
ர.ரா

**Rahmath Rajakumaran**

இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் பதிவுகள் அனைத்துமே விஞ்ஞானத்தில் காட்டப்படும் உபகர்ணங்களைப் போல அதோ , இதோ என்று எந்த வஸ்துகளையும் காட்ட முடியாது . விஞ்ஞான விதிகள் போல பூச்சி பூச்சியாக கணக்கெழுதி காட்டவும் முடியாத இஸ்லாமிய கோட்பாடுகள் இது.
இது முழுமையாக குர்ஆன் , ஹதீஸ் மூலம் மரணத்திற்குப் பின் தொடரும் ஆன்மாக்களின் போராட்டக் களம் .
இதை எல்லா ஆன்மாக்களும் கடந்துதான் ஆக வேண்டும் என்ற கட்டாய நிலை . அப்போது அனுபவிக்க வேண்டிய பயம் கலந்த விஷயங்களை இப்போதைய பாதி வாழ்க்கையில் முன்கூட்டியே அறிந்து கொள்கிறோம் . அவ்வளவுதான் .
இது ஒன்றும் கட்டுக்கதைகள் அல்ல, சுவராஸ்யம் குன்றாமல் எழுத ;
கொண்ட ஈமானின் அடித்தளக் கோட்பாடுகள் . இதன் மீதுதான் இஸ்லாம் என்னும் மாபெரும் கோட்டையைக் கட்டி , அந்த கோட்டையின் கோமகனாக உங்களையும் , என்னையும் அல்லாஹு தஆலா ஆள வைத்துள்ளான் .
மறுமை வாழ்வு பூலோக வாழ்வு மாதிரி அற்ப நூறு வருடங்களைக் கொண்டது அல்ல ; அது யுக யுகங்களாக என்றும் வாழும் பெருவாழ்வு அது . இதற்குரிய பிரயாசனங்கள் எடுத்தே ஆக வேண்டும் . எடுப்போம் அழிவில்லாத பெருவாழ்வை அடைந்தே தீருவோம் .

தவ்பா - மீளுதல் 1

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 53)



இஸ்லாமிய வழக்கில் பாவமன்னிப்பு (தவ்பா) என்றால் , 'பாவங்களை விட்டு அல்லாஹ்வின் பக்கம் திரும்புதல் ' என்று பொருள்.

ஒரு மனிதன் பாவத்தை செய்தவுடன் அல்லாஹ்வை விட்டுத் தூரமாகி விடுகிறான். அவன் பாவமன்னிப்புக் கோரி திரும்பினால் அல்லாஹ்வினால் மன்னிக்கப்பட்டு அவனுக்கு நெருக்கமாகிறான். இதையே " தவ்பா " எனப்படுகிறது.
இதையே 'அல்லாஹ் அவன் பக்கம் திரும்பினான்' என்று சொன்னால் அல்லாஹ் அவனது பாவமன்னிப்பைக் கோரலை ஏற்றுக்கொண்டான் என்று பொருள்.
ஒருவரின் தவ்பா ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு நிபந்தனையும் இருக்கிறது.
அது அவர் தம் பாவத்தைக் கைவிட்டு நேர்வழியில் செல்வதாகும்.

தவ்பா என்பது, அல்லாஹ்விடம் திரும்புவதற்கு 3 ஷரத்துக்கள்
1) பாவங்களை விட்டு விலகி அவற்றை வெறுப்பது,
2) அல்லாஹ்வுக்கு கீழ்படிவதில் உள்ள குறைபாடுகளை எண்ணி வருந்துவது,
3) அப்பாவத்தை மீண்டும் செய்யாமல் இருக்க உறுதி எடுப்பது. இதில் ஒன்று குறைந்தாலும், உங்கள் தவ்பா தூய்மையானது அல்ல.

فَمَنْ تَابَ مِنْ بَعْدِ ظُلْمِهٖ وَاَصْلَحَ فَاِنَّ اللّٰهَ يَتُوْبُ عَلَيْهِ اِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ
எவரேனும் தன்னுடைய (இத்) தீயச் செயலுக்குப் பின்னர் (கைசேதப்பட்டு தன் குற்றத்தை) சீர்திருத்திக் கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் அவருடைய பாவங்களை மன்னித்து விடுவான். (ஏனென்றால்) நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவனாகவும், நிகரற்ற அன்புடையவனாகவும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 5:39)
ஒருவன் செய்யும் பாவங்களானது பிறர் சம்பந்தம் உள்ளதும் , பிறர் சம்மந்தம் இல்லாதது என்று இரு வகைப்படும் .
பிறர் சம்பந்தம் இல்லாத பாவமானது தொழுகை , நோன்பு, ஸக்காத்து, ஹஜ்ஜு முதலியவைகளை விடுவது போன்றவைகள் . விபச்சாரம் செய்தல் , போதை பொருள் அருந்துதல் போன்றவைகள்
இவ்விதப் பாவங்களுக்குச் செய்யும் தவ்பாவுக்குத்தான் மேற்சொன்ன 3 ஷறத்துகள் கடைபிடிக்கப்பட வேண்டும்.
இனி , பிறர் சம்மந்தமுள்ள பாவமானது கொலை, களவு, புறம் பேசுதல் , சொத்தை அபகரித்தல் முதலியவைகள் . இவ்விதப் பாவங்களுக்குச் செய்யும் போது தவ்பாவுக்கு மேற் சொன்ன 3 ஷறுத்துகளுடன் 4 வது ஷறத்தாக செய்த பாவத்தினால் பாதிக்கப்பட்டவனுக்கு அந்நபரின் , அதாவது பணம் அல்லது சொத்தாக இருந்தால் திரும்பக் கொடுத்தல்.
ஒருவனை கொன்று விட்டால், கொல்லப்பட்டவனுடைய பாத்தியக்காரனிடத்தில் மன்னிப்புக் கேட்டல் , ஒருவனைப் பற்றி புறம் பேசினால் , 'நான் இன்னானிடத்தில் உன்னைப் பற்றி புறம் பேசினேன் , நீ அதை மன்னித்துக் கொள்'
பாவமன்னிப்புக் கோரிக்கையை அல்லாஹ் நேசிக்கிறான். அவன் கூறுகிறான்: " நிச்சயமாக அல்லாஹ் (பாவத்தைவிட்டு) வருந்தி மீளுகிறவர்களை விரும்புகின்றான்; சுத்தமாக இருப்பவர்களையும் விரும்புகின்றான் " குர்ஆன் : (2 : 222)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"பனூ இஸ்ராயீல்களின் சமுதாயத்தில் ஒரு மனிதர் இருந்தார். அவர் தொண்ணூற்றொன்பது மனிதர்களைக் கொன்று விட்டிருந்தார். பிறகு (தன் குற்றங்களுக்காக மனம் வருந்தி, தனக்கு மன்னிப்புக் கிடைக்குமா என்று) விசாரித்தபடி, "(எனக்குப்) பாவ மன்னிப்புக் கிடைக்குமா?'' என்று ஒரு பாதிரியாரிடம் வந்து கேட்டார்.

அந்தப் பாதிரியார், “கிடைக்காது'' என்று கூற, அந்த பாதிரியாரையும் அம்மனிதர் கொன்றுவிட்டார்.
பிறகு, (மீண்டும் மனம் வருந்தி) விசாரிக்கலானார். அப்போது ஒரு மனிதர், “(நல்லோர் வாழும்) இன்ன ஊருக்குப் போ!'' என்று அவருக்குச் சொன்னார்.
(அந்த ஊரை நோக்கி அவர் சென்றபோது பாதி வழியில்) மரணம் அவரைத் தழுவியது. (மரணத் தருவாயில்) அவர் தன் நெஞ்சை அந்த ஊர் இருக்கும் திசையில் சாய்த்துக் கொண்(டே இறந்து விட்)டார்.
அப்போது அல்லாஹ்வின் கருணையைப் பொழியும் வானவர்களும் அல்லாஹ்வின் தண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரை யார் அழைத்துச் செல்வது என்று) சச்சரவிட்டுக் கொண்டனர்.
உடனே அல்லாஹ் அதை நோக்கி, “நீ நெருங்கி வா!'' என்று (அவர் செல்லவிருந்த ஊருக்கு) உத்திரவிட்டான். இதை நோக்கி, “நீ தூரப் போ!'' என்று (அவர் வசித்து வந்த ஊருக்கு) உத்திரவிட்டான்.
பிறகு, “அவ்விரண்டுக்கு மிடையே உள்ள தூரத்தைக் கணக்கெடுங்கள்'' என்று (வானவர்களுக்குக்) கூறினான். (அவ்வாறே கணக்கெடுத்த போது) செல்ல விருந்த ஊருக்கு (அவர் வசித்து வந்த ஊரை விட ஒரே) ஒரு சாண் அளவிற்கு அவர் (உடைய உடல்) சமீபமாக இருந்த காரணத்தால் அவருக்குப் பாவ மன்னிப்பு வழங்கப்பட்டது.
இதை அபூ சயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(ஸஹீஹுல் புகாரீ 3470)

ஸஹீஹ் முஸ்லிமின் அறிவிப்பில், “அம்மனிதர் நல்லோர்களின் ஊருக்கு ஒரு சாண் அளவு நெருக்கமாக இருந்தான். எனவே அவனை அந்த மக்களைச் சேர்ந்தவனாகக் கணக்கிடப்பட்டது” என்றும், அவனது நெஞ்சு அதை நோக்கியதாக இருந்தது என்றும் உள்ளது. (2716)
அல்லாஹ் கூறுகிறான்:
"(நபியே!) நீர் கூறும்:என் அடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோதிலும், அல்லாஹ்வின் அருளைப் பற்றி நீங்கள் நம்பிக்கை இழந்துவிட வேண்டாம். (நீங்கள் பாவத்திலிருந்து விலகி, மனம் வருந்தி மன்னிப்பைக் கோரினால்) நிச்சயமாக அல்லாஹ் (உங்களுடைய)

பாவங்கள் அனைத்தையும் மன்னித்துவிடுவான். ஏனென்றால், நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவனும், கருணை உடையவனுமாக இருக்கின்றான் "
குர்ஆன் (39 : 53)

நபியவர்கள் கூறினார்கள்: "உங்களில் ஒருவர் வறண்ட பாலைநிலத்தில் தொலைத்துவிட்ட தனது ஒட்டகத்தை (எதிர்பாராதவிதமாக)க் கண்டுபிடிக்கும் போது, அவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியைவிடத் தன் அடியான் தவ்பா-பாவமன்னிப்புப் கோரி தன்னிடம் திரும்புவதில் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி அடைகிறான்.
(ஸஹீஹுல் புகாரீ 6309)
ர.ரா

தவ்பா - மீளுதல் 2

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 54 )



நம் பாவங்கள் அதிகரிக்கும்போது, நமக்கு அல்லாஹ்வின் அருட்கொடைகள் தடுக்கப்படலாம், இன்னும் அதிகமான சோதனைகளுக்கு ஆளாகலாம். தவ்பா நம்மை வாழ்வின் துன்பங்களிலிருந்து மீட்டு அருளின் பக்கம் கொண்டு செல்லும் ஒரு காரணியாகும் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள் .

அல்லாஹ் கூறுகிறான்: ''ஒவ்வோர் ஆண்டிலும், ஒரு முறையோ, இரு முறையோ [பல விதமான பேரழிவுகள், நோய், பஞ்சம் போன்ற துன்பங்களால்] அவர்கள் சோதிக்கப்படுகிறார்கள்' என்பதை அவர்கள் காணவில்லையா? அப்படியிருந்தும் அவர்கள் தவ்பா செய்து மீள்வதும் இல்லை. நினைவு கூர்ந்து நல்லுணர்ச்சி பெறுவதும் இல்லை.
[அல் குர்ஆன்,9:126]

"என் சகோதரரே, பாவங்களில் விழுந்துவிட்டால் அல்லாஹ்வின் கருணை மீது நம்பிக்கை இழந்துவிடாதீர்கள். மன்னிப்பின் வாசல் சூரியன் மேற்கில் உதிக்கின்ற காலம் வரும் வரை, அதாவது மறுமை ஏற்படும் வரை திறந்தே இருக்கின்றது.
(நபி மொழி)

நபியவர்கள் கூறினார்கள்: " நிச்சயமாக அல்லாஹ் பகலில் பாவம் செய்தவரின் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்ள இரவு வரை தனது கரத்தை விரிக்கிறான்.
மேலும் இரவில் பாவம் செய்தவரின் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்ள பகல் வரை தனது கரத்தை விரிக்கிறான். இது சூரியன் மேற்கில் உதிக்கும் வரை நடக்கும். (ஸஹீஹ் முஸ்லிம் 2759)
தவறுகள், பாவங்கள் செய்வது மனித இயல்புதான். அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிவதில் யாருமே தவறு செய்யாமல் இருக்க முடியாது. பாவங்களால் அல்லது மறதியால் அவனுக்கு மாறுசெய்துவிடுவோம். அனைவருக்கும் இந்த குறைபாடு நிலை இருக்கிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் 'இடது பக்கத்தில் உள்ள எழுத்தர் ஒரு முஸ்லிமின் பாவத்தை பதிவு செய்வதை (ஆறு மணி நேரம் ) தாமதிக்கிறார். அவர் (அந்த ஆறு மணி நேரத்திற்க்குள்) மனம் வருந்தி அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கேட்டால், அதைப்பதிவு செய்யாமல் விட்டுவிடுவார். அப்பாவத்தை அவர் செய்து விட்டால், அது ஒரு பாவமாக எழுதப்படும்.[தபரானி] அதனால், உங்கள் செயல்களை (ஆறு

மணிநேரத்திற்க்கொரு முறை )– ஒரு நாளைக்கு 4 முறை மதிப்பீடு செய்து, அல்லாஹ்வின் இந்த அற்புதமான கருணையிலிருந்து நன்மை பெறுங்கள்!
கீழ்க்கண்ட ஹதீஸை நன்கு கவனித்து உள்வாங்கி படியுங்கள்

நபியவர்கள் கூறினார்கள்: " என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக, நீங்கள் பாவம் செய்யாதவர்களாக இருந்தால், அல்லாஹ் உங்களை விட்டுவிட்டு வேறு மக்களைக் கொண்டு வருவான். அவர்கள் பாவம் செய்த நிலையில் அவனிடம் பிரார்த்திப்பார்கள், மன்னிப்புக் கேட்பார்கள்.
(ஸஹீஹ் முஸ்லிம் 6621)
மேலும் கூறினார்கள்: ஆதமின் மகன் ஒவ்வொருவரும் பாவம் செய்யக்கூடியவர்களே. அவர்களில் சிறந்தவர்கள் யாரெனில் பாவம் செய்ததை எண்ணி வருந்தி மன்னிப்புத் தேடுகிறவர்கள் ஆவர்.
(திர்மிதீ 2499 அல்பானீ ஹசன்)

நீங்கள் அத்தனைத் தவறாக ஒன்றைச் செய்திருந்தீர்கள் என்றால், நீங்கள் ஒரு மோசமான மனிதராக இருக்க வேண்டும், இல்லையா?
இல்லை .
மோசமான மனிதராக இருப்பதற்கும், மோசமான செயலைச் செய்வதற்கும் பெரிய வித்தியாசம் உள்ளது. அல்லாஹு தஆலா உங்களுக்கு மன்னிப்புக் கேட்க சந்தர்ப்பம் அளித்திருக்கிறான். இன்ஷா அல்லாஹ், உங்கள் பாவம் நன்மையாகக்கூட மாற்றப்படும்! இது எத்தனை அற்புதம்?

அந்த அற்புதமான பாக்கியத்தை கீழ்க்கண்ட வசனத்தில் காண முடிகிறது . பாருங்கள்
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا تُوْبُوْۤا اِلَى اللّٰهِ تَوْبَةً نَّصُوْحًا عَسٰى رَبُّكُمْ اَنْ يُّكَفِّرَ عَنْكُمْ سَيِّاٰتِكُمْ وَيُدْخِلَـكُمْ جَنّٰتٍ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ ۙ يَوْمَ لَا يُخْزِى اللّٰهُ
النَّبِىَّ وَالَّذِيْنَ اٰمَنُوْا مَعَهٗ‌ نُوْرُهُمْ يَسْعٰى بَيْنَ اَيْدِيْهِمْ وَبِاَيْمَانِهِمْ يَقُوْلُوْنَ رَبَّنَاۤ اَ تْمِمْ لَـنَا نُوْرَنَا وَاغْفِرْ لَـنَا‌ اِنَّكَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

"நம்பிக்கையாளர்களே! நீங்கள் கலப்பற்ற மனதுடன் (பாவத்தி லிருந்து விலகி) அல்லாஹ்வின் பக்கம் திரும்புங்கள். உங்கள் இறைவனோ உங்கள் பாவங்களுக்குப் பரிகாரமாக்கி, (மன்னித்து) சுவனபதியிலும் உங்களைப் புகுத்திவிடுவான்.
அதில் தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும். (தன்னுடைய) #நபியையும், #அவருடன்_நம்பிக்கை-கொண்டவர்களையும் அந்நாளில் அல்லாஹ் இழிவுபடுத்த மாட்டான்.
அந்நாளில், இவர்களுடைய பிரகாசம் இவர்களுக்கு முன்னும், இவர்களுடைய வலது பக்கத்திலும் ஊடுருவிச் சென்று கொண்டிருக்கும். இவர்கள் "எங்கள் இறைவனே! எங்களுக்கு, எங்களுடைய பிரகாசத்தை (அணையாது) நீ பரிபூரணமாக்கி வை. எங்களுடைய குற்றங்களையும் நீ மன்னித்து அருள்புரி. நிச்சயமாக நீ அனைத்தின் மீதும் ஆற்றலுடையவன்" என்று பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார்கள்.
(அல்குர்ஆன்: 66:8)
ர.ரா

ஸக்றாத் - மரணப் படுக்கை 01

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் (54)



"ஸக்றாத் " என்பது ஐம்புலன்களும் ஒடுங்கி அடங்கி அனுபவித்தவை எல்லாம் மறந்து போகும்படியான ஒரு விதமான மயக்கம். நபிகளாரின் சுன்னத்துக்களை பேணாமல் இடது கையால் பானங்களை குடித்தவர்களுக்கு தங்களின் பெயரே மறந்து போகுமாம்.
ஸக்றாத்தில் 'ஆகிறா ' என்னும் மறுமையைச் சேர்ந்த விஷயங்கள் அனைத்தும் தொடர்ந்து வெளியாகும் . அதே நேரத்தில் 'துனியா 'என்னும் இவ்வுலகில்
மறைக்கப்பட்டருந்தவைகளும் வெளிப்படும். வாழ்நாளில் ' இது ஏன் ? அது ஏன் ' என்று சிந்தித்த பல விஷயங்களுக்கு ரொம்ப சுளுவா விடை தெரிந்து கொள்ள முடியும்.
தெரிந்து என்ன பிரயோஜனம் ? யாரிடமும் எதுவும் சொல்ல வெளியில் முடியாது.
ரூஹைக் கைப்பற்ற வரும் மலக்குல் மவ்த்து இஸ்ராயீல் (அலை) அவர்களையும் , இன்னும் பல மலக்குமார்களையும் , இறந்து போன உறவினர்கள் , இன்னும் மரித்தவர்களில் பிரியம் வைத்து தம்முடன் பழகியவர்கள், கைப் பிடித்துக் கற்றுக் கொடுத்த ஞானவான்கள் ... என பட்டியல் நீளும்.

நன்மை தீமைகளின் பட்டோலைகளும் காட்டப்படும் .இனி அடையப் போகிற கதி என்ன என்றும் அப்போது மிகத்தெளிவாக தெரியும்.
ஒருவன் ஸக்றாத்தை அனுபவிக்கும் போது , அவனுக்கு அச்சமும், துயரமும் , கைசேதமும் அதிகரிக்கும் . தான் செய்த பாவங்களால் இனிப்படப் போகும்
அதாபின் பயங்கரமான காட்சிகளைக் கண்டு நடுங்குவான் .
இன்னும் ஸக்றாத் வேளையில் அதை அனுபவிப்பவன் யாரானாலும் சரி, அவர்களுடைய ஈமானைக் கெடுக்க வேண்டும் என்று இப்லீஸ் வந்து , அதற்கு ஆகுமான அநேக குபுறு வார்த்தைகளைச் சொல்லும்படி பல விதத் தந்திரங்கள் செய்வான். அவனை இபுலீஸ் என்றும், அவன் சொல்லும் வார்த்தைகள் குபுறு என்றும் பிரித்தறியாதவர்கள் அந்தோ ! அவனிடம் ஈமானை இழந்து விடுவார்கள் .

ஸக்றாத் நேரத்தில் இபுலீஸ் பலவகையிலும் முன்னுக்கு வருவான் . ஸக்றாத்தை அனுபவிக்கிறவர்களுக்கு மஹா கொடுமையான வேதனையும் , வருத்தமும் , திட்டு முட்டு , திகிலடியும் , மிக பெரிய நாவரட்சியும் இருக்கும் .
அப்போது இபுலீஸ் மிக குளிர்ந்த தண்ணீரைக் கொண்டு வந்து , அருகில் நின்று , " இதோ பார் தண்ணீர் குடிக்க விரும்பினால் இதோ தருகிறேன். அதற்கு முன் நான் சொன்னேனே இரண்டு அல்லாஹ்வைப் பற்றி உன் வாயால் சொல்லு " என்பான்
ஈமானில் உறுதிபாடானவர்கள் அவனிடம் இருந்து தப்பித்துக் கொள்வார்கள் .
யார் யார் எந்தெந்த கருமங்களைத் துன்யாவில் செய்து வந்தார்களோ , முக்கியமாய் அதுவே ஸக்றாத்தில் மேலிடும்.

கலிமா , திக்ருகளை , தியானங்களை நியமமாக்கியவர்களுக்கு கலிமாவும் , வீண் வார்த்தைகளை நியமமாக்கியவர்களுக்கு அவ்வீண் வார்த்தைகளுமே ஸக்றாத்தில் தானாகவே நாவில் நடக்கும். அதைத் தடுக்க எவராலும் , எவ்விதத்திலும் முடியாது.
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியதாவது : " நீங்கள் உயிரோடிருக்கையில் எப்படி இருந்தீர்களோ , அப்படியே மவ்த்தாவீர்கள் , எப்படி மவ்த்தானீர்களோ , அப்படியே எழுப்பப்படுவீர்கள் "
துனியாவின் அழிவிற்கு பெரிய கியாமத்தின் அடையாளங்கள் இருப்பது போல , மவ்த்துக்கு முன் ஸக்றாத் சிறிய கியாமத் போல இருக்கும் .
ர.ரா

**Rahmath Rajakumaran**
அழியாத 4 சக்திகளான
1 )மின்காந்த சக்தி
2) அணுக்கருவுக்குள் இருக்கும் வலிமையான அணுசக்தி
3) அணுக்கருவுக்கு வெளியே இருக்கும் மெலிதானஅணுசக்தி
4) புவி ஈர்ப்பு சக்தி
இந்த 4 சக்திகளையும் இணைக்கும் கோட்பாடு Grand Unified Theory ( GUT )
இதில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் புவி ஈர்ப்பு சக்தியைத் தவிர 3 சக்திகளை ஒருவாறு இணைத்தார். புவி ஈர்ப்பு சக்தி அவரது மரணப்படுக்கை வரை தொடர்ந்து கண்ணாம்பூச்சிக் காட்டியது
தன் " அரோடிக் அனரிசைம் " என்ற நோயால் பாதிக்கப்பட்டதால் மரணத்தின் முன் கொஞ்ச நேரம் வரை **GUT** கோட்பாட்டையே சிந்தித்துக் கொண்டே இருந்து இறுதியில் பிரகாசமான புன்முறுவலாக சிரித்தார் .தன் சிரிப்புக்கு காரணமான கண்டிப்பை தான் எழுத முடியாமல் உயிர் துறந்தார் .
(ஸக்றாத்நேரத்தில் 'துனியா 'என்னும் இவ்வுலகில்
மறைக்கப்பட்டருந்தவைகளும் வெளிப்படும். வாழ்நாளில் ' இது ஏன் ? அது ஏன் ' என்று சிந்தித்த பல விஷயங்களுக்கு ரொம்ப சுளுவா விடை தெரிந்து கொள்ள முடியும் )
தெரிந்து என்ன பிரயோஜனம் ? யாரிடமும் எதுவும் சொல்ல வெளியில் முடியாது.

ஸக்றாத் - மரணப் படுக்கையின் வேதனை 02
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 55 )



ஒருவனுக்கு மரணம் வரை எவ்வித துன்பமும், துயரமும் , வருத்தம் சிறிதும் இல்லாமல் வாழ்திருந்தாலும் அவனுக்கு ஸக்றாத் வருத்தம் உண்டாவது நிச்சயம்.
ஸக்றாத்தின் வருத்தம் அதை அனுபவித்தவனுக்கே தெரியும் அல்லாமல் , மற்றவர்களுக்கு எப்படி எடுத்துச் சொன்னாலும் அவ்வளவு வேதனையை சொல்லி மாளாது மற்றவர்களுக்கும் தெரியாது.

ஒரு பேச்சுக்கு , இறந்தவன் மீண்டும் வந்து , தான் பட்ட ஸக்றாத் வேதனையை மனிதர்களுக்குத் தெரிவிப்பானானால், திகில் கொண்டு துன்யாவின் சுகத்தையெல்லாம் அறவே மறந்து, இனி ஒருபோதும் அதில் பிரவேசிக்க மாட்டார்கள் . இவ்வுலகில் சிரிப்பு , சந்தோஷமெல்லாம் ஓடிப்போய் துக்கமும் கவலையுமே மிஞ்சும்.

ஒருவனது ஸக்றாத் வேதனையை ஒரு ரோமக் கால் அளவு எடுத்து, வானத்துடைய மலக்குகள் பூமியையுடையவர்களாகிய எல்லோர் மீதும் வைத்தால் , அவ் வேதனையை தாங்காமல் அனைவரும் ஒருமித்து செத்தேப் போவார்கள்.
ஸக்றாத் வேதனையை அதில் ஓர் அணு அளவு எடுத்து உலகிலுள்ள எல்லா மலைகள் மீதும் வைத்தால் அவைகள் வேதனையை தாங்காமல் உருகிப் போகும்.
ஸக்றாத் வேதனை என்பது உடலையும் , ரூஹையும் பற்றி பிடித்து பிடுங்கி வேதனைக்குள்ளாக்குவதால் , அது இப்படி என்று அறிய முடியாத கொடுமையான வருத்தம் எனறு சொல்லப்படுகிறது.

ஸக்றாத் வேதனையை ' நஜுஊ ' என்று அழைக்கிறார்கள். நஜுஊ என்பதற்கு 'பிடுங்குதல் ' எனப்படும். உடலிற் நீக்கமற நிரம்பி பரவி நிற்கும் நூஹைப் பற்றி பிடுங்குவதால்தான் ஸக்றாத் வேதனையை நஜுஊ என்றழைக்கப்படுகிறது.
ஒருவனுக்கு ஸக்றாத் வந்து விட்டால், அவனுடைய ரூஹை காலின் பெருவிரலில் இருந்து தொடங்கி, கொஞ்சம் கொஞ்சமாக அது பிடுங்கப்படுகிறது .அது தொண்டைக் குழியில் வந்த போது அவனுடைய தவ்பா வாசல் அடைபடும். அதன் பின் அவன் தவ்பா செய்வதில் எந்த பிரயோஜனமும் தராது.

فَلَوْلَاۤ اِذَا بَلَغَتِ الْحُـلْقُوْمَۙ
(உங்களில் மரணிக்கும் ஒருவரின் உயிர்) தொண்டைக் குழியை அடைந்தால்,
(அல்குர்ஆன்: 56:83)
وَاَنْتُمْ حِيْنَٮِٕذٍ تَـنْظُرُوْنَۙ
அந்நேரத்தில் நீங்கள் (இறப்பவனுக்குச் சமீபமாயிருந்தும், ஒன்றும் செய்ய முடியாமல்) பரக்கப் பரக்க விழிக்கின்றீர்கள்.
(அல்குர்ஆன் : 56:84)
وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْكُمْ وَلٰـكِنْ لَّا تُبْصِرُوْنَ
ஆயினும், நாம் அவனுக்கு உங்களைவிட மிக சமீபமாக இருக்கின்றோம். எனினும், நீங்கள் (நம்மைப்) பார்ப்பதில்லை.
(அல்குர்ஆன்: 56:85)
ர.ரா

ஸக்றாத் - மரணப்படுக்கையின் வேதனை 03

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 56)




ஒவ்வொருவனுக்கும் ஸக்றாத்தில் அவன் ரூஹு தொண்டைக் குழியில் வந்து தவ்பா வாசலும் அடைபட்டு , மவ்த்து நெருக்கமானவுடன் , அவனுடைய உடல் உறுப்புகள் தலை முதல் பாதம் வரை ஒன்றுக்கொன்று பிரிவுக்காக ஸலாம் சொல்லிக் கொள்ளும் . பின் ரூஹும் உடலுக்கு ஸலாம் சொல்லி பிரியும் .

அந்த வேளையில் ஒருவர் பின் ஒருவராக நான்கு மலக்குமார்கள் வருவார்கள்.
அவர்களில் முதலாவதாக ரிஷ்க் வுடைய மலக்கு அவனைப் பார்த்து ,

" உனக்கான ரிஷ்க் என்னும் உணவு உலகெங்கும் தேடினேன். ஓர் அணுவளவும் இல்லை . உனக்கான உணவு இல்லாத உலகில் நீ எப்படி உயிர் வாழ முடியும் ? "
இரண்டாவது குடிப்பு உடைய மலக்கு ,
உனக்கான குடிப்பு என்னும் பானம் உலகெங்கும் தேடினேன் . ஒரு சொட்டுக் கூட இல்லை . உனக்கான குடிப்பு இல்லாத உலகில் நீ எப்படி உயிர் வாழ முடியும் ? "
மூன்றாவது மூச்சுடைய மலக்கு ,
உனக்கான மூச்சு என்னும் சுவாசக் காற்று உலகெங்கும் தேடினேன் . ஒரு மூச்சிக்கேனும் கூட காற்று இல்லை . உனக்கான சுவாசம் இல்லாத உலகில் நீ எப்படி உயிர் வாழ முடியும் ? "
நான்காவது தவணையுடைய மலக்கு

உனக்கான வாழும் காலம் என்னும் தவணை உலகெங்கும் தேடினேன் . ஒரு நொடிப்பொழுது கூட இல்லை . உனக்கான தவணை இல்லாத உலகில் நீ எப்படி உயிர் வாழ முடியும் ? "
" உலகெங்கும் தேடினோம் நீ உயிர் வாழ ஒரு வழியும் உனக்கு இல்லை " என்று நான்கு மலக்குமார்களும் சொல்வார்கள்

وَمَا كَانَ لِنَفْسٍ اَنْ تَمُوْتَ اِلَّا بِاِذْنِ اللّٰهِ كِتٰبًا مُّؤَجَّلًا ‌ وَ مَنْ يُّرِدْ ثَوَابَ الدُّنْيَا نُؤْتِهٖ مِنْهَا ‌ وَمَنْ يُّرِدْ ثَوَابَ الْاٰخِرَةِ نُؤْتِهٖ مِنْهَا ‌ وَسَنَجْزِى الشّٰكِرِيْنَ
யாதொரு ஆத்மாவும் அல்லாஹ்வின் அனுமதியின்றி இறப்பதில்லை. இது தவணை நிர்ணயிக்கப்பட்ட விதியாகும். எவர் (தன் செயலுக்கு) இந்த உலகத்தின் நன்மையை (மட்டும்) விரும்புகின்றாரோ அவருக்கு அதனை (மட்டும்) அளிப்போம்.
எவர் மறுமையின் நன்மையை(யும்) விரும்புகின்றாரோ அவருக்கு அதனை(யும்) வழங்குவோம். மேலும், நன்றி செலுத்துபவர்களுக்கு நாம் அதிசீக்கிரத்தில் நற்பயனை வழங்குவோம். (அல்குர்ஆன்: 3:145)
ர.ரா

ஸக்றாத் - மரணப் படுக்கையின் அறிகுறிகள் 04

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 57)



ஸக்றாத்தில் பயங்கரமான மூன்று சங்கடங்கள் உண்டு
1) ஸக்றாத்தின் வேதனை வருத்தம்.
2) மலக்குல் மவ்த்து இஸ்ராயீல் (அலை) அவர்களை மிக பயங்கர உருவத்தில் காட்சியாக காணுதல்.
3) அனுபவிக்கப் போகிற நரக வேதனைகளை கண்முன் காட்டப்படல்.
இந்த பயங்கரமான மூன்று சங்கடங்கள் பாவிகளுக்கு நேரிடும் .

ஸாலிஹான நல்லடியார்களுக்கு ,.
1) ஸக்றாத்தின் வருத்தம் இலேசுவாக இருக்கும்.
2) மலக்குல் மவ்த் இஸ்ராயீல் (அலை) அவர்களை சாந்த சொரூபத்தில் காட்சியாக காணுதல் .
3) அனுபவிக்கப் போகிற சுவர்க்கத்தின் சுகபோகங்களை கண்டு களித்தல்.

இன்னும் ஸக்றாத்தில் நல்லடியார்களுக்கு மூன்று நற்குறி தென்படும் .
1) ஸக்றாத்தில் உடல் உசும்புதல் இன்றி ஒடுங்கி, அடங்கி நெற்றியில் வியர்ப்பது
2) கண்களில் நீர் ததும்புவது
3) உதடுகள் உலர்ந்திருப்பது.

ஸக்றாத்தில் கெட்ட அடியார்களுக்கு மூன்று துற்குறி தென்படும் .
1) கழுத்தில் சுருக்கிவிட்டார் போல் உறுமுவதும்
2) உடல் சிவந்து தோன்றுவதும்,
3) உதடுகள் சாம்பல் பூத்திருப்பது போல் தோன்றுவது.
இந்த துற்குறிக் கண்டு அந்த இடத்திலேயே உங்கள் கருத்துக்களை பகிரும் போது , அந்த இறந்த மைய்யத்தின் உறவினர்களுக்கு மனச் சங்கடத்தை ஏற்படுத்தி விடலாம் .
மைய்யத்தின் அறிகுறி கண்டு துஆ செய்ய வேண்டும் .
ஸக்றாத்தை அனுபவிக்கிறவனைச் சூழ்ந்திருப்பவர்கள் அவன் முகத்தை
கிப்லா திசையில் திருப்பி வைத்து கலிமாவை மெல்லவாக சொல்லிக் கொடுக்க வேண்டும் . மெதுவாக சொன்னாலும் அவர்கள் தெளிவாக கேட்கிறார்கள் .
ர.ரா

ஸக்றாத்தின் இரண்டு வகைகள் 05

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 58 )

ஸக்றாதின் முடிவு இரு வகைப்படும்
1) ஹுஸ்னுல் காத்திமா (அழகிய நல்ல முடிவு) என்பது ஈமானுடன் மவ்த்தாவது ஆகும்.
2) சூவுல் காத்திமா (கெட்ட முடிவு) என்பது ஈமான் மாறி மவ்த்தாவது ஆகும்.

அல்லாஹு தஆலாவுடைய திக்ரை மறவாமல் இருப்பதும் , அவனுடைய அச்சத்தை மனதில் பதிய வைத்திருப்பதும் , மார்க்கத்தைப் பேணி நடப்பதும் , துர்கருமங்களை விலக்கி நற்கருமங்களைச் செய்வதும் , மறுமையின் ஆசை அதிகமாக
இருப்பதும் , மவ்த்தின் வேதனையை நினைத்து நினைத்து அச்சத்துடன் வாழ்வது ,
ஈமானுக்கு பழுதை வருத்தும் சொல்லையும் , செயலையும், எண்ணத்தையும் சுத்தமாகத் தெரிந்து கொண்டு அவை அணுகாமல் நடந்து கொள்வதும் ... இவைகள் ஹுஸ்னுல் காத்திமா என்னும் அழகிய நல்ல முடிவை பெற்றுத் தரும் .
ஹராமை ஹலால் என்றும், ஹலாலை ஹராம் என்றும் நம்ப வைத்து மோசடி செய்வது , மார்க்கத்திற்கு விரோதமான சொல்லைச் சொல்வதும், செயலை செய்வதும் , எண்ணத்தை எண்ணுவதும் , வாக்கு மாறுதல் , பொய் சத்தியம் செய்தல் இவைகளால்
ஸக்றாத்தில் ஈமான் மாறி பறிபோய்விடும் .
பெரியயோர்கள் சூவுல் காத்திமாவைப் பற்றி மிகவும் பயந்திருக்கிறார்கள் .
நல்ல அடியார்கள் ஸக்றாத்தில் ,
நபி (ஸல்) அவர்களும் , ஜிப்ரயீல் (அலை) அவர்களும் ,ரஹ்மத்துடைய மலக்குமார்களும் வந்து சந்திப்பார்கள் .
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் தங்கள் சிறகினால் நல்ல அடியார்களின் முகத்தை தடவிக் கொடுத்து , நபி (ஸல்) அவர்களை அவனுக்குச் சுட்டிக்காட்டி , "இவர்கள் தாம் உன்னுடைய நபி முஹம்மது (ஸல்) ஆவர்கள் "
மாயாஜாலம் செய்யும் இப்லீஸின் சேட்டைகள் அங்கே பலிக்காது , வெருண்டோடுவான் .
ர.ரா

ஸக்றாத்தில் மலக்குமார்களின் பணி 6

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 59)




ஒவ்வொரு அடியானுக்கும் இரண்டு மலக்குமார்களும் , இது போல ஜின்னும் , ஷைத்தானும் சாட்டப்பட்டிருப்பார்கள் .
இந்த இரண்டு மலக்குமார் களுக்கு "ஹபலத் " என்னும் பெயர் .ஹபலத் என்றால் காவல்காரர்கள் என்று அர்த்தம். இரவும் , பகலும் அவனைப் பிரியாதிருந்து அவனுக்கு நேரிடும் ஆபத்துக்களை விலக்கி அவனைப் பாதுகாத்துக் கொண்டிருப்பார்கள் .
ஒரு மலக்கு அவனுடைய அவனுடைய வலது புறமும் , இன்னொரு மலக்கு அவனுக்கு இடதுபுறமும் இருப்பார்கள் .
அவன் உட்கார்ந்தால் அவர்களும் அவனுக்கு வலது , இடதுமாய் உட்கார்ந்திருப்பார்கள்.அவன் நடந்தால் அவனுக்கு முன்னும், பின்னுமாய் நடப்பார்கள் .அவன் படுத்தால் அவனது தலைமாட்டிலும், கால் மாட்டிலுமாய் நிற்பார்கள் .
அவன் ஜிமாஃ செய்யும் போதும் , மலஜலம் கழிக்கும் போது மாத்திரம் அவனை விட்டுப் பிரிந்து , அவன் துப்பரவானவுடன் அவனுடன் சேர்ந்து கொள்வார்கள்.

இன்னும் அந்த மலக்குகள் அவனுடைய நன்மை தீமைகளான சொல், செயல் , நினைப்பு எல்லாவற்றையும் ஒன்று விடாமல் எழுதி வருவார்கள் .அவன் முனங்கும் முனக்கம் கூட எழுதப்படும் அப்படி எழுதி வருவதனால்தான் அவர்களுக்கு **"கிராமன் - காத்திபீ "** பெயர்.
வலது புற மலக்கு நன்மையையும் , இடதுபுற மலக்கு தீமையையும் எழுதுவார்கள்.

நன்மையானால் உடனே எழுதப்படும். தீமையானால் உடனே எழுதத் தொடங்கும் போது , நன்மை எழுதுற மலக்கு அதை எழுத விடாமல் தடுத்து "கொஞ்சம் பொறும்.இவன் தவ்பா செய்தாலும் செய்வான் " என்று காத்திருக்கச் சொல்வார் .அதனால் அதை எழுதாமல் ஒரு ஸாஅத்தாகிப இரண்டரை நாழிகை நேரம் மட்டும் நிறுத்தி வைப்பார்கள் .
இதற்கிடையில் பய புள்ளே அந்தத் தீமைக்கு தவ்பா செய்து விட்டால் எழுதாமல் விட்டு விடுவார்கள் இல்லையென்றால் எழுதி விடுவார்கள் இதற்கு நன்மை எழுதுற மலக்கிடம் சாக்ஷி வாங்குவார்கள் .

இப்படியே ஒவ்வொரு பய புள்ளேக்கும் பகல் பூரா ஒரு புஸ்தகமும் , ராத்திரி பூரா ஒரு புஸ்தகமுமாக , நாளொன்றுக்கு இரண்டு புஸ்தகங்கள் எழுதப்பட்டு , ஒரு வருஷத்திற்கு ஒரு தரம் ஷஃபான் மாதம் 15 இரவில் ஒன்றாகச் சேர்த்து ஒரே கட்டாக கட்டி வைப்பார்கள் .
ஸக்றாத்தில் மவ்த் நெருங்கிய சமயம் இந்த இரண்டு மலக்குகளும் மேற்படி பட்டோலை புஸ்தகக் கட்டுகளை கொண்டு வந்து அவனுக்குக் காட்டி ,
"பய புள்ளே ...! படித்துப் பார்" என்று சொல்வார்கள் .
அவன் அதைப் படித்து நன்மை அதிகமாக இருந்தால் , சந்தோஷமும் , தீமை அதிகமாக இருந்தால் , துயரமும் படுவான் .
பின்பு அந்த மலக்குகள் அந்த கட்டுகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டுக்கட்டி , எல்லாம் சரி என்று முத்திரையிட்டு ,
பய புள்ளே கழுத்தில் மாட்டி விடுவார்கள்
இனி கியாமத் நாளில் அந்தக் கட்டுடன் தான் எழுந்திருப்பான் .

மரணத் தருவாயில் மா நபி (ஸல்) அவர்கள் 07

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 60)




இறுதி நேரம் நெருங்கவே ஆயிஷா (ரழி) நபி (ஸல்) அவர்களைத் தனது நெஞ்சோடு அணைத்துக் கொண்டார்கள். இதைப் பற்றி ஆயிஷா (ரழி) கூறுவதாவது:
"நபி (ஸல்) என் அறையில் எனக்குரிய தினத்தில் எனது கழுத்துக்கும் நெஞ்சுக்குமிடையில் மரணமானார்கள்.
அவர்களது மரண நேரத்தில் எனது எச்சிலையும் அவர்களது எச்சிலையும் ஒன்று சேர்த்தேன். எனது சகோதரர் அப்துர் ரஹ்மான் அறைக்குள் வந்தார்.
அவரது கரத்தில் மிஸ்வாக் இருந்தது. நபி (ஸல்) அவர்களை எனது மடியில் கிடத்தியிருந்தேன். அப்துர் ரஹ்மான் கரத்திலுள்ள மிஸ்வாக்கை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள்.
அவர்கள் மிஸ்வாக் செய்ய விரும்புகிறார்கள் என புரிந்து கொண்டேன். "நான் உங்களுக்கு அதனை வாங்கித் தரவா?" என்று கேட்டபோது, "ஆம்!" என தலை அசைத்தார்கள். அதனை வாங்கிக் கொடுத்தேன்.

அது அவர்களுடைய பற்களுக்கு சிரமமாக இருந்தது. "நான் அதனை மிருதுவாக்கி தரட்டுமா?" என்று கேட்டேன். தலை அசைத்து "ஆம்!" என்றார்கள். நான் அதனை மிருதுவாக்கிக் கொடுத்தேன்."
இன்னொரு அறிவிப்பில் வருவதாவது: "நபி (ஸல்) மிக அழகிய முறையில் அக்குச்சியால் பல் துலக்கினார்கள். அவர்களுக்கருகில் நீர் நிரம்பிய குவளை இருந்தது. அதில் கைகளை விட்டு முகத்தில் தடவிக் கொண்டார்கள்.

"லாஇலாஹஇல்லல்லாஹ் இன்னலில் மவ்த்தி சகராத்- வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. மரணத்திற்குப் பல மயக்கங்கள் இருக்கின்றன" என்றார்கள். (ஸஹீஹுல் புகாரி)
பல் துலக்கிய பின்பு தங்களது கையை அல்லது விரலை உயர்த்தினார்கள். அவர்களது பார்வை முகட்டை நோக்கியது. அவர்களது உதடுகள் அசைந்தன. அவர்கள் என்ன கூறுகிறார்கள் என ஆயிஷா (ரழி) செவிதாழ்த்திக் கேட்டார்கள்.
நபி (ஸல்) அப்போது "இறைத்தூதர்கள், வாய்மையாளர்கள், இறைப்போர் தியாகிகள், நல்லோர்கள் ஆகிய நீ அருள் செய்தோருடன்...
அல்லாஹ்வே! என்னை மன்னிப்பாயாக! என்மீது கருணை காட்டுவாயாக! உயர்ந்த நண்பனுடன் என்னைச் சேர்த்து வைப்பாயாக! அல்லாஹ்வே! உயர்ந்த நண்பனை...
(ஸஹீஹுல் புகாரி)
கடைசி வார்த்தையை மட்டும் மூன்று முறை நபி (ஸல்) கூறினார்கள். உயர்த்திய அவர்களுடைய கை சாய்ந்தது. உயர்ந்தோனிடம் சென்றார்கள். இன்னாலில்லா வ இன்னா இலை ராஜிஊன்.
ஹிஜ்ரி 11, ரபீஉல் அவ்வல் பிறை 12, திங்கட்கிழமை முற்பகல் முடியும் நேரத்தில் அவர்களுக்கு மரணம் ஏற்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்களுக்கு 63 வயது, 4 நாட்கள் ஆகியிருந்தன.
ர.ரா

மரணத் தருவாயில் மனோகர் பாரிக்கர் - -கோவா முதலமைச்சர் - (ஸக்றாத் 08 )
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 61)



" என் வாழ்க்கை எனக்கு அளவிட முடியாத அரசியல் செல்வாக்கு, மரியாதையை கொடுத்துள்ளது. அது என் பெயருடன் இணைந்த அடையாளமாகிப் போனது.
கூர்ந்து யோசித்தால், நான் செய்யும் பணியை விட வேறு மகிழ்ச்சியான தருணங்களை நான் அனுபவிக்கவில்லை என்றே தோன்றுகிறது.
இன்று உடல் நலிவுற்று, படுக்கையில் நான் வீழ்ந்த நிலையில் நான் இதுவரை வாழ்ந்த வாழ்வினையை சுய பரிசோதனை செய்து பார்க்கிறேன்.
புகழ், பணம் , சொத்து இவையே வாழ்வில் நாம் அடைய வேண்டிய இலட்சியமாக நான் நினைத்தேன் .
...ஆனால் மரணத்தின் வாயில் நிற்கும் எனக்கு இப்போது மரணத்தை நான் மிக நெருக்கமாக ஒவ்வொரு நொடியும் உணர்கிறேன்.
மருத்துவமனையில் என் படுக்கையைச் சுற்றி ஒளி + ஒலியிடும் உயிர் காக்கும் கருவிகள் மத்தியில் நான் மரணத்தின் மிக அருகாமையில் இருப்பதை அவ்வப்போது உணர்த்திக் கொண்டே இருக்கின்றன

இந்த சிக்கலான தருணத்தில் நான் உணர்ந்தது என்னவென்றால் , வாழ்க்கையில் பணத்தையும் , புகழையும் குவிப்பதை விட இன்னும் அடைய வேண்டியது நிறையவே இருக்கிறது.
சமூக சேவையும் நமக்குப் பிடித்தமான நபர்களோடு சரியான உறவுமுறை பேணுதலும் மிக அவசியம் .
அரசியலில் எவ்வளவோ வெற்றியை குவித்தாலும் ,போகும் போது எதையும் எடுத்துப் போகப் போவதில்லை என்பதை இப்போது நன்கு உணர்கிறேன்.
மரணப்படுக்கை மிகவும் தனித்துவம் வாய்ந்தது. காரணம் அந்தப் படுக்கையை பிறரோடு பகிர முடியாது.

உங்கள் ஏவலுக்கு கட்டுப்பட எத்தனையோ வேலைக்காரர்கள் , டிரைவர்கள், பணியாளர்கள் என்று இருந்தாலும் , உங்கள் வியாதியை யாரோடும் பகிர முடியாது .
எதைத் தொலைத்தாலும் தேடிக் கண்டு பிடித்து விடலாம் .ஆனால் தொலைத்த வாழ்நாளை மீட்டெடுக்க உங்களால் முடியவே முடியாது.

எனவே அர்த்தமுள்ள வாழ்வை வாழுங்கள் .வாழ்நாள் முழுவதையும் வெற்றியை துரத்துவதிலேயே கழித்து விடாதீர்கள் . வாழ்க்கை என்னும் நாடகத்தில் மரணம் என்னும் (Climax) கிளைமாக்ஸ் வந்தே தீரும் .
எனவே நண்பர்களே ....! உங்கள் மீது அக்கறை செலுத்துங்கள் .உங்கள் பணத்தை அர்த்தமுள்ள முறையில் செலவு செய்ய பழகிக் கொள்ளுங்கள் .
உங்களைச் சுற்றி இருப்பவரிடம் பாசத்தைப் பொழிய பழகிக் கொள்ளுங்கள் .
பிறக்கும் போது நாம் அழுகிறோம் . இறக்கும்போது நம்மைச் சுற்றியுள்ளவர்கள் அழுவார்கள் .எனவே இந்த இரண்டு அழுகைக்கும் உட்பட்ட காலத்தை , மரணத்தை நாம் தொடும் முன்பு மகிழ்ச்சியாகவும் அர்த்தமுள்ளதாகவும் வாழ்வோம் .
- Dec 8 - 2018 - மனோகர் பாரிக்கர் - முதலமைச்சர் - கோவா
ர.ரா

**Shaik Salihu**
இஸ்லாம் அல்லாதவர்களின் உபதேசங்கள் இஸ்லாமிய கோட்பாடுகள் என்ற தலைப்பில் வேண்டாம். கிதாபில் உள்ளது உள்ளபடி எதிர்பார்க்கிறேன். இது போன்ற பதிவுகள் பின்னர்...
**Rahmath Rajakumaran**
**Shaik Salihu** இறைவன் குர்ஆனில் குறிப்பிடும் போது இஸ்லாத்தின் பால் ஈமான் கொண்டவர்கள் மற்றும் ஈமான் கொள்ளாதவர்களைப் பற்றியும் குறிப்பிடுவதாலும், மேலும் அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டிருந்தால் ஒரு வேளை மனச் சாந்தி ஏற்பட்டிருக்கலாம் என்பதையும் சுட்டிக் காட்டவே இந்த மாதிரி பதிவுகள் போட வேண்டியதுள்ளது

700 மில்லியன் அல்ல, 700 பில்லியன் சம்பாதித்த ஸ்டீவ் ஜாப்ஸ் _ (ஸக்றாத் 9)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 62)



சான்பிரான்ஸிஸ்கோ தகவல் தொழில்நுட்பத் துறையில் ஜாம்பவான் எனப்படும் ஆப்பிள் நிறுவனத் தலைவர் ஸ்டீவ் ஜாப்ஸ் 1955 -ல் பிறந்து தன் 56 வயதில் கணையப் புற்றுநோயில் பாதிக்கப்பட்டு மரணமடைந்தார் .

கல்லூரி படிப்பை பாதியில் விட்டவர் . தன் நண்பரான ஸ்டீவ் வோஸ்னியாக்குடன் சேர்ந்து 1976 -ல் ஆப்பிள் நிறுவனத்தை நிறுவியவர் .
1980-ல் மேக் கணனிகள் **(Macintosh computers)** தயாரித்து உலகை தன்னை உற்று நோக்க பிரபலம் அடைந்தவர்.

1997 -ல் ஐமேக் (i mac) என்ற புதிய கண்டிப்பு மூலம் கோடி கோடியாக டாலர்களை மலைப்போல் குவித்தவர் .**700 மில்லியன்** அல்ல; **700 பில்லியன்** டாலர் சொத்துக்களை வாங்கி குவித்தவர்.

அவர் இறக்கும் தறுவாயில் அவர் அளித்த பேட்டி :
என்னுடைய தொழில் யாரும் நினைத்துக் கூட பார்க்க முடியாத இடத்தை நான் பிடித்தது உண்மையென்றாலும் அதற்காக நான் பட்ட கஷ்டமும் உண்மைதான்
ஆனால் நான் அடைந்த வெற்றி உண்மை இல்லை என்பதை இறுதி நேரத்தில் தெரிந்து கொள்ள வாய்ப்புக் கிடைத்துள்ளது.

இப்போது மரணப்படுக்கையில் இருந்து கொண்டு என் கடந்தகாலத்தை நினைத்துப் பார்க்கையில் , நான் தேடி சம்பாதித்த புகழ், செல்வம் , செல்வாக்கு அனைத்தும் மரணத்தின் பிடியில் எனக்கு செல்லாக் காசாகி அர்த்தமற்ற பொருளாகி விட்டது.
இந்த நேரத்தில் நான் உணர்வது , என் அருகில் காத்திருக்கும் மரணத்தைத் தவிர வோறன்றும் இல்லை.
என் வாழ்க்கைக்கு தேவையான செல்வங்களை மட்டும் தேடிக் கொண்டு, உறவுகள் , கலை மற்றும் என் சிறுப் பிராயக் கனவுகளை அடைய முயற்சித்திருக்க வேண்டும் . ஆனால் நான் அப்படி செய்யவில்லை .
மலைப் போல் வந்த அளவுக்கு அதிகமான எனது பொருளீட்டால்
எதையும் அனுபவிக்க முடியாத திருப்பு முனையில் என்னைக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளது .
இறைவன் எல்லோருக்கும் அன்பு என்ற ஒன்றை கொடுத்துள்ளார் . அது மனச்சாந்தி அளிக்கக்கூடியது என்பதை உணராமல் அதை வீணாக்கி விட்டேன்.
வாழும் காலத்தில் அதை அதிகமாக பகிர்ந்து கொள்ள வேண்டும் .பகிர்ந்து கொள்ள வேண்டியது அன்பை , செல்வங்களை அல்ல.
ஒன்று கூற வேண்டுமென்றால் , நாம் சேர்த்து வைத்த செல்வங்கள் எல்லாவற்றையும் நம்மால் கொண்டு செல்ல முடியாது. ஆனால் நாம் பகிர்ந்து கொண்ட அன்பினை கொண்டு செல்ல முடியும் .

அவைதான் தன்னுடைய இறுதி தருணத்தில் இந்த இருட்டறையிலும் எனக்கு வெளிச்சத்தையும் , நம்பிக்கையையும் தருகின்றது .
இந்த உலகில் சிறிது கால வாழ்க்கை எல்லை இல்லாதது . எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் . முயற்சி இருந்தால் எந்த வெற்றியையும் அடையலாம் .ஆனால் அன்பு என்பது பல்லாயிரம் மைல்கள் எம்முடன் பயணிக்கக் கூடிய உணர்வு . அது எமது இதயத்திலும் கைகளிலும் உள்ளது.
உலகின் அதிக பெறுமதியான படுக்கையில் இப்போது நான் படுத்திருக்கிறேன் . என்னால் எல்லாவற்றிற்கும் பணத்தைக் கொண்டு ஆட்களைக் கொண்டு காரியம் சாதிக்க முடியும் .
ஆனால் என் நோயை சுமக்க எனது பணத்தைக் கொண்டு என்னால் யாரையும் நியமிக்க முடியவில்லை .

எந்த ஒரு பொருளையும் இழந்தாலும் பணத்தைக் கொண்டு மீண்டும் பெற்றுக் கொள்ள முடியும் .ஆனால் இழந்த என் வாழ்வை என் செல்வத்தால் பெற்றுக் கொள்ள முடியவில்லை .இதுதான் இவ்வுலக வாழ்வின் செல்வத்தின் நிலை.

كُلُّ نَفْسٍ ذَآٮِٕقَةُ الْمَوْتِ‌ؕ وَاِنَّمَا تُوَفَّوْنَ اُجُوْرَكُمْ يَوْمَ الْقِيٰمَةِ‌ؕ فَمَنْ زُحْزِحَ عَنِ النَّارِ وَاُدْخِلَ الْجَـنَّةَ فَقَدْ فَازَ‌ؕ وَمَا الْحَيٰوةُ الدُّنْيَاۤ اِلَّا مَتَاعُ الْغُرُوْرِ
ஒவ்வொரு ஆத்மாவும் மரணத்தை சுவைத்தே தீர வேண்டும். (எனினும்) உங்கள் (செயல்களுக்குரிய) கூலிகளை நீங்கள் முழுமையாக அடைவதெல்லாம் மறுமை நாளில்தான். ஆகவே, (அந்நாளில்) எவர் (நரக) நெருப்பிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டு சுவர்க்கத்தில் நுழைவிக்கப்படுகிறாரோ அவர் நிச்சயமாக பெரும் பாக்கியத்தை அடைந்துவிட்டார். இவ்வுலக வாழ்க்கை மயக்கக் கூடிய (அற்ப) இன்பத்தைத் தவிர வேறில்லை. (அல்குர்ஆன் : 3:185)
வாழ்வில் எந்த ஒரு காலக் கட்டத்தில் நாம் இருந்தாலும் மரணத் திரை எப்போது விழும் என்று யாருக்கும் தெரியாது . தெரிந்தாலும் அதைத் தடுக்கவும் முடியாது .
குடும்பத்தினர் மீதும் , குழந்தைகள் மீதும் , உறவினர்கள் மீதும் அன்பு காட்டுங்கள் . உங்கள் ஆரோக்கியத்தின் மீதும் கவனம் செலுத்துங்கள் .
- ஸ்டீவ் ஜாப்ஸ்
ர.ரா

இறப்பதற்கு முன் பிரபலங்களின் கடைசி வார்த்தைகள். - (ஸக்றாத் 10 )

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 63)



இறப்பதற்கு முன் பிரபல மனிதர்கள் கூறிய கடைசி வார்த்தைகள்

இறப்பதற்கு முன்னர் யாராக இருப்பினும் ஏதேனும் முக்கிய செய்தி அல்லது அவர்களுக்கு பிடித்தமான நபர்களிடம் அவர்கள் கூற விரும்பும் வார்த்தைகளை தான் கூறுவார்கள். மேலும், இறக்கும் தருவாயில் யாரும் பொய் கூற மாட்டார்கள் என்பது அனைவரின் பொதுவான நம்பிக்கை.

சிலர் இறக்கும் போது கூறும் வார்த்தையில் ஆழ்ந்த பொருளும் அடங்கியிருக்கும். பொதுவாகவே பிரபலங்கள் மற்றும் சான்றோரின் வார்த்தைகள் ஓர் முன் உதாரணமாக தான் எடுத்துக் கொள்ள படுகின்றன.

இவர்கள் இறக்கும் முன் கூறிய வார்த்தைகள் பொன் எழுத்துக்களாகவே உலக ஏட்டில் பதிக்கப்படுகின்றன.இனி, இறப்பதற்கு முன் பிரபலங்கள் கூறிய கடைசி வார்த்தைகள் பற்றி காணலாம்...

அப்துல் கலாம்

"விளையாட்டு பசங்களா? நல்லா பண்ணிங்களா ?" இது தான் மாணவர் ஜனாதிபதி கடைசியாக பேசிய வார்த்தைகள்.

கார்ல் மார்க்ஸ்

"கடைசி வார்த்தைகள் முட்டாள்களுக்கானது, அது ஒரு போதும், முழுமையாக கூறப்படுவதில்லை". என கார்ல் மார்க்ஸ் இறப்பதற்கு முன்னர் கூறினார்.

பீத்தோவன்

இசை மேதை பீத்தோவன் தான் இறப்பதற்கு முன்னர், "நண்பர்களே நன்கு கைத்தட்டுங்கள், காமெடி முடியப் போகிறது " என கூறினார்.

இளவரசி டயானா

கார் விபத்தில் இறப்பதற்கு முன்னர் இளவரசி டயானா, "ஓ கடவுளே, என்ன நடந்தது ?" என கூறினாராம்.

சே-குவேரா

புரட்சியாளர் சே தான் இறக்கும் முன்னர், "வா கோழையே, நீ என்னை சுட வந்திருக்கிறாய். ஆனால், நீ கொல்ல போவது ஓர் மனிதனை மட்டும் தான் "

மால்கம் எக்ஸ்

மனித உரிமை புரட்சியாளர் மால்கம் எக்ஸ் தான் இறக்கும் போது, "சகோதரர்களே, சகோதரர்களே, இது அமைதிக்கான வீடு "(உலகம்) என கூறினார்.

மொஸார்ட்

பிரபல இசை அமைப்பாளர் மொஸார்ட் தான் இறக்கும் போது, "மரணத்தின் ருசியானது இதழ்களுக்கு மேலே உள்ளது, பூமிக்கு மேல் அல்ல" என்று கூறினார்.

ஸ்டீவ் ஜாப்ஸ்

ஆப்பிள் நிறுவனதின் முதன்மை செயலாளர் ஸ்டீவ் தான் இறக்கும் போது, "ஓ வாவ்... ஓ வாவ்... ஓ வாவ் " என்று கூறினார்.

பாப் மார்லி
பிரபல ரெக்கே பாடகர், பாடலாசிரியர், அமைதியை விரும்பிய மனிதர், "பணத்தால் வாழ்க்கையை வாங்க முடியாது" என கூறினார்.
ஜாக் டேனியல்
பிரபல விஸ்கி நிறுவன வியாபாரி ஜான் டேனியல் தான் இறக்கம் தருவாயில், "ஒரு கடைசி ட்ரின்க் ப்ளீஸ் " என்று கூறினார்.
அன்னை தெரேசா
"இயேசுவே உன்னை நேசிக்கிறேன், இயேசுவே உன்னை நேசிக்கிறேன்.." என்று கடைசியாக அன்னை தெரேசா கூறினார்.
இந்திராகாந்தி
இந்திராகாந்தி தான் இறக்கும் முன்னர் கடைசியாக கூறிய வார்த்தை,
"நமஸ்தே "
காந்தி
கோட்சே துப்பாக்கியால் சுட்ட போது, கீழே விழுந்த நொடியில் காந்தி கூறிய கடைசி வார்த்தை "ஹே ராம்"
(இத்துடன் ஸக்றாத் பதிவுகள் நிறைவு)
ர.ரா

மரணம் ( மவ்த்து) 01

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 64)



மரணம் .அது உடலை விட்டு ரூஹு பிரிவது . ரூஹு பிரிந்தபோது உடல் பிரேதமாகும் .இவ்விதம் உடலையும் , ரூஹையும் பிரிப்பதற்காக அல்லாஹு தஆலா ஒரு மலக்கை நியமித்திருக்கிறான் . அவர் பெயர் இஸ்றாயீல் (அலை) ; மலக்குல் மவ்த் என்றும் சொல்படுகிறது .
மரணத்தை மனிதர் முதல் எல்லா ஜீவன்கள் மீதும் விதிக்கப்பட்டதால் அனைத்து உயிர்களும் இருப்பது நிச்சயம் .

மனிதர்களுக்கு மரணம் காரணம் பற்றியும் வரும் , பற்றாமலும் வரும்.
காரணம் பற்றி மவ்த்து வியாதியில் மவ்த்தாவது , காரணம் பற்றாத மவ்த்து திடீரென்று வரும் , இது சடுதி மரணம் .
மரணத்தினால் உண்டாகும் வேதனை கூறிய வாளினால் ஆயிரம் வெட்டுப் படுவதைப் பார்க்கிலும் அதிகக் கொடுமையா இருக்கும்.
மரணத்தின் வேதனையில் ஒரு ரோமக் கால் அளவு எடுத்து எல்லா ஜீவராசிகள் மீதும் வைத்தால் அதைத் தாங்க முடியாமல் ஒருமித்து மடிந்து போகும். அதாவது எல்லா ஜீவராசிகளும் தாங்கக் கூடாத மவ்த்தினுடைய முழு வேதனையும் , ஒவ்வொரு ஜீவனும் அனுபவிக்க வேண்டியதாக இருக்கின்றது .

மவ்த்து வருவதற்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தவணை குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த தவணை முடியும்போது , அதற்கு ஒரு க்ஷணப் பொழுது முந்தாமலும் ,ஒரு க்ஷணப் பொழுது பிந்தாமலும் மவ்த்தாவார்கள் .

எவ்விதம் கெஞ்சி மன்றாடினாலும் மலக்கல் மவ்த்து (அலை) அவர்கள் உடன்பட மாட்டார்கள் .
இப்படித்தான் நபி மூஸா (அலை ) அவர்களின் உயிரை வாங்க மலக்கல் மவ்த்து இஸ்ராயீல் வந்த போது ...
1339. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

" உயிர் பறிக்கும் வானவர் ஒருவர் மூஸா(ரலி) அவர்களிடம் அனுப்பப்பட்டார். அவர் வந்தபோது மூஸா(அலை) அவர்கள் அவரின் கண் பிதுங்கும் அளவுக்கு அடித்துவிட்டார்கள்.
உடனே அவர் அல்லாஹ்விடம் போய், 'இறைவா! மரணிக்க விரும்பாத ஓர் அடியானிடம் நீ என்னை அனுப்பிவிட்டாய்' என்றார்.
பிறகு அல்லாஹ் அவரின் கண்ணைச் சரிப்படுத்திவிட்டு, 'நீர் மீண்டும் அவரிடம் சென்று, அவரை ஒரு மாட்டின் முதுகில் கையை வைக்கச் சொல்லி, அவரின் கை எத்தனை ரோமங்களை அடக்கிக் கொள்கிறதோ அத்தனை ஆண்டுகள் அவர் உயிர் வாழலாம் என்பதையும் கூறும்' என அனுப்பி வைத்தான்.

(அவ்வாறே அவர் மூஸா(அலை) அவர்களிடம் வந்து கூறியபோது,) மூஸா(அலை) 'இறைவா! அதற்குப் பிறகு?' எனக் கேட்டதும் அல்லாஹ், 'பிறகு மரணம் தான்' என்றான்.
உடனே மூஸா(அலை) அவர்கள் 'அப்படியானால் இப்பொழுதே (தயார்)' எனக் கூறிவிட்டு அல்லாஹ்விடம் (பைத்துல் முகத்தஸ் என்னும்) புனிதத்தலத்திலிருந்து கல்லெறியும் தூரத்திலுள்ள (புனிதத் தலத்திற்கு மிக அருகிலுள்ள) இடத்தில் தம் உயிரைக் கைப்பற்றுமாறு வேண்டினார்கள்.
மேலும் நபி(ஸல்) அவர்கள் கூறும்போது, 'நான் மட்டும் இப்போது அங்கு (பைத்துல் முகத்தஸில்) இருந்தால் உங்களுக்கு அந்த செம்மணற் குன்றிற்கருகில் உள்ள பாதையிலிருக்கும் மூஸா(அலை) அவர்களின் கப்ரைக் காட்டியிருப்பேன்' எனக் குறிப்பிட்டார்கள்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 23. ஜனாஸாவின் சட்டங்கள்.
ர.ரா
**Rahmath Rajakumaran**
ஆதம் (அலை) அவர்கள் தம் இறைவனிடம் திரும்பி வந்தார்.
இறைவன் " நிச்சயமாக இதுதான் உம்முயை காணிக்கையும் .உன் வழித்தோன்றல்களின் காணிக்கையும் ஆகும்" என்றான் . பின் அல்லாஹ் தனது இரண்டு கைகைகளையும் மூடிக் கொண்டு " இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றை தேர்ந்தெடு " என்றான் .
" நான் எனது இறைவனின் வலக்கரத்தை தேர்ந்துத்தேன் அதிலே ஆதமும் அவரது சந்ததியினரும் இருந்தனர்.
"இறைவா ! இவர்களெல்லாம் யார் ? "
"இவர்கள் உன் சந்ததியினர் " . அத்தனை பேர்களின் இரு கண்களுக்கிடையில் அவர்களின் வயது எழுதப்பட்டிருந்தது அதில் வசீகரமான முகமுடைய ஒருவர் இருந்தார்.
" இறைவா ! இவர் யார் ?"
"இவர் உன்னுடைய மகன் தாவூத் அவருக்கு நான் 40 வயதை எழுதியுள்ளேன் "
" இறைவா ! இவரது வயதை அதிகப்படுத்துவாயாக ! "
" நான் அதை எழுதி முடித்துவிட்டேன்"
" இறைவா ! நான் அவருக்கு என்னிடமிருந்து 60 வயதைத் கொடுக்கிறேன் "
" அவ்வாறே செய்கிறேன்"
ஆதம் (அலை) அவர்கள் சொர்க்கத்தில் இருந்தார் . பிறகு அங்கிருந்து இறக்கப்பட்டார்.. ஆதம் தமது வாழ்நாளை எண்ணிக் கொண்டிருந்தார்.
சிறிது காலம் கழித்து .உயிரைக் கைப்பற்றும் மலக்குல் மவூத் என்ற வானவர் வந்தார் .
" நீர் என்ன முன்னரே வந்து விட்டீர் எனக்கு ஆயிரம் ஆண்டுகள் எழுதப் பட்டிருந்தே ? "
" ஆமாம் . உண்மைதான் . என்றாலும் .நீங்கள் உங்கள் மகன் தாவூத்திற்கு 60 வருடங்களைக் கொடுத்து விட்டீரே ! "
ஆதம் நபி மறுத்தார் .எனவே அவரது சந்ததியினரும் மறுத்து வருகின்றனர் . மேலும் ஆதம் (அலை) அவர்களுக்கு மறதி ஏற்பட்டது. அவரது சந்ததியினருக்கும் மறதி ஏற்பட்டது .
இந்த நாளிலிருந்தே பூமியில் முதன் முதலாக எழுத்து உதயமாகி அதை எழுதி வைத்துக் கொள்ளும்படியும் , அதற்குரிய சாட்சிகளை ஏற்படுத்தும்படியும் கூறப்பட்டது " என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அபூ ஹுரைரா (ரலி) _ நூல் திர்மிதி ,முஸ்லிம் .

மரணம் ( மவ்த்து) 02

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 65)



மரணம் தவணை குறிக்கப்பட்டது . அந்த தவணையானது அவன் எந்தத் தலத்தில் எவ்வித மறைவில் என்ன பந்தோபஸ்தில் இருந்த போதிலும் அவனை மரணம் கைப்பற்றிக் கொள்ளும் .
" நீங்கள் எங்கிருந்தபோதிலும் மரணம் உங்களை அடைந்தே தீரும்; மிகப் பலமான உயர்ந்த (கோட்டை) கொத்தளத்தின் மீது நீங்கள் இருந்தபோதிலும் சரியே! "
(அல்குர்ஆன்: 4:78)
மவ்த்தின் தவணை இன்ன காலத்தில், இன்ன வேளையில் , இன்ன இடத்தில் , இன்ன விதத்தில் தனக்கு வருமென்று எவனும் அறிய மாட்டான். மவ்த்து திடுகூறாய் வந்து பிடித்துக் கொள்ளும். அப்போது யாராயிருந்தாலும் கைசேதப்படாமற் போக மாட்டார்கள் .
எவ்விதங் கட்டுக்காவலில் இருந்தாலும் , எங்கே ஓடி ஒளித்தாலும் மவ்த்து விடாது. இன்னான் இன்ன காலத்தில் இன்ன நேரத்தில் மவ்த்திருந்தால் அந்த நேரத்திலேயே மவ்த்தாவான் . அதை அவன் அறிய மாட்டான் . இது பற்றி ஒரு நிகழ்வு ,

முற்காலத்தில் மலக்குல் மவ்த்து (அலை) அவர்களை எல்லோரும் நேரிற் காண்பது வழக்கம்.
ஒரு நாள் ஸுலைமான் (அலை) அவர்களின் சபையில் அங்கிருந்த ஒரு பாலியரை மலக்குல் மவ்த்து (அலை) அவர்கள் உற்றுப் பார்த்து விட்டுப் போனார்கள் .

உடனே அந்த பாலியர் ஸுலைமான் நபி (அலை) அவர்களிடம்,
" நபியே! மலக்கல் மவ்த் வந்து என்னை உற்றுப் பார்த்து விட்டு போகிறார் . அதனால் எனக்கு அச்சமாக இருக்கின்றது . தாங்கள் தயவு செய்து இப்போதே என்னை சீனா ராஜ்ஜியத்திற் கொண்டு போய் விட்டு விடும்படி உங்களுக்கு கட்டுபட்ட காற்றுக்கு உத்திரவு செய்ய வேண்டும் "
அப்படியே நபியவர்கள் காற்றுக்கு உத்திரவு கொடுத்தார் .காற்று அவரை
சீனா ராஜ்ஜியத்திற் கொண்டு போய் விட்டுவிட்டது.
பிறகு மலக்கல் மவ்த் (அலை) அவர்கள் நபியவர்களின் சபைக்கு வரவே , அவரிடம் நபியவர்கள்,
" தாங்கள் அந்த பாலியரை ஏன் உற்றுப் பார்த்தீர்கள்? "
" நபியே! அந்தப் பாலியரின் ரூஹை இன்றைக்கு சீன ராஜ்ஜியத்தில் கைப்பற்றும்படி எனக்கு கட்டளை பிறந்திருக்கின்றது . அப்படி இருக்க அவர் இங்கிருக்கிறாரே , இங்கிருந்து இன்றைக்கே எப்படி சீனாவுக்கு எப்படி போவார் என்றுதான் உற்றுப் பார்த்தேன்"
" அந்த பாலியர் தங்களைக் கண்டு பயந்து சீனாவுக்குத் தம்மை காற்றின் மூலமாக அனுப்பி விடும்படி தாமாகக் கேட்டுக் கொண்டார். அப்படியே காற்று அவரை அங்கே கொண்டு போய் விட்டு விட்டது "
" அப்போ, எனக்கு வந்த கட்டளை மிகச் சரியாகத்தான் வந்திருக்கிறது. இதோ இப்போதே சீனா போய் அந்த பாலியரின்
ரூஹை கைப்பற்றுகிறேன்"
" நீங்கள் எங்கிருந்தபோதிலும் மரணம் உங்களை அடைந்தே தீரும்; மிகப் பலமான உயர்ந்த (கோட்டை) கொத்தளத்தின் மீது நீங்கள் இருந்தபோதிலும் சரியே! "
(அல்குர்ஆன்: 4:78)
இது துர்ருல் ஹினான் என்ற அரபி கிதாபில் உள்ளது.
ர.ரா

மரணம் ( மவ்த்து) 03

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 66)



ஆது மக்களின் அரசனாக ஷத்தாத் முடிசூடிக் கொண்டான் . உருவச்சிலைகளை வணங்கும். அவனிடம் ஹூத் (அலை) ஏகத்துவத்தை போதித்தார்கள் .
"உங்களது உருவமற்ற இறைவனை வணங்கினால் என்ன கிடைக்கும்? "
"சொர்க்கம் "
"எப்படி இருக்கும் உன் இறைவனின் சொர்க்கம்?"
"தங்கத்தாலும் மணி முத்துக்களாலும் வைர வைடூரியங்களாலும் அது உருவாக்கப்பட்டது."
" ப்பூ .... அவ்வளவுதானே ?... அந்த சொர்க்கத்தை பூலோகத்திலேயே நானே உருவாக்கிக் கொள்கிறேன்" என்று தன் கீழ் உள்ள சிற்றரசர்கள் அத்தனை பேரிடமும் மேற்கண்ட தங்கம் போன்றவற்றை உடனடியாக கொண்டு வரச் சொன்னான் .

பூலோக சொர்க்கம் தன்னுடைய 600 வயதில் உருவாக்கப்பட்டு 900 வயதில் கட்டி முடிக்கப்பட்டது . இதற்கு "இறமதாத்தில் இமாத்" என்ற பெயரும் சூட்டப்பட்டது.
இறைவன் கூட தன் குர்ஆனில் ,
" இதைப் போன்று ஒரு நகரம் இம்மண்ணில் உருவாக்கப்படவே இல்லை" என்று
குர்ஆனில் (89 : 8 ) குறிப்பிடுகிறான் .

கோலாகலமான திறப்பு விழா . தன் சமூக மக்கள் புடை சூழ ஷத்தாத் அங்கு வந்தான் . அந்த இடத்தில் பொன் நிற மான் ஒன்று மேயக் கண்டான் . ஏற்கனவே மயில்கள் ,குயில்கள், அன்னப்பறவைகள் , முயல்கள் போன்றவற்றை கொண்டு அழகுப்படுத்தப்பட்ட பூலோக சொர்க்கத்தில் பொன் மான் மேய்ந்தால் இன்னும் அழகாக இருக்குமே...
பொன்மானை பிடிக்க விரட்டினான் ஷத்தாத் , கூடவே அவன் சமூகமும் விரட்டியது . அது இறக்கை கொண்டு பறக்க ஆரம்பித்தது . அந்த இடத்தில் பார்க்க அச்சமுற தோற்றத்தில் ஒரு ஆள்,
"பூலோகத்தில் சொர்க்கம் கட்டினால் இறப்பே வராத இறைவன் என்ற நினைப்போ? "
" யார் நீ?"
"இஸ்ராயீல் "
" இங்கு என்ன செய்ய வந்தீர்?"
" உன் உயிரை வாங்க "

ஒரே ஒரு சப்தம் ஷத்தாத் உட்பட அத்தனை பேரும் மாண்டனர் ... இப்படி ஒரு வரலாறு பேசுகிறது
இறமதாத்தில் இமாத் என்ற பூலோக சொர்க்த்தை திறக்க அதன் தலைவாயிலுக்கு வந்து ஷத்தாத் வலது காலை முன்வைத்து இடது காலை தூக்கும் அந்த இடவெளி நேரத்தில் அவன் உயிர் வாங்கப்பட்டது. இப்படி ஒரு வரலாறும் பேசுகிறது.
காலச் சக்கரம் சுழன்றது .

இறைவன் . "இஸ்ராயீலே , நீர் எப்போதாவது எவர் மீதாவது இரக்கம் கொண்டிருக்கிறீரா ?"
"ஆம் இறை பெரியோனே ...ஒரு தடவை நடுக் கடலில் கப்பல் ஒன்று புயல் காற்றில் அலைக்கழித்து கவிழ்ந்து அத்தனை பேரின் உயிரும் வாங்கப்பட்டது.
அத்தருணத்தில் ,ஒரு கர்ப்பிணி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து மிதக்கும் சிறிய மரத்துண்டில் வைத்து நீந்தினாள் . அந்த சமயம் அவள் உயிரையும் வாங்க ஒரு மீன் அவளை கடித்து குதறி விழுங்கியது .

இந்த நிகழ்வு என்னை இரக்கப்பட வைத்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள்.
"அடுத்து?" என்று கேட்டான் இறைவன்

ஷத்தாத், பூலோக சொர்க்கத்தை சுகிச்சு சுகிச்சி கட்டினான் . அத்தனை வருடம் கட்டிய சொர்க்கத்தை ஒரு தடவையாவது அவன் முழுமையாக உள்ளே போய் பார்ப்பதற்குள் அவன் உயிர் வாங்கியது எனக்கு ரொம்பவும் இரக்கமாக இருந்தது என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள் .
"தாயில்லாமல் அன்று கடலில் தத்தளித்த அந்த ஆண் குழந்தைதான்
இந்த ஷத்தாத் " - என்றான் இறைவன்
உயிர் வாங்கும் இஸ்ராயீல் (அலை) அதிர்ந்து விட்டார்கள் .
அடுத்து
فَلَمَّا قَضَيْنَا عَلَيْهِ الْمَوْتَ مَا دَلَّهُمْ عَلٰى مَوْتِهٖۤ اِلَّا دَآ بَّةُ الْاَرْضِ تَاْ كُلُ مِنْسَاَتَهٗ فَلَمَّا خَرَّ تَبَيَّنَتِ الْجِنُّ اَنْ لَّوْ كَانُوْا يَعْلَمُوْنَ الْغَيْبَ مَا لَبِثُوْا فِى الْعَذَابِ الْمُهِيْنِ
ஸுலைமானுக்கு நாம் மரணத்தை விதித்தபொழுது அவர் இறந்துவிட்டார் என்பதை, அவர் சாய்ந்திருந்த தடியை அரித்து விட்ட பூச்சியைத் தவிர (மற்ற எவரும்) அந்த ஜின்களுக்கு அறிவிக்கவில்லை.
(அவர் சாய்ந்திருந்த தடியைக் கரையான் பூச்சிகள் அரித்துவிட்டன. ஆகவே, அதன் மீது சாய்ந்திருந்த ஸுலைமான் கீழே விழுந்துவிட்டார்.) அவர் கீழே விழவே (வேலை செய்து கொண்டிருந்த) அந்த ஜின்களுக்கு தாங்கள் மறைவான விஷயங்களை அறியக்கூடுமாக இருந்தால் (இரவு பகலாக உழைக்க வேண்டிய) இழிவு தரும் இவ்வேதனையில் தரித்திருக்கமாட்டோம் என்று தெளிவாகத் தெரிந்தது.
(அல்குர்ஆன்: 34:14)
நடுக் கடலில் குழந்தையை பிரசவித்த ஷத்தாத்தின் தாயாக இருந்தாலும் சரி,
இறைவனையே எதிர்த்து , அவன் உண்டாக்கிய சொர்க்கத்திற்கு போட்டியாக பூலோகத்தில் சொர்க்கம் கட்டிய ஷத்தாத்தும் சரி , இறை இல்லாமான பைத்துல் முஹத்தீஸைக் கட்டிய நபி ஸுலைமான் (அலை) அவர்களாக இருந்தாலும் சரி ...
யாருக்கு எப்போது மரணம் ? எப்படி மரணம் என்பதை தெள்ளத் தெளிவாக கட்டளையை அனுப்பிக் கொண்டே இருப்பான் அந்த வல்ல நாயகன் .
ர.ரா

## மரணத்தின் வேதனை 04

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 67)



உமர் (ரலி) அவர்கள், கஅபு (ரலி) அவர்களிடம் , " கஅபே ! மரணத்தைப் பற்றி எனக்கு விபரம் கூறுங்கள் "
" முட்கள் நிறைந்த ஒரு மரக்கிளையை ஒரு மனிதனுடைய வயிற்றினுள் விட்டு, பிறகு அதை வேகமாக இழுத்தால், அந்த ஒவ்வொரு முள்ளும், ஒவ்வொரு நரம்பைப் பிடுங்கிக் கொண்டு வருமே, அந்த வேதனையை விடக் கடுமையானதாகும் மரண வேதனை "
நபி மூஸா (அலை) அவர்களின் ரூஹானது , (உயிர்) இறைவனிடம் சென்ற போது , "மூஸாவே ! மரண நிலை உமக்கு எப்படி இருந்தது ?

" என்னை ஒரு சிட்டுக் குருவியைப் போல் நான் கண்டேன். அக்குருவி கொதிக்கும் எண்ணெய்யில் போட்டு பொரிக்கப்படுகிறது.
ஆனால் கொதிக்கும் எண்ணெய்யில் அக்குருவி மரணமடையவுமில்லை ! அதை விட்டுத் தப்பியோடி சுகம் பெறவும் அதனால் முடியவில்லை .இந்த நிலையில் நானிருந்தேன் "
நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் ரூஹ் இறைவனிடம் சென்றபோது , "இப்ராஹீமே ! மரண நிலை உமக்கு எப்படி இருந்தது ? "
நனைக்கப்பட்ட உரோமங்களுக்குள் சிக்கிக் கொண்டிருக்கும் ஒரு வளைந்த கம்பியை வேகமாக இழுத்தால், அக்கம்பியினால் எப்படி உரோமங்கள் இழுக்கப்பட்டுக் கொண்டு வருமோ , அதைவிடக் கடினமாக இருந்தது "

" இப்ராஹீமே! உமக்கு மவுத்தின் நிலையை நாம் இலேசாக்கி வைத்தோம்"
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது சங்கைக்குரிய ரூஹை , வெண்ணெயில் உள்ள முடியை எடுப்பதைப் போல் கைப்பற்றியும் , ரோஜா மலர் போன்றிருந்த நாயகத்தின் வதனம் வாடிய மாதுளைத் தோல்போல் மாறி விட்டதாகக் கூறப்படுகிறது .
இந்த நேரத்தில் "இறைவா ! எனது உம்மத்தினருக்கு மரண வேதனையை இலேசாக்கி வைப்பாயாக ! என்று நபி (ஸல்) அவர்கள் கூறிக் கொண்டிருந்தார்கள்.
நபி ( லல்) அவர்களின் மரண வேதனையைப் பார்த்த எனக்கு , எவருமே இதிலிருந்து தப்ப முடியாது என்று உறுதி அதிகமாகியது "
- ஹஜ்ரத் ஹஸன் (ரலி)
4462. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் நோய் கடுமையானபோது, அவர்களுக்கு மயக்கமேற்படத் தொடங்கியது.
அப்போது ஃபாத்திமா(ரலி), 'அந்தோ! என் தந்தைக்கு ஏற்பட்ட மரண வேதனையே!' என்று கூறினார்கள்.
ஃபாத்திமா(ரலி) அவர்களை நோக்கி நபி(ஸல்) அவர்கள், 'இன்றைய தினத்திற்குப் பின் உன் தந்தைக்கு எந்த வேதனையும் இல்லை' என்று கூறினார்கள்.
நபி(ஸல்) அவர்கள் இறப்பெய்தியவுடன், ஃபாத்திமா(ரலி), 'அழைத்த அதிபதியின் அழைப்பை ஏற்ற என் தந்தையே! ஃபிர்தெளஸ் எனும் சொர்க்கத்தை தம் உறைவிடமாக்கிக் கொண்ட என் தந்தையே! இந்த இறப்புச் செய்தியை நாங்கள் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அறிவிக்கிறோம், என் தந்தையே!' என்று கூறினார்கள்.
நபி(ஸல்) அவர்கள் அடக்கம் செய்யப்பட்டபோது ஃபாத்திமா(ரலி) (என்னை நோக்கி), 'அனஸே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மீது மண்ணைப் போட உங்கள் மனம் எப்படி இடம் தந்தது?' என்று கேட்டார்கள்.
ர.ரா

மரணத்திற்குப் பின் ஆன்மாவின் அவலங்கள் 05

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 68)

மரணத்திற்குப் பிறகு பாவத்மாக்கள் அநேகர் " நான் உலகில் அல்லாஹு தஆலாவுக்கு வழிப்படாமல் மாறு செய்தேன் . பரிகாசக்காரர்களில் ஒருவனாக இருந்தேன் . அதனால் நேரிட்ட கைசேதம் எனக்கு மிகவும் பெரிதாயிற்று ; இந்த மாதிரியெல்லாம் இருக்கும் என்பதை வாழும்நாளில் என் மனம் முரண்டாகவே நிராகரித்து விட்டதே , என் பகுத்தறிவுக்கும் இது தென்படாமல் போய் விட்டதே , இனி இப்போது என்ன செய்வேன் " என்றும் ....
மற்றும் அநேகர் " என்னை இப்போது மவ்த்தாக்காமல் இன்னும் சில காலம் உயிரோடு இருக்க விட்டால் நன்மை செய்தவர்களில் நானும் ஒருவனாகவே " என்றும் ....
இன்னும் அநேகர் , " என் எஜமானே ! எனக்கு இந்த மரண கண்டத்தை விட்டு விடுதலை செய்ய வேண்டுகிறேன். அப்படி செய்தால் , நான் செய்யாமல் தவறிப் போன நற்கருமங்களைச் செய்து முடிக்கிறேன் " என்றும் ...

இன்னும் அதிகம் பேர் , " எஜமானே ! என்னை இன்னும் சொற்ப நாட்கள் தவணைக் கொடுத்து , இந்த மவ்த்தி லிருந்து மீளுவிப்பாயானால் , நான் தான தருமங்கைளச் செய்து ஸாலிஹானவர்களுடன் ஆகிவிடுவேன்" என்றும் ...

இவ்வாறெல்லாம் அவனவன் பிதற்றிக் கொண்டு அலைவானேத் தவிர மேலிடத்தில் கவனிக்கப்படும் சொற்கள் அல்ல ; அவற்றால் எந்த பிரயோஜனமும் எப்போதும் ஏற்படாது.

وَاَنْفِقُوْا مِنْ مَّا رَزَقْنٰكُمْ مِّنْ قَبْلِ اَنْ يَّاْتِىَ اَحَدَكُمُ الْمَوْتُ فَيَقُوْلَ رَبِّ لَوْلَاۤ اَخَّرْتَنِىْۤ اِلٰٓى اَجَلٍ قَرِيْبٍۙ فَاَصَّدَّقَ وَاَكُنْ مِّنَ الصّٰلِحِيْنَ
உங்களுக்கு மரணம் வருவதற்கு முன்பாகவே, நாம் உங்களுக்குக் கொடுத்தவைகளிலிருந்து தானம் செய்யுங்கள். (அவ்வாறு செய்யாதவன் மரணிக்கும் சமயத்தில்,) "என் இறைவனே! ஒரு சொற்ப காலத்திற்கு என்னை விட்டுவைக்க வேண்டாமா? (அவ்வாறு விட்டால்,) நான் தானமும் செய்வேன்; (நன்மைகளைச் செய்து) நல்லோர்களிலும் ஆகிவிடுவேன்" என்று கூறுவான்.
(அல்குர்ஆன்: 63:10)
وَلَنْ يُّؤَخِّرَ اللّٰهُ نَفْسًا اِذَا جَآءَ اَجَلُهَا وَاللّٰهُ خَبِيْرٌ بِمَا تَعْمَلُوْنَ
(எனினும்) யாதொரு ஆத்மாவுடைய (மரணத்தின்) தவணை வரும் பட்சத்தில் அதனை அல்லாஹ் பிற்படுத்தவே மாட்டான். நீங்கள் செய்பவைகளை அல்லாஹ் நன்கறிந்தே இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 63:11)
ர.ரா

"ஸிராத் " என்கிற கடக்கும் பாலத்தின் கட்டமைப்பு 01

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 69)




"ஸிராத்" என்பது பாலம்; விசாரணைத் தளமான மௌகிபுக்கும், சுவர்க்கத்திற்கும் இடையில் நீண்டிருக்கும் இப் பாலம் நரகத்தின் மீது போடப்பட்டிருக்கும்.

இப் பாலம் வாளை விட அதிகக் கூர்மையுள்ளதாய் , தலைமுடியைப் பார்க்கிலும் அதிக மெல்லியதாய் உள்ள பாலம் . உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா ?
பாலத்தின் தூரம் ஐம்பதினாயிர வருஷப் பிரயாணத் தூரமுள்ள பாலம் . இதில் முப்பதினாயிர வருஷப் பிரயாணத் தூரம் செங்குத்தான ஏற்றமுள்ளதாகவும், பதினாயிர வருஷப் பிராயாணத் தூரம் தலை குப்புற தள்ளும் கிடு கிடு பள்ளத்தாக்கானதாகவும் , மீதிமுள்ள நான்கு வருஷப் பிரயாணத் தூரம் சம தளமாகவும் இருக்கும் .

சறுக்குதலும் ,வழுக்குதலுமே அதன் குணம் . பாலத்தில் எங்கே பார்த்தாலும் நீண்டதும் , வளைந்ததுமான இரும்பு கொக்கிகளும் , நஜ்த் பகுதியில் முளைக்கும் கருவேல மர முற்களும் முளைத்திருக்கும் . பாலம் முழுவதும் இருள் சூழ்ந்திருக்கும் .
பாலத்தின் அடியில் நரகத்தின் நெருப்பு எரிவதால் இருண்ட அடர் புகையும் பாலத்தின் மீது எப்போதும் படர்ந்திருக்கும் .

அமானிதத்தையும் , உறவு பந்தத்தையும் பாலத்திற்கு அனுப்பப்படும். அவையிரண்டும் ஸிராத் பாலத்தின் இருபக்கங்களிலும் வலது, இடதுபுறமாக நின்று கொள்ளும் .
அமானிதத்தை ஆட்டைப் போட்டவர்களை பாலத்தின் வலது புறத்திலிருந்து நரக நெருப்புக் கிடங்கில் தள்ளப்படும் .
உறவு பந்தத்தை முறித்தவர்களை பாலத்தின் இடது புறத்திலிருந்து நரக நெருப்புக் கிடங்கில் தள்ளப்படும் .
இன்னும் அந்தப் பாலம் ஒரே ஸ்ிராத்தாக இருந்தாலும் , இதில் ஏழு ஜஸறுகள் என்ற சிறு சிறு பாலங்களும் , அகபா என்னும் மலை மேற் பாதை கொண்டதுமாக ஸிராத் என்கிற மெயின் பாலம் அமைக்கப்பட்டிருக்கும் .

"ஹஷ்ரு "என்கிற சேர்க்குதல் மைதானத்தில் இருந்து, அந்த ஸிராத் என்கிற மெயின் பாலத்திற்கு போவதற்காகப் ஜஸறு என்கிற சிறு சிறு பாலங்கள் 7 போடப்பட்டிருக்கும் அவைகளை கடந்து ஸிராத் போக வேண்டும்.
அந்த ஜஸறு என்கிற சிறு சிறு பாலங்களும் நரகத்தின் மீதே போடப்பட்டிருக்கும் . நரகத்தின் எரிமலைகள் அநேகம் இந்த ஜஸறு என்கிற சிறு சிறு பாலங்களுக்கும் மேலே வளர்ந்து உயர்ந்திருக்கும் .
இந்த ஜஸறுகளாகிய சிறு சிறு பாலங்களையும் , அகபா என்னும் மலை மேற் பாதைகளையும் கடந்துதான் மேற்படி ஸிராத்திற்கு போக முடியும்.
நான் உங்களுக்கு பாலத்தின் அமைப்பை தனித்தனியாக சொல்லி இருக்கிறேன் . ஆனாலும் இவையெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்ததுதான் 'ஸிராத் ' என்று சொல்லப்படும் .
ஸிராத் பாலத்து நான்கு புறமும் நரகத்து நெருப்பு கொழுந்து விட்டுத் தாவிச் சூழ்ந்து கொண்டிருக்கும் .
இந்த ஸிராத்தில் நடக்கிற ஒவ்வொரு வரையும், மேற்சொன்ன ஜஸறுகளாகிய சிறு சிறு 7 பாலங்களிலும் , முதற் சிறு பாலத்தில் ஈமானைப் பற்றியும் ,
இரண்டாம் சிறு பாலத்தில் தொழுகையைப் பற்றியும் , மூன்றாம் சிறு பாலத்தில் ஸக்காத்தைப் பற்றியும் , நான்காம் சிறு பாலத்தில் நோன்பைப் பற்றியும் , ஐந்தாம் சிறு பாலத்தில் ஹஜ்ஜு , உம்ராவைப் பற்றியும் , ஆறாம் சிறு பாலத்தில் ஒலு , முழுக்குகளைப் பற்றியும் , ஏழாம் சிறு பாலத்தில் பந்துக்களுடன் உறவாடுவாடி , ஒருவருக்கொருவர் செய்த அநியாயங்களைப் பற்றியும் , மலக்குகள் விசாரிப்பார்கள் .

விசாரணை விசாரிக்கப்படும் போது அவரவர் அதற்குரிய தக்க ஜவாபு சொல்லாமல் குற்றங்கண்டுப் பிடிக்கப்பட்டால் , பாலத்தில் கடந்து போக முடியாதவாறு அங்கங்கே தடுக்கப்பட்டுப் போவார்கள்.

ثُمَّ لَنَنْزِعَنَّ مِنْ كُلِّ شِيْعَةٍ اَيُّهُمْ اَشَدُّ عَلَى الرَّحْمٰنِ عِتِيًّا
பின்னர், ரஹ்மானுக்கு மாறு செய்வதில் கடினமாக இருந்தவர்கள் அனைவரையும் ஒவ்வொரு கூட்டத்திலிருந்தும் நிச்சயமாக நாம் பிரித்து விடுவோம்.
(அல்குர்ஆன்: 19:69)

ثُمَّ لَـنَحْنُ اَعْلَمُ بِالَّذِيْنَ هُمْ اَوْلٰى بِهَا صِلِيًّا
பின்னர், அவர்களில் நரகத்தை அடைய மிக்க தகுதி உடையவர்கள் யார் என்பதை நிச்சயமாக நாம் அறிந்து கொள்வோம்.
(அல்குர்ஆன் :19:70)

وَاِنْ مِّنْكُمْ اِلَّا وَارِدُهَا‌ كَانَ عَلٰى رَبِّكَ حَتْمًا مَّقْضِيًّا
அதனைக் கடக்காது உங்களில் எவருமே தப்பிவிட முடியாது. இது உங்களது இறைவனிடம் முடிவு கட்டப்பட்ட மாற்ற முடியாத தீர்மானமாகும்.
(அல்குர்ஆன் :19:71)

ثُمَّ نُـنَجِّى الَّذِيْنَ اتَّقَوْا وَّنَذَرُ الظّٰلِمِيْنَ فِيْهَا جِثِيًّا
ஆனால், நாம் இறை அச்சத்துடன் வாழ்ந்தவர்களை பாதுகாத்துக் கொள்வோம். அநியாயக்காரர்களை (அவர்கள்) முழந்தாளிட்டவர்களாக (இருக்கும் நிலைமையில்) அதில் தள்ளிவிடுவோம்.
(அல்குர்ஆன்: 19:72)
ர.ரா

ஸிராத் பாலத்தில் அணிவகுப்பு 2

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 70)



இதுவரை இவ்வுலகிற்கு வந்த 1, 24,000 நபிமார்களின் கூட்டத்தார்கள் தங்கள் தங்கள் நபியின் பின் அணு வகுத்து நிற்பார்கள் .
ஸிராத் பாலத்தில் முதன் முதலில் ஏறிக் கடப்பதற்காக நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடைய உம்மத்துக்களாகிய நம்மை அழைக்கப்படும் .
விசாரணைத் தளமான மௌகிபுக்கும் , சுவர்க்கத்திற்கும் இடையில் நீண்டிருக்கும் இப் பாலத்தின் மீது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தன் கூட்டத்தாராகிய நம்மை கூட்டிக் கொண்டு போய் விடுவார்கள் .

நாம் எல்லோருமே நம் நபியவர்களின் சிரத்தை எடுத்து நம்மை ஒழுங்குப் படுத்துவதையும் , சோர்ந்து நிற்கும் நமக்கு அவ்வப்போது ஆறுதலாக பேசுவதுமாக இருப்பதைக் கண்டு புளங் காகிதம் நாம் கொள்வோம் .

நம் கூட்டத்தாரை அடுத்து நபி ஈஸா (அலை) அவர்களுடைய உம்மத்தும், அவர்களை அடுத்து நபி மூஸா (அலை) அவர்களுடைய உம்மத்தும், இப்படியாக ஒவ்வொரு நபிமார்களுக்குப் பின் அந்தந்த நபியை பின்பற்றிய அந்தந்த உம்மத்கள் அணுவகுத்து நிற்கும்.
கடைசியில் நபி நூஹு (அலை) அவர்களும் , அவர்களுடைய உம்மத்தும் வந்து சேர்ந்து , முறைப்படி பாலத்தில் ஏறி நடப்பார்கள் .

"தக்வாவுடன் – பயபக்தியுடன் இருந்தார்களே அவர்களை நாம் ஈடேற்றுவோம்;
ஆனால், அநியாயம் செய்தவர்களை அ(ந்நரகத்)தில் முழந்தாளிட்டவர்களாக விட்டு விடுவோம்." குர்ஆன் (19:72 )
அப்போது ஸிராத் பாலத்தின் முன் முகப்பில் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் ,
பாலத்தின் நடுவில் மீக்காயீல் (அலை) அவர்களும் , இவ்விரு மலக்குகளுக்கு இடையில் நரகத்தின் அதிபதியான மலக்கு மாலிக் (அலை) அவர்களும் நிற்பார்கள் .
பின்பு எல்லோரையும் பாலம் ஏறிக் கடக்கும்படி கட்டளைப் பிறக்கும். . உடனே எல்லோரும் பாலம் கடக்க ஆரம்பிப்பார்கள் .

பாலத்து வாசலை அடுத்து நிற்கும் மலக்கு மாலிக் (அலை) அவர்கள் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களைப் பார்த்து,
" முஹம்மதே ...! தங்களுடைய உம்மத்தில் அல்லாஹு தஆலா உடைய உத்திரவு யார் யாருக்கு உண்டோ அவர்கள் இந்த பாலத்தைக் கடப்பார்கள். மற்றவர் கால் சறுக்கி நரகத்தில் விழுவார்கள். ஆகையால் உம் உம்மத்தில் பாவச் சுமை இல்லாதவர்களை பாலத்தைக் கடக்கச் சொல்லுங்கள் . பாவச் சுமை உள்ளவர்களை இப்படியே நரகத்தில் இறங்கி விடச் சொல்லுங்கள் "
அப்போது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் " மாலிக்கே ...! உம்முடைய முகத்தை என் உம்மத்துப் பார்த்தால் அவர்கள் மனங்கலங்கி கால்கள் நடுங்கும். ஆகையால் அல்லாஹ்வின் மீது ஆணை நீர் உமது முகத்தைத் திருப்பிக் கொள்ளும் "

" முஹம்மதே.... ! தாங்கள் மட்டும் இல்லாவிட்டால் தங்கள் உம்மத் முன்னமே நரகம் போய்ச் சேர்ந்திருப்பார்கள் " என்று சொல்லிவிட்டு மாலிக் (அலை) அவர்கள் தன் முகத்தை திருப்பிக் கொள்வார்கள் .

ஸிராத் பாலத்தில் ஏறி நடக்க ஆரம்பிக்கும்போது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடைய உம்மத்து பத்து கூட்டமாகப் பிரிவார்கள் .
எல்லாக் கூட்டத்திற்கும் முன் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் நின்று கொண்டு , தங்கள் உம்மத்தைத் திரும்பிப் பார்த்து , "என்னுடைய உம்மத்தே ...! கலங்காதே, தயங்காதே , என்னை நீங்கள் தொடர்ந்து கொண்டு பிரிந்து விடாமல் என் பின்னாலேயே வாருங்கள் " _ என்று சொல்லிவிட்டு முன்னாள் நடப்பார்கள் .
நபியவர்களைத் தொடர்ந்து உம்மத்தாகிய நீங்களும் , நானும் , நம் சந்ததியினரும் இன்ஷா அல்லாஹ் நடப்போம் .
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் முன் செல்ல, அவர்களுடைய உம்மத் பின் தொடர, ஹஜரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் , " இரட்சகனே .. எனதிறைவா..! இவர்கள் எல்லோரையும் ஸலாமத்தாக்கி வைப்பாயாக என்று சொல்லிக் கொண்டே நம் பின் வருவார்கள் .
ர.ரா
**Mohamed Rafiq**
நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) மஹ்ஷரில் ஒரே நேரத்தில் மூன்று இடத்தில் காண கிடைப்பார்கள்.
1, ஷபாஅத் செய்யும் இடத்தில
2, ஹவ்துல் கவ்சர் நீர் தடாகத்தில்
3, ஸிராத் பாலத்தில் உம்மத்துகள் நரகத்தில் விழாமல் பாதுக்காக்க.
ஒரு சமயம் கேள்வி பட்டது சரியா என்று தெரியாது.

ஸிராத் பாலத்தில் அணிவகுப்பு 3

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 71 )



" ஏ ... மஹ்ஷரில் கூடின கூட்டங்களே! என்னுடைய ஹபீபு முஹம்மதுடைய மகள் பாத்திமதுஸ் ஸுஹறா ஸிராத் பாலத்தை கடக்கப்போகிறபடியால் நீங்கள் எல்லோரும் உங்கள் பார்வைகளைத் தாழ்த்தித் தலை குனிந்து கொள்ளுங்கள் " என்று அர்ஷ் -க்குள்ளி லிருந்து ஒரு சப்தம் வரும் . காரணம் அவர்கள் சுவர்க்கத்தின் தலைவி அல்லவா....

அன்றியும் காவல் என்கிற அமானையும் , கிருபை என்கிற உம்மத்தையும் ,ஸிராத் பாலத்தில் வலது , இடதுபுறத்தில் அல்லாஹு தஆலா அனுப்பி நிறுத்துவான் .
பிறகு பாத்திமா (ரலி) அன்ஹா அவர்கள் எழுபதினாயிரம் ஹூருல்ஈன்களுடன் முன் சொன்ன பத்துக் கூட்டத்தாரில் முதற் கூட்டம் பின் தொடர மின்னல் வேகத்தில் அப்பாலத்தைக் கடந்திடுவார்கள் .
அந்த முதற் கூட்டத்தில்தான் ஸாலிஹான பெண்கள் இருப்பார்கள் .

இரண்டாம் கூட்டத்தார் காற்றின் வேகத்தில் பாலத்தைக் கடப்பார்கள்.
மூன்றாம் கூட்டத்தார் தேசிக் குதிரையின் வேகமாய் பாலத்தைக் கடப்பார்கள் .
நான்காம் கூட்டத்தார் ஒட்டகையின் வேகமாய் பாலத்தைக் கடப்பார்கள்.
ஐந்தாம் கூட்டத்தார் விரைந்தோடியும் பாய்ச்சலிலும் , பாலத்தைக் கடப்பார்கள்.
ஆறாம் கூட்டத்தார் சாதாரண நடையில் பாலத்தைக் கடப்பார்கள்.
ஏழாம் கூட்டத்தார் மொள்ள மொள்ள நடந்தும் , அப்படி நடக்கவும் இயலாமல் இடையிடையே உட்கார்ந்தும் , நின்றும் , தவழ்ந்தும் பாலத்தைக் மிக மெதுவாக கடப்பார்கள்.
எட்டாம் கூட்டத்தார் சிலர் நெஞ்சால் தவழ்ந்தும் , சிலர் பாலத்தில் உள்ள இரும்பு கொக்கிளாலும்

, முற்களாலும், கொளுவப்படுவதுமாய் காயப்பட்டு, பின்
அவைகளிலிருந்து விடுபட்டும், சிலர் ஒரு நாள் பிரயாணமாயும், சிலர் இரு நாள் பிரயாணமாயும், சிலர் ஓரிரு மாதப் பிரயாணமாயும் , சிலர் ஒரு வருட, சிலர் இரு வருடப் பிரயாணமாயும் , சிலர் அதிகப்பட்ச இருபத்தைந்து வருடப் பிரயாணமாயும் அப்பாலத்தைக் கடப்பார்கள்.
அவர்கள் இவ்வாறு பாலத்தை கடக்கும் வேதனையில் " யா முஹம்மது ! "
"யா முஹம்மது! " என்று அலறுவார்கள் .
அப்போது மலக்குகள் , " யா ரப்பே !
யா ரப்பே ! இவர்களை ஸலாமத்தாக்கு , இவர்களை ஸலாமத்தாக்கு " என்று சொல்வார்கள் .
ஒன்பதாம் கூட்டத்தாரும் , பத்தாம் கூட்டத்தாரும் ஜஸறு என்ற சிறு சிறு பாலத்திலும் , அகபா என்னும் மலை மேற் பாலத்திலும் உள்ள கொக்கிகள் , மற்றும் முட்களால் பற்றி இழுக்கப்பட்டு , காயப்பட்டு அங்கேயே தடைபட்டுப் போவார்கள் . உடனே நபியவர்கள் வந்து அந்த இடர்பாட்டினை நீக்கி விடுவார்கள் .
ஒன்பதாம் கூட்டத்தாரும் , பத்தாம் கூட்டத்தாரும் பற்றியும் , இவர்கள் காரியம் எப்படி என்று அல்லாஹு தஆலா விடம் நரகத்தின் அதிபர் மலக்கு மாலிக் (அலை) அவர்கள் கேட்பார்.
அதற்கு அல்லாஹு தஆலா , " என் ஹபீப் முஹம்மதும் , அவர்களை தொடர்ந்து போகிற ஸாலிஹானவர்களும் சுவர்க்கம் புகும் வரை , அவர்களை கியாமத்து ஓடையில் ஒளித்து வையும் " என்று கட்டளை இடுவான் . அவர்களும் அவ்விதமே அந்த ஓடையில் மறைத்து வைக்கப்பட்டிருப்பார்கள் .
பிறகு நபி (ஸல்) அவர்கள் பாலத்தைப் பார்த்து தங்கள் உம்மத்தில் பாலங்கடந்தவர்கள் போக,மீந்தவர்களில் ஒருவரையும் காணாமல் , அப்படி எவரெனும் இருந்தால் , சுவர்க்கத்தில் காணலாமென்று நினைத்து அவர்களும் பாலத்தைக் கடந்திடுவார்கள் .
அதன் பிறகு நபி ஈஸா (அலை ) அவர்களும் , அவர்களின் உம்மத்துடன் ஒருவர் பின் ஒருவராக பாலத்தைக் கடப்பார்கள் .
இவ்வாறாக ஒவ்வொரு நபிமார்களும் , அவர்களின் கூட்டத்தார்களும் ஸிராத் பாலத்தை கடந்து போவார்கள் .
ர.ரா
இத்துடன் ஸிராத் என்கிற பாலத்தின் பதிவுகள் நிறைவு பெறுகிறது

**Rahmath Rajakumaran**
பின்னர் அமானிதத்தையும் உறவு பந்தத்தையும் அனுப்பப்படும். அவையிரண்டும் ஸிராத் பாலத்தின் இருபக்கங்களிலும் வலது, இடதுபுறமாக நின்று கொள்ளும். உங்களில் முந்தியவர் மின்னலைப் போல அப்பாலத்தைக் கடந்து செல்வார்.
அப்பொழுது நான் (அபூஹுரைரா) கேட்டேன்.. என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும் (யா ரசூலுல்லாஹ்!) மின்னலின் வேகம் என்றால் எவ்வாறு? அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நீங்கள் மின்னல் எவ்வாறு கண் சிமிட்டும் நேரத்தில் கடந்து செல்கிறது என்பதைப் பார்க்கவில்லையா? என்று கூறினார்கள்.
பின்னர் (உங்களில் சிலர்) காற்றைப் போன்றும், பின்னர் சிலர் பறவை பறப்பதைப் போன்றும், (பின்னர்) வேகமாக ஓடும் மனிதனின் ஓட்டத்தைப் போன்றும் (வேகமாக) அப்பாலத்தைக் கடந்து செல்வார். (இவ்வாறு) அவர்களுடைய அமல்கள் அவர்களை அழைத்துச் செல்லும்.
உங்களுடைய நபி ஸிராத் பாலத்தின் நின்றவராக என் இரட்சகனே! ஈடேற்றமடைய செய்வாயாக! ஈடேற்றமடைய செய்வாயாக! எனக் கூறிக் கொண்டிருப்பார்.
(இவ்வாறாக மக்கள் அதனைக் கடந்து கொண்டிருப்பார்கள். பின்னர்) அடியார்களின் அமல்கள் குறைந்து பல வீணமாகிவிடும். எதுவரையெனில் ஒரு மனிதர் வருவார், அவர் தம்முடைய பித்தட்டில் நகர்ந்து கொண்டவராக வருவார். அவர் அதனைக் கடப்பதற்கு சக்தி பெறமாட்டார் (அவரது நல் அமல்கள் மிகக் குறைவாக இருந்தால் இந்நிலை)
பாலத்தின் இரு பகுதிகளிலும் முட்கள் தொங்கவிடப்பட்டிருக்கும். யாரைப் பிடிக்கும்படி ஏவப்படுகிறதோ அவரை அவை பிடித்துவிடும். அம்முட்களால் (லேசாக) தைக்கப்பட்டு விடுபவர், ஈடேற்றமடைந்து விடுவார்.

அங்கிருந்து கீழே தள்ளப்பட்டு விடுபவர், நரகினில் ஆகிவிடுவார். அபூஹுரைராவின் உயிர் யார் வசம் இருக்கிறதோ அவன் (அல்லாஹ்) மீது ஆணையாக! ஜஹன்னம் என்ற நரகின் ஆழம் எழுபது ஆண்டுகளின் தொலை தூரமாகும். (நூல்: முஸ்லிம்)

தஜல்லி .

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 72 )



தஜல்லி என்பது தோற்றம் . அது அல்லாஹு தஆலா தன் அடியார்களுக்கு தோற்றமாகுதல் .
அல்லாஹு தஆலா நபி ஆதம் (அலை) அவர்களை அழைத்து , "ஆதமே ! நரகத்திற்கு அனுப்பவேண்டியவர்களை அனுப்பும் "என்று கட்டளை இடுவான்.
"குற்றவாளிகள் எல்லோரும் , குற்றமற்றவர்களுடன் சேர்ந்திராமல் பிரிந்து போங்கள் " என்று ஒரு சப்தம் வரும் .
நரகத்திற்கு அனுப்பப்படுவர்களை ஏழு கூட்டங்களாக பிரிவார்கள் .
**முதலாவது கூட்டம்** அல்லாஹு தஆலாவை அறிந்திருந்தும், மனமுரண்டான பிடிவாதத்தினால் அல்லாஹுக்கு ஈமான் கொள்ளாதவர்கள் .

**இரண்டாவது கூட்டம்** மூடத்தனத்தினால் அல்லாஹுக்கு ஈமான் கொள்ளாதவர்கள்.
இந்த இரண்டு கூட்டத்தாரையும் குருவிகள் தானியத்தைக் கொத்தி எடுப்பது போல் நரகம் தானாகக் கொத்தி எடுத்துக் கொள்ளும் .
இந்த இரண்டு கூட்டத்தாரும் கடுந் தாகமுள்ளவர்களாய் வருவார்கள் . தண்ணீர் கேட்பார்கள்
" அதோ தண்ணீர் " என்று நரகத்தைக் காட்டவே, அவர்களுக்கு நரகத்தின் கானலானது தண்ணீர் போலத் தோன்றும். உடனே அதன் மீது வேட்கையாய் விரைந்து போவார்கள் .

**மூன்றாவது கூட்டம்** அல்லாஹுதஆலா வுக்கு இணை வைத்து தாங்கள் வணங்கிய வஸ்துக்களை பின்பற்றச் செய்து நரகத்தில் தள்ளப்படுவார்கள்

**நான்காவது கூட்டம்** ரஸூல்மார்களை ஒப்புக் கொள்ளாதவர்களும் , அல்லாஹு தஆலாவின் ஸிபத்துகளை அறியாதவர்களுமானவர்கள் .

**ஐந்தாவது கூட்டம்** யஹூதிகள் ,
**ஆறாவது கூட்டம்** நஸாறாக்கள் .
**ஏழாவது கூட்டம்** அப்புறமாக சொல்றேன் .
ஒவ்வொரு கூட்டத்தாரையும் நரகத்திற்கு அனுப்பப்படும்போதே , "ஒவ்வொரு கூட்டத்தாரும் நீங்கள் துன்யாவில் வணங்கிய வஸ்துகளைத் தொடர்ந்து கொள்ளுங்கள் " என்று பெரிய சப்தமாக எல்லோருடைய காதிலும் கேட்கும்.

இதனால் துன்யாவில் சிலுவையை வணங்கினவர்களுக்குச் சிலுவையும் , உருவத்தை வணங்கினவர்களுக்கு உருவத்தையும் விக்கிரகத்தை , சிலைகளை வணங்கினவர்களுக்கு விக்கிரகத்தை , சிலைகளையும் ,

சூரியனை வணங்கினவர்களுக்கு சூரியனையும் , சந்திரனை வணங்கினவர்களுக்கு சந்திரனையும் , நட்சத்திரத்தை வணங்கினவர்களுக்கு நட்சத்திரத்தையும் , நெருப்பை வணங்கினவர்களுக்கு நெருப்பையும் அவரவர்கள் எதை எதை வணங்கினார்களோ அதை அதை அவரவர் முன் உருவெடுத்து வந்து நிற்கும் .
ஹஜரத் நபி ஈஸா (அலை) அவர்களை "தேவன் " என்றும் " தேவகுமாரன்" என்றும் வணங்கிய கிறிஸ்தவர்களான நஸாறாக்களுக்கு முன்னால் நபி ஈஸா (அலை) அவர்களுடைய உருவத்தில் ஒரு ஷைத்தான் வந்து நிற்பான் .உடனே அவர்கள் எல்லோரும் அந்த ஷைத்தானை பின் தொடர அவன் நரகில் கொண்டு போய் சேர்ப்பான் .

ஏழாவது கூட்டம் முனாபிக்குகள் . இவர்கள் மூஃமினாவர்களுடன் கலந்து நிற்பார்கள் . அல்லாஹுதஆலா அவர்களைப் பார்த்து... "நீங்களும் நீங்கள் வணங்கின வஸ்துக்களைத் தொடர்ந்து கொள்ளுங்கள் ".
அதற்கு " நாங்கள் அல்லாஹுதஆலாவைத் தவிர வேறொன்றையும் வணங்கவில்லையே" என்று சொல்லுவார்கள் .
அப்போது அல்லாஹுதஆலா , " நீங்கள் உங்கள் இறைவனாகிய அல்லாஹுதஆலாவை அறிவீர்களா ? "
" ஆம், அறிவோம் ".
உடனே அல்லாஹுதஆலா தன்னை அவர்கள் தரிசிக்கும்படி "தஜல்லி " யாவான். அப்போது மூஃமீன்கள் அனைவரும் அல்லாஹு தஆலாவை அறிந்து கொண்டு அவனுக்கு ஸுஜூதில் விழுவார்கள் .
முனாபிக்குகளோ ஸுஜூதில் விழாமல் மல்லாந்து விழுவார்கள். உடனே முனாபிக்குகளை வேறாகப் பிரித்து நரகத்தில் தள்ளப்படுவார்கள் .
4851. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
ஓர் இரவில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் பதினான்காம் இரவின் முழுநிலவைக் கூர்ந்து நோக்கியபடி, 'இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் உங்களுடைய இறைவனையும் காண்பீர்கள்.
ர.ரா
(தஜல்லி பதிவு இத்துடன் நிறைவு)

ஹௌளு கவ்தர் 01
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 73)



"ஹௌளு கவ்தர்" என்பது தண்ணீர்த் தடாகம் . அது ஸிராத் பாலத்தை தாண்டியதும் அப்புறமுள்ள அகன்ற மைதானத்தில் இருக்கும் .
அதை அல்லாஹு தஆலா நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்குச் சொந்தமாகக் கொடுத்திருக்கிறான்.

اِنَّاۤ اَعْطَيْنٰكَ الْكَوْثَرَ
(நபியே!) நிச்சயமாக நாம் உங்களுக்கு "கவ்ஸர்" என்னும் (சுவர்க்கத்தின்) தடாகத்தை கொடுத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன்: 108:1)

அதன் பிரமாணம் ஒரு மாதத் தூரச் சதுர அளவுள்ளது. அதிலுள்ள நீர் , பாலைப் பார்க்கிலும் வெண்மையாய் , கஸ்தூரியைப் பார்க்கிலும் நற்மணமாய், தேனைப் பார்க்கிலும் மதுரமாய் இருக்கும். அதில் ஒரே ஒரு மிடறு தண்ணீரைக் குடித்தால் ஊழியூழி காலமாய் , யுகயுகங்களாய் தாகமே ஏற்படாது.

கவ்தர் தடாகத்திற்கு தண்ணீர், சுவர்க்கத்திலுள்ள **'கவ்தர் '** என்ற நதியின் இரண்டு பெரிய கால்வாய் வழியாக வந்து கொண்டே இருக்கும் .
அதன் நான்கு கரைகளிலும் தண்ணீர் பாத்திரங்கள் , வானத்து நட்க்ஷத்திரங்களிலும் அதிகமாக வைக்கப்பட்டிருக்கும் .
அதன் நான்கு அணைகளிலும் அபூபக்கர் (ரலி) , உமர் (ரலி) , உதுமான் (ரலி) ,
அலி (ரலி) ஆகிய நால்வர்களும் அதிகாரிகளாய் நிற்பார்கள் .
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கையில் அஸா பிடித்தவர்களாய் அங்கு நிற்பார்கள்.
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தங்கள் உம்மத்திலுள்ள நம்மைப் பார்த்து ,அழைத்து அந்த தடாகத்தில் தண்ணீர் குடிக்கும்படி ஏவுவார்கள் .
ஸிராத் பாலங்கடந்த எல்லோருமே அங்கு போய்க் களைப்பாறி ,மேற்படி தடாகத்திற் போய்த் தண்ணீர் குடிப்பார்கள்.
ஹௌலு கவ்தர் தடாகத்தைப் போல மற்ற நபிமார்களுக்கும் தடாகம் உண்டு. அந்தந்த தடாகத்திற்கும் வேறுவேறு பெயர்கள் இருக்கலாம் . அந்தந்த நபிமாருடைய உம்மத்து அவரவர் தடாகத்திற்குப் போய்த் தண்ணீர் குடிப்பார்கள் .

ஆனால் நபி ஸாலிஹு (அலை) அவர்களுக்கு மாத்திரம் தடாகம் இருக்காது . அவர்களுக்கு தடாகத்திற்குப் பதிலாக அவர்களின் ஒட்டகத்து மடியே காத்திருக்கும் .

தங்கள் தங்கள் உம்மத்துக்கு அந்தந்த நபிமார்கள் தண்ணீர் புகட்டும் போது, நபி ஸாலிஹ் (அலை) அவர்கள் தன் உம்மத்திற்கு ஒட்டகப் பாலைப் புகட்டுவதை பெருமையாகப் பேசுவார்கள் . அந்த பெருமையிற் சிறந்தவர்களாக மிக அதிகமான உம்மத்துடைய ஜனங்களுக்கு நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தண்ணீர் புகட்டுவார்கள் .

கவ்தர் தடாகத்தைச் சுற்றி பலவித மரங்கள் விருக்ஷங்களாக பரவி நிற்கும் .
ஒவ்வொரு விருக்ஷத்தின் கீழும் அருவிகள் ஒலித்தோடும்.
ஸிராத் பாலத்தை கடந்த எல்லோரும் கவ்தர் தடாகத்தில் தண்ணீர் பருகிக் களைப்பு தீர்ந்து விருக்ஷத்தின் கீழ் உள்ள அருவிகளில் குளிப்பார்கள்.
குளித்தவுடன் அவர்களுக்குள்ள சகல அசுத்தங்களும் நீங்கிப் பரிசுத்தமாகி , நபி ஆதம் (அலை) அவர்களுடைய அறுபது முழ உயரமும் , ஏழு முழ கனமும் , நபி ஈஸா (அலை) அவர்களுடைய முப்பத்தி மூன்று வயதும் , நபி யூசுப் (அலை) அவர்களுடைய யௌவன சொரூபமுள்ளவர்களாக ஆவார்கள் .
எல்லோருடைய முகங்களும் பூரணச்சந்திரன் போல இலங்கிக் கொண்டும் , சரீரங்கள் கஸ்தூரி வாடை கமழவும் அத் தடாகத்தை விட்டு கரையேறுவார்கள் .
ர.ரா

"ஹவ்ளுல் கவ்ஸர் " என்கிற தடாகத்தைப் பற்றி நபிகளார் 02

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 74)



"கவ்ஸர் என்றால் என்ன?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,

"(அது) சுவர்க்கத்திலுள்ள ஓர் ஆறாகும். அதனை என் இறைவன் எனக்காக கொடுத்திருக்கிறான். அதன் தண்ணீர் பாலைவிட அதிக வெண்மையானதாக இருக்கும். அதன் சுவையோ தேனைவிட அதிக இனிப்பானதாக இருக்கும்.
அதில் பறவைகளும் இருக்கின்றன. அவற்றின் கழுத்துகள் ஒட்டகத்தின் கழுத்துகளைப் போல் இருக்கும்" என்று கூறினார்கள்.
அப்போது உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், "இந்தப் பறவைகள் மிகவும் உல்லாசமாக இருக்கும்" என்று கூறினார்கள்.
அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அவற்றை உண்பவர்கள் அவற்றை விட உல்லாசமாக இருப்பார்கள்" என்று கூறினார்கள். (அறிவிப்பவர்: அனஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, நூல்: திர்மிதீ)
அல் கவ்தர் சுவர்க்கத்திலுள்ள ஆறாகும்,
அதனுடைய இரு ஓரங்களும் தங்கமாகும். முத்து பவளத்தின் மீது அது ஓடுகின்றது. அதனுடைய மண் கஸ்தூரியை விட மிகவும் மணமானது.
அதனுடைய தண்ணீர் தேனைவிடவும் இனிமையானது, ஐஸ் கட்டியை விடவும் வெண்மையானது என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (திர்மிதி)

கவ்ஸர் நதியின் பரப்பு, ஒரு மாத பயண தூரமுடையதாக இருக்கும். அதன் இரு மருங்குகளிலும் விலை உயர்ந்த கற்களால் அமைக்கப்பட்ட கூடாரங்கள் இருக்கும். அதன் நீர் பாலைவிட அதிக வெண்மை யானதாகவும், கஸ்தூரியை விட அதிக வாசமுள்ளதாகவும் இருக்கும். அதன் நீரை அருந்தியவர்கள் பின்னர் ஒருபோதும் தாகிக்க மாட்டார்கள். அங்கு நட்சத்திரங்களின் எண்ணிக்கையைவிட அதிகமான பாத்திரங்கள் இருக்கும்.

நிச்சயமாக நாம் உமக்குக் கவ்ஸரைக் கொடுத்திருக்கிறோம்' என்பதைக் குறித்து அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள் வினவப்பட்டது (அதற்கவர்)
"அது ஒரு நதி. உங்களுடைய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அது கொடுக்கப் பட்டிருக்கிறது. அதனுடைய இரு மருங்குகளிலும் துவாரமிடப்பட்ட மாணிக்கம் இருக்கிறது. அதனுடைய பாத்திரங்கள் நட்சத்திரங்களின் எண்ணிக்கைக்குச் சமமானவை" என்று கூறினார்கள். (அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹுதஆலா அன்ஹா, நூல்: புகாரீ)

சுவர்க்கத்தின் பாத்திரங்களில் எவர் தண்ணீர் அருந்துகிறாரோ அவருக்கு அவருடைய இறுதிநாள் வரை தாகமெடுக்காது. சுவர்க்கத்திலிருந்து இரண்டு ஆறுகள் வருகின்றன. அதன் அகலமோ சிரியா (ஷாம்) தேசத்திலுள்ள அம்மான், ஈலா ஆகிய ஊர்களுக்கிடையே உள்ள தூரத்திற்குச் சமமாக இருக்கும்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புனித மிஃராஜ் பயணத்தில் கவ்ஸர் நதியைக் கண்டிருக்கிறார்கள். இது குறித்த ஹதீஸ்:
அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிஃராஜுக்கு சென்ற போது (கூறிய விவரங்களில்) "நான் ஒரு நதியின் பக்கமாக அழைத்து வரப்பட்டேன். அதன் இரு மருங்குகளிலும் துவாரமுள்ள முத்துக் கூடாரங்களிருந்தன.

'இது என்ன, ஜிப்ரயீல்?' என்று கேட்டேன். 'இது கவ்ஸர்' என்று (அவர்) கூறினார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அனஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, நூல்: புகாரீ)
கவ்ஸர் நதியில் பிரவேசிக்கும் பாக்கியம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தினருக்குக் கிடைக்கும். அவர்களின் எண்ணிக்கையும் மிகவும் கூடுதலாக இருக்கும்.
இது குறித்த ஹதீஸ்: "நிச்சயமாக எல்லா நபிமார்களுக்கும் ஒவ்வொரு ஹவ்ளு உண்டு. அங்கு அவரவரின் சமூகத்தினர் வருவார்கள். அன்றி, நிச்சயமாக அவர்கள் தங்களுக்குள் அவர்களில் எவர் (அதாவது எந்தச் சமூகத்தினர்) அதிகமாக வருகிறார்கள் என்று பெருமை பாராட்டிக் கொள்வார்கள். மேலும், நிச்சயமாக நான் என்னுடைய ஹவ்ளில் அவர்களை விட அதிகமான பேர் வருவார்கள் என்று நம்புகிறேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: ஸமுரதுப்னு ஜுன்துப் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள். நூல்: திர்மிதீ. )

கவ்ஸர் நதியில் பிரவேசிக்கும் பாக்கியமுடைய உம்மத்தினருக்கு விருந்தோம்புபவராக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இருப்பார்கள்! ஆயினும், இஸ்லாம் மார்க்கத்தில் புதுமைகளை ஏற்படுத்தி, மாற்றங்களை உண்டு பண்ணியவர்கள் கவ்ஸர் நதியை விட்டும் அப்புறப்படுத்தப் படுவார்கள்! இது குறித்த ஹதீஸ்கள்:
"ஹவ்ளுல் கவ்ஸரில் நான்தான் உங்களுக்கு விருந்தோம்புபவனாக இருப்பேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: ஜுன்துப் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, நூல்: புகாரீ, முஸ்லிம்)

நான் அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்க அவர்களின் பக்கம் குனியும் போது, அவர்கள் என்னை விட்டும் அப்புறப்படுத்தப் படுவார்கள்.
அப்பொழுது நான், "இறைவனே! இவர்கள் என் தோழர்களாயிற்றே!" என்று கூறுவேன்.
அதற்கு, "நிச்சயமாக, இவர்கள் தங்களுக்குப் பின் என்னவென்ன புதுமைகளை மார்க்கத்தில் உண்டுபண்ணினார்கள் என்று தாங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறப்படும்.
எனவே நான், "தூரமாகிவிடுங்கள்: தூரமாகிவிடுங்கள். எனக்குப் பின் (என் மார்க்கத்தை) மாற்றியவர்கள் (நீங்கள்) எனக் கூறுவேன்" எனக் கூறினார்கள். (அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹுதஆலா அன்ஹூ அவர்கள். நூல்: புகாரீ, முஸ்லிம்)
அல்லாஹு ஸுப்ஹானஹுதஆலா, தன்னுடைய ஹபீபு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பொருட்டால் நம் அனைவருக்கும் கவ்ஸர் நதியில் பிரவேசிக்கும் பாக்கியத்தை தந்தருள்வானாக! ஆமீன்.
ர.ரா

"ஹவ்ளுல் கவ்ஸர் " என்கிற தடாகத்தைப் பற்றி நபிகளார் 03

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 75)



1888. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'என்னுடைய இல்லத்திற்கும் என்னுடைய மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சொர்க்கத்துப் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும்! என்னுடைய மிம்பர் என்னுடைய ஹவ்ள் (அல்கவ்ஸர் தடாகத்தின்) மீது அமைந்துள்ளது!' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

1344. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.
ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் உஹதுக்குச் சென்று, (போரில் கொல்லப்பட்டவர்களுக்காக ஜனாஸாவை முன்னால் வைத்துத் தொழுவது போன்று) தொழுகை நடத்தினார்கள்.
பிறகு மிம்பருக்கு வந்து, 'நிச்சயமாக நான் உங்களுக்காகக் காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் கூறுவேன்.
மேலும் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இப்போது (கவ்ஸர் எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். எனக்கு பூமியின் கருவூலங்களின் திறவுகோல்கள் அல்லது பூமியின் திறவுகோல்கள்... கொடுக்கப்பட்டுள்ளன. நிச்சயமாக அல்லாஹ்வின் மீது ஆணையாக!
என(து மரணத்து)க்குப் பின்னால் நீங்கள் இணைவைப்பார்களாக ஆகிவிடுவீர்களோ என்று நான் பயப்படவில்லை. ஆனால், (உலகத்திற்காக) நீங்கள் ஒருவரோடொருவர் மோதிக் கொள்வீர்களோ என்றே பயப்படுகிறேன்!' என்று கூறினார்கள்.

2367. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது ஆணையாக! (தன்னுடைய குளத்தில் நீரருந்த விடாமல்) அந்நிய ஒட்டகத்தை (குளத்தின் உரிமையாளர்) குளத்திலிருந்து விரட்டுவதைப் போன்று நானும் (மறுமையில் சிறப்புப் பரிசாக) எனக்குக் கிடைக்கவிருக்கும் தடாகத்திலிருந்து சில மனிதர்களை (நீரருந்த விடாமல்) விரட்டுவேன்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

3163. அனஸ்(ரலி) அறிவித்தார்.
நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளை, அவர்களுக்கு பஹ்ரைனின் நிலங்களை வருவாய் மானியமாக எழுதித் தருவதற்காக அழைத்தார்கள்.
அன்சாரிகள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் குறைஷிச் சகோதரர்களுக்கும் இதே போன்று எழுதித் தரும் வரை நாங்கள் (இவற்றை) ஏற்றுக் கொள்ள மாட்டோம்' என்று கூறிவிட்டார்கள்.

இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'அது குறைஷிகளுக்குக் கிடைக்கும்; அல்லாஹ் அதை விரும்பும் பட்சத்தில்' என்று கூறினார்கள். குறைஷிகளுக்கும் எழுதித் தரும்படி அன்சாரிகள் (தொடர்ந்து) வற்புறுத்திக் கூறினார்கள். அப்போது,
நபி(ஸல்) அவர்கள், '(அன்சாரிகளே!) எனக்குப் பின் (சிறிது காலத்திற்குள்ளாகவே) உங்களை விடப் பிறருக்கு (ஆட்சியதிகாரத்தில்) முன்னுரிமை தரப்படுவதை நீங்கள் பார்ப்பீர்கள்.
எனவே, (மறுமையில், எனக்குச் சொந்தமான) தடாகத்தின் அருகே என்னைச் சந்திக்கும் (காலம்) வரை பொறுமையைக் கைக் கொள்ளுங்கள்' என்றார்கள்.

7022. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
நான் உறங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) ஒரு நீர்த் தடாகத்தின் அருகில் இருந்து கொண்டு மக்களுக்கு நான் நீர் புகட்டிக் கொண்டிருக்கக் கண்டேன்.
அப்போது அபூபக்ர் அவர்கள் என்னிடம் வந்து எனக்கு ஓய்வளிப்பதற்காக என் கரத்திலிருந்த அந்த வாளியை வாங்கி இரண்டு வாளிகள் தண்ணீர் இறைத்தார். அவர் இறைத்தபோது (சற்று) சோர்வு தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளிப்பானாக!
பிறகு கத்தாபின் புதல்வர் (உமர்) வந்தார். அவர் அபூபக்ர் அவர்களிடமிருந்து (அந்த வாளியை) எடுத்துக்கொண்டு மக்கள் (தாகம் தீரத் தாங்களும் அருந்தி தங்கள் ஒட்டகங்களுக்கும் புகட்டிவிட்டுத்) திரும்பிச் செல்லும் வரை இறைத்துக்கொண்டேயிருந்தார். அப்போதும் தடாகத்தில் நீர் பொங்கிக் கொண்டிருந்தது.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ர.ரா
கவ்தர் தடாகம் இத்துடன் நிறைவு பெறுகிறது .

ஜன்னத் என்னும் சொர்க்கத்தின் வகைகள் 01

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 76)




ஜன்னத் என்பது சுவர்க்கம் , அது ஏழு வானங்களுக்கும் மேலே ஒளியினால் படைக்கப்பட்டிருக்கும் பொன்னுலகம் .
அதற்கு உயர் பதமாகிய நூறு தரஜாக்கள் உண்டு. ஒவ்வொரு தரஜாக்களுக்கும் இடையில் ஐநூறு வருஷப் பிரயாணத் தூரம் இருக்கும்.
சொர்க்கதின் அகலம் ஏழு வானங்கள், ஏழு பூமிகளுக்குள்ள அளவானது. நீளம் அல்லாஹு தஆலாவே அறியக்கூடியது .

وَسَارِعُوْۤا اِلٰى مَغْفِرَةٍ مِّنْ رَّبِّكُمْ وَجَنَّةٍ عَرْضُهَا السَّمٰوٰتُ وَالْاَرْضُۙ اُعِدَّتْ لِلْمُتَّقِيْنَۙ
உங்கள் இறைவனின் மன்னிப்புக்கும், சுவர்க்கத்துக்கும் விரைந்து செல்லுங்கள். அதன் விசாலம் வானங்கள், பூமியின் விசாலத்தைப் போன்றது. (அது) இறை அச்சம் உடையவர் களுக்காக(வே) தயார்படுத்தப்பட்டுள்ளது.
(அல்குர்ஆன் : 3:133)
அந்த சுவர்க்கத்திற்கு வெள்ளியினாலும், பொன்னாலும் ,
மரகதத்தினாலும், சன்னமுத்துனாலும் , ஆணி முத்தினாலும் , மாணிக்கத்தினாலும் , ஒளியினாலும் ஏழு மதில்கள் உண்டு.

இந்த ஏழு மதில்களை உடைய சொர்க்கத்திற்கு எட்டு வாசல்கள் உண்டு. ஒவ்வொரு வாசலும் ஒவ்வொரு சொர்க்கம் .இதைத் தான் எட்டு சொர்க்கம் என்று சொல்லப்படும் .
1 வது சொர்க்கம் தாருல் ஜவால்
மாணிக்கத்தினால் படைக்கப்பட்டது
2 வது சொர்க்கம் தாருஸ் ஸலாம்
பவளத்தினால் படைக்கப்பட்டது
3 வது சொர்க்கம் ஜன்னத்துல் மஃவா வெள்ளியினால் படைக்கப்பட்டது
4 வது சொர்க்கம் ஜன்னத்துல் குல்து
செம்பொன்னினால் படைக்கப்பட்டது
5 வது சொர்க்கம் ஜன்னத்துந் நயீம்
ஆணி முத்துவினால் படைக்கப்பட்டது
6 வது சொர்க்கம் ஜன்னத்துல் ஃபிர்தௌஸ் பசும் பொன்னினால் படைக்கப்பட்டது
7 வது சொர்க்கம் ஜன்னத்துல் அதன் பச்சை மரகதத்தினால் படைக்கப்பட்டது
8 வது சொர்க்கம் தாருல் கறாராம் சன்ன முத்துவினால் படைக்கப்பட்டது

349. பின்னர் ஜிப்ரீல்(அலை) என்னை 'ஸித்ரதுல் முன்தஹா' என்னும் இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அதைப் பல வண்ணங்கள் சூழந்திருந்தன. அது என்ன என்பது எனக்குப் புலப்படவில்லை.
பின்னர் சுவர்க்கத்தில் புகுத்தப்பட்டேன். அதில் முத்துக்களால் உள்ள கயிறுகளைப் பார்த்தேன். சுவர்க்கத்தின் மண் கஸ்தூரியாக இருந்தது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூதர்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி
ர.ரா

ஜன்னத் என்னும் சொர்க்கத்தின் மாளிகைகள் 02

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 77)



சொர்க்கம் வெயில் இல்லாத ஒரு வசந்த கால குளிமையான ரம்மியான சூழ்நிலை எப்போதுமே நிலவும். சொர்க்கத்து மாடமாளிகைகள் அனைத்தும் ஒன்றின் மேல் ஒன்றான அநேக அடுக்குகளை உடையதாய் இருக்கும். இம்மாட மாளிகைகளைச் சுற்றி சுற்றி நீரருவிகள் தொடர்ந்து ஓடிக்கொண்டேயிருக்கும்

சொர்கப் புரி மாணிக்கத்தினாலும் , மரகதத்தினாலும் ஆணிமுத்தினாலும் கட்டப்பட்டதாக இருக்கும். மாணிக்கக் கம்பத்து நுனியிற் கட்டப்பட்ட சிறப்பான பலவிதக் கட்டுமாளிகைகளும் உண்டு.

அந்த மாளிகைகள் வெளிப்புறத்திலும் , உட்புறத்திலும் அநேக மெத்தை வீடுகள் தரையில் அஸ்திவாரம் தோண்டி கட்டி எழுப்பாமல் , ஆகாயத்திலே நின்று இலங்கிக் கொண்டிருக்கும். மிக உயர்ந்தோனின் உன்னதமான கற்பனை திறன் அல்லவா ?
அடுத்த சொர்க்கம் ஒரே ஒரு முத்தினால் அமைக்கப்பட்டடு , அதன் உள்ளே எழுபது மாணிக்க வீடுகள் இருக்கும் . ஒவ்வொரு வீட்டிலும் பலவகை ரத்தினங்களான எழுபது அறைகள் கொண்டு , ஒவ்வொரு அறையிலும் எழுபது சந்தன மஞ்சங்கள்
போடப்பட்டிருக்கும் .ஒவ்வொரு மஞ்சத்திலும் பல வர்ணப் பட்டாடைகளால் எழுபது விரிப்புகள் விரிக்கப்பட்டிருக்கும்.

ஒவ்வொரு விரிப்பிலும் ஒவ்வொரு ரம்பையும் , (தரீக்குல் ஜன்னா என்கிற கிதாபில் " ரம்பை " என்றே கூறப்பட்டுள்ளது. அடியேன் அந்த வார்த்தையே அப்படியே பிரயோகப்படுத்தி இருக்கிறேனேத் தவிர வேறு ஒன்றும் ஞான் அறியவில்லை பராபரமே ) ஆண் அடிமை எழுபது பேர்கள், பெண் அடிமை எழுபது பேர்களும் சேவகம் செய்ய காத்து இருப்பார்கள்
எழுபது தாம்பாளங்களும் , ஒரு தாம்பாளத்திற்கு எழுபது வித உணவுகளும் கொண்ட அநேக அரண்மனைகள் சொர்க்கவாசிக்காக காத்து இருக்கும் .
ஒரே ஒரு மாணிக்கத்தினால் எழுபதினாயிரம் அறைகள் கொண்ட எழுபது அடுக்கு மெத்தையுள்ள அரண்மனைகள் , இந்த அரண்மனைகளின் (ஊசி ? ) கோபுரங்கள் நீண்டு உயர்ந்திருக்கும்.

இந்த அரண்மனைகளுக்கு ஒவ்வொன்றிற்கும் நாலாயிரம் வாசல்களும் , வாசல் ஒவ்வொன்றிலும் இருபத்தைந்து ரம்பைகளும் இருப்பார்கள் . இந்த அரண்மனை ஒவ்வொன்றும் ஒரே ஒரு சொர்க்கவாசிக்கு உரியதாக இருக்கும்.
அடுத்தடுத்து வானுயர்ந்த கட்டிடங்கள் கணக்கில்லாமல் வரிசை வரிசையாக கட்டப்பட்டிருக்கும் .
இந்த கட்டிடங்களை ஒட்டி ஆங்காங்கே கூடாரங்களும் அமைக்கப்பட்டிருக்கும் .
ஒவ்வொரு கூடாரமும் வேறு வேறு விதமாக காட்சியளிக்கும் .அந்த கூடாரங்களின் அமைப்பு மனித கற்பனையெல்லாம் சிந்தித்தே இருக்க முடியாதவாறு அமைக்கப்பட்டிருக்கும்.
அதாவது ஒரே ஓர் ஆணி முத்தினால் இருபது காத சதுர வளைவுள்ள கூட்டாரங்கள் அமைக்கப்பட்டு இருக்கும்.
மாடமாளிகையிலும் , கூடாரங்களிலும் முத்தினாலும், மாணிக்கத்தினாலும் , சித்தர வேலைகள் செய்த பொற்தட்டில்களும், நாற்காலிகளும், சாய்மான பீடங்களும் கணக்கின்றி போடப்பட்டிருக்கும்.

உட்புறம் இஸ்தப்றக்குப் பட்டினாலும் , வெளிப்புறம் ஒளியினாலும் ஆன விரிப்புகள் அவைகளில் ஒவ்வொன்றிலும் விரிக்கப்பட்டிருக்கும் .
பொன், வெள்ளி, நவரத்தினங்கள் ஆகியவைகளால் பலவித தட்டு முட்டு சாமான்கள் நக்ஷத்திரங்களைப் போல் ஆங்காங்கே அடுக்கி வைக்கப்பட்டு இருக்கும் .

يُطَافُ عَلَيْهِمْ بِصِحَافٍ مِّنْ ذَهَبٍ وَّاَكْوَابٍ وَفِيْهَا مَا تَشْتَهِيْهِ الْاَنْفُسُ وَتَلَذُّ الْاَعْيُنُ وَاَنْتُمْ فِيْهَا خٰلِدُوْنَ
(பலவகை உணவுகளும் பானங்களும் நிறைந்த) பொற்தட்டுக்களும், கிண்ணங்களும் அவர்களைச் சுற்றிக்கொண்டே இருக்கும். அங்கு, அவர்கள் மனம் விரும்பியவைகளும், அவர்களுடைய கண்களுக்கு ரம்மியமானவையும் அவர்களுக்குக் கிடைக்கும். (அவர்களை நோக்கி) "இதில் என்றென்றும் நீங்கள் வசித்திருங்கள்" (என்றும் கூறப்படும்.)
(அல்குர்ஆன்: 43:71)

சொர்க்கவாசிகளுக்கு பொற்கடகம் அணிவிக்கப்படும். மெல்லியதாகவோ அழுத்தமானதாகவோ அவர்கள் விரும்பிய பசுமையான பட்டாடைகளை அணிவார்கள். இவர்களுடன் எந்நேரமும் சந்தோஷமும் மகிழ்ச்சியும் சதா அங்கே குடிகொண்டிருக்கும்
اُولٰٓٮِٕكَ لَهُمْ جَنّٰتُ عَدْنٍ تَجْرِىْ مِنْ تَحْتِهِمُ الْاَنْهٰرُ يُحَلَّوْنَ فِيْهَا مِنْ اَسَاوِرَ مِنْ ذَهَبٍ وَّ يَلْبَسُوْنَ ثِيَابًا خُضْرًا مِّنْ سُنْدُسٍ وَّاِسْتَبْرَقٍ مُّتَّكِـٮِٕيْنَ فِيْهَا عَلَى الْاَرَآٮِٕكِ
نِعْمَ الثَّوَابُ وَحَسُنَتْ مُرْتَفَقًا
இவர்களுக்கு நிலையான சுவனபதிகள் உண்டு. அவற்றில் நீரருவிகள் தொடர்ந்து ஓடிக்கொண்டேயிருக்கும்.

அவர்களுக்குப் (பரிசாகப்) பொற்கடகம் அணிவிக்கப்படும். மெல்லியதாகவோ அழுத்தமானதாகவோ (அவர்கள் விரும்பிய) பசுமையான பட்டாடைகளை அணிவார்கள்.
ஆசனங்களிலுள்ள தலையணைகள் மீது சாய்ந்து (மிக்க உல்லாசமாக) இருப்பார்கள். இவர்களுடைய கூலி மிக்க நன்றே! இவர்கள் இன்பம் சுவைக்கும் இடமும் மிக்க அழகானது.
(அல்குர்ஆன்: 18:31)
ர.ரா
சொர்க்கத்தின் நதிகள் 03

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 78)



சொர்க்கத்தில் " நஹர் ரஹ்மத் " என்ற ஒரு நதி உண்டு. அந்த நதியின் மணல் கஸ்தூரியும், அதனுடன் கலந்து கிடக்கும் பருக்கை கற்களாக முத்துக்கள் இருக்கும். ரஹ்மத் நதி நீர் பனிநீரிலும் வெண்மையும் , தேனிலும் இன்பமுமாய் உள்ளது. இந்நதி எட்டு சுவர்க்கங்களிலும் பிரவாகித்து ஓடும்.
அடுத்து " கௌதர் நதி " என்னும் சிறப்பு வாய்ந்த நதி ஒன்று உண்டு. இதன் ஆழம் எழுபதினாயிரம் காத அளவுள்ளது. இதன் இரு கரைகளும் முத்தினாலும், மரகதத்தினாலும் , மாணிக்த்தினாலும் ஆனது. அதன் இருமருங்கும் முத்துக் கூடாரங்கள் போடப்பட்டிருக்கும்.
கௌதர் நதி கரையில் உள்ள மரங்கள் ஆணி முத்தினாலும் , மாணிக்கத்தினாலும் வளர்ந்திருக்கும் இந்நதி பிரவாகிக்கும் நீர் பாலிலும் வெண்மையும் , தேனிலும் இன்பமுமாயிருக்கும். இந்த கௌதர் நதி

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்குச் சொந்தமானது .
அடுத்து சொர்க்கத்தில் “நஹருல் காபூர் ”
என்கிற கற்பூர நதியும் உண்டு.
“நிச்சயமாக நல்லவர்கள் (சுவர்க்கத்தில்) குவளைகளிலிருந்து (பானம்) அருந்துவார்கள்; அதன் கலப்பு காஃபூராக (கற்பூராக) இருக்கும், (காஃபூர்) ஒரு சுனையாகும்; அதிலிருந்து அல்லாஹ்வின் நல்லடியார்கள் அருந்துவார்கள். அதை (அவர்கள் விரும்பும் இடங்களுக்கெல்லாம்) ஓடைகளாக ஓடச் செய்வார்கள்.
குர்ஆன் 76 : 5 , 6

இன்னும் மேன் மாடங்களிலிருக்கும் சுவனவாசிகள் பயன்படுத்தும்படியான ஆகாச நதிகளும் அநேகம் ஓடிக்கொண்டிருக்கும் , இந்நதியை "நஹ்ரு தஸ்னீம் " என்று அழைக்கப்படுகிறது.
**"நஹ்ரு ரம்யான் "** என்கிற நதியின் கரையில் பவளத்தினாலேயே பட்டணங்கள் இருக்கும் அந்த பட்டணத்திற்கெல்லாம் வெள்ளியினாலும், பொன்னாலும் ஆயிரம் வாசல் உண்டு. அங்கு பல வித நீருற்றுகளும் , அருவிகளும் உண்டு.
சொர்க்கத்து நதிகளில் சில நம் பூமியின் நதிகளைப் போல் இரு கரைகளை உருவாக்கி பள்ளத்தில் ஓடும் நதி போல் அல்லாமல் , இரு கரைகளே இல்லாமல் சுவனத் தரையின் மேல் ஓடும் விநோத நதிகளும் உண்டு.

சொர்க்கத்து எல்லா பாதைகளிலும் , எல்லாத் தரிப்பிடங்களிலும் ஓடிக்கொண்டிருக்கிற " ஸல்ஸபீல் நதி " அங்கு உண்டு .

وَيُسْقَوْنَ فِيْهَا كَاْسًا كَانَ مِزَاجُهَا زَنْجَبِيْلًا

(இஞ்சி கலந்த) "சன்ஜபீல்" என்னும் (மிக்க உயர்ந்ததொரு) பானமும் அங்கு அவர்களுக்குப் புகட்டப்படும். (அல்குர்ஆன்: 76:17)

عَيْنًا فِيْهَا تُسَمّٰى سَلْسَبِيْلًا

அது அங்குள்ள ஓர் ஊற்றின் நீர், அதற்கு "ஸல்ஸபீல்" என்றும் பெயர் கூறப்படும். (அல்குர்ஆன்: 76:18)

இந்தத் தண்ணீர் நதிகள் அல்லாமல் பாலினாலும் , தேனினாலும் , பழரச மதுவினாலும் தனித்தனியாக அநேக நதிகளும் உண்டு.
இன்னும் தண்ணீர் கடலும், தேன் கடலும், பாற்கடலும் உண்டு. இந்தக் கடல்களிலிருந்தும் நதிகள் பிரிந்து எங்கும் பிரவாகித்து ஓடும். கடல்களின் இன்னொரு பக்கம் அந்தந்த நதிகள் அடைந்து சங்கமிக்கின்றன.

" இறை அச்சமுடையவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவனபதியின் தன்மையாவது: அதில் தீங்கற்ற (பரிசுத்தமான) நீரருவிகள் இருக்கின்றன.
பரிசுத்தமான ருசி மாறாத பாலாறுகளும் இருக்கின்றன. திராட்சை ரச ஆறுகளும் இருக்கின்றன. அது குடிப்பவர்களுக்குப் பேரின்பமளிக்கக்கூடியது. தெளிவான தேனாறுகளும் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 47:15)

எல்லா நதிகளும் கஸ்தூரி மணலையும் , கஸ்தூரி மணத்தையும் உடையதாய் இருக்கும் .
எல்லா நதிகளும் சொர்க்கத்தில் உள்ள மலைகளில் உற்பத்தியாகின்றன. மேற்சொன்ன பாலினாலும் , தேனினாலும் , பழரச மதுவினாலும் , தண்ணீரினாலுமான ஆகிய நான்கு நதிகளும் , " **ஹவ்லு**" என்னும் தடாகத்தில் விழுகின்றன .
ர.ரா

சொர்க்கத்தின் மரங்கள் ,கனிகள் 04

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 79)



சொர்க்கத்தில் அநேக வகையான வித்தியாசமான விருக்ஷங்கள் அதாவது மரங்கள் நிறைய உண்டு. அந்த விருக்ஷங்கள் எல்லாம் உலகத்திலுள்ள
விருக்ஷங்களைப் போல் இல்லாமல் தலைகீழாக இருக்கும் .எல்லா விருக்ஷங்களும் அடிகள் , கிளைகள் , கொம்புகள் , துளிர்கள் , இலைகள் எல்லாம் பொன்னினாலும், வெள்ளியினாலும் உண்டாயிருக்கும்.

அந்த விருக்ஷங்களில் இலைகள் காயந்து சருகுகள் ஆகாமலும் , கனிகள்கள் ஓயாமலும் ,ஒழியாமலும் நிலையாகவே இருக்கும்.

சொர்க்கத்தில் இருப்பவர்கள் யார் யார் எந்தெந்த விருக்ஷங்களில் எந்தெந்த கனிகள் இருக்க வேண்டுமென்று நாடினார்களே, அந்தந்த விருக்ஷங்களில் அந்தந்த கனிகள் இருக்கும். ஒவ்வொரு கனியும் சுவனவாசிகளை எதிர்நோக்கி காத்திருக்கும்.
وَدَانِيَةً عَلَيْهِمْ ظِلٰلُهَا وَذُلِّلَتْ قُطُوْفُهَا تَذْلِيْلًا
அதிலுள்ள (மரங்களின்) நிழல்கள் அவர்கள் மீது தாழ்ந்து (சூழ்ந்து) கொண்டிருக்கும். அதன் கனிகள் (சுலபமாகப் பறிக்கக்கூடிய விதத்தில்) அவர்கள் முன் சாய்ந்து வரும்.
(அல்குர்ஆன்:76:14)

ஒரு விருக்ஷத்தில் உள்ள ஒரு காயை அல்லது கனியைப் பறித்தால், அது மறுபடியும் அந்த இடத்திலேயே உண்டாகும் .

وَّفَاكِهَةٍ كَثِيْرَةٍۙ
ஏராளமான கனி வர்க்கங்களும் உண்டு.
(அல்குர்ஆன்: 56:32)

لَّا مَقْطُوْعَةٍ وَّلَا مَمْنُوْعَةٍۙ
அதன் கனிகள் (புசிக்க) தடுக்கவும் படாது. (பறிப்பதால்) குறைவுமுறாது. (ஒன்றைப் பறித்தால், மற்றொன்று அதே இடத்தில் காணப்படும்.)
(அல்குர்ஆன்: 56:33)

இது நம்ம பூலோகத்து மாம்பழம்தானே என்று சுவைத்துப் பார்த்தால் ருசியிலும் , அதன் மணத்திலும் சுவை கூடி வேறு சுவைகளாக இருக்கும் .
وَبَشِّرِ الَّذِيْنَ اٰمَنُوْا وَ عَمِلُوا الصّٰلِحٰتِ اَنَّ لَهُمْ جَنّٰتٍ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ ‌ؕ كُلَّمَا رُزِقُوْا مِنْهَا مِنْ ثَمَرَةٍ رِّزْقًا ‌ۙ قَالُوْا هٰذَا الَّذِىْ رُزِقْنَا مِنْ قَبْلُ وَاُتُوْا بِهٖ مُتَشَابِهًا ‌ؕ وَلَهُمْ فِيْهَآ اَزْوَاجٌ مُّطَهَّرَةٌ ‌ۙ وَّهُمْ فِيْهَا خٰلِدُوْنَ
(நபியே!) எவர்கள் (இவ்வேதத்தை) நம்பிக்கை கொண்டு (அதில் கூறப்பட்டுள்ளபடி) நற்செயல்களைச் செய்கின்றார்களோ அவர்களுக்கு (சுவனபதியில்) நிச்சயமாக சோலைகள் உண்டு என்று நீங்கள் நற்செய்தி கூறுங்கள்.
அவற்றில் நீரருவிகள் (தொடர்ந்து) ஓடிக்கொண்டேயிருக்கும். அவற்றிலிருந்து (அவர்களுக்கு) ஒரு கனி புசிக்கக் கொடுக்கப்படும் போதெல்லாம் முன்னர் நமக்குக் கொடுக்கப்பட்டதும் இதுதானே! என (ஆச்சரியப்பட்டு)க் கூறுவார்கள். (ஏனென்றால்) பார்வைக்கு ஒரே விதமாகத் தோன்றக் கூடியவைகளையே கொடுக்கப் பெறுவார்கள். (எனினும் அவை சுவையில் விதவிதமாக இருக்கும்) (அல்குர்ஆன் : 2:25)

விருக்ஷங்களின் இலைகள் காற்றடிக்கப்பட்டு ஒன்றோடுடொன்று உராய்வதால் பலவித கீத நாதங்களான ஓசை இசையாய் வெளிப்படும் .
இந்த விருக்ஷங்கள் தவிர **ஸஜ்ரத்து குல்து , ஸிதுறத்துல் முந்தஹா , ஸஜ்ரத்துத் தூபா** என்ற மூன்று நாமங்களால் அழைக்கப்படும் மிகப் பிரதானமான ஒரு மரம் உண்டு. அதன் அடி ஆணிமுத்து , நடு மாணிக்கம் , கிளைகள் மரகதம் , இலைகள் சுந்துஸ் பட்டு , அதன் கிளைகள் அர்ஷின் கால் வரை தாவி இருக்கும். அந்த ஒரே மரம் எட்டு சுவர்க்கங்களுக்கும் மேலே குடை போல் கவிழ்ந்து மூடிக்கொண்டிருக்கும்.

அதன் நிழல் எங்கும் விழும். அது ஸிதுறத்துல் முந்தஹா என்பதால் இலந்தை மரமாம் .இதன் கனிகள் ஒவ்வொன்றும் யானைக்காது போலவும்,
அதிகப் பிரகாசமாக இலங்கும்.

இம் மரம் ஜாதியில் இலந்தையாக இருந்தாலும் துனியாவிலுள்ள எல்லா வகைப் பழங்களும் இதில் காய்த்து குலுங்கும் மரமாக இருக்கும் .
இந்த மரத்தின் வேரிலிருந்துதான் சொர்க்கத்து நதிகளெல்லாம் பிறந்து பிரவாகிக்கும் .
இந்த மரம் மட்டும் அல்லாமல் சுவனத்து எல்லா மரங்களின் பழங்களில் விதை இல்லாமல் இருக்கும். காரணம் பழம் பறிக்கப்பட்டதும் , அந்த உடனேயே அதே இடத்தில் வேறு ஒரு பழம் உண்டாகி
விடும் . விதையைத் தூவி , வேலி கட்டி, தண்ணீர் பாய்ச்சி... இந்த வேலையெல்லாம் நம்ம பூலோகத்திற்குத்தான் தேவை. வான லோக மரத்திற்கு தேவையில்லை.
இன்னும் வண்ண மலர்கள் , வாசனைப் புற்பூண்டுகள் காணக்கோடி முளைத்திருக்கும் பூங்காவனமாகவே சொர்க்கப்புரி காட்சியளிக்கும் .
எல்லா மரத்து கிளைகளிலும் விநோதமான , பக்ஷிப்பறவைகள் , கீத நாதஞ் செய்து கொண்டிருக்கும்.

கண்ணுக்கு குளிர்ச்சியான மலர்கள் , மூக்குத் தேவையான வாசனைகள் , காதுக்கினிய தேனிசை நாதங்கள் மொத்தத்தில் சொர்க்கப்புரி எல்லா ஆத்மாக்களையும் சொக்க வைக்கும் .

748. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.
நபி(ஸல்) அவர்களின் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது (அதற்காகத்) தொழுதார்கள்.
'இறைத்தூதர் அவர்களே! நீங்கள் நின்ற இடத்தில் எதையோ பிடிக்க முயன்றுவிட்டுப் பின்வாங்கினீர்களே?' என்று நபித்தோழர்கள் கேட்டனர்.
'எனக்குச் சுவர்க்கம் எடுத்துக் காட்டப் பட்டது. அதிலிருந்து ஒரு குலையைப் பிடித்தேன். அதை நான் எடுத்திருந்தால் உலகம் உள்ளளவும் அதை நீங்கள் புசித்திருப்பீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் புகாரி )

சொர்க்கத்தின் கண்ணழகிகள் 01

(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 80



சுவனத்தில் ஹூருல் ஈன்கள் என்ற கண்ணழகி பெண்கள் திரள் திரளாக இருப்பார்கள் .
ஹூருல் ஈன்களின் பாதம் முதல் முழங்கால் வரை குங்குமத்தினாலும் , முழங்காலிலிருந்து மார்பு வரை கஸ்தூரியினாலும் , மார்பிலிருந்து கழுத்து வரை அம்பரினாலும் , கழுத்திலிருந்து உச்சி வரை கற்பூரத்தினாலும் பிரயோத்தமாக படைக்கப்பட்டிருப்பார்கள் .

ஹூருல் ஈன்களின் மேனியின் நிறம் முத்தின் வெண்மையும் , மரகதத்தின் பசுமையும் , புஷ்பராகத்தின் மஞ்சளும் மாணிக்கத்தின் சிவப்பும் கலந்த கலவையாக இருப்பார்கள் .
فِيْهِنَّ قٰصِرٰتُ الطَّرْفِۙ لَمْ يَطْمِثْهُنَّ اِنْسٌ قَبْلَهُمْ وَلَا جَآنٌّ
அவைகளில், கீழ் நோக்கிய பார்வைகளையுடைய (அழகிய) கன்னிகைகளும் இருப்பார்கள். இவர்களுக்கு முன்னர், அவர்களை யாதொரு மனிதனும் ஜின்னும் தீண்டி இருக்கமாட்டார்கள்.
(அல்குர்ஆன்: 55:56)

كَاَنَّهُنَّ الْيَاقُوْتُ وَالْمَرْجَانُ
அவர்கள், சிகப்பு மாணிக்கத்தைப்போலும் பவளங்களைப் போலும் இருப்பார்கள்.
(அல்குர்ஆன்: 55:58)

ஹூருல் ஈன்களின் கண்கள் அறத்தீர்ந்த வெண்மையும், அறத்தீர்த்த கருமையுமாக இருப்பார்கள் . இவர்களின் கண்களில் ஒளி வீசும். இதனால்தான் இவர்களுக்கு "ஹூருல் ஈன்கள் " என்ற பெயர் உண்டாயிற்று.

حُوْرٌ مَّقْصُوْرٰتٌ فِى الْخِيَامِ

அவர்கள்தாம், ஹூர் (என்னும் கண்ணழகிகளாகிய கன்னிப்பெண்)கள். அவர்கள், (முத்து பவளங்களாலான) கூடாரங்களில் வசித்திருப்பார்கள்.
(அல்குர்ஆன்:55:72)

2796. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கவாசிகளில் (ஹூருல் ஈன்களில்) ஒரு பெண், உலகத்தாரை எட்டிப் பார்த்தால் வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள அனைத்தையும் பிரகாசமாக்கி விடுவாள்; பூமியை நறுமணத்தால் நிரப்பி விடுவாள். அவளுடைய தலையிலுள்ள முக்காடோ உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாகும்.
என அனஸ்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி

ஹூருல் ஈன்கள் ரத்தினம் மாதிரி பளபளப்பாக இருப்பதால் , அவர்களின் உடலிலுள்ள கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும்

3254. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் முதலாவதாக நுழையும் அணியினர் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். (அடுத்து) அவர்களின் சுவடுகளைப் பின்தொடர்ந்து சொர்க்கத்தினுள் நுழைபவர்கள், வானத்தில் நன்கு ஒளி வீசிப் பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) இருப்பார்கள். அவர்களின் உள்ளங்கள் ஒரே மனிதரின் உள்ளத்தைப் போன்றிருக்கும். அவர்களுக்கிடையே பரஸ்பர வெறுப்போ, பொறாமையோ இருக்காது. ஒவ்வொரு மனிதருக்கும் 'ஹூருல் ஈன்' எனப்படும் அகன்ற (மான் போன்ற) விழிகளையுடைய மங்கையரிலிருந்து இரண்டு மனைவிமார்கள் இருப்பார்கள். அவர்களின் கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும். (ஸஹீஹ் புகாரி)

ஹூருல் ஈன்களின் வாய் உமிழ்நீர் ஒரு துளி இந்தக் கடலில் விழுந்தால் கடல் நீர் முழுவதும் அமிர்தமாக மாறிவிடும்.
ஹூருல் ஈன்கள் துன்யாவின் பெண்களைப் போல் பலவிதமாக இருப்பார்கள் . ஒவ்வொரும் எழுபது விதப் பட்டாடைகள் உடுத்தி நவரத்தினம் இழைத்த தங்க வளையல் முதல் எல்லா ஆபரணங்களும் மேனியெங்கும் அணிந்திருப்பார்கள் .
மேலும் குர்ஆனில் அல்லாஹ் ஹூருல் ஈன்கள் பற்றி ...

وَعِنْدَهُمْ قٰصِرٰتُ الطَّرْفِ عِيْنٌ
அவர்களிடத்தில் கீழ் நோக்கிய, அடக்கமான பார்வையையுடைய (ஹுருல் ஈன் என்னும்) கண்ணழகிகளும் இருப்பார்கள்.
(அல்குர்ஆன்: 37:48)

- كَذٰلِكَ وَزَوَّجْنٰهُمْ بِحُوْرٍ عِيْنٍ

இவ்வாறே (சந்தேகமின்றி நடைபெறும்). அன்றி, "ஹூருல் ஈன்" (என்னும் கண்ணழகிகளாகிய கன்னிகை)களையும் நாம் அவர்களுக்கு திருமணம் செய்து வைப்போம்.
(அல்குர்ஆன்: 44:54)

مُتَّكِـٮِٕيْنَ عَلٰى سُرُرٍ مَّصْفُوْفَةٍ وَزَوَّجْنٰهُمْ بِحُوْرٍ عِيْنٍ
அணி அணியாகப் போடப்பட்ட கட்டில்களி(ல் உள்ள பஞ்சணைகளி)ன் மீது சாய்ந்தவண்ணமாக இருப்பார்கள். நாம் அவர்களுக்கு ("ஹூருல்ஈன்" என்னும்) கண்ணழகிகளாகிய கன்னிப் பெண்களை திருமணம் செய்து வைப்போம். (அல்குர்ஆன் : 52:20)
خَيْرٰتٌ حِسَانٌ
அவைகளில், சிறந்த குணம் படைத்தவர்களான அழகிகள் உள்ளனர்.
(அல்குர்ஆன் :55:70)

وَحُوْرٌ عِيْنٌ ۙ
(அங்கு இவர்களுக்கு) "ஹூருல் ஈன்" (என்னும் கண்ணழகி களான மனைவி)களும் இருப்பார்கள். (அல்குர்ஆன்:56:22)

كَاَمْثَالِ اللُّـؤْلُـوءِالْمَكْنُوْنِ
அவர்கள் பேணிப் பாதுகாக்கப்படும் முத்துக்களைப் போல் இருப்பார்கள். (அல்குர்ஆன்: 56:23)

اِنَّاۤ اَنْشَاْنٰهُنَّ اِنْشَآءً ۙ
(அவர்களுடன், கண்ணழகிகளாகிய ஹூருல் ஈன் என்னும் கன்னியர்களும் இருப்பார்கள். அவர்கள் ஒருவராலும் பெற்றெடுக் கப்பட்டவர்கள் அல்லர்.) நிச்சயமாக நாம் அவர்களைச் (சொந்தமாக இவர்களுக்கெனப் புதிதாகவே) படைத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன்:56:35)

وَّكَوَاعِبَ اَتْرَابًا ۙ
(மனைவிகளாக) ஒரே வயதுடைய (கண்ணழகிகளான) நெஞ்சு நிமிர்ந்த கன்னிகளும், (அல்குர்ஆன் :78:33)
நல்லடியார்களான ஆண்களுக்கு ஹுருல் ஈன்கள் இருப்பது போல் நல்லடியார்களான பெண்களுக்கு என்ன இருக்கிறது?
(இது பற்றிய சேதி இன்ஷா அல்லாஹ் பிற்பாடு)

ஹூருல் ஈன்கள் 02

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 81)



உம்முஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஒரு சமயம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்கள்,

"உலகிலிருந்து செல்லும் பெண்களுக்குக் கூடுதல் சிறப்பா? அல்லது **ஹூருல் ஈன்** பெண்களுக்கா?"
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்,
"ஒரு விரிப்பின் அடிப்பாகத்தைவிட, மேல் பாகத்திற்கு இருக்கும் சிறப்பு போல, உலகிலிருந்து சென்ற பெண்களுக்கு ஹூருல் ஈன்களை விட சிறப்பு உண்டு

பின் உம்முஸல்மா ரளியல்லாஹு அன்ஹா கேட்டார்கள், "ஏன்? எப்படி?''
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்;
"அவர்கள் தொழுகிறார்கள், நோன்பிருக்கிறார்கள். இன்னும் பல வணக்க வழிபாடுகளைச் செய்கின்றனர்." என்றார்கள்.
இறந்துபோன முஸ்லிம் ஆணோ, பெண்ணோ எவராயினும் அவர்களுக்கு ஜனாஸாத் தொழுகை செய்த பின் பிரார்த்திக்கும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கற்றுத்தந்த பிரார்த்தனையில்;
''(இவரது) இப்போதைய குடும்பத்தைவிட, நல்ல குடும்பத்தை இவருக்கு கொடுப்பாயாக! இப்போதைய துணையைவிட நல்ல துணையைக் கொடுப்பாயாக!"
(நூல்கள்: முஸ்லிம், நஸயீ)

சுவர்க்கத்தில் ஆண்கள் விரும்புவது ஹூருல் ஈன்களை. பெண்களைப் பொறுத்த வரையில் அதற்குச் சமமான சிறந்தவைகள் அவர்களுக்கு கிடைக்கும்.
நுண்ணறிவாளனான அல்லாஹ் அவனுடைய அளவிட முடியாத மதி நுட்பத்தைக் கொண்டு ஆண்களுக்கு ஹூருல் ஈன்கள் கிடைப்பது போன்ற அளவிற்கு பெண்களுக்கு என்ன கிடைக்கும் என வெளிப்படையாக குறிப்பிடவில்லை. இது அல்லாஹ் மிகவும் கண்ணியமானவன் என்பதையும் நாணமுறுபவன் என்பதையும் குறிக்கின்றது.
மேலும் எதைக் குறித்து பெண்களே மிகவும் நாணமுறுபவர்களாகவும் கண்ணியமானவர்களாகவும் இருக்கின்றார்களோ அதையே எப்படி அல்லாஹ் வெளிப்படையாகக் கூறி அதை அடைவதற்கு முயற்சி செய்யுங்கள் எனக் கூறுவான் எனவே அல்லாஹ் தன்னுடைய திருமறையில் பின்வரும் வசனத்தில் மறைமுகமாகக் கூறியிருக்கிறான்.
உங்கள் மனம் விரும்பியதெல்லாம் அதில் உங்களுக்கு இருக்கிறது (அல்குர்ஆன் 41:31)

அல்லாஹ்வின் நல்லடியார்களான பெண்கள் ஹூருல் ஈன்களை விட உயர்ந்த அந்தஸ்த்தில் இருப்பார்கள்: –
ஹூருல் ஈன்கள் எவ்வளவு தான் அழகிலும் குணத்திலும் அவர்களின் படைப்பிலும் சிறப்பு மிக்கவர்களாயினும் இவ்வுலகில் நல்லறம் புரிந்த பெண்கள் சுவர்க்கத்தில் ஹூருல் ஈன்களை விட அந்தஸ்த்தில் உயர்ந்தவர்களாகவும் அழகில் சிறந்தவர்களாகவும் இருப்பார்கள்.
ஏனென்றால் ஹூருல் ஈன்கள் இறைவனின் நல்லடியார்களை மகிழ்விப்பதற்காக சுவர்கத்தில் படைக்கப் பட்டவர்களாவார்கள். அவர்கள் இவ்வுலகில் நல்லறங்கள் புரிந்த நல்லடியார்களுக்கு கட்டுப்பட்டவர்களாக சுவனத்தில் இருப்பார்கள்.
ஆனால் இறைவனின் நல்லடியார்களான பெண்களோ தாங்கள் செய்த நற்செயல்களின் விளைவாக சுவனம் சென்றவர்கள். எனவே இவர்களுக்கும் ஹூருல் ஈன்களுக்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கின்றது.
**அஷ் ஷெய்ஹூ இப்னு உதைமீன்** அவர்களிடம் ஹூருல் ஈன்கள் பற்றியும் இவ்வுலகில் உள்ள பெண்களைப் பற்றியும் என வினவப் பட்டபோது அதற்கு ஷெய்ஹூ அவர்கள் பின்வருமாறு பதில் அளித்தார்கள்.
“(நல்லறங்கள் புரிந்த) இந்த உலகத்தின் பெண்கள் ஹூருல் ஈன்களை விட அந்தஸ்திலும் வெளிப்புற தோற்றத்திலும் உயர்ந்தவர்களாக இருப்பார்கள். அல்லாஹ்வே முற்றிலும் அறிந்தவன்” என்று கூறினார்கள்.
ர.ரா

சுவனத்து வாகனமும்,வார கிழமைகளும்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 82 )



சுவனத்தில் ஓரிடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்குச் செல்ல வாகனமாக "யாகூத் " என்ற பறக்கும் குதிரைகள் உண்டு. அது நம்மை நினைத்த இடத்திற்கெல்லாம் சுமந்து பறக்கும்.
" அல்லாஹ்வின் தூதரே! சுவனத்தில் குதிரைகள் உண்டா ? " என்று ஒரு மனிதர் கேட்டார்.
" அல்லாஹ் உன்னை சுவனத்தில் நுழையச் செய்து அப்போது நீ சிவப்பு நிற யாகூத் என்ற பறக்கும் குதிரையில் பவனி வர விரும்பினால் நீ நினைத்த இடமெல்லாம் உன்னை சுமந்து பறந்து செல்லும் "

அப்போது இன்னொரு மனிதர் "அல்லாஹ்வின் தூதரே ! சுவனத்தில் ஒட்டகம் உண்டா ? "
அதற்கு நபி (ஸல்) அவர்கள் முந்தைய மனிதருக்கு சொன்ன பதிலை
கூறவில்லை.
" நீ சுவனத்தில் உன் மனம் விரும்பியதும் உன் கண்களுக்கு குளிர்ச்சியானதும் கிடைக்கும் "
புரைதா (ரலி) - திர்மிதீ

சொர்க்கவாசிகள் வாரத்தில் ஏழு நாட்களில் ஒவ்வொரு நாளும் தங்களின் உற்றார் உறவினர்களை சந்திப்பார்கள்

1. பிள்ளைகள் சனிக்கிழமையன்று தங்கள் பெற்றோரைச் சந்திப்பார்கள்
2. ஞாயிற்றுக்கிழமையில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைச் சந்திப்பார்கள்
3. திங்கட்கிழமையன்று மாணவர்கள் தங்கள் ஆசிரியர்களைச் சந்திப்பார்கள்
4. செவ்வாய்கிழமையன்று ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களைச் சந்திப்பார்கள்
5. புதன்கிழமையன்று நபிமார்களை தனது உம்மத்தினர் சந்திப்பார்கள்
6. வியாழன் அன்று உம்மத்தினரை நபிமார்கள் சந்திப்பார்கள்
7. வெள்ளிக்கிழமையில் சுவனவாசிகள் அனைவரும் தங்கள் இறைவனைச் சந்திப்பார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதாரம் : புகாரி முஸ்லிம்
அனஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
"நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: சுவனத்தில் அங்காடி ஒன்றுள்ளது. சுவனவாசிகள் ஒவ்வொரு ஜும்ஆ நாளிலும் அங்கு வருவார்கள்
தென்றல் காற்றடித்து அவர்களின் முகங்களிலும் ஆடைகளிலும் சுவனத்துப் புழுதியை வாரிப்போடும். அதனால் அவர்கள் அதிக அழகையும் பிரகாசத்தையும் பெறுவார்கள்.
தங்கள் குடும்பத்தாரிடம் திரும்பிச் செல்வார்கள். மேலும் அவர்களிடம் கூறுவார்கள்: "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் வெளியே சென்ற பிறகு நீங்கள் அதிக அழகையும் பிரகாசத்தையும் பெற்று விட்டீர்கள் என்று!
அதற்கு அவர்கள் பதில் கூறுவார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்களும் தான் இங்கிருந்து சென்ற பிறகு அதிக அழகையும் பிரகாசத்தையும் பெற்றுள்ளீர்கள்" (நூல்: முஸ்லிம்)

சுவனத்தில் வாயில்கள் திறக்கப்படுவது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் .

1. ஓரிறைக் கொள்கையுடன் மரணித்தவர்களுக்காக சுவன வாயில்கள் திறக்கப்படுதல் (முஸ்லிம்),
2. உழுச் செய்து முடித்து ஓதுகின்ற பிரார்த்தைனையின் பயனாக திறக்கப்படும் சுவன வாயில்கள் (புகாரி, முஸ்லிம்),
3. வாரந்தோறும் திங்கள், மற்றும் வியாழன் நாட்களில் சுவனத்தின் வாயில்கள் திறக்கப்படுகின்றன.

அல்லாஹ்வுக்கு இணைவைக்காத ஒவ்வொருக்கும் (விஷேச) மன்னிப்பு வழங்கப்படுகின்றது.
இருப்பினும், யாருக்கும், தனது சகோதரருக்கும் இடையில் குரோதம் காணப்படுகின்றதோ அவருக்கும் மன்னிப்பு நிறுத்தப்பட்டு, இவ்விருவரும் சமரசமாகும் வரை காத்திருங்கள், இவ்விருவரும் சமரசமாகும் வரை காத்திருங்கள், இவ்விருவரும் சமரசமாகும் வரை காத்திருங்கள் என்று கூறப்படும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம், புகாரி).
ரமளான் வந்துவிட்டால் சுவர்க்கத்தின் வாயில்கள் திறக்கப்படும், நகரத்தில் வாயில்கள் மூடப்படும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்).

இது ரமளான் மாதத்தை சிறப்பிக்கின்ற செய்தியாகும் .
சுவர்க்கத்தில் எப்போதும் ஒரு பாடல் ஒலித்துக்கொண்டே இருக்கும்
"நாங்கள் என்றும் வாழ்ந்து வருவோம்
நாங்கள் அழிந்து விடமாட்டோம்
நாங்கள் எப்பொழுதும் சுகபோகத்தில் இருப்போம்
நாங்கள் கவலை அடைய மாட்டோம்
நாங்கள் எப்பொழுதும் திருப்தியுடன் இருந்து வருவோம்"
என்று பாடிக்கொண்டிருப்பார்கள்
ர.ரா

**Rahmath Rajakumaran**

சுவனப் பதிவுகள் இன்னும் 10 பதிவுகள் இருக்கிறது .
அதற்கப்புறம் " ஜஹன்னம் " என்கிற நரகம் அது 15 பதிவுகள்
அதற்கப்புறம் "திருக்கல்யாணம் "
அதற்கப்புறம் " விருந்து " என்று ஆக இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் மொத்தம் 125 பதிவுகள் வரை வரலாம்.

சுவனவாசிகள் 01

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 83)



சுவனவாசிகளின் உடைகள் "ஸுந்துஸு இப்தப்றக்கு" என்னும் பட்டுகளில் நவரத்தினங்கள் பதித்து பலப்பல விதமாக இருக்கும். இந்த பட்டுடைகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முத்து மண்டபத்துள் முளைத்திருக்கும் . ஒவ்வொரு மரம் நாள் ஒன்றிற்கு எழுபது விதமாகக் கொடுத்துக் கொண்டிருக்கும்.

ஆபரணங்கள் , பொன், வெள்ளி, நவரத்தினங்கள் இவைகளால் செய்யப்பட்டிருக்கும். இவைகளின் பிரகாசம் சூரியனையும் மங்கச் செய்யும்.
சுவனவாசிகள் பேசும் பாஷை அரபி.அரபி மொழி தெரியாதவர்களும் சரளமாக பேசுவார்கள். எல்லோர் கண்களிலும் சுர்மா இடப்பட்டிருக்கும் . சுர்மா இட்டு ஒரு தடவை உங்கள் கண்ணின் அழகை இப்போதே ரசியுங்கள் .

சுவனவாசிகளுக்கு நரை, திரை, மூப்பு, மலம் , சிறுநீர் , விந்து , நித்திரை, மயக்கம், மறதி, வெறுப்பு, அலுப்பு , அச்சம், கவலை, பொறாமை, நோய் ஆகியவைகள் எதுவும் இராது.
சுவனவாசிகளுக்கு ஒவ்வொருவரும் நூறு பேர்களுடைய பலம் உண்டாயிருக்கும் . ஆகையால் மானிடப் பெண்களில் எழுபது பேரும், ஹூருல் ஈன்களில் முப்பது பேரும் ஆக நூறுபேர்கள் அவர்களின் இன்பத்திற்காகவே கொடுக்கப்படுகிறது.

ஒவ்வொரு ஹூருல் ஈன்களின் மார்பிலும் அவருடைய கணவர் பெயர் பொறிக்கப்பட்டிருக்கும்
சில சுவனவாசிகளுக்கு நூற்றுக்கும் அதிகமாக பெண்களும் ஹூருல் ஈன்களும் கொடுக்கப்படும். அன்றாடம் புதிது புதிதாகப் பெண்கள் கொடுக்கப்படுவார்கள்.
ஒவ்வொருவரும் துனியாவில் திருமணம் செய்திருந்த மனைவியை அவருக்கே கொடுக்கப்படும் .

துனியாவில் இரண்டு, மூன்று, நான்கு புருஷர்களுக்கு வாழ்க்கைப்பட்ட சுவனவாசியான பெண்ணுக்கு , தான் வாழ்க்கைப் பட்டவர்களில் எவர் மீது அதிகப்பிரியப்பட்டாளோ அவருடன் மட்டும் சேர்க்கப்படுவாள் .

ஆண், பெண் சுவனவாசிகள் எல்லோருமே ஜோடியாகவே அன்றி யாருமே தனியாக இருக்க மாட்டார்கள் .
இன்னும் அவர்களுக்கு இந்திரியம் இராது , புணர்ச்சி மனப் பிரியப்படி எல்லாம் உண்டாயிருக்கும் . புணர்ச்சியின் நிறைவில் இருவரும் இந்திரியத்திற்கு பதிலாக ஒரு வித நறுமணமுள்ள காற்று வெளிப்படுத்துவார்கள் .
இந்த நறுமணத்தால் ஒருவரை ஒருவர் சொக்கிப் போவார்கள்.
ஒரு சுவனவாசி ஒரே நேரத்தில் எல்லாப் பெண்களுடனும் புணரத் திராணி உள்ளவராக இருப்பார். பெண்களும் எத்தனை தரம் புணர்ந்தாலும் குமரித்தன்மையோடிருப்பார்கள் . பிள்ளை வேண்டுமானலும் , உடனே பிறந்து , வளர்ந்து , வாலிபமாய் விடும் .
மேற்படி கட்டுரை "ஸெய்யிது அப்துல் வஹ்ஹாபு ஆலிம் ஸாஹிபு எழுதிய தரீக்குல் ஜன்னா " என்கிற தமிழ் கிதாபில் உள்ளதை ஒரு வார்த்தை பிசாமல் அப்படியே உங்களுக்கு கொடுத்திருக்கிறேன் . உங்கள் விருப்பு வெறுப்பு எதுவாயினும் அன்னாரையேச் சேருமே அன்றி என்னை அல்ல .
ர.ரா

சுவனவாசிகள் ரசிக்கும் இசை கச்சேரி

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 84)



உலகிலுள்ள அத்தனை ராக தாளங்கள் எழுப்பும் இசைக்கருவிகளும் சுவனத்தில் இருக்கும் . இன்னும் இத்தனைக்கும் மேலான அதிகப்படியான இசைக்கருவிகளும் அங்கு உண்டு.
உலகிலுள்ள அத்தனை இசைக்கருவிகளும் ஏழு ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது என்றால், சுவனத்து இசைக்கருவிகள் எழுபது ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கலாம் .

இது போக அங்குள்ள மரங்களில் அநேக ராக தாளங்களுக்கென்றே அமைக்கப்பட்டு , கிளைகளிலும் , விழுதுகளிலும் துவாரங்கள் உள்ளதாக இருக்கும் . சுவனத்தென்றல் ஆடி அசைந்து வீசும் போது , மரம் அசைய அசைய காற்று மரத் துவாரங்களின் வழியே ஊடுருவி செல்லும் போது மனதை மயக்கும் அழகிய கீத நாதங்கள் இசைக்கப்படும் .
மேற்கண்ட காற்றின் இசையுடன் பறவைகள் சங்கீதம் பாடும் .அத்தோடு ஹூருல் ஈன்களோடு மலக்குமார்களும் சேர்ந்து பாடுவார்கள் .

இந்த சங்கீதங்கள் அனைத்தும் தஸ்பீஹு முதலியவைகளும் , குர்ஆனின் ஆயத்துக்களும், ஸபூர் வேத வாக்கியங்களுமாக இருக்கும்.

நபி தாவூது (அலை) அவர்களும் அங்கே சங்கீதக்காரர்களில் ஒருவராக இருப்பார்கள் .
இசையை ரசிப்பதன் மூலமோ உருவாக்குவதன் மூலமோ அதில் ஈடுபாடு காட்டுவது ஏற்புடையதல்ல என்றொரு கருத்து இஸ்லாமிய உலகில் இருக்கத்தான் செய்கிறது மறுக்கவில்லை .
இறைவனிடமிருந்து மனிதனை இசை தூரமாக்கி விடுகிறது என்றும இறைச் சிந்தனையை அது மறக்கடிக்க வைத்து விடுகிறது என்றும் சொல்லப்படுகிறது
இசையில் ஒருவன் தன்னையே மறக்க நேரிடுவதால் அது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் வாதிடப்படுகிறது
இசை கூடாது என்றும் அழுத்தமாக சொல்பவர்கள் திருக்குர்ஆனில் இருந்தும் நபிமொழிகளிலிருந்தும ஆதாரங்கள் காட்டப்படுகிறது
இசை இறைவனுக்கு எதிரியாக இருக்க முடியுமா?
நான்கு வேதங்களில் ஒன்றான சபூர் வேதத்தை இசை வடிவில் அருளிய இறைவன் இசை உணர்வற்றவனாக இருப்பானா ? சொல்லுங்க
" மலைகளை நோக்கி நீங்கள் அவருடன் (தாவூத்) சேர்ந்து துதி செய்யுங்கள் என்று கட்டளை இட்டோம்
அவ்வாறே பறவைகளுக்கும் கட்டளையிட்டோம்
. . . . . . . குர்ஆன் 34 : 10
என்று கூறி சபூர் வேதத்தை தாவூத் அலை அவர்கள் ஓத அதில் எல்லா ஜீவன்களோடு அஃறிணை வஸ்துகளும் திளைத்திருந்தன என்பதை அறிய முடிகிறது
நபி (ஸல் ) அவர்களுக்கு வஹி சில சமயம் மணியடிப்பது போலவும் தேனீ ரீங்காரமிடுவது போலவும் வந்திருப்பதாக ஹதீஸ்களின் மூலம் அறிகிறோம்
மணி சப்தமும் தேனீ ரீங்காரமும் இசை வடிவம்தானே .என்ன சொல்றீங்க ?
ர.ரா

சுவனத்தின் சீதோஷ்ண பொழுதுகள்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 85)



சுவனத்தில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் இவைகளெல்லாம் இல்லை. ஆகையால் இரவும் இல்லை. பகலும் இல்லை.
"அப்போ சுவனத்திற்கு வெளிச்சம் எங்கிருந்து வருகிறது?"
ஜன்னத்துல் பிரதௌஸ் என்கிற உயர்வான சுவனத்திற்கு நேர் மேலாக அல்லாஹு தஆலாவின் அர்ஷ் இருக்கிறது.

அர்ஷ் எப்போதுமே ஒளியால் இலங்கிக் கொண்டே இருக்கும். அர்ஷில் இருந்து வெளிவரும் ஒளி எட்டு சுவர்க்கத்திற்கும் ஊடுருவி பிரகாசிக்கும் . இந்த வெளிச்சம் துனியாவில் சூரியோதயத்திற்கு முன்

உண்டாயிருக்கும் புத்தம் புது காலையின் பொன்னிற வேளை பொழுதாய் எப்போதுமே சுவர்க்கத்தின் பொழுதுகள் இலங்கிக் கொண்டே இருக்கும் .
" அப்போ நாழிகை குறிப்பும், நாட் குறிப்பும் வாரக் குறிப்பும் மாதக் குறிப்பும், வருஷக் குறிப்பும் இவைகளெல்லாம் கிடையாதா? "

" உண்டு அவைகள் இராக் குறிப்பு பகல் குறிப்பால் இவைகளை வைத்து புரிந்து கொள்ள முடியும். அதாவது சுவனத்து மாட மாளிகைகளின் வாயில்களும், ஜன்னற் கதவுகளும் , பட்டுத் திரைகளும் , தானாகத் திறந்திருக்கும் போது , அது பகல் என்றும் , தானாக மூடிக் கொள்ளும் போது , அது இரவு என்றும் எடுத்துக் கொண்டு, மேற்சொன்ன குறிப்புகளை வைத்து நிதானித்துக் கொள்வார்கள் .
சீதோஷ்ணமும் ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வாக இல்லாமல் ஒரே மாதிரி சமமாகவே இருக்கும்.
மேலும் துனியாவின் ஒரு நாள் பொழுது என்பது சூரியன் உதித்து ,மறைவதில் இருந்து முடிவு செய்யப்படுகிறது .

ஆனால் சுவனத்தில் சூரியன் இல்லை என்பதால் சுவனத்தின் ஒரு நாள் குறித்து குர்ஆனில் ...
நிச்சயமாக உங்களது இறைவனிடத்தில் ஒரு நாள் நீங்கள் எண்ணும் (உங்களுடைய) ஆயிரம் வருடங்களுக்குச் சமமாகும்.
(அல்குர்ஆன்: 22:47)

இப்படியும் ஒரு நாள் இருக்கலாம் . அல்லது கீழ்க்கண்ட வசனத்தின் படியும் இருக்கலாம்.
تَعْرُجُ الْمَلٰٓٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ
அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.
(அல்குர்ஆன்:70:4)
அல்லாஹு தஆலாவே மிக்க அறிந்தவன் .
ர.ரா

சுவனத்தின் சந்தை , கடை வீதிகள்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 86)


ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் சுவர்க்கத்து வாழ்க்கைக்கு அளவே இல்லை .மிக குறைந்த வசதிகள் பெற்ற சுவனவாசிகள் துனியாவைப் பார்க்கிலும் பத்து பங்கு அதிகமாகவே இருக்கும். கூடிய அளவை அல்லாஹு தஆலாவே அறிவான் .

அத்தனை பெரிய வாழ்க்கை ஒவ்வொரு சுவனவாசிக்கும் உண்டு. அதே நேரத்தில் அவர்களின் அந்தஸ்தையும் அல்லாஹ்ு தஆலா உயர்த்தி வைப்பான்
அதாவது ஒவ்வொரு சுவனவாசியையும் மலக்குகள் கண்டு பேச வேண்டுமானால் கூட அந்த சுவனவாசியின் முன் அனுமதி பெற வேண்டும் .இவ்வித அதிகாரத்தை அல்லாஹ்ு தஆலா சுவனவாசிகளுக்குக் கொடுப்பான்.

இன்னும் சுவனவாசிகள் ஒவ்வொருவரும் தம்முடன் சுவர்க்கம் புகுந்துள்ள பிதா , மாதாக்களையும் , பந்துக்களையும், நண்பர்களையும் , இஷ்டர்கையையும் விரும்பிய போதெல்லாம் சந்தித்துக் கொண்டும் , சம்பாஷித்துக் கொண்டும் இருப்பார்கள்
ஒரு சுவனவாசி இன்னொரு சுவனவாசியை சந்திக்க நாடினால் தான் எந்த மாதிரி ஆசனத்தில் இருந்து பறந்து போக நினைக்கிறாரோ அந்த ஆசனத்தில் பறந்து போகலாம். அல்லது பறக்கும் குதிரைகளை பயன்படுத்தலாம். இன்னும் எந்த மாதிரி வாகனத்தில் ஏறி என்ன விதமாக பயணிக்க விரும்புகிறாரோ அந்த மாதிரி பயணிக்கலாம் .
சுவனத்தில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் பெரிய பெரிய சந்தைகள் உருவாகி இருக்கும்.

உயர்ந்த பதவியுடையோர் முதல் தாழ்ந்த பதவியுடையோர் வரையுமுள்ள எல்லோரும் அந்த சந்தையில் வந்து கூடுவார்கள் .
அப்போது ஒருவரையொருவர் துன்யாவின் விஷயங்களைப் பற்றியும் , சுவர்க்கத்தின் அற்புத விஷயங்களைப் பற்றியும் வினவி பேசிக் கொள்வார்கள் .

அந்த சந்தையின் அலங்காரத்தையும் , அதன் அழகையும் , சிறப்பையும் வர்ணிக்க எவராலும் இயலாது.
அந்த மிகப் சந்தைக் கடைகளில் எல்லா விதச்சாமான்களும் உண்டு .அங்கு போன ஒவ்வொரு சுவனவாசியையும் மலக்குமார்கள் ,
" நீங்கள் துனியாவில் சந்தைக்குப் போய் கிரயங் கொடுத்தல்லவா வேண்டிய சாமான்களை வாங்குவீர்கள் இங்கு அப்படி அல்ல; உங்களுக்கு வேண்டிய சாமான்களை அல்லாஹ்ு தஆலா எவ்வித கிரயமும் இல்லாமல் நீங்கள் பெற்றுக் கொள்ளலாம் "

யார் யார் எந்த பொருட்களை விருப்பமுடன் பார்த்தார்களோ அந்த சாமான்களை உடனே மலக்குமார்கள் எடுத்துக் கொண்டு அவர்கள் வீட்டில் கொண்டு வந்து கொடுப்பார்கள் .
இன்னும் அந்த சந்தையில் மானிட உருவங்களும் , சிறகுகளும் கிடைக்கும். சுவனவாசிகள் யார் யார் எந்த மாதிரியான மானிட உருவத்தை விரும்பினார்களோ அந்த உருவத்தைப் பெறுவார்கள் . அப்படியே சிறகுகளும் உண்டாகி விடும் .
சுவனத்து பறக்கும் உயிரினங்கள் கூட சுவனவாசிகள் பறப்பதைக் கண்டு வியப்புற்று பார்க்கும் .
அந்தச் சந்தையில் ஹூருல் ஈன்கள் திரண்டிருந்து சங்கீதம் பாடுவார்கள் அங்கு திரண்டிருக்கும் சுவனவாசிகள் அந்த கீத நாதங்களைக் கேட்டு ஆனந்த மடைந்து, காண்போரைக் கண்டும், சம்பாஷிப்பாருடன் சம்பாதித்தும் , விரும்பிய பொருட்களை அள்ளிக் கொண்டும் தங்கள் மாளிகைக்கு திரும்பி வருவார்கள்.
நபி (ஸல்) அவர்கள் நவின்றதாக ,ஹஜ்ரத் அனஸ் (ரலி) அறிவிக்கிறார்கள் :

" நிச்சயமாக சுவர்க்கத்தில் ஒரு கடைவீதி உள்ளது
ஒவ்வொரு ஜும்ஆ அன்றும் சுவர்க்கவாசிகள் அந்த கடைவீதிக்கு வருவார்கள் .அப்பொழுது வடக்குத் திசையிலிருந்து ஒரு காற்று வீசும் . அக்காற்று அவர்களின் முகங்களிலும் , ஆடைகளிலும் தவழ்ந்து நறுமணத்தை பரப்பும் .அதனால் அவர்களின் அழகும் ,பொலிவும் அதிகமாகும் .அதே நிலையில் அவர்கள் தங்களின் குடும்பத்தாரிடம் திரும்புவார்கள் .
அப்பொழுது அவர்கள் குடும்பத்தார்கள் , அல்லாஹ்வின் மீது ஆணையாக ! நிச்சயமாக உங்களின் அழகும் பொலிவும் அதிகமாகிவிட்டது என்பார்கள்.அதற்கு அவர்கள் , "அல்லாஹ்வின் மீது ஆணையாக எங்களுக்கு பின் உங்களின் அழகும், பொலிவும் கூட அதிகமாகிவிட்டது" என்பார்கள். (முஸ்லிம்)
ர.ரா

சுவனத்து வாசலில் மரித்த பிள்ளைகள்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 87)
இந்த பதிவு சுவனப்பதிவில் விடுபட்டு விட்டது .
முன் சொன்ன தடாகத்தில் குளித்து கரையேறிக்கும் உம்மத்துடன் சுவர்க்கம் புகுவதற்கு நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் சுவனத்தின் தலைவாயிலுக்கு வருவார்கள் .
அந்த வாசலில் பாரிய விருக்ஷத்தில் பிராயம் அடையாமல் இறந்த சிறுபிள்ளைகள் அனைத்தும் வந்து நிற்பார்கள் .
ஒவ்வொரு பிள்ளைகளும் கைகளில் சுவர்க்கத்து குடிப்புகளும் , பட்டாடைகளும் வைத்துக் கொண்டு ஷிராத் பாலங்கடந்து வருகிற தம் தம் பிதா மாதாக்களுக்குக் கொடுப்பதற்காக வழி பார்த்து காத்து நிற்பார்கள் . எல்லோரும் அங்கு வந்து சேர்ந்ததும் தம் தம் பெற்றோர்களுக்கு அப் பரிசுகளைக் கொடுத்து சுவர்க்கத்திற்குள் அழைத்துச் செல்லும்.
பிதா , மாதாக்களை வரக் காணாத பிள்ளைகள் சுவனத்திற்குள் செல்லாமல் பாலத்தைப் பார்த்தவாறே தேடி அழும் .
அந்த அழு குரலை நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கேட்டு மலக்குகளைப் பார்த்து ,
"இந்தப் பிள்ளைகள் ஏன் அழுகிறது?"
" இப் பிள்ளைகளின் பிதா, மாதாக் வரக் காணாததால் அவர்களைத் தேடி அழுகிறார்கள் "
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அந்தப் பிள்ளைகளைப் பார்த்து ,
"இன்ஷா அல்லாஹ் உங்களுக்காகவே உங்கள் பெற்றோர்கள் நாளைக்கு வந்து சேருவார்கள் " என்று கூறுவார்கள்.
அந்த பிள்ளைகள் சுவர்க்கத்தை ஏறெடுத்துப் பார்க்காமல் , தங்கள் தாயையும், தந்தையும் எதிர்ப்பார்த்து அந்த பாலத்தையே பார்த்துக் கொண்டு காத்து நிற்பார்கள் .
ர.ரா

சொர்க்கத்து சிறுவர்கள்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 88)

இந்தப் பதிவும் சுவனப்பதிவு பதிவில் விடுபட்டு விட்டது .
எல்லோரும் சுவர்க்கம் புகும் போது அங்குள்ள மலக்குமார்கள் எதிர்கொண்டு வந்து , "உங்களுக்கு ஈடேற்றம் உண்டாவதாக ! உங்களுக்கு ஈடேற்றம் உண்டாவதாக ! " என்று கூறி ,

" நீங்கள் ஜெயம்பெற்றீர்கள் சுவர்க்கத்தில் நுழையுங்கள் சதாகாலமும் இங்குத் தரிபட்டுச் சுகித்திருங்கள் அப்போது சுவனத்து சிறுவர்கள் எதிர்கொண்டு வந்து ஸலாம் சொல்லி நன்மாராயம் கூறுவார்கள்.

اِلَّا قِيْلًا سَلٰمًا سَلٰمًا
ஆயினும், ஸலாம்! ஸலாம்! (சாந்தியும், சமாதானமும்) என்ற சப்தத்தையே செவியுறுவார்கள்.
(அல்குர்ஆன்: 56:26)

لَّا يَسۡمَعُوۡنَ فِيۡهَا لَـغۡوًا اِلَّا سَلٰمًا‌ ؕ وَلَهُمۡ رِزۡقُهُمۡ فِيۡهَا بُكۡرَةً وَّعَشِيًّا

(அவற்றில்) ஸலாம் என்பதைத் தவிர (ஸலாம் என்ற முகமனைத் தவிர) வீணான வார்த்தைகளைச் செவியுறார். அங்கு அவர்களுக்குக் காலையிலும் மாலையிலும் மிக்க மேலான உணவு அளிக்கப்படும். (அல்குர்ஆன் : 19:62)

அச்சிறுவர்கள் சுவனவாசிகளை அழைத்துக் கொண்டு , சுவனத்து அலங்காரத்தையும் , அற்புதத்தையும் ஒவ்வொன்றின் தனிதனிச் சிறப்புகளையும் விவரித்து விளக்கிக் காட்டுவார்கள் .
பின்பு ஒவ்வொருவருக்கும் நியமிக்கப் பட்டிருக்கும் ஹூருல் ஈன்களிடம் அந்தச் சிறுவர்கள் போய் உங்களுக்குரியவர் இன்னார் வந்து விட்டார் என்று தெரியப்படுத்த , அவர்கள் ஓடோடி வருவார்கள் . பின் சுவனத்து தலை வாசலில் வைத்து அவளுக்குரிய சுவனவாசியை சந்திப்பார்கள்.
பின் ஹூருல் ஈன்கள் அவர்களை அழைத்துக் கொண்டு அவரவர் மாளிகையில் நுழைவார்கள் . அந்த மாளிகையில் தயாராக இருக்கும் தங்கத்திலான, வெள்ளியிலான சாமான்களையும் , உணவு வகைகளையும், அதன் ஆடம்பர அழகையும் கண் குளிரக் கண்டு எல்லா புகழும் அல்லாஹுக்கே ! என்று சொல்லி அல்லாஹ்வை புகழ்வார்கள்.
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களும் அவர்களுடைய உம்மத்துக்களாகிய நாமும் நமக்குரிய சுவனத்தில் தரிபட்டு இருப்போம்.
சுவனவாசிகள் மொத்தம் நூற்றி இருபது வகுப்புகளாக இருப்பார்கள். அந்த வகுப்பில் எண்பது வகுப்பினர்கள் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் வகுப்பினராகவும் , மீதி நாற்பது வகுப்பினர் மற்ற நபிமார்களின் உம்மத்துகளாக இருப்பார்கள்.
நல்லடியார்களுக்கு பரிசளிக்கப்படும் சுவனத்தின் அந்தஸ்தை எவருமே கற்பனை செய்ய முடியாதளவிற்கு மிகப் பிரமாண்டமாக இருக்கும் என்று அல்லாஹ் கூறுகின்றான்.
அவர்கள் செய்த நற்செயல்களுக்குக் கூலியாக மறைத்து வைக்கப்பட்டுள்ள கண் குளிர்ச்சியை (மறுமையின் பேரின்பத்தை) எந்த ஒரு ஆன்மாவும் அறிந்து கொள்ள முடியாது.
அல் குர்ஆன். (32 : 17)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
“நான் என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றிராத இன்பங்களை (சொர்க்கத்தில்) தயார் படுத்தி வைத்துள்ளேன்” என்று கூறினான்.
(சொர்க்கத்தின் இன்பங்கள் குறித்து) உங்களுக்கு அல்லாஹ் அறிவித்திருப்பது சொற்பமே! என்று கூறி நபி(ஸல்) அவர்கள் (32:17) குர்ஆன் வசனத்தை ஓதினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி). நூல்: முஸ்லிம். 5438, 5439. 5440.
ர.ரா
குறிப்பு : சுவனப்பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது .

" ஜஹன்னம் " என்னும் நரகம் 01

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 89)



இன்று செவ்வாய்க்கிழமை . இது மாதிரியான ஒரு செவ்வாய்க்கிழமை அன்றுதான் நரகம் படைக்கப்பட்டது. அது வேதனைகள் அரசாட்சி செய்யும் கொடூரக் கோட்டை !

அக்கினிக்கென்று ஓர் உலகம் ஒன்று இருக்குமானால் அதுதான் நரகம் .அதன் தரை ஈயத்தினாலும் , கடினமான மதில் சுவர்கள் கந்தகத்தினாலும் , அதன் மேல் கூரை செம்பினாலும் , வாசற் கதவுகள் இரும்பினாலும் உண்டாக்கப்பட்டிருக்கும்.

அத்தனையிலும் நெருப்பு , சூடு, சூடு ,

மதில் சுவரின் கனம் நாற்பது வருஷப் பிரயாணத்தூரமுள்ளது. நரகம் முழுவதும் கரிய இருள் சூழ்ந்து கவிழ்ந்து மூடிக் கொண்டிருக்கும் . அதன் ஆழம் ஒரு பாறைக் கல்லை மேலிருந்து போட்டால் , எழுபது வருஷம் வரையும் அந்தக் கல் தரையில் விழுந்து தரிப்படாமல் போய்க் கொண்டே இருக்கும்.

கற்பனை செய்ய முடிகிறதா ?

நரகம் ஒன்றின் மேல் ஒன்றாக ஏழு தட்டுகளை உடையது. அந்த ஏழு தட்டுகளைத்தான் ஏழு நரகம் என்பார்கள்

لَهَا سَبْعَةُ اَبْوَابٍ لِكُلِّ بَابٍ مِّنْهُمْ جُزْءٌ مَّقْسُوْمٌ

அந்நரகத்திற்கு ஏழு வாசல்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாசலிலும் (செல்லக்கூடிய வகையில்) அவர்கள் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு விடுவார்கள்.

(அல்குர்ஆன்: 15:44)

ஏழு நரகத்திற்கும் தனித்தனி பெயர்கள் உண்டு .பொதுவாக நரகத்தை ஜஹன்னம் என்றே குறிப்பிட்டாலும்

முதல் தட்டு நரகத்திற்கு பெயர்தான் "ஜஹன்னம் "

இரண்டாவது தட்டு நரகத்திற்கு "லலா "

மூன்றாவது தட்டு நரகத்திற்கு "ஸகர் "

நான்காவது தட்டு நரகத்திற்கு "ஹுத்தமா "

ஐந்தாவது தட்டு நரகத்திற்கு " ஜஹீம் "

ஆறாவது தட்டு நரகத்திற்கு " ஸயீறு "

ஏழாவது தட்டு நரகத்திற்கு " ஹாவியா "

இந்த ஏழு தட்டில் சிறியதுதான் முதல் தட்டான ஜஹன்னம் . இந்த சிறிய தட்டில் ஏழு வானங்களையும், ஏழு பூமிகளையும் தூக்கி வைத்தால் , அகன்ற சமுத்திரத்து நடுவில் ஒரு மோதிரம் வைத்தாற் போலிருக்கும். அந்த தட்டிலிருந்து ஒவ்வொரு தட்டும் ஒன்றுக்கொன்று பெரியதாக இருக்கும்.

وَمَاۤ اَدْرٰىكَ مَا هِيَهْ

அந்த "ஹாவியா " இன்னதென்று (நபியே!) நீங்கள் அறிவீர்களா?

(அல்குர்ஆன்: 101:10)

نَارٌ حَامِيَةٌ

(அதுதான்) கனிந்து கொண்டிருக்கும் (நரக) நெருப்பாகும்.

(அல்குர்ஆன்: 101:11)

இன்னும் சொல்ல பயமாக இருக்கிறது !

**Rahmath Rajakumaran**

31. இவருக்கு (அலீ(ரலி)க்கு) உதவுவதற்காகப் போய்க் கொண்டிருந்தேன். அப்போது அபூ பக்ரா(ரலி) என்னைச் சந்தித்து 'எங்கே செல்கிறீர்?' எனக் கேட்டார். நான் இவருக்கு உதவப் போகிறேன் என்றேன். அதற்கவர் 'நீர் திரும்பிச் செல்லும்; ஏனெனில், 'இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் சண்டையிட்டால் அதில் கொன்றவர், கொல்லப்பட்டவர் இருவருமே நரகத்திற்குத்தான் செல்வார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' அப்போது, 'இறைத்தூதர் அவர்களே! இவரோ கொலை செய்தவர்; (நரகத்திற்குச் செல்வது சரி) கொல்லப்பட்டவரின் நிலை என்ன? (அவர் ஏன் நரகம் செல்ல வேண்டும்?) என்று கேட்டதற்கு, 'அவர் அவரைக் கொல்ல வேண்டுமென்று பேராசை கொண்டிருந்தார்' என்று கூறினார்கள்' என கூறினார்' என அஹ்னஃப் இப்னு கைஸ் அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 2. ஈமான் எனும் இறைநம்பிக்கை

நரகத்து நெருப்பு மலக்குகள் 03

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 91)




நரகவாளிகளை வேதனை செய்யக் கணக்கற்ற மலக்குமார்கள் நெருப்பில் அங்கிருப்பார்கள் . சொல்லப்போனால் நெருப்புக்குள்ளே இருப்பார்கள் பார்க்க கணகடூரமாக விகாரமாக இருப்பார்கள் அவர்களுக்கு "ஜபானியா" என்று பெயர்.
அவர்கள் கைகளால் வேலை செய்வது போலக் கால்களாலும் வேலை செய்வார்கள். ஜபானியா மலக்குகள் தங்கள் கைகளினால் நரகவாளி இருபதினாயிரம் பேர்களையும் தங்கள் கால்களினால் நரகவாளி இருபதினாயிரம் பேர்களையும் பிடித்து சுழற்றி எறியும் திராணியுள்ளவர்கள்.

ஜபானியா மலக்குகளின் கண்கள் மின்னலைப் போலவும், பற்கள் காளை மாட்டுக் கொம்பை போலவும், உதடுகள் கால் வரை தொங்கியும் , அக்கினி ஜுவாலை எரியும் வாயையும் , ஒன்றுக்கொன்று ஒரு வருஷ பிரயாண தூரமுள்ள புஜங்கனையும் உடையவர்கள்.
ஜபானியா மலக்குகளின் நெஞ்சில் அணுவளவும் ஈனம் , இரக்கம் இராது.

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا قُوْۤا اَنْفُسَكُمْ وَاَهْلِيْكُمْ نَارًا وَّقُوْدُهَا النَّاسُ وَالْحِجَارَةُ عَلَيْهَا مَلٰٓٮِٕكَةٌ غِلَاظٌ شِدَادٌ لَّا يَعْصُوْنَ اللّٰهَ مَاۤ اَمَرَهُمْ وَيَفْعَلُوْنَ مَا يُؤْمَرُوْنَ
நம்பிக்கையாளர்களே! நீங்கள் உங்களையும், உங்கள் குடும்பத்தினரையும் நரக நெருப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள். அதனுடைய எரிகட்டை, மனிதர்களும் கற்களுமாகும். அதில் கடின சித்தமுடைய பலசாலிகளான மலக்குகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனர். அல்லாஹ் அவர்களுக்கு ஏவியதில் ஒரு சிறிதும் மாறுசெய்ய மாட்டார்கள். அவர்கள் (வேதனை செய்யுமாறு) தங்களுக்கிடப்பட்ட கட்டளைகளையே செய்து வருவார்கள்..
(அல்குர்ஆன்: 66:6)

அவர்களின் எண்ணிக்கையை அல்லாஹு தஆலாவே அறிவான்.
அவர்களுக்கு 18 தலைவர்கள் உண்டு. அந்த தலைவர்களுக்கும், மற்ற ஜபானியாக்களுக்கும் அதிபதி மலக்கு மாலிக் (அலை) ஆவார்கள் .

ஜபானியா மலக்குகளின் இரு கைகளிலும் இரண்டு தடி இருக்கும். அதனால் அடிபட்ட நரகவாளி எழுபதினாயிரம் வருஷப் பிரயாணத் தூரம் தரையிற் பதிந்து போவான்.
இன்னும் ஜபானியாக்களில் "அத்யாபீல் " என்ற மலக்கு ஒருவர் உண்டு. அவர் ஐநூறு வருஷப் பிராயண தூர உயரமுள்ளவர் .அவருக்கு ஏழாயிரம் தலைகள் இருக்கும். தலை ஒன்றிற்கு ஏழாயிரம் முகம் , முகம் ஒன்றிற்கு ஏழாயிரம் வாய்களும் , வாய் ஒன்றிற்கு ஏழாயிரம் பற்களும் ,ஒவ்வொரு பற்களும் ஒவ்வொரு மலை போல இருக்கும் .அப் பற்கள் ஒன்றோடொன்று அடிபட்டு எழும் சப்தம் எழுவான் , படுவான் வரையும் கேட்கும் .
இன்னும் அவருக்கு ஏழாயிரம் கைகள் இருக்கும். கை ஒன்றிற்கு ஏழாயிரம் விரல்கள் இருக்கும் .
விரல் ஒன்றிற்கு எண்பது வருஷப் பிராயாணத்தூர நீளமுள்ள ஏழாயிரம் பாம்புகள் இருக்கும் .
அவர் வலது கையில் அக்கினித் தடி ஒன்றைப் பிடித்திருப்பார். அதன் தலைப்பிலும் ஏழாயிரம் பாம்புகள் இருக்கும் .
ஏழு வானத்தில் உள்ளவர்களும் ஏழு பூமியில் உள்ளவர்களும் ஒன்று கூடி நகர்த்தினாலும் அந்த இரும்புத்தடியை அசைக்க முடியாது.

وَلَهُمْ مَّقَامِعُ مِنْ حَدِيْدٍ
அவர்களுக்காக இரும்புச் சம்மட்டிகளுண்டு. (அதனைக் கொண்டு அவர்களை அடிக்கப்படும்.)
(அல்குர்ஆன்: 22:21)

ஜபானியா ஒவ்வொருவரிடமும் , பத்து லட்சம் ஓநாய்களும் , ஒவ்வொரு ஓநாய்களுக்குப் பத்து லட்சம் நாய்களும் , நாய் ஒன்றிற்கு பத்து லட்சம் சிங்கங்களும் இருக்கும்.
நரகத்தில் நீளமுள்ள பாம்புகள் , தேள்கள், திரளாய் மலிந்திருக்கும். அங்கு தடிகள் , சங்கிலிகள் இன்னுமுள்ள கருவிகள் எல்லாம் நெருப்பினால் உண்டாகி இருக்கும் . எவனெவன் எதைக் கொண்டு வேதனை செய்யப்படுகிறானோ அவனவனின் பெயர் அவைகளில் எழுதப்பட்டிருக்கும் .
(பாவம் செய்த) "ஜின்களைக் கொண்டும் மனிதர்களைக் கொண்டும் நிச்சயமாக நான் நரகத்தை நிரப்புவேன்" என்ற உங்கள் இறைவனின் வாக்கு நிறைவேறியே தீரும்.
(குர்ஆன் : 11:119)

நபி (ஸல்) அவர்கள்: “உங்கள் (உலக) நெருப்பு, நரக நெருப்பின் எழுபது பாகங்களிலிருந்து ஒரு பாகமேயாகும்” என்று கூறினார்கள்.
உடனே, “ இறைத்தூதர் அவர்களே! இந்த உலக நெருப்பு (பாவம் செய்தவர்களை எரித்து) வேதனைப் படுத்த போதுமானதாயிற்றே!” என்று கேட்கப்பட்டது. அதற்க்கு நபி (ஸல்) அவர்கள், “(அப்படியல்ல) உலக நெருப்பை விட நரக நெருப்பு அறுபத்தொன்பது பாகங்கள் அதிகப்படுத்தப்பட்டுள்ளது.
இவற்றில் ஒவ்வொரு பாகமும் உலக நெருப்பின் வெப்பத்திற்கு சமமானதாகும்” என்றார்கள்.
அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலி)
நூல்; புஹாரி. 3265.

அல்லாஹ்வின் தூதர் அவர்களிடம் நபித்தோழர்கள் கேட்டபடி,

"இவ்வுலகில் உள்ள நெருப்பே மனிதனை சுட்டுப்பொசுக்க போதுமானதாகும், இப்படி இருக்க அறுபத்தொன்பது மடங்கு அதிகமுள்ள கொடும் நெருப்பின் தேவை என்ன?
உலகில் வாழும் மனிதர்களின் சராசரி உயரம் 5 அடி, எடை 80 கிலோ இருக்கிறார்கள். இந்தளவுள்ள மனிதர்களை நெருப்பில் இட்டு வேதனை செய்ய உலக நெருப்பு போதும். ஆனால் மறுமையில் எழுப்பப்பட்டு இறுதித் தீர்ப்புக்குப் பின் நரகம் செல்லும் நரகவாசிகளின் உடம்பு, பூமியில் இருந்தது போல் சராசரி ஐந்தடி உயரம் எண்பது கிலோ எடையில் இருக்காது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (நரகத்தில்) இறை மறுப்பாளனின் “கடவாய்ப்பல்’ அல்லது “கோரைப்பல்’ உஹுத் மலையைப்
போன்றிருக்கும்.
அவனது தோலின் பருமன் மூன்று நாள் நடைப் பயணத் தொலைவுடையதாக இருக்கும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்: முஸ்லிம். 5479.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நரகத்தில் இறை மறுப்பாளனின் இரு தோள்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாக வாகனத்தில் பயணிப்பவர் மூன்று நாட்கள் கடக்கும் தூரமாகும்.
இதை அபூஹுரைரரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம். 5480.

நரகவாசிகளின் உடல், கொடும் வெப்ப வேதனையை நன்கு ருசிப்பதற்க்காக அல்லாஹ்வால் பிரமாண்ட மாமிச மலையாக மாற்றப்பட்டே நரகில் தள்ளப்படுவார்கள். நரகில் உள்ள மாமிசமலை மனிதர்களுக்கு பூமியில் உள்ள வெப்பம் போதுமானதாக இருக்க முடியாது. காரணம் இவர்களின் தோலின் கனமே மூன்று நாள் பயண தொலைவு இருப்பதால் பூமியில் இருக்கும் நெருப்பை விட எழுபது மடங்கு கடும் சூடு கொண்ட நெருப்பு தேவையாக உள்ளது.
மேலும் சொர்க்க, நரகவாசிகளுக்கு மீண்டும் ஒரு மரணம் இல்லை. ஆகவே நரகவாசிகள் கொடும் நெருப்பால் சுடப்பட்டு பஸ்பமாக ஆகிவிடக் கூடாது என்பதற்காகவே மிக கனமான தோல் போர்த்தப்பட்டு, இறப்பில்லா நீடித்த வேதனை அனுபவித்துக்கொண்டே இருப்பார்கள். அவர்களின் தோல்கள் கருகி வலியுணர்ச்சி குறையும்போது மீண்டும் புதுத் தோல் மாற்றப்பட்டு வலி வேதனையை தொடர்ந்து உணர்ந்து கதறுவார்கள்.
மனிதன் தோலில்தான் வலி உணர்வு நரம்புகள் அமைந்துள்ளது. தோலில் உள்ள இந்த நரம்புகள் எரிந்து விட்டாலோ அல்லது அழுகி விட்டாலோ அவர்களால் வலியை உணர முடியாது
"எவர்கள் நம் சான்றுகளை மறுக்கின்றார்களோ அவர்களை நிச்சயம் நாம் நரகில் வீசி எறிவோம்! அவர்களுடைய உடலின் தோல்கள் கருகிவிடும் போதெல்லாம் வேறு தோல்களை அவர்களுக்கு மாற்றிக்கொண்டே இருப்போம்; வேதனையை அவர்கள் நன்கு சுவைத்துக்கொண்டேயிருப்பதற்காக! திண்ணமாக அல்லாஹ் மிகையான ஆற்றல் உள்ளவனாகவும் நன்கு அறிந்தவனுமாகவும் இருக்கின்றான்.
–அல் குர்ஆன். 4:56.
ர.ரா
**Rahmath Rajakumaran**
சொர்க்கத்திலும், நரகத்திலும் எல்லா மனிதர்களும் ஜீவராசிகளும் எல்லாம் மிகப் பெரிய அளவில் இருக்கும் .
சுவனவாசிகள் எல்லோருமே நபி ஆதம் (அலை) அவர்களுடைய அறுபது முழம் உயரமும் , ஏழு முழம் கனமுமாக இருப்பார்கள் .
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (நரகத்தில்) இறை மறுப்பாளனின் “கடவாய்ப்பல்’ அல்லது “கோரைப்பல்’ உஹுத் மலையைப்
போன்றிருக்கும்.
அவனது தோலின் பருமன் மூன்று நாள் நடைப் பயணத் தொலைவுடையதாக இருக்கும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்: முஸ்லிம். 5479.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நரகத்தில் இறை மறுப்பாளனின் இரு தோள்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாக வாகனத்தில் பயணிப்பவர் மூன்று நாட்கள் கடக்கும் தூரமாகும்.
இதை அபூஹுரைரரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம். 5480.
கூட்டி கழித்துப் பார்த்தால் கணக்கு சரியாகத்தான் வருது

நரகமும் , ஜின்களும் 04 .

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 92)



ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் , நரகமும் நெருப்பினால் உண்டாக்கப் பட்டிருப்பதால் ஜின்களை நரகத்தின் நெருப்பு தீண்டாதா ? தீண்டினாலும் ஜின்களுக்கு வேதனை இருக்காதா ? என்ற கேள்விகளை நண்பர் ஒருவர் கேட்டார்

அப்படிப் பார்த்தால் மனிதனை மண்ணில் படைக்கப்பட்டதால் அவன் இறந்த உடம்பை மண் அவனைத் தீண்டாமலா இருந்தது மண்ணோடு மண்ணாக மக்க வைக்கவில்லையா ?
ஒளிவீச்சி, நெருப்பு ,கதிர் வீச்சி, அலைகள் இவையெல்லாம் சூரியனின் வெள்ளொளியில் கலந்தே இருக்கிறது இது பற்றிய விபரம் மலக்குமார்கள் தொடரில் சொல்லி இருக்கிறேன் இருந்தாலும் இப்போதும் சொல்கிறேன் .

சூரியனின் ஒளியில் நாம் பார்க்கக் கூடிய வைலட் v , இன்டிகோ I , புளு B , கிரீன் G , எல்லோ Y , ஆரஞ்சு O , ரெட் R இவைகள் நாம் பார்க்கும் 0.00004 cm இருந்து 0.00007 cm வரை அளவீடுக்குள் இருப்பதால் நம்மால் பார்க்க முடிகிறது.
வைலட் நிறத்திற்கு மேலே அல்ட்ரா வைவட் , எக்ஸ்ரே கதிர், காமா கதிர், காஸ்மிக் கதிர் , இன்னும் அறியப்படாத கதிர்களும் உள்ளன

அதைப்போலவே ரெட் நிறத்திற்கு கீழே இன்ஃபரா ரெட் , மின் பொறி , ராடார் கதிர்கள், டெலிவிஷன் , குட்டையான ரேடியோ அலை , ரேடியோ அலை , நீளமான ரேடியோ அலை , இன்னும் அறியப்படாத கதிர் . . . . . . இவைகளில் ஏதோ ஒரு நெருப்புக்கதிரில் ஜின்கள் படைக்கப்பட்டிருக்கலாம் .
" ஜின்களையும் மனிதர்களையும் கொண்டு நிச்சயமாக நரகத்தை நிரப்புவேன்"
குர்ஆன் (11 : 119 )
"ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம் "
குர்ஆன் (15 : 27 )
நரகின் எரிபொருளாக குர்ஆனில் இன்னொரு இடத்தில்
" மனிதர்களும் கற்களும் இரையாகின்ற நரக நெருப்புக்குப் பயந்து கொள்ளுங்கள் "
குர்ஆன் (2 : 24 )
இந்த வசனத்தில் குறிப்பிடப்படும் கற்கள் என்பதை கந்தகக் கற்கள் என்று அக்கால விஞ்ஞானத்தின்படி சொல்லப்பட்டிருந்தாலும் , கந்தக கற்கள் சொற்ப காலமே வெப்பத்தை தரக்கூடியது . ஆனால் , அணுக்கதிரை தொடர்ந்து வீசச் செய்யும் யூரேனிய கற்கள் யுக யுகங்களாக நெருப்பைக் கொட்டக்கூடியது அட, அதன் சாம்பலிருந்து வெளிப்படும் கதிர் வீச்சே லட்சக்கணக்கான வருடங்களுக்கு இருந்து கொண்டே இருக்கும் .
நரக வாசிகள் என்றென்றும் யுக யுகங்களாக அதில் இருப்பதாக இறைவன் குறிப்பிடுகிறான்
சில நரகங்களின் நெருப்பு விநோத தன்மையைக் கொண்டது

" நபியே! ஹுதமா என்றால் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? அதுதான் அல்லாஹ் உடைய கட்டளையால் எரிக்கப்பட்ட நெருப்பு
அது உடல்களில் பட்டவுடன் உள்ளங்களில் பாய்ந்து விடும் நெருப்பு
(திருக்குர்ஆன் 104 : 5_9)
எக்ஸ்-ரே கதிர்வீச்சி கருவிலிருந்து எவ்வித வெளிச்சமும் வெளிவரவில்லை ஆனால் உடலில் நுழைந்து எலும்பை படம் பிடிக்கவில்லையா ? எக்ஸ்-ரே யும் ஓர் அணு கதிர்தான் .
அநேகமாக இந்த நரகத்தின் நெருப்பு அணுகதிர் வீச்சியின் நெருப்பாக இருக்கலாம். காரணம் அணுக்கதிர் வீச்சு உடலில் பட்டால் புற்று நோயோ இரத்தப் புற்று நோய் வரலாம் . இக்கதிர் மேலே தாக்கியதும் இரத்த சிவப்பணுக்களை தின்று விடும் .
யுரேனியத்தின் கதிர் வீச்சு இழக்க 704 மில்லியன் வருடங்கள் ஆகும்
எனவே ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருந்தாலும் , யுரேனியம் போன்ற அணுசக்தி வெளிப்படுத்தும் கதிர் வீச்சு தன்மை கொண்ட நெருப்பு நரகத்தில் இருக்கலாம் . எனவே ஜின்களுக்கும் கொடிய வேதனை தரக்கூடியே நெருப்பு அவைகள் படைக்கப்பட்ட நெருப்பைக் காட்டிலும் கொடிய நெருப்பான அணுக்கதிர்வீச்சி நெருப்பு நரகத்தில் உண்டு .
ர. ரா

நரகவாசிகளின் உடுப்பு 05

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 93)

وَتَرَى الْمُجْرِمِيْنَ يَوْمَٮِٕذٍ مُّقَرَّنِيْنَ فِى الْاَصْفَادِ
அன்றி, குற்றவாளிகள் அனைவரும், அந்நாளில் விலங்கிடப்பட்டிருப்பதையும் நீங்கள் காண்பீர்கள்.
(அல்குர்ஆன்: 14:49)

سَرَابِيْلُهُمْ مِّنْ قَطِرَانٍ وَّتَغْشٰى وُجُوْهَهُمُ النَّارُۙ
அவர்களுடைய சட்டைகள் தாரால் செய்யப்பட்டிருக்கும். அவர்களுடைய முகத்தை நெருப்பு பொசுக்கும்.
(அல்குர்ஆன்: 14:50)

பெட்ரோலியத்தின் பொருட்களை பிரித்தெடுத்த பின் மிஞ்சி இருப்பதுதான் " தார் " இது பற்றிய குறிப்பு கி.பி 620 -ல் இறக்கப்பட்ட குர்ஆனில் இருந்ததை ஒட்டி பெட்ரோலியம் எப்போது எப்படி உலகிற்கு அறிமுகமான சங்கதியை தேடியதில் ....
இந்த பெட்ரோலிய எண்ணெய் வளங்களை உலகில் முதன் முதலில் கண்டறிந்தவர்கள் ஈராக்கியர்கள் என்னும் பண்டைய பாபிலோனியர்கள் ஆவர்.
பண்டைய பாபிலோனியர்கள் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தங்களது மண்ணில் வானுயர்ந்த கோபுரங்களை கட்டும்போது, கட்டிடத்தின் வலிமையை கருத்தில் கொண்டு கட்டிடத்தின் அஸ்திவாரச்சுவரை **(Foundation Wall)** நிலத்தில் சற்று ஆழத்திலிருந்து கட்டி எழுப்பினார்கள். அப்படி ஒரு சமயம் ஈராக்கிலுள்ள **Andericca (Near Babylon Province)** என்ற இடத்தில் ஒரு கட்டிடத்தின்

கட்டுமானதிற்க்காக சற்று ஆழமாக குழி தோண்டியபோது கிடைத்ததுதான் இந்த கச்சா எண்ணெய் **(Crude oil).**
கச்சா எண்ணெய் சேர்த்து கட்டப்பட்ட சுவர்கள் கரையான்கள், எறும்புகள் மற்றும் பூச்சிகளின் தாக்குதல்களில் இருந்து தப்பிக்கொள்வதை தற்செயலாக ஒரு நாள் கண்டுபிடித்த பாபிலோனியர்கள் அதன் பின்னர் கச்சா எண்ணெய்யை வெகுநேரம் கொதிக்கவைத்து வற்றச்செய்து கிடைத்த கூழ்மத்தை (நிலக்கீல் அல்லது தார் **Asphalt**) நிலத்திற்குள் மறையும் கட்டிடத்தின் அஸ்திவாரச் சுவர்களின் மீது சாயமாக (paint) பூசினார்கள்.

அதோடு கச்சா எண்ணையின் எரியும் திறனை கருத்தில் கொண்டு வெளிச்சத்தை உண்டாக்க தீபந்ததிற்க்குரிய எண்ணெய்யாகவும் பயன்படுத்தியிருக்கிறார்கள். இதனை ஹீரோட்டஸ் **(Herodus** - கி.மு.484) மற்றும் டியோடோரஸ் **(Diodorus** - கி.மு. 60) என்ற இரு புகழ்பெற்ற கிரேக்க வரலாற்று ஆசிரியர்கள் தங்களது ஆய்வுக் கட்டுரைகளில் ஆதாரத்துடன் தெரிவிக்கிறார்கள்.
குர்ஆன் இறங்கும் காலத்தில் தாரின் பயன்பாட்டை அக் கால மக்கள் நன்கு அறிந்தே இருந்தனர் .
மேற்கண்ட வசனத்தில் "தார்" என்பதைக் குறிக்க மூலத்தில் ' கத்திரான்' என்னும் சொல் இடம்பெற்றுள்ளது.
கத்தாதா (ரஹ்) அவர்கள் , " அது எளிதில் தீ பற்றிக்கொள்ளக் கூடிய பொருளாகும்" என்று கூறியுள்ளார் .

تَلْفَحُ وُجُوْهَهُمُ النَّارُ وَهُمْ فِيْهَا كٰلِحُوْنَ
அவர்களுடைய முகங்களை (நரகத்தின்) நெருப்புப் பொசுக்கும். அவர்களுடைய (உதடுகளெல்லாம் வெந்து சுருண்டு) முகம் விகாரமாக இருக்கும்.
(அல்குர்ஆன்: 23:104)

தார் சட்டையில் பற்றிய தீ சட்டென முகத்தில் பற்றிக் கொள்ளும் .
ஒப்பாரி வைக்கும் பெண், தான் இறப்பதற்கு முன் பாவமன்னிப்புக் கோரி அதிலிருந்து மீளாவிட்டால், மறுமை நாளில் தாரால் ஆன நீளங்கியும் , சொறி சிரங்குச் சட்டையும் அணிந்தவளாக நிறுத்தப்படுவாள் .
**முஸ்லிம் – முஸ்னது**

لَهُمْ مِّنْ جَهَنَّمَ مِهَادٌ وَّمِنْ فَوْقِهِمْ غَوَاشٍ وَكَذٰلِكَ نَجْزِى الظّٰلِمِيْنَ
நரகத்தில் அவர்களுக்கு (நெருப்பாலான) விரிப்புகளும் உண்டு. அவர்கள் மேல் போர்த்திக்கொள்வதற்கும் (நெருப்பாலான) போர்வைகள் உண்டு. அநியாயக்காரர்களை இவ்வாறே நாம் தண்டிப்போம்.
(அல்குர்ஆன்: 7:41)

'விரிப்புகள்" என்பதை குறிக்க "மிஹாத் " என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.
இது தரையில் விரிக்கப்படும் விரிப்பை குறிக்கும் .
இதில் " போர்வைகள் " என்பதைக் குறிக்க " ஃகவாஷ் " எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது .இது மேனியில் போர்த்தப்படும் உரத்த துணிகளைக் குறிக்கிறது
ர.ரா

நரகவாசிகளின் உணவு 06

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 94)



நரகவாளி ஒவ்வொருவனும் மக்காவுக்கும் , மதீனாவுக்கும் இடையிலுள்ள தூரமான இடம் , அவன் உட்கார்ந்திருக்க போதாத அளவாய் அவன் பெருத்துப் போவான். இந்த பெருத்த உடலுக்கு எந்நேரமும் பசி அடங்காதிருப்பான் .
தேகம் பருத்து , வாயிலுள்ள பற்கள் மலைபோலாய் ஆனால் தொண்டைத் துவாரம் மட்டும் சிறியதாக இருக்கும். இதனால் அள்ளி அள்ளி எதைச் தின்றாலும் அது தொண்டையை விட்டு இறங்காது .

يَّتَجَرَّعُهٗ وَلَا يَكَادُ يُسِيْـغُهٗ وَيَاْتِيْهِ الْمَوْتُ مِنْ كُلِّ مَكَانٍ وَّمَا هُوَ بِمَيِّتٍ‌ؕ وَمِنْ وَّرَآٮِٕهٖ عَذَابٌ غَلِيْظٌ
"அதனை அவர்கள் (மிகக் கஷ்டத்தோடு) சிறுகச் சிறுக விழுங்குவார்கள். எனினும், அது அவர்களுடைய தொண்டைகளில் இறங்காது; (விக்கிக்கொள்ளும்.) ஒவ்வொரு திசையிலிருந்தும் மரணமே அவர்களை நோக்கி வந்துகொண்டிருக்கும்; எனினும், அவர்கள் இறந்துவிட மாட்டார்கள். இதற்குப் பின் கடினமான வேதனையையும் அவர்கள் சந்திக்க நேரிடும் ". (அல்குர்ஆன்: 14:17)

நரகவாளி உணவு லறீகு என்னும் மரம். இது நரகத்தின் மிகப்பெரிய மரமாகும் .
اِنَّهَا شَجَرَةٌ تَخْرُجُ فِىْۤ اَصْلِ الْجَحِيْمِۙ
மெய்யாகவே அது நரகத்தின் அடித்தளத்திலிருந்து வெளிப்பட்ட ஒரு மரமாகும்.
(அல்குர்ஆன் : 37:64)

طَلْعُهَا كَاَنَّهٗ رُءُوْسُ الشَّيٰطِيْنِ
அதன் கிளைகள் ஷைத்தானின் தலைகளைப் போல் இருக்கும்.
(அல்குர்ஆன்: 37:65)

فَاِنَّهُمْ لَاٰكِلُوْنَ مِنْهَا فَمٰلِــــُٔوْنَ مِنْهَا الْبُطُوْنَ
நிச்சயமாக அவர்கள் (தங்கள் பசிக்கொடுமையினால்) அதனை புசிப்பார்கள்! இன்னும் அதிலிருந்தே (தங்கள்) வயிற்றை நிரப்பிக் கொண்டிருப்பார்கள்.
(அல்குர்ஆன்: 37:66)

மேலும் "ஜக்கூம் " என்னும் (கள்ளி) மரத்திலிருந்தே நீங்கள் புசிப்பீர்கள். அதைக் கொண்டே வயிறுகளை நிரப்புவீர்கள் குர்ஆன் (56: 52,53)
மேலும் குடிப்பதற்கு கொதிக்கும் நீரும் , அவர்களின் தேகத்தில் இருந்து வடியும் ஊனீரும் கொடுக்கப்படும்

مِّنْ وَّرَآٮِٕهٖ جَهَنَّمُ وَيُسْقٰى مِنْ مَّآءٍ صَدِيْدٍۙ
அவர்களுக்கு பின்புறம் நரகம்தான் இருக்கிறது. (அங்குதான் அவர்கள் செல்ல வேண்டும். நரகவாசிகளின் தேகத்திலிருந்து வடியும்) சீழ்தான் அவர்களுக்கு (நீராக)ப் புகட்டப்படும்.
(அல்குர்ஆன்: 14:16)

புலால் உண்ணும் தாவரங்களை நீங்கள் TV யில் பார்த்திருப்பீர்கள் . அழகான பூ விரிந்து மலர்ந்திருக்கும் வண்டோ , பூச்சியோ பூத்தேனை குடிக்க பூவுகக்குள்ளே இறங்கியதும் ,பட்டென்று அதன் இதழ்கள் மூடி பூச்சியை ஸ்வாஹே பண்ணுவது மாதிரி , நரகத்திலும் ஒரு மரம் இருக்கும் நரகவாளிகள் அந்த மரத்தை தின்பதற்கு அருகில் போனது , அதன் கிளைகள் சுற்றி வளைத்து நரகவாளியின் உடம்பின் தசைகளை அது கடித்து பிடுங்கி தின்னும் .
மிகுந்த தாகத்தில் கொதிக்கும் ஊனீ நீரை குடிக்கும் போது , அதன் வெப்பத்தால் முகத்தின் சதைகள் வெந்து , கழன்று அந்த கொதிக்கும் நீரிலே விழும். அப்படி வெந்த சதைகள் கழன்று விழுந்த பிறகு அடுத்து சதைகள் உடனே வளர்ந்து அது அடுத்த அதாபுக்கு தயாராகி விடும் .
ர.ரா

நரகத்து கொடிய வேதனை 07

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 95)



நரகவேதனை இருவகை . ஒன்று சூடு , மற்றொன்று குளிர் . சூட்டில் கிடக்கிறவன் குளிரில் கிடக்க நாடுவான்.
குளிரில் கிடக்கிறவன் சூட்டில் கிடக்க நாடுவான். ஆனால் இரண்டுமே மிகப் பெரிய அதாபுதான் .
நரகவாளிகள் ஒவ்வொருவனும் அக்கினிப் பெட்டிக்குள் ஆயிரம் வருஷமும், அக்கினிக் கிணற்றுக்குள் ஆயிரம் வருஷமும் , அறக்காய்ந்த ஊனீரில் ஆயிரம் வருஷமும், பந்தம் எரிவது போல எரிந்து ஆயிரம் வருஷமாக வேதனைப்படுவான்.
அப்போது ஒவ்வொருவதும் கண்ணீர் விட்டு ஆயிரம் வருஷமும் , அது வற்றி இரத்தம் விட்டு ஆயிரம் வருஷமும் , அதுவும் வற்றி, சீழ் விட்டு ஆயிரம் வருஷமும் சப்தமிட்டு அழுது ....
" மாலிக்கே !

وَنَادَوْا يٰمٰلِكُ لِيَقْضِ عَلَيْنَا رَبُّكَ قَالَ اِنَّكُمْ مّٰكِثُوْنَ
(இந்நிலையில் அவர்கள் நரகத்தின் அதிபதியை நோக்கி) "மாலிக்கே! உங்களது இறைவன் எங்களுடைய காரியத்தை முடித்து விடவும். (மரணத்தின் மூலமாயினும் எங்களுக்கு விடுதலை கிடைக்கட்டும்)" என்று சப்தமிடுவார்கள். அதற்கவர் "(முடியாது!) நிச்சயமாக நீங்கள் இதே நிலைமையில் (வேதனையை அனுபவித்துக் கொண்டே மரணிக்காது) இருக்க வேண்டியதுதான்" என்று கூறுவார். (அல்குர்ஆன் : 43:77)

இப்படி ஆயிரமாயிரம் வருஷம் அலறினால் மாலிக் ஒரு தரம் திரும்பிப் பார்த்து, "அட, வழி கெட்டவனே .! உன் பிரச்சனை என்ன ? "
" என் பிரச்சனையை சொல்லி, என்னை ரட்சிக்க வேண்டுமென்றும் இனி ஒருதரம் இங்கு வரும்படி நான் வைத்துக் கொள்ள மாட்டேன் அல்லது என்னை மௌத்தாக்கி விடவாது செய்ய வேண்டும் " என்று முறையிட்டு அலறுவான்

" ஒவ்வொரு திசையிலிருந்தும் மரணமே அவர்களை நோக்கி வந்து கொண்டிருக்கும்; எனினும், அவர்கள் இறந்துவிட மாட்டார்கள். இதற்குப் பின் கடினமான வேதனையையும் அவர்கள் சந்திக்க நேரிடும் " (அல்குர்ஆன் : 14:17)
الَّذِىْ يَصْلَى النَّارَ الْكُبْرٰى
(எனினும்,) அவன் (நரகத்தின்)
பெரிய நெருப்பை அடைவான். (அல்குர்ஆன்: 87:12)

ثُمَّ لَا يَمُوْتُ فِيْهَا وَلَا يَحْيٰى
பின்னர், அதில் அவன் மரணிக்கவுமாட்டான்;
(சுகமாக) வாழவும் மாட்டான்.
(குர்ஆன் 87: 13)
அதற்கு அவர்கள் , " நீங்கள் கேட்பது ஒருக்காலும் பலிக்காது , உனக்கு இங்கிருந்து மீள வகையில்லை. இப்படியே தரிப்பட்டிருப்பாய் " .

وَقَالُوْا رَبَّنَاۤ اِنَّاۤ اَطَعْنَا سَادَتَنَا وَكُبَرَآءَنَا فَاَضَلُّوْنَا السَّبِيْلَا
அன்றி "எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் எங்கள் தலைவர்களுக்கும், எங்கள் பெரியவர்களுக்கும் வழிப்பட்டோம். நாங்கள் தப்பான வழியில் செல்லும்படி அவர்கள் செய்து விட்டார்கள்.
(அல்குர்ஆன்: 33:67)

رَبَّنَاۤ اٰتِهِمْ ضِعْفَيْنِ مِنَ الْعَذَابِ وَالْعَنْهُمْ لَعْنًا كَبِيْرًا
(ஆகவே) எங்கள் இறைவனே! நீ அவர்களுக்கு இரு மடங்கு வேதனையைக் கொடுத்து, அவர்கள் மீது பெரிய சாபத்தைப் போடு" என்று கூறுவார்கள்.
( அல்குர்ஆன் :33:68)
தலைவர்கள் கவனிக்கவும் .
ர.ரா

நரகமும் , நபிகளாரின் உம்மத்தும் 08

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 96)

ஸிராத் பாலம் கடக்க முடியாத நபிகளாரின் உம்மத்துக்களில் சிலரை , ஜபானியாக்கள்
" நீங்கள் யாருடைய உம்மத்து? "
" நாங்கள் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உம்மத்து என்று சொல்ல மறந்து போய், நாங்கள் குர்ஆனை சுமந்தவர்கள் "
"ஏன் நீங்கள் உங்கள் நபியுடன் பாலத்தை கடக்கவில்லை? " என்ற கேள்விக்கும் அதே பதிலைத்தான் கூறுவார்கள்

" நாங்கள் குர்ஆனை சுமந்தவர்கள் "
(காரணம் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களை தன்னுடன் ஒப்பிட்டு நம்மைப் போல் சாதாரண மனிதர்
தானே? நாமும் நிறைய அமல்கள் செய்திருக்குமே குர்ஆனையும் ஓதியிருக்கிறோமே ! என்று நபி (ஸல்) அவங்களை கண்ணியப்படுத்தாத அதிபுத்திசாலியான மூஃமீனில் பாவிகளாக இக் கூட்டத்தார் இருக்கலாம் )
அவர்களில் ஒவ்வொருவரையும் கடுங்கோபமும் , பெருந்தேகமும் கொண்ட ஜபானியாக்கள் நரகத்திற்கு இழுத்துப் போவார்கள் .

يَوۡمَ يُسۡحَبُوۡنَ فِى النَّارِ عَلٰى وُجُوۡهِهِمۡ ذُوۡقُوۡا مَسَّ سَقَرَ
இவர்கள் நரகத்திற்கு முகங்குப்புற இழுத்துச் செல்லும் நாளில் இவர்களை நோக்கி "(உங்களை) நரக நெருப்பு பொசுக்குவதைச் சுவைத்துப் பாருங்கள்" என்று கூறப்படும். (அல்குர்ஆன்: 54:48)

மூஃமீனில் பாவியான இவர்களை நரகில் நுழைந்ததும் , நரகத்து அக்கினி மேடையில் நரகத்து அதிபர் மாலிக் (அலை) உட்கார்ந்திருந்து , வாசலில் நிற்கும் கூட்டத்தாரை பார்த்து ,
" நீங்கள் யாருடைய உம்மத்து? "
" நாங்கள் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உம்மத்து என்று சொல்லாமல் " நாங்கள் குர்ஆனை சுமந்தவர்கள் " என்று அங்கேயும் அப்படியே சொல்வார்கள்.
" அந்த குர்ஆனில் அல்லாஹ்வுக்கும் அவனது நபிக்கும் மாறு செய்யாதீர் " என்று சொல்லவில்லையா? "
" ஆம் சொல்லப்பட்டிருந்தது. எங்களுக்கு தோஷித்தனம் மேலிட்டது .அதனால் நாங்கள் தோஷிகளானோம் "
(தோஷிகள் என்றால் என்ன? தெரியவில்லை எனக்கு)
" உங்கள் கை கால்களில் விலங்கு இல்லாமல் முகங்கள் கறுக்காமல் நல்ல லக்ஷிணத்துடன் இருக்கிறீர்களே அதென்ன? "
" நாங்கள் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உம்மத்தில் பாவிகள் "
அப்போது அல்லாஹு தஆலாவிடம் இருந்து மாலிக் (அலை) அவர்களுக்கு கட்டளை வரும் . அந்த கட்டளையில்

"பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம். மஹா மகோன்ன மிக்க மகிமையுள்ள அல்லாஹு தஆலா இடத்திலிருந்து நரகத்திற்கு அதிபதியாகிய மாலிக்குக்கு அனுப்பட்ட கட்டளையானது ,
முஹம்மது நபியுடைய உம்மத்தில் பாவிகளான ஒரு கூட்டத்தார் உம்மிடத்தில் வந்திருக்கிறார்கள். அவர்கள் சில பொழுதாவது தொழுதவர்கள் . ஆகையால் அவர்களது முகங்களை நெருப்பில் சுட்டெடுக்க வேண்டாம் . தொழுவதற்கு பள்ளிவாசலுக்கு நடந்தவர்கள் ஆகையால் காலில் விலங்கு இடவேண்டாம். என்னிடம் கையேந்தி துஆ செய்தவர்கள் ஆகையால் கையிலும் விலங்கிட வேண்டாம் .

நோன்பு நோற்றவர்கள் . ஆகையால் வயிற்றில் கள்ளிச் சோற்றையும் , சீழ் பிடித்த ஊன் நீரையும் கொடுக்க வேண்டாம் . தொழுகையில் கூஜுது செய்த அவர்களை முகங்குப்புற நரகிற்கு இழுத்து வர வேண்டாம் அவர்கள் காலால் நடந்து வரட்டும் " என்று கட்டளை எழுதப்பட்டிருக்கும் .
" ஏ தோஷிகளே! நீங்கள் நரகத்திற்குள் நுழையுங்கள்"
" நாங்கள் செய்த குற்றங்களைப் பற்றிச் சற்று நேரம் நரக வாசல் இங்கிருந்து அழ வேண்டும்"
" அப்படியெல்லாம் இடங்கொடுக்க எனக்கு அதிகாரமில்லை "
உடனே அர்ஷிலிருந்து , "அவர்களை விட்டு விடும். அவர்களை ஏழு தட்டுகளில் நரகில் மேல் தட்டான ஜஹன்னத்தில் புகுத்தும் " என்று கட்டளை பிறக்கும்.
உடனே மாலிக் (அலை) அவர்கள் ஜபானியாக்களிடம் " இவர்களை இழுத்து ஜஹன்ன நரகில் பிடித்து தள்ளும் "
மூஃமீனின் பாவிகள் ஜஹன்னத்தில் நுழைந்ததும் , அங்கு நடக்கும் பயங்கரமான செயல்களைக் கண்டு வெருண்டு அலருவார்கள் .
உடனே நரகத்து அக்கினி நாக்கொன்று எல்லோரையும் சுற்றி வளைத்து இழுத்துக் கொண்டு போகும்.
ர.ரா

நரகமும் , நபிகளாரின் உம்மத்தும் 09

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 97)



அல்லாஹுு தஆலா நரகத்து அடிதட்டில் கிடக்கிற காபிர்களையும், மேல்தட்டில் இருக்கிற முஃமினான பாவிகளையும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளும்படி அங்குள்ள பெரிய பெரிய ஜன்னல்களை திறந்து போட மாலிக் (அலை) அவர்களுக்கு கட்டளை இடுவான் .
நரகம் புகுந்த காபிர்கள் எல்லோரின் முகங்கள் கறுத்து, கண்கள் நீல நிறமாய், வாயின் வழியே அக்கினிச் சங்கிலியை விட்டு பின் துவாரத்தின் வழியே எடுத்து , இடதுகையைக் கழுத்திலும் , வலது கையை மார்பிலுமாக திணித்து முதுகுப் புறம் இழுக்கச் சேர்த்து கட்டி , கைகளில் தலைபூட்டி , கூடவே ஒவ்வொரு சைத்தானையும் அவனோடு பிணைத்துக் கட்டி முகங்குப்புறப் போட்டு பலவாறாக ஜபானியாக்கள் வேதனை செய்வார்கள் .

ثُمَّ الْجَحِيْمَ صَلُّوْهُ ۙ
அவனை நரகத்தில் தள்ளுங்கள் என்றும், (அல்குர்ஆன் : 69:31)

ثُمَّ فِىْ سِلْسِلَةٍ ذَرْعُهَا سَبْعُوْنَ ذِرَاعًا فَاسْلُكُوْهُ
எழுபது முழ நீளமுள்ள சங்கிலியால் அவனைக் கட்டுங்கள்" என்றும் (கூறுவோம்).
(அல்குர்ஆன்: 69:32)

இவ் வேதனையை முஃமினான பாவிகளும் , காபிர்களும்
ஒருவரையொருவர் பார்ப்பார்கள் .
அந்தக் காபிர்கள், முஃமீனான பாவிகளைப் பார்த்து ,
" நீங்கள் துன்யாவில் அல்லாஹுுதஆலா ஒருவன் என்றும் அவனையே வணங்கிக் கொண்டு , நாங்களே சுவர்க்கத்திற்கு உரியவர்கள் என்றும் அவனுக்கு இணை துணை வைத்தவர்கள் நரகத்திற்கு உரியவர்களென்றும் நீங்கள் சொன்னீர்களே, இப்போது அல்லாஹ் ஒருவனையே வணங்கின நீங்களும் , அவனுக்கு இணை துணை வைத்து வணங்கின நாங்களும் , சமமாகத்தானே இருக்கிறோம் . நீங்கள் கொண்டிருந்த ஈமானும், உங்களுடைய இஸ்லாமும் உங்களுக்கு பலன் தரவில்லையே " என்று பரிகாசம் செய்வார்கள் . அதற்கு
" முஃமீனில் பாவியான எங்களுடைய பாவங்கள் மிகைத்து விட்டது. அதனால் நாங்கள் இப்படியானோம் . அல்லாஹுுதஆலா ஏவின பிரகாரம் நாங்கள் நடந்திருந்தால் , எங்களுக்கு இந்தக் கதி நேரிடாது. ஆனாலும்

நாங்கள் அவனுக்கு ஈமான் கொண்டவர்கள் . ஆகையால் இனி எங்களை அவன் இரக்ஷிப்பான் என்று நம்பி இருக்கிறோம் "
அவர்களது நம்பிக்கை வீண் போகாது .

நரகமும் , நபிகளாரின் உம்மத்தும் 10

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 98)
" மாலிக்கே என்னுடைய ஹபீபு முஹம்மதுடைய உம்மத்தின் நரகத்தில் வேதனைப்படுகிறவர்களின் நிலைமை எப்படி? என்ன ? "

" யா ரப்பே! அவர்களுடைய சரீரத்தில் உள்ள தோல்களெல்லாம் வெந்து விரிந்து சதைகள் எல்லாம் தீய்ந்து கருகி நரம்புகள் எல்லாம் அறுந்து , உயிர் மாத்திரம் மீதம் இருக்கிறது "
"அவர்களுக்கு வேதனையை இலேகுபடுத்திவிட்டு, பரிகாசம் செய்த காபிர்களின் வேதனை அதிகப்படுத்தும் " என்று கட்டளை இடுவான்.

உடனே ஜபானியாக்களுக்கு மாலிக் (அலை) இக்கட்டளையைப் பிறப்பிக்க நெருப்பில் மட்டும் வேதனை செய்யப்பட்ட காபிர்கள் கொடிய பாம்புகள் முதலான விஷ ஜந்துக்களும்
புலி முதலிய விநோதமான துஷ்டமிருகங்களும் முன்னிலும் பல மடங்கு அவர்கள் மீது ஏவப்படும் .

اِنَّ لَدَيْنَاۤ اَنْكَالًا وَّجَحِيْمًا ۙ
நிச்சயமாக நம்மிடத்தில் (அவர்களுக்கு) விலங்குகளும் இருக்கின்றன; நரகமும் இருக்கின்றது.
(அல்குர்ஆன்: 73:12)

ஒரு மிருகமோ , விஷ ஜந்தோ கடித்தால் அதன் விஷம் உடலெங்கும் பரவி ஆயிரம் வருஷம் வரைக்கும் உடலில் கொதித்துக் கொண்டே இருக்கும் . சதைகள் இற்றிற்று விழும் . விழுந்தாலும் அப்போதுக்கப் போது மறுபடியும் உண்டாகி விடும்.

நரகமும் , நபிகளாரின் உம்மத்தும் 11

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 99)

காபிர்கள் மீது நடத்தப்படும் நரக வேதனையைக் கண்டு முஃமீனான பாவிகள் அதிகமாக திகில் பிடித்து வெருண்டு கத்துவார்கள் . அதைக் கண்ட மாலிக் (அலை) அவர்கள் ,

"நீங்கள் ஈமான் கொண்ட ஷஹாதத்துக் கலிமாவை சொல்லுங்கள் "
கலிமா சொன்னதும் ."யா முஹம்மது , யாஅஹ்மது " என்று சப்தமிடுவார்கள்.

இந்தச் சப்தம் அல்லாஹ்வின் அர்ஷில் கேட்கும். அல்லாஹ் ஜிப்ரயீல் (அலை) அவர்களை மாலிக்கிடம் அனுப்பி வைப்பான் .
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மாலிக்கிடம் நபி (ஸல்) அவர்களின் உம்மத்தில் பாவியானவர்களின் நரகத்து வாசலை திறக்கும்படியும், வேதனை இலகுப் படுத்தும்படியாகவும் அல்லாஹுவின் கட்டளை எடுத்துச் சொல்ல , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் முஃமீனான பாவிகளைப் பார்த்தும் அவர்கள் கருகின கொள்ளிக் கட்டைகளைப் போல் இருக்கக் கண்டும் ஜிப்ரயீல் (அலை) கதறி அழுவார்கள் .
ஜிப்ரயீல் (அலை) அவர்களைக் கண்டதும் நரக நெருப்பு தணிந்து போகும் . நரகவாசிகள் ஏன் நெருப்பு சுடவில்லை என்று பேசிக் கொண்டு அண்ணாந்து பார்ப்பார்கள் . ஜிப்ரயீல் நிற்பதைக் கண்டு , " நீங்கள் யார் ? "

அதற்கு ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அவர்களுக்கு ஸலாம் சொல்லி, " நான் ஜிப்ரயீல் , உங்களுடைய பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கு வஹி கொண்டு வருபவன். உங்கள் வேதமான குர்ஆனை கொண்டு வந்து நபிகளாருக்கு கொடுத்தவன் "
உடனே அவர்கள் எல்லோரும் ஒருமித்து, "எங்களுக்கு உவப்பான ஜிப்ரயீலே ! எங்களை இந்த நரகம் படுத்தும் பாட்டை தாங்கள் பார்த்தீர்களா ? "

" ஆம் பார்த்தேன் " என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அழுதவர்களாய் இருப்பார்கள்
" எங்கள் நபி பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் எங்கே? "
" அவர்கள் சுவர்க்கத்தில் இருக்கிறார்கள். நீங்கள் நரகத்தில் வேதனைப்படுவது அவர்களுக்குத் தெரியாது , அதை அல்லாஹ்
அவர்களுக்கு மறைத்து விட்டான் . நீங்கள் நரகில் இருப்பது தெரிந்தால் அவர்கள் சுவர்க்கத்தில் தரித்திருக்க மாட்டார்கள் . நான் உங்கள் நபியிடம் போவேன் .உங்கள் நபியிடம் நீங்கள் சொல்ல வேண்டியதை என்னிடம் சொல்லுங்கள் " .

எங்கள் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கு எங்கள் ஸலாமை அவர்களுக்கு சொல்லி, நாங்கள் இந்நரகில் படும் வேதனையையும் , நரகில் உள்ள காபிர்கள் எங்களுடைய ஈமானைப் பற்றி பழிப்பதையும் எடுத்து கூறுங்கள் . நபியவர்களின் திருக் கடாச்சரத்தை காண ஆவல் கொண்டிருப்பதையும் எடுத்து கூறுங்கள் "
இதைக் கேட்ட ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கேவி கேவி அழுதவர்களாய் அல்லாஹுதஆலா சமுகம் வருவார்கள்.
அல்லாஹு தஆலா , " ஜிப்ரயீலே ! என் ஹபீப் முஹம்மதுடைய உம்மத்தின் பாவிகள் உம்மிடம் சொன்னது என்ன ? "
" தங்கள் நபிக்கு சொல்லும்படியாக செய்தி சொன்னார்கள் "
" அதை சொல்லியாகி விட்டதா? "
" இன்னும் சொல்லவில்லை. அதற்கு உன் உத்தரவு வேண்டும்."
" போய் சொல்லும் "
ர.ரா

நரகமும் , நபிகளாரின் உம்மத்தும் 12

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 100)



ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சுவர்க்கத்திற்கு வந்து " தூபா " என்னும் மரத்தடியில் ஆணி முத்தால் உருவாக்கப்பட்ட ஒரு பெரிய கூடாரத்தில்
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடைய சமுகத்திற்கு வந்து அழுது கொண்டு நிற்பார்கள்.
" ஜிப்ரயீலே! உம்மை அழச் செய்தது என்ன என்று கேட்பார்கள்.
" யா ரஸூல்லாஹ்! நான் பார்த்ததைத் தாங்கள் பார்ப்பீர்களானால் என்னைப் பார்க்கிலும் தாங்கள் அதிகமாக அழுவீர்கள் . தங்கள் உம்மத்தில் உள்ள ஒரு கூட்டத்தார் நரகத்தில் வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள் .அவர்கள் தங்களுக்கு ஸலாம் சொல்லி , எங்களுக்கு ஏற்பட்ட தீங்கு எவ்வளவு வலுப்பான தீங்கு என்றும்
' யா முஹம்மதே! யாமுஹம்மதே !
யா முஹம்மதே ! என்னும் சத்தமும் கேட்டுக் கொண்டே இருக்கிறது.
நபியவர்கள் தங்கள் காது தாழ்த்திக் கேட்பார்கள் . தன் பெயர் உச்சரிக்கப்படுவதை துல்லியமாக கேட்பார்கள் .
உடனே " யா உம்மத்தீ ...யா உம்மத்தீ ... என்று அலறி அடித்துக் கொண்டு விரைந்து எழுந்து அங்கிருந்து கண்ணீர் தாரை தாரையாயோட அழுதவர்களாய் அல்லாஹ்வின் அர்ஷ்க்கு வருவார்கள் .
வரும்பொழுது நபியவர்களைத் தொடர்ந்து , தூபா மரத்தின் அருகிலிருந்த ஸாலிஹானவர்களும், பிதா, மாதாக்களுக்கு முன்பு மௌத்தான பிள்ளைகளும் தங்கள் பெற்றோர்களைத் தேடி , நபிகளாருடன் புறப்பட்டு வருவார்கள் .
நபியவர்களின் பதறும் காட்சி தங்கள் உம்மத்து மீதிருக்கும் அன்பை நன்றாய் வெளிப்படுத்தும் .
128. ஒரே வாகனத்தின் மீது முஆது(ரலி) நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னே அமர்ந்திருக்கும் நிலையில்,
நபி(ஸல்) அவர்கள் 'முஆதே!' என்று அழைத்தார்கள். 'இதோ உள்ளேன்; இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என்று முஆத்(ரலி) கூறினார்.
'முஆதே!' என்று என மீண்டும் நபி(ஸல்) அவர்கள் அழைத்தார்கள். 'இதோ உள்ளேன்; இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என மீண்டும் முஆத்(ரலி) கூறினார்.
இவ்வாறு மூன்று முறை கூறப்பட்டது. பிறகு 'தன் உள்ளத்திலிருந்து உண்மையான எண்ணத்துடன் வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் உறுதியாக நம்பும் எவரையும் அல்லாஹ் நரகத்திற்குச் செல்ல விட மாட்டேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்போது 'இறைத்தூதர் அவர்களே! இச்செய்தியை நான் மக்களுக்கு அறிவித்து விடலாமா? அவர்கள் மகிழ்ந்து போவார்களே!' என்று முஆத் கேட்டதற்கு 'அவ்வாறு நீர் அறிவிக்கும் அச்சமயத்தில் (இது மட்டும் போதுமே என்று) அவர்கள் அசட்டையாக இருந்துவிடுவார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி

(இத்துடன் நரகத்தின் பதிவுகள் முற்றுப் பெறுகிறது)

ஷபாஅத் 2 - மன்றாட்டம்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 101)

ஷபாஅத் 02 ( மன்றாட்டம்) ;
ஷபாஅத் 01 ( சிபாரிசு இத்தொடரின்
6 வது பதிவில் உள்ளது



ஷபாஅத் என்பது இரு வகைப்படும்
1) ஷபாஅத் குபுறா - சிபாரிசு
2) ஷபாஅத் ஸுஹுறா - மன்றாட்டம்

"ஷபாஅத் குபுறா " - சிபாரிசு என்பது மஹ்ஷரில் தடைபட்டு வருந்தும் படைப்புகளை சீக்கிரமாக விசாரிக்கவும்,
தங்கள் உம்மத்திலுள்ள மூஃமீனான சிலரைக் கேள்வி கணக்கில்லாமல் சுவர்க்கம் புகுதவும் , சிலருக்கு சுவர்க்க பதவியை அதிகப்படுத்தவும் ஷபாஅத் குபுறா என்ற சிபாரிசு செய்யப்படும்.
438. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'எனக்கு முன்னர் (நபிமார்கள்) யாருக்கும் கொடுக்கப்படாத ஐந்து விஷயங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

எதிரிகளுக்கும் எனக்குமிடையில் ஒரு மாத காலம் பயணம் செய்யும இடைவெளியிலிருந்தாலும் அவர்களின் உள்ளத்தில் பயம் ஏற்படுத்தப்படுவதன் மூலம் நான் உதவப்பட்டுள்ளேன்.

பூமி முழுவதும் சுத்தம் செய்யத்தக்கதாகவும் தொழுமிடமாகவும் எனக்கு ஆக்கப்பட்டுள்ளது. என்னுடைய சமுதாயத்தில் தொழுகையின் நேரத்தை அடைந்தவர் (தான் இருக்கும் இடத்தில்) தொழுது கொள்ளட்டும்!

போரில் கிடைக்கிற பொருள்கள் எனக்கு ஹலாலாக்கப்பட்டுள்ளன.
ஒவ்வொரு நபியும் தங்களின் சமூகத்திற்கு மட்டுமே நபியாக அனுப்பப்பட்டார்கள். ஆனால், நான் மனித இனம் முழுமைக்கும் நபியாக அனுப்பப்பட்டுள்ளேன். (மறுமையில் என்னுடைய உம்மத்துக்காக) சிபாரிசு செய்யும் வாய்ப்பு கொடுக்கப்பட்டு உள்ளேன். என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி

"ஷபாஅத் ஸுஹுறா " - மன்றாட்டம் என்பது வேறு நன்மை என்பது இல்லாது போய் அணுவளவு ஈமான் மாத்திரம் உள்ளவர்களாய் நரகம் புகுந்த மூஃமீனானவர்களை மீட்டிச் சுவர்க்கம் புகுத்தவும் இன்னும் நரகம் புகுதக் கட்டளைப் பெற்றவர்களை நரகம் புகுதாமல் .... இத்தகையோருக்காக மன்றாட்டம் செய்வது ஷபாஅத் ஸுஹுறா எனப்படும் .

இந்த அதிகார பதவிதான் **" மகாமன் மஹ்மூது "** என்று சொல்லப்படும் இது அல்லாஹ்தஆலா விடத்தில் மிக மிக உயர் பதவி . இது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கு மட்டுமே உரித்தானதாக அல்லாஹ்தஆலா வைத்துள்ளான் .
ஷபாஅத் என்ற மன்றாட்டம் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களும் , மற்ற நபிமார்களும், மன்றாடுவது அல்லாமல், அஸ்ஹாபுகள்,
ஷுஹதாக்கள் , அவ்வுலியாக்கள் , ஸாலிஹானவர்கள் , பெற்றோருக்கு முன் மௌத்தான சிறு பிள்ளைகள் இத்தகையோர்களும் மன்றாடுவார்கள் .
இவர்களைத் தவிர திருக்குர்ஆன் ஷரீப் , நோன்பு போன்றவைகளும் மன்றாடும்.
இவர்களில் ஒரு கூட்டத்தாருக்காக , குடும்பத்தாருக்காக , இஷ்டத்தாருக்காக மன்றாடுகிறவர்களும் இருப்பார்கள் இந்த மன்றாட்டம் அவரவர் அமலுக்குத் தக்கபடியே இருக்கும் .
ர.ரா

ஷபாஅத் 3 - மன்றாட்டம்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 102)




நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தன் உம்மத்துக்களில் பாவியானவர்களை நரகில் இருந்து வெளிக் கொண்டுவர, அல்லாஹு தஆலாவின் அர்ஷ்க்கு வருவார்கள் . கூடவே மற்ற நபிமார்களும் வருவார்கள்.

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தங்கள் தலையை ஷுஜூது நிலையில் கிடத்தி, அவர்களும் , அவர்கள் அல்லாத மற்ற எவருமே, எந்தக் காலத்திலும் , ஒரு போதும் புகழ்ந்திராத புகழைக் கொண்டு அல்லாஹு தஆலாவை புகழ்வார்கள் .

உடனே அல்லாஹு தஆலா " என் ஹபீபே
முஹம்மதே ! தலையை உயர்த்தும் . நீர் விருப்பிதைக் கேளும் தருகிறேன். உமக்கு ஷபாஅத்தைக் கொடுத்தேன். ஷபாஅத்தைக் கொடுத்தேன் ஷபாஅத்துச் செய்யும் " .
"யா ரப்பே.... என் உம்மத்திலுள்ள ஒரு கூட்டத்தார் மீது உன் கட்டனையையும், தீர்ப்பையும் நிறைவேற்றி , அவர்களுக்கு நரகத்து வேதனையையும் கொடுத்து , அதையும் அவர்கள் அனுபவித்து விட்டார்கள். அவர்களை நரகில் இருந்து மீட்டு சுவர்க்கம் புகுதச் செய்ய வேண்டும்"
அல்லாஹு தஆலா ஜிப்ரயீலை அழைத்து, மாலிக்கிடம் போய் , நரகத்தில் கிடக்கிறவர்களில் யாருடைய இருதயத்தில் அணுவளவு ஈமான் இருக்கிறதோ , அவர்களையெல்லாம் நரகத்தை விட்டு வெளியேற்றும்படி சொல்லும் " .

فَمَنْ يَّعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَّرَهٗ
ஆகவே, எவர் ஓர் அணுவளவு நன்மை செய்திருந்தாரோ அவர், (அங்கு) அதனையும் கண்டுகொள்வார்.
(அல்குர்ஆன்: 99:7)
பிறகு நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களை அழைத்துக் கொண்டு, ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நரகத்திற்கு வருவார்கள். அப்போது நரகத்து அதிபர் மாலிக் (அலை) அவர்கள் , நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களைக் கண்டு எழுந்து நின்று மரியாதை செய்வார்கள்.
மாலிக்கிடம், " என்னுடைய உம்மத்தின் நிலை என்ன ? "
"அவர்கள் பட்ட அவஸ்தையை நான் என்ன சொல்வேன். அது இறை உத்தரவு அல்லவா " .
" நரகத்து வாசலை திறந்து அவர்கள் இருக்கும் தட்டின் மேல் மூடியை எடுத்து விடும் "
திறந்தது , மூடியை எடுத்ததும் அங்கிருப்பவர்கள் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து , "முஹம்மதே !முஹம்மதே !! எங்களை நரகத்து நெருப்பு பற்றிக் கொண்டு எங்கள் தோல்கள், சதைகள், எலும்புகள் எல்லாவற்றையும் எரித்து விட்டதே " என்று எல்லோரும் ஒருமித்து அழுவார்கள்.
அதற்கு நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் " நீங்கள் இப்படி நரகத்திற்குள் கிடந்து வேதனை செய்யப்பட்டது எனக்குத் தெரியாது என்று அனுதாபத்துடன் சொல்வார்கள் .
பிறகு அவர்கள் எல்லோரையும் நரகத்தை விட்டு வெளியே கொண்டு வருவார்கள் .
ர.ரா

ஷபாஅத் 4 - மன்றாட்டம்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 103)



நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தங்கள் உம்மத்துக்களில் பாவியானவர்களை நரகில் இருந்து வெளிக் கொண்டு வந்ததும் , அவர்கள் எரிந்த கொள்ளிக் கட்டைகளைப் போல இருப்பார்கள் .

பெற்றோர்களுக்கு முன் மௌத்தான பிள்ளைகள் தங்கள் தங்கள் தாய் தந்தையார்களுக்கு கொடுப்பதற்காக பானங்களை கையில் வைத்துக் கொண்டு பெற்றோர்களைத் தேடுவார்கள்.
அப்பெற்றோர்களை நரக நெருப்பு தீண்டியதால் உடம்பு விகார ரூபத்தில் பயங்கரமாக இருக்கும் . இதனால் அடையாளம் காண முடியாமல் பிள்ளைகள் தவிப்பார்கள். சில பெற்றோர்கள் தங்களின் விகார ரூபத்தால் பிள்ளைகள் அருகில் போகாமல் தங்கள் பிள்ளைகளை தூரத்தில் இருந்து விழி கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருப்பார்கள் .

பிள்ளைகள் பானத்தை கையில் ஏந்திய வண்ணம் தங்கள் பெற்றோர்களைத் தேடி அழுவார்கள் .இந்த அழுகையை ஆற்றாமல் தாங்கள்தான் உங்கள் பெற்றோர்கள் என்று அருகில் வந்து அணைத்துக் கொள்ள வருவார்கள் .

பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் அருகில் போகும் போது , ' பிள்ளைகள் இவர்களா தம் பெற்றோர்கள் ' ... என சந்தேகப்படுவர்கள். பிள்ளைகளின் பெயர்களைக் கூறி அழைத்து , "நாங்கள்தான் உங்கள் பெற்றோர்கள் " என்று தங்களைத் தாங்களே அவமானப்பட்டு அறிமுகப்படுத்திக் கொள்வார்கள்.
பிறகு அவர்கள் எல்லோரையும் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி " **நஹருல் ஹயாத் "** என்னும் ஜீவ நதியில் கொண்டு போய் குளிக்கச் சொல்வார்கள் . அவர்கள் அந்த நதியில் முழ்கி குளித்ததும் , உள்ளுறுப்புகள் ,புற உறுப்புகளெல்லாம் பரிசுத்தமாகி முகங்கள் பூர்ணச் சந்திரனைப் போலப் பிரகாசிக்கும்.மலக்குகள் சுவனத்து பட்டாடைகளை கொண்டு வந்து உடுக்கச் சொல்வார்கள் . இருந்தாலும் ஒவ்வொருவருடைய நெற்றியிலும் , "நரகத்திலிருந்து மீட்சிப் பெற்றவர் " என்ற வாசகம் எழுதியே இருக்கும்.

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் , எல்லோரையும் அர்ஷ்க்கு அழைத்துக் கொண்டு போய் அல்லாஹ்தஆலாவுக்கு சுஜுது செய்வார்கள் .
அல்லாஹ்தஆலா அவர்களைப் பார்த்து
"நீங்கள் நரகத்தை எப்படி கண்டீர்கள்?"
" யா ரப்பே! அது மஹா மஹா கொடிய இருப்பிடம் "

" என்னுடைய கட்டளையை மீறினவர்களுக்கு நான் கொடுக்கும் கூலி அதுதான். என் ஹபீபின் மன்றாட்டத்தைக் கொண்டும் , நீங்கள் ஏற்றுக் கொண்ட கலிமைக் கொண்டும் உங்களை நான் இரட்சித்தேன். இல்லாவிடில் நீங்கள் அங்கேயேதான் இருப்பீர்கள் . இப்போது நீங்கள் சுவார்க்கத்திற்கு போங்கள் " என்று உத்தரவு கொடுப்பான் .
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் , அவர்களை சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்வார்கள் . அங்கே முன்னமே வந்த சுவார்க்கவாசிகள் , இவர்களின் நெற்றியில் எழுதப்பட்டிருக்கும் "நரகத்திலிருந்து மீட்சிப் பெற்றவர் " என்பதைப் பார்த்து , "நீங்கள் என்ன பாவம் செய்தீர்கள் " என்று கேட்பார்கள் .
துனியாவில் தாங்கள் செய்த பாவங்களைப் பற்றி கூறும் போதெல்லாம் வெட்கப்பட்டு கூனிக் குறுகுவார்கள் .
இதனால் அல்லாஹ்தஆலா விடம் ,
" யா ரப்பே...! எங்கள் நெற்றியில் எழுதப்பட்டிருக்கும் இந்த வாசகத்தினால் எங்களுக்கு ரொம்பவும் மானக்கேடாக இருக்கிறது .எனவே அந்த வாசகத்தை அழிந்து போகச் செய்வாயாக ! "
உடனே அல்லாஹ்தஆலா ஒரு மழையை அவர்கள் மீது பொழியச் செய்து அவ் வாசகத்தை அழியச் செய்வான்.

ஷபாஅத் 5 - மன்றாட்டம்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 104)




மூஃமீனானவர்கள் எல்லோரும் சொர்க்கத்திலும் , பாவிகள் எல்லோரும் நரகத்திலும் தரிபாடான பிறகு மரணம் என்னும் மௌத்தை ஒரு செம்மறியாட்டின் உருவத்தில் கொணர்ந்து சொர்க்கத்திற்கும் , நரகத்திற்கும் மத்தியில் நிறுத்தும்படி கட்டளைப் பிறக்கும் .

மலக்குகள் சிலர் சொர்க்கவாதிகளைக் கூப்பிட்டு , அந்த ஆட்டைக் காண்பித்து ,
"சுவனவாதிகளே...! இதை நீங்கள் அறிவீர்களா ? "
"ஆம் அறிவோம். இது மௌத் என்னும் மரணம் . இதை நீங்கள் அறுத்து விடுங்கள் . அதனால் இனி எங்களுக்கு மௌத் வராமல் இருக்கட்டும் " என்பார்கள் சுவனவாதிகள் .
பிறகு நரகவாதிகளைக் கூப்பிட்டு , அந்த ஆட்டைக் காண்பித்து ,
"நரகவாதிகளே...! இதை நீங்கள் அறிவீர்களா ? "
"ஆம் அறிவோம் இது மௌத் என்னும் மரணம் இதை நீங்கள் அறுத்து விடாதீர்கள் .அதனால் இனி எங்களுக்கு மௌத் வரட்டும் . அது வந்து நாங்கள் மௌத்தானால் இந்த நரக வேதனையை விட்டு ஒழிவோமல்லவா " என்பார்கள் நரகவாதிகள்.

அல்லாஹு தஆலாவின் கட்டளைப்படி , அந்த செம்மறியாட்டு உருவத்தில் வந்திருக்கும் மௌத்தை அங்கேயே வைத்து , நபி யஹ்யா (அலை) அவர்கள் தங்கள் கையால் சொர்க்கவாதிகளும், நரகவாதிகளும் பாத்திருக்க அதை அறுத்து விடுவார்கள்.
அன்றிலிருந்து மௌத்து என்னும் மரணம் இல்லாமல் போகும். இனி எவருக்கும் மௌத்து வரவே வராது.
அப்போதே சொர்க்கவாதிகளைக் கூப்பிட்டு உங்களுக்கு இனி மௌத்து இல்லை. சதாகாலமும் யுகயுகங்களாக சொர்க்கத்தில் என்றென்றும் நீங்கள் வாழ்த்திருப்பீர்கள் என்றும்,
இதைப் போல நரகவாதிகளையும் கூப்பிட்டு, உங்களுக்கும் இனி மௌத்து என்பது இல்லவே இல்லை. சதாகாலமும் யுகயுகங்களாக நரகத்தில் நீங்கள் வேதனைப் பட்டுக் கொண்டே இருப்பீர்கள் என்றும்,

اِنَّهٗ مَنْ يَّاْتِ رَبَّهٗ مُجْرِمًا فَاِنَّ لَهٗ جَهَـنَّمَ لَا يَمُوْتُ فِيْهَا وَ لَا يَحْيٰى
உண்மையாகவே எவன் குற்றவாளியாகத் தன் இறைவனிடம் வருகின்றானோ அவனுக்கு நிச்சயமாக நரகம்தான் கூலியாகும். அதில் அவன் சாகவும் மாட்டான்; (சுகத்துடன்) வாழவும் மாட்டான். (வேதனையை அனுபவித்துக் கொண்டு குற்றுயிராகவே கிடப்பான்.)
(அல்குர்ஆன்: 20:74)

நரகத்து ஏழு வாசல்களும் , யாதொரு இல்லியிடுக்கு இல்லாமல் அடைக்கப்படும் . நரகவாளிகள் நரகத்திலும், சொர்க்கவாதிகள் சொர்க்கத்திலும் தரிபடுவார்கள் .
" அந்நாளில், நயவஞ்சக ஆண்களும் பெண்களும் நம்பிக்கை கொண்டவர்களை நோக்கி "நீங்கள் (முன் செல்லாது) எங்களுக்காகச் சிறிது தாமதியுங்கள். உங்களுடைய பிரகாசத்தைக் கொண்டு நாங்கள் பயனடைவோம்" என்று கூறுவார்கள்.
(அதற்கு அவர்களை நோக்கி "எங்கள் முன் நிற்காதீர்கள்.) நீங்கள் உங்கள் பின்புறம் சென்று (அங்குப்) பிரகாசத்தைத் தேடிக்கொள்ளுங்கள்" என்று கூறப்படும்.
அந்நேரத்தில், இவர்களுக்கும் அவர்களுக்கும் மத்தியில் ஒரு சுவர் எழுப்பப்பட்டுவிடும். அதற்கு வாசலும் இருக்கும். (நம்பிக்கை யாளர்கள் இருக்கக்கூடிய) அதன் உட்புறத்தில் (இறைவனின்) அருளும், அதன் வெளிப்புறத்தில் (பாவிகள் அனுபவிக்கக்கூடிய) அவனுடைய வேதனையுமிருக்கும்.
(அல்குர்ஆன்: 57:13)
ர.ரா
(ஷபாஅத்து பதிவு நிறைவு பெறுகிறது)

சொர்க்கத்தில் திருமணம் ( உறுஸ் ) 01

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 105)



" உறுஸ் " என்பது திருக்கல்யாணம்.
அது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கு சொர்க்கத்தில் நடக்கும் விவாஹ மகோற்சவம் .
ஸாலிஹானவர்கள் எல்லோரும் சொர்க்கத்தில் குடிபுகுந்த பிற்பாடு , அவரவர்களுடைய தளங்களில் சுகித்துக் கொண்டிருக்கும் போது அல்லாஹுﷻ தஆலாவின் அர்ஷில் இருந்து ,
" ஓ... சொர்க்கவாசிகளே! நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கும் மரியம், ஆஸியா என்னும் இரு பெண்களுக்கும் விவாஹம் நடைபெற இருப்பதால் , நீங்கள் எல்லோரும் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடைய சொந்த மாளிகைக்குள் வாருங்கள் " என்று ஒரு சப்தம் பிறக்கும் .
" நம்பிக்கை கொண்ட பெண்களுக்கு (ம் இரு பெண்களை) அல்லாஹ் உதாரணமாகக் கூறுகின்றான்.

(முதலாவது:) ஃபிர்அவ்னுடைய மனைவி (ஆஸியா). அவள் (தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! உன்னிடத்தில் உள்ள சுவனபதியில் எனக்கு ஒரு வீட்டை அமைத்து, ஃபிர்அவ்னை விட்டும் அவனுடைய செயலை விட்டும் என்னை பாதுகாத்துக்கொள்" என்று பிரார்த்தனை செய்துகொண்டே இருந்தாள்.
(இரண்டாவது:) இம்ரானுடைய மகள் மர்யம். அவர் தன்னுடைய கற்பை பாதுகாத்துக்கொண்டார். ஆகவே, அவருடைய கர்ப்பத்தில் நம்முடைய ரூஹிலிருந்து ஊதினோம். அவர் தன் இறைவனின் வசனங்களையும், வேதங்களையும் உண்மையாக்கி வைத்ததுடன் (இறைவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டவராகவும் இருந்தார்.

(குர்ஆன்: 66:11,12)
சொர்க்கவாதிகள் எல்லோரும் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடைய மாளிகை வாசலுக்கு வருகை தருவார்கள்.
அந்த மாளிகையானது சொர்க்கத்திலுள்ள எல்லா மாளிகைகளுக்கும் மேலானதும், அதிக அலங்காரமும் சிறப்பும் உள்ளதுமாய் , "ஹௌலுல் கௌதர் " என்னும் நதியின் ஆற்றங்கரையில் இருக்கும்.
அந்த மாளிகையிலுள்ள ஒரு சித்திரக் கூடத்திற்கு முன் அலங்காரமான பவளத்தினால் கடைந்து , நவரத்தினங்களையெல்லாம் பதித்த ஓர் அழகியமண்டபம் இருக்கும்.
அந்த மண்டபத்திற்குள் மஹ்மூது என்னும் பெயருடைய ஒரு யானை நிற்கும். அந்த யானையை சொர்க்கத்து அதிபதி ரிள்வான் என்னும் மலக்கு மிக அழகாக அலங்கரித்துக் கொண்டிருப்பார்கள் .
அந்த யானையினுடைய இரண்டு தந்தங்களில் நவரத்தினங்களினால் சித்திர வேலைகள் செய்து , அந்த யானையின் மீது ஒரு பலகைப் போடப்பட்டிருக்கும். அந்தப் பலகையின் மேல் வண்ண வண்ண விரிப்புகளும் , திண்டுகளும் உள்ள ஆசனங்களும் கணக்கே இல்லாமல் போடப்பட்டிருக்கும்.
இன்னும் அந்த யானையின் முதுகின் மேல் நடுவிலும் , வலமும், இடமும் ஆக மூன்று அவ்காக்கள் வைக்கப்பட்டிருக்கும். அவைகளின் அருகில் "லிவாவுல் ஹம்து " முதலான மூன்று கொடிகள் பறக்கும் .
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் முதல் அநேக மலக்குகளும் , ஹூருல் ஈன்களும், சொர்க்கத்து பணியாளர்களும் முதலியோர்கள் இருப்பார்கள் .

இன்னும் அவ்விடத்தில் பலவித ரத்தினங்களினாலும் , ஒளியினாலும் உண்டாக்கப்பட்ட மரவைகளும் , ஒவ்வொரு மரவைகளில் அநேக விதமான தின்பதார்த்தங்கள் வைக்கப்பட்ட பாத்திரங்களும் பரத்தப்பட்டிருக்கும் .
சொர்க்கவாதிகள் எல்லோரும் மேற்படி மாளிகையின் வாசலுக்கு வந்தவுடன், அவர்களை உள்ளே வரும்படி அல்லாஹுடி தஆலா உத்திரவு பிறக்கும் .
உடனே எல்லோரும் அந்தப் பதார்த்தங்களை உண்டு பசியாறும்படி உத்திரவு பிறக்கும். அப்படியே எல்லோரும் பந்தி பந்தியாக இருந்து பசியாறுவார்கள் . பசியாறிய பின் எல்லோருக்கும் ஆடை ஆபரணங்கள் அணிவிக்கப்படும் .பரிமளங்கம் பூசிச் சந்தோஷமடைவார்கள்.
(தொடரும்)
ர.ரா

சொர்க்கத்தில் திருமணம் ( உறுஸ் ) 02

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 106)

اللَّهُمَّ صَلَّى اللهُ عَلَى مُحَمَّدٍ عَدَدَ مَا ذَكَرَهُ
الذَّاكِرُونَ وَغَفَلَ عَنْ ذِكْرِهِ الْغَافِلُونَ

மலக்குமார்கள் , ஹூருல் ஈன்கள், சுவனவாசி புடைசூழ , நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களை ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அந்த மஹ்மூது யானை மீது இருக்கும் நடு அவுதாவிலும், மரியம் (அலை) அவர்களை வலது புற அவுதாவிலும், ஆஸியா (அலை) அவர்களை இடது புற அவுதாவிலும் ஏற்றி உட்கார வைப்பார்கள் .

ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அந்த மஹ்மூது யானைக்கு பாகராக மஸ்தகத்தில் ஏறி உட்கார்ந்து கொள்ளுவார்கள் .
மீக்காயீல் (அலை) அவர்கள் அவுதாக்களுக்குப் பின் பக்கத்தில் ஏறி உட்கார்ந்து கொள்வார்கள் .
அதன் பிறகு அல்லாஹுடி தஆலாவின் உத்திரவு பிரகாரம் அநேக நபிமார்களும் , நபி (ஸல்) அவர்கள் உட்பட அனைத்து நபிமார்களின் உம்மத்துகளும் , யானை கொம்பின் மேல் போடப்பட்டிருக்கும் பலகை மீதுள்ள ஆசனங்களுள் ஏறி உட்கார்ந்து கொள்வார்கள் .
இன்னும் எண்பத்தோராயிரம் நபிமார்களை ராஜவாக ஜோடித்து , ஒளியிலான குதிரைகள் மீது ஏறி அந்த யானையைச் சூழ்ந்து நிற்பார்கள் .

துனியாவில் திருமண ஊர்வலத்தை ஜான வாசம் என்பார்கள் .
அதாவது இது...ஜனங்கள் (மக்கள்) செறிந்து வாசம் செய்யும்(வாழும்) இடங்களினூடே திருமண ஊர்வலம் செல்லுமாதலால் 'ஜனவாசம்' திரிந்து "ஜானவாசம் " எனப்பட்டது
இவ்விதம் ஊர்கோலம் தயாராகி ஜான வாசம் போவது போல் எல்லா சொர்க்கமும் சுற்றுவார்கள் . பின் ஊர்வலம் ஹௌளுல் கௌதர் என்னும் நதிக்கரைக்கு வருவார்கள். அந் நதியின் அருகில் பூமியிலும் அறுபதினாயிரம் மடங்கு பெரிதான ஒரு குளம் உண்டாகி இருக்கும் .
அந்தக் குளக்கரையில் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் முதலான எல்லோரும் இறங்குவார்கள். அங்கு ஒரு விருந்து கொடுக்கப்படும் . விருந்துண்டு மகிழ்ந்திருக்கும் போது , அந்தக் குளத்தில் அநேக மாணிக்க கப்பல்கள் மிதந்து வரும்.

எல்லோரும் அக்கப்பல்களில் ஏறிக் கொள்வார்கள். ஏறியதும் அர்ஷுக்குக் கீழே ஒரு மேகம் கிளம்பி , அந்தக் கப்பல்களையெல்லாம் கவிழ்ந்து கொண்டு , கஸ்தூரி, கற்பூரம், அம்பர், ஆடையாபரணங்கள், ஹூருல்

ஈன்கள் முதலான எல்லாவற்றையும் மழையாக வருஷித்துக் கொண்டிருக்கும்படி செய்யப்படும். அக்கப்பல்களில் இருந்தவாறே அந்தக் குளத்தைச் சுற்றி சுற்றி ஆனந்தமாய் விளையாடுவார்கள் .

பின் எல்லா கப்பல்களும் ,அக் குளத்தில் உள்ள பெரிய மீன் அருகில் போய் இருக்கும் .அந்த மீனுக்கு " ஜாஹிரு " என்று பெயர் . அந்த மீன் வயிற்றில் கற்பூரத்தினாலேயே ஒரு பட்டணம் உண்டாகி இருக்கும்.
அந்தப் பட்டணத்தில் துன்யாவின் விஸ்தீரணமுள்ள ஒரு மாளிகை இருக்கும் .
அல்லாஹு தஆலா அந்த மீனுக்குத் தலையை உயர்த்தி வாயைப் பிளக்கச் செய்வான் . கப்பல்களில் இருக்கிற நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் முதலான எல்லோரும் இந்த மீன் வாய்க்குள் நுழைந்து அந்தப் பட்டணம் போய் சேருவார்கள் .
நிக்காஹ்வும் சிறப்பாக நடந்தேறும்.

எல்லோரும் அல்லாஹு தஆலா நாடின காலம் வரையிலும் , அங்கேயே சுகித்துக் கொண்டிருந்து பிறகு அங்கிருந்து புறப்பட்டு சொர்க்கத்திலுள்ள அவரவர் தானங்களில் போய்ச் சேர்வார்கள் .
ர.ரா
அடுத்து "லியாபத் " என்னும் விருந்து

"லியாபத்து " என்னும் இறை விருந்து

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 107)



லியாபத்து என்பது விருந்து. அல்லாஹு தஆலா சொர்க்கத்திலுள்ள தன் அடியார்களுக்கு கொடுப்பது .
அல்லாஹு தஆலா இந்த விருந்து செய்ய நாடினபோது, ஜிப்ரயீல் (அலை) அவர்களை அழைத்து,
" என்னுடைய ஹபீப் முஹம்மது நபி ﷺ அவர்களுக்கும், அவர்களுடைய உம்மத்துக்கும், மற்ற நபிமார்களுக்கும் அவரவர்களுடைய உம்மத்துக்களுக்கும் நான் ஒரு விருந்து கொடுக்கப் போறேன். அதற்காக நீர் ஹலீலத்துல் குதுஸியைத் தயார் செய்யும். அங்கே தான் விருந்து நடத்த வேண்டும் " .
உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்களும் , மற்ற மலக்குமார்களும், அந்த தானத்தை அலங்காரமாகத் தயார் செய்வார்கள் .

**ஹலீலத்துல் குதுஸி** என்பது ' அதன் ' என்னும் சொர்க்கத்திலுள்ள ஒரு தானம். அது செம்முத்தினால் படைக்கப்பட்டு , எல்லா சொர்க்கங்களிலும் உயர்ந்ததும், மேன்மையானதும் , அது கற்பனைக் கெட்டாத அலங்காரமானதமாகவும் இருக்கும். இது அல்லாஹு தஆலாவின் அர்ஷ்க்கு நேர் கீழ் இருக்கும்.

ஹலீலத்துல் குதுஸி தயாரானதும் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் முதற்கொண்டு 1,24,000 நபிமார்கள் , அவர்களுடைய உம்மத்துக்கள் அனைவரும் விருந்து உண்ண அழைத்து வரும்படி ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்கு உத்தரவு செய்வான் .

உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மேற்சொன்ன அத்தனை பேர்களையும் அழைப்பார்கள். எல்லோருமே தங்கள் தங்கள் வாகனங்களில் வந்து குவிந்துக் கொண்டே இருப்பார்கள்.
விருந்தாளிகள் விருந்து தானத்திற்கு வரும் வழியில் வெள்ளியினாலும் , பொன்னினாலும் , ரத்தினங்களினாலும் ஒன்றாகப் பட்டு ஒராயிரம் வருஷப் பிரயாணத் தூரம் முதல் பதினாயிரம் வருஷப் பிரயாணத் தூரம் வரையுள்ள அதிக அலங்கார முள்ள 10 மாளிகைகள் ஒன்றன் பின் ஒன்றாய் ஒரு நிமிடத்தில் கடந்து போவார்கள். இந்த 10 மாளிகைகள் யாருக்குரியது என்பது பற்றி விபரம் இல்லை .

பின்பு ஹலீலத்துல் குதுஸி என்கிற உன்னதமான மேல் மாடிகளும் விருக்ஷங்களும் , ஒரே ஒளிவாய்த் தோன்றும். எல்லோரும் அவைக் கண்டு களிப்புற்று அதிக ஆனந்தத்துடன் அங்கு வந்து சேர்வார்கள்.
ஹலீலத்துல் குதுஸி யில் அவரவர் வஸ்துக்கள் ஒவ்வொன்றிலும் அவரவர்கள் பெயர்கள் பொறிக்கப்பட்டிருக்கும். அவைகள் மற்ற சுவர்க்கங்களில் உள்ள பொருட்களைக் காட்டிலும் ரொம்பவும் வித்தியாசமாக இருக்கும்.

எல்லோரும் அவரவர் பெயர் குறிப்பிட்ட ஆசனங்களில் உட்கார்ந்த பின் ஒவ்வொரு ஒடுக்கு கொண்ர்ந்து மலக்குகள் வைப்பார்கள் .
அந்த ஒவ்வொரு ஒடுக்களிலும் வெள்ளித் தட்டு 10 ம் , பொன்தட்டு 10 ம் , முத்து தட்டு 10 ம் , அகீக்குத் தட்டு 10 ம் , மாணிக்கத் தட்டு 10 ம், மரகதத்
தட்டு 10ம் , பவளத் தட்டு 10 ம் ஆக மொத்தம் 70 தட்டுகள் பரப்பி , ஒரு தங்கத்தால் அதை மெல்லிய பசும் பட்டினால் பொதித்து கட்டப்பட்டதாக இருக்கும் . அந்த உணவுகளின் மணம் இதுவரை எந்த மூக்கும் நுகர்ந்திராத வாடையில் உணவுகள் கமகமக்கும்.
அந்த 70 தட்டுகளில் ஒரு தட்டிற்கு 60 வித ருசியுள்ள பதார்த்தங்களாக ஆகாரங்கள் வைக்கப்பட்டு இருக்கும். அதுகளை அவரவர் விரும்பியபடி வேண்டிய மட்டும் புசிப்பார்கள்.
ஒவ்வொரு பிடி உணவும் ஒன்றுக்கொன்று அதிக ருசிகரமாக இருப்பதும் அல்லாமல், ஒரு பிடி உணவிலே துனியாவில் இருந்த சகல ருசியும் அதிலே அடங்கி விடும்.
இறை விருந்து உணவுகள் உண்ட பின் பொன்னினாலும், ரத்தினங்களினாலும் ஆன கெண்டிகளில் தண்ணீர், பால், தேன் , மது இவைகளை நிரப்பிக் கொணர்ந்து எல்லோரும் கொடுப்பார்கள். அதுகளை வேண்டிய மட்டும் வாங்கிக் குடித்துக் கொண்டிருப்பார்கள்.
அதன் பின் நவரத்தினங்கள். இழைத்த தங்கத் தாளங்களில் பழ வர்க்கங்களைப் பரப்பி , பசும் பட்டினால் மூடிக் கொண்ர்ந்து ஒவ்வொருக்கும் கொடுப்பார்கள் . அந்த பழங்களை அவர்கள் ....
" அவற்றிலிருந்து அவர்களுக்கு ஒரு கனி உணவாகக் கொடுக்கப்படும் போதெல்லாம், "முன்னர் இதைத்தான் நாங்கள் கொடுக்கபட்டோம்" எனக் கூறுவார்கள். அது (பார்வைக்கு) ஒரே விதமாகத் தோன்றக் கூடியாதாகயிருக்க அவர்கள் கொடுக்கப்பட்டார்கள். (ஆனால் அவை ருசியில் மாறுபட்டவையாக இருக்கும்).
(குர்ஆன் 2: 25)
பிறகு ஒவ்வொருவருக்கும் , பலவிதமான பட்டுகளும், ரத்னாபரணங்களும் கொணர்ந்து கொடுக்கப்படும். அதுகளை வாங்கி உடுத்தியும் ,அணிந்தும் எல்லோரும் தன்னை அலங்கரித்துக் கொள்வார்கள்.
அதன் பின் பரிமளம் பூசிக்கொள்ளும்படி கொணர்ந்து கொடுக்கப்படும். அதுகளையும் பூசிக்கொள்வார்கள்.
ஹூருல் ஈன்களின் பலவிதமான சங்கீதங்கள் பாடும்படி ஹூருல் ஈன்களுக்கு இறைத்கட்டளை பிறக்கும் . அப்படியே சங்கீதங்களை கேட்டு சுவனவாதிகள் ஆனந்த பரவசத்தில் முழ்கி விடுவார்கள் .
ர.ரா
அடுத்து " லிகா " என்னும் இறை தரிசனம்

" லிகா " என்னும் தரிசனம்

(இஸ்லாமிய அடிப்படைக் கோட்பாடுகள் 108)



" லிகா " என்பது தரிசனம் அது சுவர்க்கவாதிகள் அல்லாஹு தஆலாவைச் சுவர்க்கத்தில் தரிசிப்பது.
அந்த தரிசனம் சுவர்க்கத்திலுள்ள எல்லா இன்பானந்தங்களிலும், அதிக இன்பானந்தமாக இருக்கும். இந்த இன்பானந்தத்தைப் போல் எப்போதும் எங்கும் எதிலும் இராது.
இதற்கு முந்திய பதிவில் சொன்னபடி எல்லோரும் விருந்துண்டு கீத நாதங்கள் கேட்டு ஆனந்த பரவசமுற்றிருக்கும் போது, அல்லாஹு தஆலா அவர்களைப் பார்த்து ,

" என் அடியார்களே! உங்களுக்கு இனிமேல் வேண்டியது என்ன ? உங்கள் விருப்பத்தில் வேறு ஏதாவது உண்டா ? "
அதற்கு எல்லோரும் ஒருமித்து ,
" ஆம் உண்டு, எங்கள் ரப்பே.! இத்தனையும் எங்களுக்கு தந்த உன்னை நாங்கள் தரிசிக்க வேண்டியது ஒன்று மட்டுமே . எங்களுக்கு நீ அதையும் தந்தருள்வாயாக !"

எல்லோரும் இவ்விதம் சொன்னவுடன் "ஹக்கு " ( படைத்தவன்) என்பதற்கும் , "கல்கு" (படைப்புகள்) என்பதற்கும் இடையில் இருக்கும் திரையை நீக்கப்படும் .
(சில கிதாபுகளில் 70 ஆயிரம் திரைகள் நீக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது)

உடனே ஒரு ஒப்பற்ற ஒளி பளீரென்று வீசிப் பிரகாசிக்கும் . அப்போது எல்லோரும் அல்லாஹு தஆலாவைப் பிரத்தியட்சமாய்த் தரிசிப்பார்கள் .
4851. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

ஓர் இரவில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் பதினான்காம் இரவின் முழுநிலவைக் கூர்ந்து நோக்கியபடி, 'இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் உங்களுடைய இறைவனையும் காண்பீர்கள்.
எனவே, சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்' என்று கூறிவிட்டு,
'சூரியன் உதயமாகும் முன்னரும், மறையும் முன்னரும் உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து துதியுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 50:39 வது) வசனத்தை ஓதினார்கள்.
ஸஹீஹ் புகாரி

உடனே அல்லாஹு தஆலா அவர்களைப் பார்த்து ,
" நான் யார்? "

" நீதான் எங்கள் ரப்பு "
அவனின் அந்த ஒற்றை தரிசனத்தில் முந்நூறு வருஷம் வரையும் , அதே ஆனந்தத்தில் திளைத்து இருப்பார்கள் .

அப்போது அவர்களுக்கு சுவர்க்கம் கூட பெரியதாக தெரியாது .
பிறகு முன் நீக்கப்பட்ட திரையை மறுபடியும் திரையிடப்படும்.
அதன் பிறகு அவர்கள் எல்லோரும் அந்த ஹலீலத்துல் குதுஸியில் இருந்து சுவர்க்கத்திற்கு போகும்படி உத்தரவு வாகும்.

அவனைத் திரும்ப திரும்ப பார்க்க ஆசைப்படும் ஆத்மாக்கள் ஒவ்வொன்றும் சுவர்க்கம் செல்லாமல், அவன் உதயமான இடத்தையே உற்று நோக்கித் தேடும். தேடிக் கொண்டே அங்கேயே நிற்கும் .

" ஒவ்வொரு வெள்ளிக் கிழமையிலும் என் தரிசனம் உங்களுக்கு கிடைக்கும் "
என்ற உறுதி மொழி அல்லாஹு தஆலாவிடமிருந்து வெளியானதும் ,
ஹலீலத்துல் குதுஸியில் இருந்து அவரவர் சுவர்க்கத்திற்கு வந்து அவரவர் தானத்தில் தரிபட்டு சதாகாலமும் சுகித்திருப்பார்கள் .

இவ்வித இன்பச் சுகமான பரமானந்தத்தில் எல்லோரும் முழ்கி காலாகாலமும் வாழ்ந்திருப்பார்கள் .
ர.ரா

இத்துடன் " இஸ்லாமிய அடிப்படைக்
கோட்பாடுகள் " - என்ற தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது .
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மது
யா ரப்பி ஸல்லி அலைஹி வஸ்ஸல்லம் .

## தன்னை அறிதல் .

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 109)



"உண்மை (ஹக்) அவர்களுக்குத் தெளிவாகும் பொருட்டு, நம்முடைய அத்தாட்சிகளை உலகத்தின் பல பாகங்களிலும் காண்பிப்பதுடன், அவர்களுக்குள்ளாகவும் அதிசீக்கிரத்தில் நாம் (அத்தாட்சிகளைக்) காண்பிப்போம் (நபியே!) உங்கள் இறைவன் நிச்சயமாக அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கின்றான் என்பது (உங்களுக்கு) போதாதா?
(குர்ஆன்: 41:53)
"தன்னை அறிந்தவன் தன் இறைவனை அறிந்தவனாவன் " - நபி மொழி தன்னை அறிவது என்பது இறைவனைப் பற்றிய ஞானத்துக்குத் திறவுகோலாகும்.

" அவன் -
வெகு தொலைவில் இருப்பான் .
அந்த வானத்தைப் போல,
மிக அருகில் இருப்பான்
நம் இதயத்தைப் போல .. "

உன்னை விட உனக்கு மிகவும் சமீபமாய் இருப்பது வேறு எதுவுமில்லை. அப்படி இருக்க நீ உன்னை அறியாவிட்டால் , மற்றவைகளை நீ எங்ஙனம் அறிந்து கொள்வாய் ?
ஒரு சீடன் தன் குருவோடு முதல் முறையாக மிகப் பெரிய மலைப் பள்ளத்தாக்கிற்கு பயணமானான். வானுயர மலையும் , கிடுகிடு பள்ளத்தாக்கும் , மலைகளுக்கு நடுவே எறும்பு போல தான் இருப்பதைக் கண்டு அவனுக்கு பிரமிப்பையும் ஊட்டின.
கீழே இருக்கும் தன் நண்பனை " வாடா " என்றழைத்தான் .
சப்தமாய் மலையிலிருந்து " வாடா " என்று எதிரொலித்தது .
தன்னை " யார் வாடா ! " என்று கூப்பிட்டது என்பதைத் தெரிந்து கொள்ள
" யாரது? "என்றான் மலையும் "யாரது?" திரும்பக் கேட்டது .
சிறுவன் கொஞ்சம் பயத்தோடு, " நீங்க யாரு ? " என்றான் உடனே மலையும் அதேக் கேள்வியைத் திரும்பக் கேட்க, பயந்து ஓடிப்போய் குருவைப் பார்த்து நடந்ததைச் சொன்னான்
குரு சிரித்தப்படி சொன்னார் .

" உனக்குள்ளே கேள்வியும் உனக்குள்ளே பதிலும் நீயே நீதான்! " என்றார் குர்ஆன் வசனம் (41 : 53 ) சற்றென எளிதாக விளங்கிற்று .
ஓர் அமாவாசை. நடுநிசி. இறைவனைப் பார்க்க ஆசைப்பட்ட தன் முரீதிடம் ஞானகுரு , " தூரத்தில் தெரியும் காட்டு மண்டபத்தைக் காட்டி அதனுள் நீ தேடும் உன் இறைவன் இருக்கின்றான் போய் பார் . அதற்கு முன் அவனைப் பற்றி சொல்லுகின்றேன் கேள். எந்த தேவையும் இல்லாத அங்கே ஒரே ஒரு ஒருவனாக அவன் மட்டும் தனித்து இருக்கிறான் . அவனை யாரும் பெறவும் இல்லை அவன் யாரையும் பெறவும் இல்லை அதாவது அவனுக்கு உறவுகள் இலலை . மேலும் அவனுக்கு ஒப்பாக எதுவும் இல்லை . அப்படிப்பட்டவனை நீ போய் பார்க்கப் போகிறாய் போ போய் பார் " எனறார் .

அந்த மண்டபத்திற்கு ஒரே ஒரு கதவு மட்டுமே . முரீது உள்ளே போனார் ஒரே இருட்டு ஆழ்ந்த நிசப்தம் ஆசனமிட்டு கண்ணை மூடவும் அந்த கதவும் "படார்" மூடப்பட்டது
ஞானி சொன்னதை மனம் திரும்ப திரும்ப நினைத்துக கொண்டே இருந்தது காலைப் பொழுதில் ஞானி கதவை திறக்கிறார் .
மூரீதிடம் "அவனைப் பார்த்தாயா ? "
" இல்லை உணர்ந்தேன் "
"எப்படி?"
" அவன் தன்னந்தனியானவன் ஆனால் நான் அவனோடு இருக்கும் போது அவன் எப்படி தன்னந்தனியானவன்?
உறவுகள் அற்றவனோடு எனக்கு மட்டும் எப்படி உறவு வரும் ?
அவனுக்கு ஒப்பாக எதுவுமே இல்லாத போது , எதுதான் என் கூட இருக்க முடியும் ? ...இருந்தாலும் அவன் இருந்தான். அவன் எநத தேவையும் இல்லாமல் அங்கே ஒரே ஒருவனாக அவன் மட்டும் தன்னந்தனியாக தனித்து இருந்தான் .
"இதுதான் ஹக் " என்றார் ஞானகுரு.
கதவு திறக்கும் போதே முரீதின் முகத்தில் புத்தொளி வீசக் கண்டார் ஞானிகுரு . . . . இப்போ நீங்க சொல்லுங்க அந்த பழய மண்டபத்தில் இருந்து யார்?
ர.ரா

இறைவனை அறிதல் .
(மஃரிபத்துல்லாஹ்)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 110)



இறைவனை முஸ்லிம்கள் அறிந்திருப்பார்கள். இருக்கட்டும் .ஆனால் இறை நிராகரிப்பாளர்கள் அறிந்திருப்பார்களா ? என்றால் அறிந்திருப்பதாக இறைவனே குர்ஆனில் அதை பதிவு செய்கிறான். பாருங்கள் ....

நபியே! நீங்கள் அவர்களை நோக்கி "பூமியும் அதில் உள்ளவைகளும் யாருக்குரியன? நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள்" எனக் கேளுங்கள்.

அதற்கவர்கள் "அல்லாஹ்வுக்குரியனவே" என்று கூறுவார்கள். (குர்ஆன் : 23:84 , 85)

"எல்லா பொருள்களின் அதிகாரம் யார் கையில் இருக்கின்றது? யார் அனைவரையும் பாதுகாக்கிறான். அவனை ஒருவரும் பாதுகாப்பதில்லை. நீங்கள் அறிந்திருந்தால் அவன் யார் எனக் கூறுங்கள்" எனக் கேளுங்கள்.

அதற்கவர்கள் எல்லா அதிகாரங்களும் "அல்லாஹ்வுக் குரியதுதான்" என்று கூறுவார்கள். ".

(குர்ஆன் : 23: 88, 89)

நபியே! நீங்கள் அவர்களை நோக்கி "வானங்களையும் பூமியையும் படைத்தவன் யார்? சூரியனையும் சந்திரனையும் தன் திட்டப்படியே நடக்கும்படி செய்தவன் யார்?" என்று அவர்களைக் கேட்பீராயின் அதற்கவர்கள் "அல்லாஹ்தான்" என்று நிச்சயமாகக் கூறுவார்கள்.

(குர்ஆன்: 29:61)

" நபியே! நீங்கள் அவர்களை நோக்கி மேகத்திலிருந்து மழையை பொழியச் செய்பவன் யார்? அதனைக் கொண்டு இறந்த பூமியை உயிர்ப்பிப்பவன் யார்? என்று நீங்கள் அவர்களைக் கேட்பீராயின் அதற்கவர்கள் "நிச்சயமாக அல்லாஹ்தான்" என்று கூறுவார்கள்.

(குர்ஆன்: 29:63)

இந்த அறிதல் போதுமா ? என்றால் , இது மஃரிபத்துல்லாஹ் இல்லை.

அப்போ எப்படி அறிவது ?

அல்லாஹுத் தஆலாவுக்கு தாத்து என்ற வுஜூத் என்ற உள்ளமை உண்டு. ஸிபத்து என்ற பண்பு உண்டு.

பிஅல் என்ற செயல்பாடு உண்டு. இஸ்மு என்ற நாமம் உண்டு . அல்லாஹுத் தஆலாவுக்கு தாத்து உண்டென்று மாத்திரம் அறிந்திருக்க வேண்டியது அல்லாமல் , அந்த தாத்து எது எப்படிப்பட்டது என்று ஆய்ந்தறியக் கூடாது . அதற்கு தாத்துக்கு ஜௌஹரா என்கிற ஆதாரம் இராது .

அல்லாஹுத் தஆலாவுக்கு தாத்து என்ற வுஜூத் என்ற உள்ளமையும், கிதமாகிய பூர்வமும் , பகாவாகிய அழியாமையும், முகாலபத்துன் லில்ஹவாதி தாகிய ஒப்பில்லாமையும், கியாமு பிநப்ஸிஹியாகிய தன்னில் தானிருத்தலும் , வஹ்தா னிய்யத்தாகிய ஒருமையுமுள்ளவன் , இந்த ஆறுவகை ஸிபத்துகள் என்ற பண்புகள் உள்ளவன்.

இவைகளைத் தவிர ஹயாத் (ஜீவன் ) , இல்மு (அறிவு) , இறாதத்து (நாட்டம்) , குதறத்து (தத்துவம் ) ஸம்உ ( கேள்வி ),

பஸறு (பார்வை ), கலாம் (பேச்சு) என்னும் இந்த ஏழு ஸிபத்துகளும் அவனுக்கு உண்டு.

ஆகையால் அவன் ரூஹின்றி ஹயாத் உள்ளவன் , புத்தி இன்றி அறிவுள்ளவன், இருதயமின்றி நாட்டமுள்ளவன், அவயவமின்றி தத்துவமுள்ளவன் , செவியின்றிக் கேள்வியுள்ளவன், கண்ணின்றிப் பார்வையுள்ளவன் , நாவின்றிப் பேச்சுள்ளவன் இந்த ஸிபத்துகள் அவனுக்கு வாஜிபாகிய அவசியமாகிறது .

இந்த அவசியமான ஸிபத்தான பண்புகளுக்கு எதிரான ஸிபத்துகள் உண்டு. இதற்கு " **முஸ்தஹீல்** " என்று பெயர் .

அவை இல்லாமை , அழிவுடைமை , அபூர்வம் ,வேறென்றிலிருத்தல் , பன்மை ஆகிய ஆறும் , மரணம், மூடம், நாட்டமின்மை , இயாலமை , செவிடு, குருடு , ஊமை ஆகிய ஏழும் ஆக 13 ஆகும் . ஜாயிஸான ஆகுமான ஸிபத்துகள் அநேகம் உண்டு . அவற்றில் ஆக்கல், அழித்தல் , இரக்ஷித்தல் , காத்தல் முதலியனவும் உண்டு.

அல்லாஹுத் தஆலாவின் செயலுக்கு கருவியும் , காலமும் இல்லை. அதில் தாமதம், தடை , தேவை , மிடை , பிரயாசை , சடைவு இவைகளில் ஒன்றும் இராது.

எந்தப் படைப்பை எவ்விதம் படைக்க நாடுவானோ , அந்தப் படைப்பை அவ்விதமே உண்டாக்குவான் .
ஆனால் அவன் படைக்கப்பட்டதில் ஆலமுல் அம்று என்றும், ஆலமுல் கல்கு என்று இரு வகை உண்டு .
ஆலமுல் அம்று ஏதுமின்றி உண்டானது அவை அறுவாஹ் (ஆத்மா ) போன்றவை. ஆலமுல் கல்கு ஏதுவால் உண்டானது .அவை அஜ்ஸாம் ( ஜடம் ) போன்றவை .
அவன் ஆதியில் தன்னில் தானாய்த் தானன்றி ஒரு பொருளும் இல்லாதிருக்கையினாலேயே தன்னை அறியத்தக்க ஒன்றை உண்டாக்க நாடினான். அந்த நாட்டத்தின் படியே உலகத்தைப் படைத்தான்.
உலகத்தைப் படைக்கு முன்னமே எல்லாவற்றையும் பற்றிப் பொதுவும் , விவரமுமாகக் கற்பனை செய்திருக்கிறான்.
அந்தப் பொதுக் கற்பனையை 'கலா ' என்றும் , விவரக் கற்பனையை 'கதரு ' எனப்படும் .
பொருளைப் படைக்கும் முன் 'அஃயான் (வஸ்துகள்) தாபித்தா (தரிபாடு) என்றும், படைத்தப் பின் ' ' 'அஃயான் (வஸ்துகள்) காறிஜா ' (வெளிப்பாடு) எனப்படும்.

ஒரு அணுவாவது அவன் ஆக்காமல் ஆவதும் இல்லை ; அழிக்காமல் அழிவதும் இல்லை. அவன் தன் நாட்டத்திற்கு மாறு செய்கிறவனும் இல்லை .
நான் சொன்னதெல்லாம் கொஞ்சம் இன்னும் அவனைப் பற்றி அறிய ...

اَلَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ ۛ اَلرَّحْمٰنُ فَسْــٴَــلْ بِهٖ خَبِيْرًا
அவனே வானங்களையும், பூமியையும், அவற்றிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்; (அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்பீராக. (குர்ஆன்:25:59)
ர.ரா

ஆலம் 01 _ (உலகம் 01)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 111)




ஆலம் என்பது உலகம் . அதற்கு இனங்களும் , பெயர்களும் உண்டு .
ஆலமானது 1)ஆலம் அறுவாஹ் , 2)ஆலம் மிதால் , 3)ஆலம் அஜ்ஸாம்
ஆலம் அறுவாஹ் என்பது ஆகிறா , ஆலம் மிதால் என்பது பறுஜக் (கபர்)
ஆலம் அஜ்ஸாம் என்பது துனியா.
இந்த 3 ம் சேர்ந்து ஆலம் .ஆலமுல் கைபு அல்லது ஆலமுல் மலக்கூதது ;
ஆலமுஷ் ஷஹாதத்து, அல்லது ஆலமுல் முல்கு என்று இருவகைப்படும் .
கைபும், மலக்கூத்தும் மறைவு ; ஷஹாதத்தும் , முல்கும் வெளிப்படை .
இன்னும் ஆலத்தின் பிரிவுகளுக்கு
ஜபறூத்து , லாக்கூத்து , மலக்கூத்து , நாஸூத்து என்னும் பதவிகளும் உண்டு.
ஆலத்தை கௌன் என்றும் சொல்வார்கள். கௌன் என்றால் ஆக்கப்பட்ட்து , அதுதான் கங்கு என்றும் சொல்லப்படும் .
ஆக்கப்பட்டது அல்லது படைக்கப்பட்ட ஒவ்வொரு வஸ்துவும் சரி , ஒவ்வொரு மனிதரும் சரி ஆலந்தான் . ஆனது பற்றியே உலகத்தை ஆலமுல் அக்பரு (பெரியது) என்றும் , மனிதனை ஆலமுல் அஸ்கரு (சிறியது) என்று சொல்லப்படுகிறது .

அலி (ரலி ) அவர்கள் ஆலமுல் அக்பரு , ஆலமுல் அஸ்கரு இரண்டையும் ஒப்பிட்டு கருத்து சொல்லியுள்ளார்கள் . தெரிந்தவர்கள் பின்னூட்டத்தில் சொல்லவும் .
பொதுவாக அண்டம் என்றால் இந்த உலகத்தையும், பிண்டம் என்றால் நமது உடலையும் கூறுவார்கள் .
ஆனால் அண்டத்தில் அண்டம், அண்டத்தில் பிண்டம், பிண்டத்தில் அண்டம், பிண்டத்தில் பிண்டம் உள்ளன .
நமது உடலில் பிண்டத்தில் பிண்டம் நமது கழுத்துக்கு கீழ் உள்ள பகுதியாகும் .
பிண்டத்தில் அண்டம் கழுத்துக்கு மேல் உள்ள தலைப் பகுதி ஆகும் . குறிப்பாக அது மூளையை குறிக்கும்
அண்டத்திற்கும் , பிண்டத்திற்கும் இடையில் கண்டம் உள்ளது. அது போல அண்டத்தில் அண்டம் ஆகாயம் ஆகும்.
ர.ரா

ஆலம் 02 _ (உலகம் 02)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் (112)



அல்லாஹு தஆலா தன்னில் தானாய்த் தனித்திருக்கையில் தன்னை அறியத் தக்க வஸ்துவை உண்டாக்க நாடியிருந்தபடி நூர் முஹம்மதிய்யாவைப் படைத்தான்.

நூர் முஹம்மதிய்யா என்பது நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளி. அந்த ஒளிக்கு பல நாமங்கள் உண்டு. அதிலிருந்துதான் மற்ற படைப்புகள் எல்லாவற்றையும் வகுத்தான். அதனால்தான் அந்த நூர் முஹம்மதிய்யா என்ற ஒளியே அனைத்து படைப்புகளுக்கும் வித்து.

நூர் முஹம்மதிய்யா ஒளியானது முதலில் நூராய் பிறகு நபுஸாய் ( இச்சையாய்) பிறகு தபீ அத்தாய் ( சுபாவமாய் ) பிறகு ஜிஸ்ம் (ஜடமாய்) ஆயிற்று .
பிறகு ஜிஸ்மிலிருந்து (ஜடத்திலிருந்து)
நீர் , மண், நெருப்பு , காற்று ஆகிய பஞ்ச பூதங்கள் தோன்றின.
பஞ்ச பூதங்கள் பகீத்து (சூக்குமம் ) என்றும் முறக்கபு (ஸ்தூலம் ) என்றும் இரு வகைப்படும்.
அர்ஷு முதல் தகுத்தஸ்ஸறா ( பாதாளம்) வரை ஒரே ஆலம் . அதில் மேல் , கீழ் ,நடு என்று மூன்று தானங்கள் உண்டு .இந்த மூன்று தானங்களிலும் ஸ்தூலம், சூக்குமம் , காரணம் என்னும் 3 வகை சரீரங்களும் அடங்கப் படைத்து, ஒரே கோர்வையாக ஆலம் அமைக்கப்பட்டிருக்கிறது . அந்த ஒரே கோர்வையில்தான் ஆலம் அறுவாஹ், ஆலம் மிதால், ஆலம் அஜ்ஸாம் என்னும் 3 இனமும் அடங்கியிருக்கின்றன .
மேல் தானம் அர்ஷு முதல் ஏழு வானம் வரையும் , கீழ் தானம் முதலாவது வானம் முதல் தகுதஸ்ஸறா ( பாதாளம்) வரையும் நடுத் தானம் ஏழு வானங்களாகும் .
மேல் தானத்தில் அர்ஷு, குர்ஸி , லௌஹு, (விதிப் பலகை) , கலம் (எழுதுகோல்) , சுவர்க்கம் முதலியவைகளும் , கீழ்தானத்தில் பூமி , மலை, கடல் , நரகம் முதலியவைகளும் நடுத் தானத்தில் வானம் , பலக்கு (சூரிய சந்திர , கிரகங்கள் , நட்சத்திரங்கள் ) முதலியவைகளும் அடங்கி இருக்கின்றன.

وَلَـقَدْ جَعَلْنَا فِى السَّمَآءِ بُرُوْجًا وَّزَيَّـنّٰهَا لِلنّٰظِرِيْنَۙ
நிச்சயமாக நாம்தான் வானத்தில் பெரிய பெரிய நட்சத்திரங்களை அமைத்து பார்ப்பவர்களுக்கு அதனை அலங்கார மாகவும் ஆக்கி வைத்தோம்.
(அல்குர்ஆன்: 15:16)

அக்கினி , காற்று, நீர், மண் ஆகிய இந்த பூதங்களின் தானம் முதல் வானம் தொடுத்து முதற் பூமி வரையும் நான்கு தட்டுகளாய்ப் பொருந்தி இருக்கின்றது .
ஆனால் அக்கினித் தானம் முதல் வானத்திலும், மண் தானம் முதற் பூமியிலும் இருக்கின்றன. இவைபோக காற்றும், நீரும் , ஆகாயத்தில் பொருந்தி இருக்கின்றன .அந்தத் தானங்களுக்கு மண்டலம் என்று பெயர் .
ர.ரா

ஆலம் 03 _ (உலகம் 03)
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 113)



اَ لْحَمْدُ لِلّٰهِ فَاطِرِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ جَاعِلِ الْمَلٰٓٮِٕكَةِ رُسُلًا اُولِىْۤ اَجْنِحَةٍ مَّثْنٰى وَثُلٰثَ وَرُبٰعَ يَزِيْدُ فِى الْخَـلْقِ مَا يَشَآءُ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! வானங்களையும் பூமியையும் அவனே படைத்தான். மலக்குகளைத் தன்னுடைய தூதைக் கொண்டு போகிறவர்களாகவும் ஆக்கினான். அவர்கள் இரண்டிரண்டு, மும்மூன்று, நான்கு நான்கு இறக்கைகள் உடையவர்களாக இருக்கின்றனர். அவன் விரும்பியதைத் தன் படைப்பில் பின்னும் அதிகரிப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் ஆற்றலுடையவன்.
(அல்குர்ஆன்:35:1)

மலக்குகள் அர்ஷ் முதல் 7 வானம் வரையும் , அங்கிருந்து 7 உலகங்களிலும் சஞ்சரிப்பார்கள் . 7 வானம் சரி அதென்ன 7 பூமி ...?
ஏழு வானங்களையும், அவைகளைப் போல் பூமியையும் அல்லாஹ் தான் படைத்தான். இவைகளில் (தினசரி நிகழக்கூடிய) எல்லா விஷயங்களைப் பற்றிய கட்டளை இறங்கிக்கொண்டே இருக்கின்றது. குர்ஆன் ( 65 : 12)

ஜின்களும் , ஷைத்தான்களும், முதற் பூமிக்குக் கீழ் இருக்கிறார்கள் .இவர்கள் 7 பூமியிலும் , முதல் வானம் வரையிலும் சஞ்சரிப்பார்கள் .
நரகம் பாதாளத்தில் இருக்கின்றது. ஆகிறாவில் நரகம் இங்கிருந்து இடப்பெயர்ச்சி செய்யப்படும் . மனிதர்களும் , மற்ற ஜீவராசிகளும், மற்றப் பொருட்களும் முதற் பூமியில் இருப்பது உங்களுக்குத் தெளிவாக தெரிந்த விஷயம் . விளக்கத் தேவையிராது .

அர்ஷு , குர்ஹு , லவ்ஹு ( விதிப் பலகை ) கலம் (எழுதுகோல் ), சுவர்க்கம் இவைகள் ஒளியினால் படைக்கப்பட்டவை.
7 வானங்களும் தட்டுத்தட்டாகப் புகையினாற் படைக்கப்பட்டவை சூரியன், சந்திரன் மற்ற கிரகங்கள், நட்சத்திரங்கள் ஆகிய வானத்தின் புகையினாலும் வாயுக்களாலும் படைக்கப்பட்டவை. 7 பூமிகளும் தட்டு தட்டாக மண்ணாற் படைக்கப்பட்டவை.

மலக்குகள் என்னும் வானவர்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள் . அவர்களுக்கு பிறப்பு , ஊண் , உறக்கம் இவைகள் இல்லை. ஆனால் இறப்பு உண்டு. இவர்கள் படைப்பில் உயர்ந்தவர்கள், மேலான பதவியை உடையவர்கள், குணத்தில் சிறந்தவர்கள்.
மலக்குகளின் உருவம் ஆன்ம ரூபம். தேவைபடும் போதெல்லாம் வேறு வேறு உருவமும் எடுப்பார்கள் . ஜடம் சூக்குமம் .
அல்லாஹ்தஆலாவை துதிப்பதும், அவன் ஏவலைச் செய்வதுந்தான் அவர்களின் வேலை. அவர்களுக்கு சுக துக்கம் இல்லை . அவர்களை கூட்டம் கூட்டமாக வகுத்து அநேக கூட்டங்களை அர்ஷைச் சுமந்தும், சூழ்ந்தும் நிற்க அமைத்து மற்றக் கூட்டங்களைச் சுவர்க்கத்திற்கும், பெரிய பெரிய கிரகங்களுக்கும் , கடல்களுக்கும் மலைகளுக்கும் , ஏன் நரகத்திற்கும் கூட அதிபதிகளாக்கி , ஒவ்வொரு கூட்டத்திற்கும் , ஒவ்வொரு தலைவர்களையும் நியத்துள்ளான் .

அவர்களில் ஜிப்ரயீல் (அலை) , மீக்காயீல் (அலை) , இஸ்றாபீல் (அலை) , இஸ்றாயீல் (அலை) ஆகிய இந்த நால்வரும் மேலானவர்கள். இவர்களைத் தவிர இந்த நால்வர் செய்யச் சொல்லும் சின்னத் தலைவர்களும் குறிப்பிட்ட பொறுப்புகளை வகிப்பார்கள். அதாவது சுவர்க்கத்தின் அதிபதி ரிள்வான் என்ற மலக்கும் , நரகத்திற்கு மாலிக் என்ற மலக்கும் நியமித்திருப்பது போல் .
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சிருஷ்டித்தல் , உயிர் கொடுத்தல் , நபிமார்களுக்கு வஹி கொண்டு வருதல் , லைலத்துல் கதிர் இரவில் 7 பூமிக்கும் அருளைக் கொண்டு வருதல் .

மீக்காயீல் (அலை) அவர்கள் மழை மேகங்களை கூட்டி பொழிவிக்கவும் , அம் மழை நீரால் உணவு தாவரங்களை முளைப்பிக்கவும், இரணம்,ரிஷ்க் யார் யாருக்கு எவ்வளவு என்பதை வகுக்கவும், அதிபதியாக்கி உள்ளான் .

இஸ்றாபீல் (அலை) அவர்களை அழியப்படுகிறவைகளை அழித்தொழிக்கவும், பிறகு அவைகளை ஆக்கவும் அதிபதி. உலக அரசாட்சிகளும் இதில் அடங்கும் என்பதாக சில கிதாபுகளில் சொல்லப்பட்டிருக்கிறது .
இஸ்றாயீல் (அலை) அவர்கள் ஜீவகோடிகளின் உயிர்களை கைப்பற்றி மரணிக்க வைக்கும் அதிபதி.இஸ்றாயீல் (அலை) அவர்கள் நல்லடியார்களின் உயிரை வாங்க வரும் போது வெள்ளை நிற சுடர் வீசும் மலக்குகள் இவர் இட்ட ஆணைப்படி அணியணியாய் வருவதும் ,
கெட்டடியார்களின் உயிரைப் பறிக்க வரும் போது கருப்பு நிறத்தில் பயங்கர உருவத்தில் உள்ள மலக்குகள் இவர் இட்ட ஆணைப்படி அணியணியாய் கூட்டி வருவதும் இவர்களின் பொறுப்பு.
ர.ரா

**Rahmath Rajakumaran**
7 வானங்கள்
முதல் வானத்திற்கு வக்கீ ஃ என்று பெயர் இது பச்சை மரகததால் படைக்கப்பட்டுள்ளது
2 வது வானத்திற்கு அர் ஃபலூன் என்று பெயர் இது சுத்த கட்டி வெள்ளியினால் படைக்கப்பட்டுள்ளது
3 வது வானத்திற்கு ஃகைத்தூம் என்று பெயர் இது சிவந்த மாணிக்கத்தால் படைக்கப்பட்டுள்ளது
4 வது வானத்திற்கு மாஊன் என்று பெயர் இது வெண் முத்தினால் படைக்கப்பட்டுள்ளது
5 வது வானத்திற்கு தப் ஃ காஉ என்று பெயர் இது சிவந்த தங்கத்தினால் படைக்கப்பட்டுள்ளது
6 வது வானத்திற்கு வஃப்னாஉ என்று பெயர் இது மஞ்சள் மாணிக்கத்தால் படைக்கப்பட்டுள்ளது
7 வது வானத்திற்கு அரூபாஉ என்று பெயர் இது இலங்கும்படியான ஒளியினால் படைக்கப்பட்டுள்ளது
என்று ஸல்மான் ரலி அவர்கள் ரிவாயத்து செய்துள்ளார்கள்
இறைவன் பூமியில உள்ள அனைத்ததையும் உங்களுக்காக படைத்தான்
மேலும் அவன் வானத்தைப் படைக்கக் கருதிய போது அதனை ஏழாகவும் அமைத்தான் .
. . . . . . குர்ஆன் 2 : 29

ஆலம் 04 _ (உலகம் 04)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 114)



பஞ்ச பூதங்களான நீர், நிலம், நெருப்பு காற்று , ஆகாயம் இவற்றில் ஜின்கள் (Jinn ) நெருப்பும் , காற்றுமாகிய இரண்டு பூதங்களால் ஆன ஒரு வகை எரியும் நெருப்பாலான புகையில் படைக்கப்பட்டார்கள் .
பெண் கர்ப்பப்பையில் ஆண் இந்திரியத் துளி விழுவதால் மனித உற்பத்தி உண்டாகுவது போல் , பெண் ஜின்களின் கர்ப்பப்பையில் ஆண் ஜின்கள் ஒரு விதமான காற்றை விடுவதால் , நம்மை மாதிரி ஜின்களுக்கும் குழந்தை பிறக்கின்றன.

ஜின்களுக்குப் பிறப்பு , இறப்பு , ஊண் , உறக்கம், சுகம், துக்கம் முதலானவைகள் உண்டு. அவர்களின் மூல பிதா மாரிஜு , ஜடம் சூக்குமம் , ஸ்தூல ஜடமும் பெறுவார்கள் .

**சூக்குமம்** என்றால் நம் கண்களுக்கு தெரியாது , ஸ்தூலம் என்றால் நம் கண்களுக்கு தெரியும் .
எந்த உருவத்திலும் தோன்றுவார்கள். எவ்வித நுட்பமான வஸ்துவிலும் நுழைத்துக் கொள்ளும் தத்துவம் அவர்களுக்கு உண்டு .
"ஷைத்தான், மனிதனின் இரத்த நாளங்களை எல்லாம் ஓடுகிறான்" _ஹதீஸ்
ஷைத்தான்கள் ஜின்களில் ஒரு வகை. அல்லாஹ்தஆலாவின் கட்டளையான விதிவிலக்குகளுக்கு ஜின்கள் உட்பட்டவர்களே.
மலக்காக இருந்தாலும் சரி, ஜின்னாக இருந்தாலும் சரி , எந்த உருவத்தை அவர்கள் எடுக்கிறார்களோ அந்த உருவத்திற்குரிய சக்தியைத்தான் பெற முடியுமே தவிர அபர்மிதமான சக்தியை ஒரு காலும் பெற முடியாது .
மிகப் பெரிய ஜின்னான இம்ப்ரீத் ஜின் , பாம்பு உருவமோ , பூனை உருவமோ எடுத்தால் அவற்றுக்குரிய சக்திதான் இருக்குமே தவிர ஜின்னுடைய சக்தி இருக்காது . இயற்கையின் நியதியான இறை நியதி .

புலன்களுக்கு புலப்படாத உயிரினமான ஜின்களைக் கொண்டு நபி சுலைமான் (அலை) அவர்கள் பெரிய பெரிய மாளிகைகளையும் , சிற்பங்களையும் அமைத்ததாக குர்ஆன் ....
" அன்றி, ஜின் ஆகியவைகள் ஸுலைமான் விரும்பிய மாளிகைகளையும், சிலைகளையும், (பெரிய பெரிய) தண்ணீர்த் தொட்டிகளைப் போன்ற பெரும் கொப்பரைகளையும், அசைக்க முடியாத பெரிய (பெரிய) "தேகு" (சமையல்பாத்திரங்)களையும் செய்து கொண்டிருந்தன. (அவருடைய குடும்பத்தினரை நோக்கி) "தாவூதுடைய சந்ததிகளே! இவைகளுக்காக நீங்கள் (நமக்கு) நன்றி செலுத்திக் கொண்டிருங்கள்" (என்று கட்டளையிட்டோம்). எனினும் என்னுடைய அடியார்களில் நன்றி செலுத்துபவர்கள் வெகு சொற்பமாகவே இருக்கின்றார்கள். (குர்ஆன் : 34:13)
ர.ர

ஆலம் 05 _ (உலகம் 05)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 115)



தாவரங்கள், மரம் முதலியவைகளும் , சூரிய சந்திர நட்சத்திர சம்பந்தங்களைக் கொண்டு நான்கு பூதங்களால் படைக்கப்பட்டது. ஆனாலும் மண்தான் முதற் காரணம்.

ஹைவான்கள் (ஜீவராசிகளான மிருகம், பறவை, ஊர்வன , நீர்வாழ்வான ) நெருப்பு, காற்று, நீர், அக்கினி ஆகிய 4 பூதங்களாலும் படைக்கப்பட்டவை.
இவைகளுக்குப் பிறப்பு , இறப்பு, ஊண், உறக்கம்,சுகம் , துக்கம், இன்பம், துன்பம் எல்லாம் உண்டு . ஜடம் ஸ்தூலம் . பொறியும், புலனும் உண்டு, ஐவகைப் பொறி புலன்களில் குறைந்த பொறி புலனுள்ளவைகளும் இருக்கின்றன

அவைகள் இறந்து அழிந்த பின் ஆகிறாவில் உயிர்த்தெழுந்து அவைகள் ஒன்றுக்கொன்று உள்ள பிரச்சனைகளை தீர்வு செய்யப்படும் இம்மையில் பலஹீனமான ஆட்டை பலமான ஆடு முட்டி இருந்தால் பலஹீனமான ஆட்டிற்கு பலம் கொடுத்து அந்த ஆட்டை முட்டச் செய்து பழி தீர்க்கப்படும் . பின்பு முற்றமுடிய அழிந்தேபோம் .

இன்ஸானாகிய மனிதர்கள் மண், நீர், காற்று, நெருப்பு ஆகிய இந்த நான்கு பூதங்களாற் படைக்கப்பட்டவர்கள்
அவர்களுக்குப் பிறப்பு, இறப்பு, ஊண், உறக்கம் , இன்பம், துன்பம் முதலியவை எல்லாம் உண்டு.
மனிதர்கள் ஐவகைப் பொறி புலன்களுடன் ஆறவதாகிய மன அறிவையும் உடையவர்கள். இந்த மன அறிவைத்தான் அக்கல் என்று சொல்வார்கள் .

ஜடம் ஸ்தூலம் , உண்கிற ஆகாரத்திலிருந்து பிரிக்கிற சத்து அன்னரசமாய் அதிலிருந்து பிரிகிற சத்து ரத்தமாய் அவர்கள் உடலை வளர்க்கும். அந்த ரத்தத்திலிருந்து பிரிக்கிற சத்தே சுக்கிலம் .
இன்னும் மனிதர்கள் மலக்குகளுக்குச் சமமான உயர்பதமுள்ளவர்கள் .அவர்கள் உத்தமர் மலக்குகளுக்கு மேலான பதமுள்ள நபிமார்கள் .மத்திமர் முஃமீன்கள். அதமர் இறை நிராகரிப்பாளர்கள் . மனிதர்கள் என்றைக்கும் அழியாதவர்கள் இவர்களுக்கு மூலபிதா நபி ஆதம் (அலை) அவர்கள் .
இறைவன் மேற்சொன்ன பிரசாரம் ஆலத்தை மனிதர்கள் தவிர மற்ற எல்லாப் படைப்புகளும் அமைப்பதாய் ஒரே கோர்வையாகப் படைத்த பிறகு நபி ஆதம் (அலை) அவர்களை படைக்க நாடியபடி , பூமி முழுவதின் சத்தையும் ஒன்றாகத் திரட்டியெடுத்து , அதைக் கொண்டு அவர்களுடைய ஜடலத்தைப் படைத்தான் .
அப்படி படைத்த அந்த ஜடத்திற்குள் தன் ரூஹைப் புகுத்தி ஹயாத்தாக்கினான். ஹயாத்தானவுடன் எலும்பு, நரம்பு , சதை, ஜவ்வு, ரத்தம் , தோல், ரோமம் ஆகியவை எல்லாம் உண்டாயின . அப்போதே பொறி புலன்களும் உண்டாயின.
ஆதம் (அலை) அவர்களின் தோல் மனிதர்களுடைய நகத்தைப் போலிருந்தது .அது பின்னால் மாற்றப்பட்டது .அதில் மீந்ததுதான் மனிதர்களுக்கு நகமாய் முளைத்தது .
ர.ரா

இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்
ஜூன் 28-ல் "மரணத்திற்குப் பின் ஆன்மாக்களின் நிலை " என்று முதல் கட்டுரை ஆரம்பித்து , லிகா என்னும் இறை தரிசனத்தோடு 108 கட்டுரை தொடர் பதிவுகளாக சுமார் இரண்டு மாதங்களாக ஆகஸ்ட் 30 வரை எழுதியுள்ளேன்.




இப்பெரிய ஆய்வுக்கு நிறைய புத்தகங்களையும், கிதாபுகளையும் ஆய்வுக்குப் பயன்படுத்தி உள்னேன்.
1) FM இப்ராஹீம் ரப்பானி அவர்களால் வெளியிடப்பட்ட சுமார் 70க்கும் மேற்பட்ட அஹ்லெ சுன்னத் மாத இதழ்கள்.

2) அஷ்ஷைகு நாஸிரித்தின் அல்பானீ எழுதிய " இறப்பும் இறுதிச் சடங்கும் "

3) ஹாஜி.ஏ.எம் .அப்துல் சுக்கூர் எழுதிய "மௌத்தை மறவாதீர்கள் "

4) M.S.M அப்துல்லாஹ் (ரஹ்) எழுதிய "ஏகத்துவம் பற்றி அல்குர்ஆன் "

5) அல்லாமா கரீம்கனி (ரஹ்) படைப்புகள்

6) ஷாஹ் ஆமிரி சிஷ்த்தி காதிரி அவர்களால் எழுதப்பட்டு எஸ்பி ஃபசுலுத்தீன் அவர்களால் மொழி மாற்றம் செய்யப்பட்ட "இஸ்லாமிய ஆன்மீகக் கருவூலம் "

7) ஷெய்குனா உமர் வலிய்யுல் காஹிரி (ரலி) அவர்களால் எழுதப்பட்டு முஹம்மது ஜவாஹிர் ஹுஸைன் மன்பஈ அவர்களால் மொழி பெயர்த்த "அகமியம் பொங்கும் அல்லஃபல் அலிஃப்"

8) முஹம்மது பாக்கர் சாஹிப் ஆலிம் காதிரி எழுதிய " ஹிதாயதுல் அனாம் இலாஜியாரதில் அவுலியா இல் கிராம் "

9) முஹ்யித்தீன் இப்னு அறபி(ரஹ்) அவர்களால் "அஸ்ராருல் கல்வத் " என்கிற நூலை எழுதப்பட்டு, ஷெய்கு அப்துல் காதிர் ஸூபி ஹழ்ரத் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட
"கல்வத்தின் இரகசியங்கள்.

10) ஸெய்யிது அப்துல் வஹ்ஹாபு ஆலிம் ஸாஹிபு அவர்கள் எழுதப்பட்ட
" தரீக்குல் ஜன்னா "

11) சுஜாதா அவர்கள் எழுதிய
"கற்றதும் பெற்றதும் "

12, சுஜாதா அவர்கள் எழுதிய
"கி.பி 2000 க்கும் அப்பால் "

13) மற்றும் இணைய தளங்கள்

"இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 01 " 01-09-2019




இத்தொடர் அறிவியல் கலந்து ஆன்மீகம் சொல்ல வருகிறேன் .
" கூட்டிக் கழித்துப் பார்த்தால், இயற்கையின் மீது மனிதன் தொடுத்த எல்லாப் போர்களிலும் முடிவில் இயற்கையே வெற்றி பெற்றிருக்கிறது!

எவையெல்லாம் வெற்றி என நாம் கொண்டாடுகிறோமோ , அவை ஒவ்வொன்றும் இதே முடிவை நிரூபிக்கின்றன " - சி.எஸ் லூயிஸ் என்ற அறிஞரின் ஆதங்கத்தை முன்னிறுத்தி இயற்கையின் சீற்றங்களை படம் பிடித்து காட்டி , அதற்கு பின்னால் படமெடுத்து நிற்கும் இறையின் சீற்றங்களை சொல்ல வருகிறேன் .

விஞ்ஞான உலகம் இயற்கையின் சீற்றத்தை மட்டுமே சிந்திக்கிறதே தவிர இது யாருடைய சினம் என்று ஏனோ சிந்திக்க மறுக்கிறது !

" இங்கே நரக நெருப்பை நீங்க எழுதி கொண்டிருக்கிறீங்க, அங்கே அமேஸான் காடு பற்றி எரிந்து கொண்டிருக்கிறது! ஏன்னு அதை முதல்ல எழுதுங்க..." என்று ஒரு நண்பர் நரக நெருப்பு பதிவில் கேட்ட அந்த தீ பொறியான ஒற்ற கேள்வி இந்த தொடரை எனக்குள் பற்ற வைத்திருக்கிறது !

சொல்லலாம் . நிறைய நிறைய சொல்லலாம் இயற்கையின் போர்வையான ஓஸோன் படலம் கிழிவது நாம படுத்துறங்கும் ஏ.ஸியும் , மீந்து போன உணவைக் கூட ஏழைகளுக்கு கொடுக்காமல் பதுக்கிய நம்ம வீட்டு பிரிட்ஜ்ஜால் தான் என்று சொல்லும் போது உங்களுக்கு கோபம் வராமல் இருக்க வேண்டும் .
இப்பதிவுகள் இயற்கையின் ஆர்வளத்தை உங்களுக்கு முன் எடுத்துக் காட்ட வருகிறேன் . இதனால் ஒரு மரக்கிளையை நீங்கள் முறிக்க முற்படும்போது 2 செ.மீ மழையை உங்க பகுதி இழக்கிறது என்பதை என் பதிவுகளால் நீங்கள் புரிந்து கொண்டால் , என் ஆய்வு இயற்கையால் ஆசீர்வதிக்கப்படலாம். இல்லையேல் ஆடிக் காற்றில் அம்மி பறந்த மாதிரி என் பதிவுகள் இப் பிரபஞ்சவெளியில் எங்கோ ஒரு மூலையில் தூக்கியெறியப்படலாம் .
ர.ரா

**Nasar Abdulnasar** இயற்கை என்ற வார்த்தையே உணர இயலாத பிரமாண்டம் தான் .... அது கண்களால் ரசிக்கும் வரை அதன் அழகு வியப்பை தருகிறது... உதாரணத்திற்கு பட்டம் பூச்சி அல்லது பூக்களோ காணும் போது அதன் அழகு பிரமிக்க வைக்கும் ஆனால் அதன் இறகில் என்ன ஓவியம் என தொட நினைதால் அதன் அழகு கண்களுக்கு புரியாமலே எண்ணங்கலால் உணர இயலாமலே போய் விடும் இது அனைத்துக்குமே பொருந்தும் இதற்கு தான் தமிழிலே அழகான பெயர் சூட்டியுள்ளனர்(**#இனம்புரியாதஉணர்வு**# என்று.. இயற்கையை கண்களால் காட்சி பொருளாக காணும் வரை அனைத்துமே அழகு தான் என்று இப்னுசீனா கூறியதாக படித்த ஞாபகம்

உங்கள் ஆய்வு இயற்கையால் ஆசிர்வதிக்கபடலாம்

யாரேனும் ஒருவருக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தலாம் அல்லது அடுத்த தலைமுறைக்கு கடத்தப்படலாம் உங்கள் இயற்கை குறித்த வரிகளை காண ஆவலாக உள்ளேன்... இன்ஷா அல்லாஹ் உங்கள் கைகளின் எழுத்து மூலமாக அல்லாஹ் . எழுத்துகளை வெளிப்படுத்தட்டும்

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் O2

## Comparison of El Nino to La Nina

**El Nino Weather**

- Rain and flooding along the Pacific coast
- Warm water disrupts food chain of fish, birds, and sea mammals
- Tornadoes and thunderstorms in southern US
- Fewer than normal hurricanes in the Atlantic

**La Nina Weather**

- Snow and rain on the west coast
- Unusually cold weather in Alaska
- Unusually warm weather in the rest of the USA
- Drought in the southwest
- Higher than normal number of hurricanes in the Atlantic

Visual comparison between El Nino and La Nina



எல் நினோ (El Nino) , லா நினா (La Nina )
இதுகளைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா ? - சொல்றேன்.
கடலுக்குள் நீரோட்டங்கள் இருக்கிறது , பூமியின் நதிகளை விட மிகப் பெரிய நதிகள் கடலுக்குள் பிரவாகம் எடுத்து ஓடுகிறது . கடலின் மேற்பரப்பிலிருந்து 2600 அடி ஆழத்தில் , 70 கி.மீ அகலத்தில்,10 முதல் 27 சென்டிகிரேட் வெப்பநிலையில் வேகம் மணிக்கு 5 கிமீ முதல் 25 கி.மீ வரை உள்ள வேகத்தில், அதுவும் குடிக்கும் நன்னீரால் ஓடுகிறது என்று நான் சொன்னால் நீங்கள் நம்ப வேண்டும் . இது களைப்பற்றி குர்ஆன் சொல்வதையாவது கேளுங்கள் .

" அவன்தான் இரு கடல்களையும் ஒன்று சேர்த்திருக்கின்றான். ஒன்று, மிக்க இன்பமும் மதுரமுமான தண்ணீர். மற்றொன்று, உப்பும் கசப்புமான தண்ணீர்.
(இவை ஒன்றோடொன்று கலந்து விடாதிருக்கும் பொருட்டு) இவ்விரண்டுக்கும் இடையில் திரையையும், மீற முடியாத ஒரு தடையையும் ஏற்படுத்தி இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 25:53)

கடல் நீரோட்டங்களை " குடா நீரோட்டம் " என்கிறார்கள் . இது அட்லாண்டிக் கடலிலிருந்து , மெக்ஸிக்கோ வழியாக புளோரிடோவை அடைந்து மீண்டும் அட்லாண்டிக் கடலுக்கு வந்து இன்னொரு இடத்தில் மீட்டிங் போட்டு ,
3 பிரிவுகளாகப் பிரிந்து
" நீ கிரீன்லாந்துக்குப் போ, நான் நார்வே, அயர்லாந்துக்குப் போகிறேன். அவன் இளவாட்டம் 25 கிமீ வேகத்தில் போறவன் ஆகையால் அவன் பிரான்ஸ் , ஸ்பெயினுக்குப் போகட்டும் . ஏப்பா..! யாரையும் விட்டு வைக்காதீங்க, பய புள்ளேயை சும்மா வைச்சு காய்ச்சுங்க காய்ச்சி "
27 சென்டிகிரேட் வெப்பநிலையில் வெந்நீர் ஆறு போல் ஓடுவதால், இந்த வெப்ப நீரோட்டத்திற்கு "எல்நினோ ". இது போகும் வழியை ஒட்டியுள்ள நிலப்பகுதியெல்லாம் உஷ்ணத்தை உண்டு பண்ணி விடுகிறது.
அடுத்து, குடா நீரோட்டங்களில் குளிர் நீரோட்டம் . இது அமெரிக்க கடற்கரையோரப் பகுதி நியூயார்க் வரை இதன் பாதிப்பு அதிகம் இருக்கும் . அதாவது குளிர்காலத்திலேயே மேலும் குளிரை அதிகப்படுத்தி விடும்.
" சொட்டர் மேல் எத்தனை சொட்டர் போடுவீங்க? மூச்சு விடுவீங்களே...அது போதும் , உள்ளே புகுந்து கிளப்பி சும்மா விடுவோம்ல கிளப்பி ,யாரு கிட்டே "

இந்த இரு குடா நீரோட்டங்களால் உலகின் பல பகுதி வறட்சி , அட மழை விடாது பெய்ந்து எங்கும் வெள்ளக்காடு, பஞ்சம் , பிளேக் , காட்டுத் தீ...இப்படி பெரும் பெரும் துன்பத்தையெல்லாம் உலக மக்களுக்கு வாரி வாரி வழங்கி ,
"ஒழுங்கா இருங்க, இல்லையேல் மறுபடியும் வருவேன்" என்று சொல்லிவிட்டு போகும் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.
இதுகளைப் பற்றி குர்ஆனில் அவன் சொல்வதைக் கேளுங்கள் .
"நிச்சயமாக நாம் மூஸாவுக்குத் தெளிவான ஒன்பது அத்தாட்சிகளை கொடுத்திருந்தோம்; அவர் அவர்களிடம் (அவற்றைக் கொண்டு) வந்தபோது, (என்ன நடந்தது என்று) பனீ இஸ்ராயீல்களிடம் (நபியே!) நீர் கேளும்."
(அல்குர் ஆன்- 17: 101)

1. கைத்தடி பாம்பாக மாறுதல்.
2. சட்டைப்பைக்குள் கையை நுழைத்ததும் கை பிரகாசமாக ஆகுவது.
3. பஞ்சத்தாலும்.
4. கனிவகைகளின் சேதத்தாலும்
5. கனமழையால்
6. தலைப் பேனால்.
7. தவளையால்.
8. வெட்டுகிளியால்.
9. இரத்தத்தால்.
இந்த 9 அத்தாட்சிகளில் 3வது , 4 வது ,

5 வது அத்தாட்சி கொஞ்சம் பாருங்கள்.... இங்கேதான் இங்கேதான் குடா நீரோட்டங்களின் ஆட்டமே இருக்கிறது என்று இப்போது விஞ்ஞானிகள் கூட்டம் போட்டு கூப்பாடு போட்டங்க !
ஐ.நா கூட்டம் போட்டு அதுகளைக் கூட்டி சமாதான ஒப்பந்தம் போட முடியாது. காரணம் , அதுகள் அல்லாஹ்வின் போர்ப் படைகளில் ஒன்றானது .
குடா எல் நினோ : "என் தங்கச்சி
லா நினா வையும் கூட்டிக் கொண்டு இன்னும் தொடர்ந்து வருவேன் "
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் O3
















பெரும் மழை , பெரும் வெள்ளம்
1997 ஆண்டு செப்டம்பரில் பசிபிக் பகுதியில் கடல் மட்டத்தின் உஷ்ண நிலை நார்மல் அளவையும் தாண்டியது. வழக்கத்தை விட அதிகமாகவே வெப்பம் நீரோட்டம் பொங்கியெழுந்தது .

இந்த வெப்ப நீரோட்டமான எல்நினோவின் கோரம் , ஜப்பான் ஹிரோஷிமாவில் போடப்பட்ட அணுகுண்டை விட 10 லட்சம் மடங்கு அழிவு ஆற்றலைக் கொண்டது என்று அப்போது யாரும் நினைத்துக் கூட பார்க்கவில்லை.

அப்போது ஆரம்பித்த அழிவு அலை ஏழு ஆண்டுகள் வரை நீடித்தது . 7 ஆண்டு பஞ்சம் என்று நினைக்கும் போது, நபி யூசுப் (அலை) காலத்தின் பஞ்சம் வந்ததற்கு காரணம் இந்த எல் நினோ வாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

قَالَ تَزْرَعُوْنَ سَبْعَ سِنِيْنَ دَاَبًا فَمَا حَصَدْتُّمْ فَذَرُوْهُ فِىْ سُنْۢبُلِهٖۤ اِلَّا قَلِيْلًا مِّمَّا تَاْكُلُوْنَ
அதற்கவர் கூறியதாவது: "தொடர்ந்து (வழக்கம் போல் நல்லவிதமாக) ஏழு ஆண்டுகள் நீங்கள் விவசாயம் செய்வீர்கள். அதில் நீங்கள் அறுவடை செய்யும் விளைச்சல்களில் நீங்கள் புசிப்பதற்கு வேண்டிய ஒரு சொற்ப அளவைத்தவிர மற்ற அனைத்தையும் அதன் கதிர்களிலேயே விட்டு வையுங்கள்.
(அல்குர்ஆன்: 12:47)

ثُمَّ يَاْتِىْ مِنْۢ بَعْدِ ذٰلِكَ سَبْعٌ شِدَادٌ يَّاْكُلْنَ مَا قَدَّمْتُمْ لَهُنَّ اِلَّا قَلِيْلًا مِّمَّا تُحْصِنُوْنَ
அதற்குப் பின்னர், கடினமான (பஞ்சத்தையுடைய) ஏழு ஆண்டுகள் வரும். நீங்கள் கதிர்களில் பத்திரப்படுத்தி வைத்திருந்த வைகளில் (விதைப்புக்கு வேண்டிய) சொற்ப அளவைத் தவிர, (நீங்கள் சேகரித்திருந்த) அனைத்தையும் (அப்பஞ்சம்) தின்றுவிடும்.
(அல்குர்ஆன்: 12:48)

பசிபிக் கடலின் வெப்பக் கொந்தளிப்பு ஆரம்பித்த வருடமே பல்வேறு இயற்கை சிற்றங்களாக உருமாறி 2100 பேரை கொன்று விட்டு 33 பில்லியன் டாலர் பொருள்களை சேதத்தையும் ஏற்படுத்திவிட்டு , எப்போதும் போல 2600 அடி ஆழத்தில் அசைந்தாடிக் கொண்டு போயிற்று குடா நீரோட்டங்கள் .

وَلَـنَبْلُوَنَّكُمْ بِشَىْءٍ مِّنَ الْخَـوْفِ وَالْجُـوْعِ وَنَقْصٍ مِّنَ الْاَمْوَالِ وَالْاَنْفُسِ وَالثَّمَرٰتِؕ وَبَشِّرِ الصّٰبِرِيْنَۙ
(நம்பிக்கையாளர்களே!) பயம், பசி மேலும் பொருள்கள், உயிர்கள், கனிவர்க்கங்கள் ஆகியவைகளைக் கொண்டு நிச்சயமாக நாம் உங்களைச் சோதிப்போம். (நபியே! இச்சோதனைகளால் ஏற்படும் கஷ்டங்களைச்) சகித்துக் கொண்டிருப்பவர்களுக்கு நீங்கள் நற்செய்தி கூறுங்கள்.
(அல்குர்ஆன்: 2:155)

இதன் பக்க விளைவு பசிபிக் கடல் தாவரங்கள் அழிந்தன. கடல் மீன் காணாமல் போயின. மீன்களை நம்பி வாழும் உயிர் வாழும் கடல் ஜீவராசிகளும் அழிந்தன . SAN MIGUEL தீவுப் பகுதியில் 70 கடல் சிங்கங்கள், பெரிய பெரிய திமிங்கலங்கள் பட்டினியால் செத்து கரை ஒதுங்கின நிகழ்ச்சியை தொடர்ந்து ஏழு வருடங்களாக TV யிலும் தினசரி பேப்பரிலும் செய்தியானது

'தென்னை மரத்தில் தேள் கொட்டியது பனை மரத்தில் நெரி கட்டியது ' என்பது போல, பசிபிக் கடலில் ' வெப்பத்தேள் ' கொட்ட உலகின் பல பாகங்களில் கடும் வறட்சி நெரி கட்டியது.
பிரேசில் நாட்டில் 25 லட்சம் ஏக்கர் பசுமையான அமேஸான் காடுகள் காய்ந்து தீப்பிடிக்க ஆரம்பித்தன. கலிபோர்னியாவில் ஏற்பட்ட காட்டுத் தீயை மூன்று மாதங்களாக அணைக்க முடியாமல் திணறினார்கள் .மழை நீரைக் காணாமல் விவசாய நிலங்கள் பாளம் பாளமாக பிளந்தன.

ஆனால் அதற்கடுத்த வருடமே பல நாடுகளில் , பயிர்களை அழித்து நாசப்படுத்தும் தொடர் மழையைக் கொண்டு வந்தது இதே எல்நினோதான்
இந்தோனேஷியா , பெரு நாடுகளில் உடனடியாக இதன் விளைவு தெரிந்தது. கடும் வெள்ளத்தில் பயிர்களும் , உயிர்களும் நாசமாகி மடிந்தன . உணவுப் பஞ்சம் தலை தூக்கியது . சூடான் , தாய்லாந்தில் புதுப்புது நோய்கள் உருவாகியது .

1016. அனஸ்(ரலி) அறிவித்தார்.
ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து ,
'கால்நடைகள் அழிந்துவிட்டன் பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன' என்றார். நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்தனர். அந்த ஜும்ஆவிலிருந்து மறு ஜும்ஆவரை எங்களுக்கு மழை பொழிந்தது.
பின்னர் அதே மனிதர் வந்து, 'வீடுகள் இடிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. கால்நடைகள் அழிந்துவிட்டன. மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றார்.

நபி(ஸல்) அவர்கள் எழுந்து 'இறைவா! மணற்குன்றுகளின் மீதும் மலைகளின் மீதும் ஓடைகளிலும் விளைநிலங்களிலும்
(இம்மழையைத் திருப்புவாயாக!)' என்றுபிரார்த்தனை செய்தார்கள்.
உடைகளைக் கழுவுவது போல் அம்மழை மதீனாவைக் கழுவியது. ஸஹீஹ் புகாரி
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் O4







அமேஸான் காடு - உலகின் நுரையீரல்
அமேஸான் காடுகளின் தற்போதைய காட்டுத் தீ "**எல்நினோ** " வால் ஏற்பட்ட தீ அல்ல என்பதை உலகம் இப்போது அறிந்திருக்கிறது.
பிரேசில் அதிபராக ஜனவரியில் ஜெய்ர் போல்சோனரோ பதவியேற்ற பிறகு, அமேஸான் காடு அழிக்கப்படுவது தீயை விட தீவிரமாகியிருக்கிறது. புதிய அரசு அமைந்த பிறகு ஜூலை 24 வரை 4,200 சதுர கிமீ அளவுக்குக் காடுகள் அழிக்கப்பட்டதாக செயற்கைக்கோள் புகைப்படங்களிலிருந்து தெரியவருகிறது.

பிரேசிலில் காடுகள் அழிக்கப்படுவது தொடர்பாக செயற்கைக்கோள் ஒளிப்படங்கள் வெளியானதை அடுத்து அண்மையில் அந்தநாட்டு அதிபர் ஜெய்ர் போல்சோனரோ பிரேசில் விண்வெளி ஆராய்ச்சி முகாமையின் தலைவரை பணிநீக்கம் செய்தார். மேலும் அந்த ஒளிப்படங்களை பொய்யானவை என்று பிரேசில் அதிபர் குறிப்பிட்டார்.
பிரேசிலில் உள்ள அமேஸான் காடுகள் வரலாற்றில் எப்போதும் இல்லாத அளவில் அழிவுக்கு உள்ளாகின்றமை மனிதகுலத்திற்கு பாரிய பாதிப்பை ஏற்படுத்தும் என்று விஞ்ஞானிகள் எச்சரிக்கை விடுத்துள்ளனர்.

பிரேசிலில் உள்ள அமேஸான் மழைக் காடுகள் இந்த வருடம் பல முறை பற்றி எரிந்துள்ளதாக பிரேசில் விண்வெளி ஆராய்ச்சி முகாம் குறிப்பிட்டுள்ளது.
அமேஸான் நதிப் படுகையானது பல நாடுகளில் கோடிக்கணக்கான ஹெக்டேர்களில் விரிந்து கிடக்கிறது. அடைபட்டிருக்கும் ஏராளமான கரிமத்துக்கு இப்பரப்பு தஞ்சம் கொடுத்திருக்கிறது.
பருவமழைகளை வரைமுறைப் படுத்துவதில் இந்தக் காடுகள் மிக முக்கியக் காரணிகளாக இருக்கின்றன. இந்த மழைக்காடுகளில் உயிர்ப்பன்மை செழித்துக் காணப்படுகிறது. கூடவே, 400 வகையான பூர்வகுடிகளும் அங்கே வாழ்கிறார்கள். லாப நோக்கத்துக்காக அந்தக் காடு அழிக்கப்படுவதை அவர்கள்தான் இதுவரை தடுத்துக்கொண்டிருந்தார்கள்.

அந்தக் காடுகளைப் பண்ணை நிலங்களாக, மேய்ச்சல் நிலங்களாக, தங்கச் சுரங்கங்களாக மாற்றவும், அங்கே பெரிய அளவில் சாலைகள் அமைக்கவும் பெரு முயற்சிகள் நடந்துவந்தாலும் அவற்றையெல்லாம் மீறி அமேஸான் காட்டின் பெரும்பகுதியானது தப்பிப் பிழைத்திருக்கிறது.

அமேஸான் காடுகளில் **50 லட்சம்** சதுர கிமீ பரப்பை பிரேசில் கொண்டிருக்கிறது. இந்தக் காடு இருக்கும் பரப்பை நியாயமான அளவில் சுரண்டிக்கொள்ளலாம் என்ற ரீதியில் அதிபர் போல்சோனரோ பேசியிருக்கிறார். வனச் சட்ட விதிமுறைகள் மாற்றப்படவில்லை என்றாலும் அவருடைய பேச்சு சட்டத்துக்குப் புறம்பாகக் காடுகளைப் பயன்படுத்துவோருக்குத் துணிவைக் கூட்டியிருக்கிறது.

ஆயுதம் ஏந்திய தங்க வேட்டைக் கும்பல்கள் சமீபத்தில் பழங்குடியினர் பிரதேசங்களை ஊடுருவின. அப்படிப்பட்ட ஊடுருவலில் **அமாபா என்ற இடத்தில் ஒரு பழங்குடித் தலைவர் கொல்லப்பட்டிருக்கிறார்.**
குறிப்பாக இந்த வருடத்தின் எட்டாம் மாதம் வரை அமேஸானில் **72 ஆயிரம்** முறைகள் காட்டுத் தீ சம்பவங்கள் இடம்பெற்றுள்ளன.

உலகின் நுரையீரலாக விளங்கும் அமேஸான் காடுகளைக் காப்பதற்குத் தற்போது உலக அளவில் பெரும் உத்வேகம் ஒன்று காணப்படுகிறது. நார்வே, ஜெர்மனி போன்ற நாடுகளின் ஆதரவில் கடந்த பத்தாண்டுகளுக்கும் மேலாகச் செயல்படும் அமேஸான் நிதியத்தை பிரேசில் வரவேற்க வேண்டுமேயொழிய, அதை மூடிவிடுவதற்கு முயற்சிக்கக் கூடாது. மழைக்காடுகள் எல்லாம் அகில உலகத்துக்கும் பொதுவான பொக்கிஷங்கள் என்பதையும், பழங்குடியினருக்கும் அவர்களுடைய நிலத்துக்கும் இடையிலான உரிமை பிரிக்க முடியாதது என்பதையும் பிரேசில் அதிபர் உணர வேண்டும்.
ஆனால் இஸ்லாம் யுத்த களத்தில் கூட மரங்களை அழிக்கக் கூடாது என்பதை வலியுறுத்துகிறது .

1833. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.
'அல்லாஹ் மக்காவைப் புனிதப்படுத்தியிருக்கிறான்! எனக்கு முன்னர் எவருக்கும் (அதில் போரிடுதல்) அனுமதிக்கப்படவில்லை; எனக்குப் பின் எவருக்கும் அனுமதிக்கப்படாது; எனக்குக் கூட பகலில் சிறிது நேரமே அனுமதிக்கப்பட்டது! எனவே, இங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக் கூடாது; இங்குள்ள மரங்களை வெட்டக் கூடாது; இங்குள்ள வேட்டைப் பிராணிகளை விரட்டக் கூடாது; யாரேனும் தவறவிட்ட பொருட்களை, அது பற்றி அறிவிப்புச் செய்பவரைத் தவிர மற்றவர்கள் எடுக்கக் கூடாது!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அப்பாஸ்(ரலி) 'இறைத்தூதர் அவர்களே! எங்கள் மண்ணறைகளுக்கும் உலோகத் தொழிலாளர்களுக்கும் பயன்படுகிற 'இத்கிர்' புல்லைத் தவிரவா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இத்கிர் எனும் புல்லைத் தவிர!' என்று கூறினார்கள்.
(ஸஹீஹ் புகாரி)

பிரேசிலில் உள்ள அடர்த்தியான அமேஸான் காட்டுமரங்கள் தீப்பிடித்து எரிவதால் , வானில் கார்பன் -டை- ஆக்சைடு அதிகமாகி உலகின் பருவ காலங்களை தாறுமாறாவதற்கு காரணமாகிறது.
அடுத்து , காற்றில் கார்பன் டை ஆக்சைடு அளவு அதிகமானால் அதை சுத்தம் செய்ய வேண்டியது மரங்கள்தான். அந்த மரங்களே எரிந்து கார்பன் டை ஆக்சைடை வெளியிட்டுவிட்டு இல்லாமல் போனால் ? !
மிஞ்சியிருக்கும் மரங்கள் ஓரளவுக்கு மட்டுமே இதை உறிஞ்ச முடியும். அதனால் அடுத்து வரும் ஆண்டுகளில் இன்னும் மோசமான வறட்சி … இன்னும் அதிகமான காடுகள் தீயிக்கு இரையாக வேண்டிய அச்சுறுத்தல் !

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ
மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது.
(அல்குர்ஆன்: 30:41)

**Nasar Abdulnasar**

அமேசான் நதியில் எண்ணெய் வளம் இருப்பதை அறிந்து அங்கு எண்ணெய்க் கிணறுகள் தோண்டும் பணி கடந்த 1970ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்டது.
அப்போது நதிக்கு அடியில் மற்றொரு பெரிய நதி ஓடுவது கண்டுபிடிக்கப்பட்டது!
இதனையடுத்து எண்ணெய் வளம் குறித்த ஆய்வுப் பணிகள் நிறுத்தப்பட்டு, மற்றொரு நதியைப் பற்றி ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.
இது 'வாலியா ஹம்சா' என்னும் இந்திய ஆய்வாளர் தலைமையில் நடைபெற்றது.
அமேசான் நதிக்கு அடியில் ஓடும் மற்றொரு நதி சுமார் 6 ஆயிரம் கி.மீ. நீளமுடையது என்று கண்டறியப்பட்டது.
சுமார் 13 ஆயிரம் அடி ஆழத்தில் ஓடும் இந்த நதிக்கு இந்திய ஆய்வாளரின் பெயரே சூட்டப்பட்டு, ‘ஹம்சா நதி’ என்று அழைக்கப்படுகிறது!
நாற்பது வருடங்களாக ஆய்வினை மேற்கொண்டு 2011 ஆம் ஆண்டு அறிக்கையினை சமர்ப்பித்தார்.
எனினும் எதிர்காலத்தில் தான் ஆய்வு பூர்த்தியாகும் என சொல்லப்படுகிறது....
(இது குறித்து தங்களுக்கு தெரிந்த தகவலை பகிர இயலுமா )

**Rahmath Rajakumaran**

**Nasar Abdulnasar** அற்புதமான தகவல். இது பற்றி என்னிடம் எந்த தகவலும் இல்லை. கிடைத்ததும் பதிவாக எழுதுகிறேன் .
Wep இருந்தால் தரவும்

**Nasar Abdulnasar**

**Rahmath Rajakumaran** இன்ஷா அல்லாஹ்

https://www.thehindu.com/sci-tech/energy-and-environment/underground-river-is-fed-all-along-its-course-hamza/article2415385.ece?fbclid=IwAR3gYgCdfKXN3Lynacja6l0f75CHsF91ly6KL9PTO5JnnmupxSyibxtE-**Nasar Abdulnasar**

**Rahmath Rajakumaran** இன்ஷா அல்லாஹ்

https://en.m.wikipedia.org/wiki/Hamza_River

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 05 (பற்றி எரியும் மலை)




ஒரு மரத்தின் மதிப்புப் பற்றி டெல்லி கிரீன்ஸ் அமைப்பு ஆய்வு செய்திருக்கிறது.
ஒவ்வொரு மரமும் ஒரு வரம். ஒரு வளர்ந்த மரம் உற்பத்தி செய்யும் ஆக்சிஜன் அளவின் மதிப்பு மட்டும் ஆண்டுக்கு ரூ.23 கோடி என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது.

ஒரு மரத்தின் மதிப்பு விலை மதிக்க முடியாதது. ஆனால், அதன் உண்மையான மதிப்பை உணர்ந்துகொள்ளப் பொருளாதார ரீதியில் அதை மதிப்பிட வேண்டி யிருக்கிறது.

ஒரு வளர்ந்த ஆள் ஒரு நிமிடத்துக்கு 7-8 லிட்டர் காற்றைச் சுவாசிக்கிறார். அதாவது, ஒரு நாளைக்கு 11,000 லிட்டர் காற்றை. இதில் 20 சதவீதம் ஆக்சிஜன். அப்படியென்றால், ஒரு மனிதர் ஒரு நாளைக்கு 550 லிட்டர் ஆக்சிஜனை கிரகித்துக்கொள்கிறார். 2.75 லிட்டர் ஆக்சிஜன் சிலிண்டர் ஒன்றின் விலை ரூ.6,500. இதைக் கொண்டு கணக்கிட்டால் ஒரு மனிதன் ஒரு நாளைக்குச் சுவாசிக்கும் ஆக்சிஜனின் மதிப்பு ரூ.13 லட்சம்.
மரங்கள் தரும் சேவைகளை மதிப்பிட்ட ஆராய்ச்சிகளை ஒப்பு நோக்கும்போது
2 வளர்ந்த மரங்கள், ஒரு நபருக்குத் தேவையான ஆக்சிஜனை உற்பத்தி செய்கின்றன. அந்த வகையில் ஒரு வளர்ந்த மரம் உற்பத்தி செய்யும் ஆக்சிஜனின் அளவு ஆண்டுக்கு ரூ.23 கோடி.
மரத்தின் மதிப்புப் பற்றி இன்னொரு புள்ளி விபரம்

மரத்தின் மதிப்பு 1981 -ம் ஆண்டு கணக்கின்படி , மாத்தூர் என்ற இந்திய தாவரவியல் அறிஞர் கூறுவது :
" 50 வருடங்கள் வயதுள்ள நடுத்தரமான அளவு உள்ள ஒரு மரம் 15 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ளது அது எந்த மரமாக இருந்தாலும் சரி அது இயற்கைக்கும், சுற்றுச் சூழலுக்கும், மனிதனுக்கும் செய்யும் உதவிகளுக்கு கூலி கொடுப்பதாக இருந்தால் இவ்வளவு தர வேண்டியிருக்கும் "என்பது அவரது கணக்கு!

" மிஸ்டர் மாத்தூர் அந்த 15 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய்க்கு புள்ளி விபரம் கொடுக்க முடியுமா? "
" அந்த மரம் தன் வாழ்நாளில் வெளியிடும் ஆக்ஸிஜனின் மதிப்பு இரண்டரை லட்சம் . . .....சரி .
காற்று மாசுபடுவதைக் கட்டுப்படுத்துவதற்கு ஐந்து லட்சம்....சரி
மண் அரிப்பைத் தடுத்து வளப்படுத்துவதற்கு இரண்டரை லட்சம்..... சரி
பறவைகள், பூச்சிகள், சிறிய கொடிகள் என பலவற்றுக்கு அடைக்கலம் கொடுப்பதற்கு இரண்டரை லட்சம்....சரி
பூமியிலிருக்கும் நீரைச் சுழற்சி செய்து, காற்றில் ஈரப்பத்தை தக்க வைப்பதற்கு மூன்று லட்சம்... அது சரி
தாவரங்களுக்கு உணவு தருவதற்கு

இருபதாயிரம்....அதுவும் சரி

யாரும் பயப்படாதீர்கள் . என்றைக்கும் எந்த மரமும் நம்மிடம் வந்து, "எனக்கு கூலி கொடு " என்று கேட்கப் போவதில்லை. பேசும் திறன் அவற்றுக்கு இருந்தால், குறைந்த பட்சம் அவை நம்மிடம் கேட்கப் போவது ' எங்களையும் வாழ விடுங்கள் '

ஆனால் மரத்திற்கு மனிதன் செய்யும் பச்சை துரோகங்கள் ,

தேனி மாவட்டம் போடி அருகே உள்ள குரங்கணி வனப்பகுதியில் ஏற்பட்டுள்ள காட்டுத்தீயில் 40 பேர் சிக்கினர். இரண்டு குழுக்களாக மலையேற சென்ற இவர்கள், இவர்களில் 12 பேர் திருப்பூரில் இருந்து சென்றவர்கள் என்றும், 24 பேர் சென்னையில் இருந்து சென்றவர்கள் என்றும் அறியப்பட்டுள்ளது. தீயில் சிக்கிய 15 பேர் மீட்கப்பட்டுள்ளனர். 10பேருக்கு கடுமையான தீக்காயம். இரவு நேரம் என்பதால் மீட்புப் பணியில் சிக்கல். இருப்பினும் அத்தனை பேரையும் மீட்கப்பட்டது.

இந்நிலையில் குரங்கணி மலையில் ஒரு வார காலமாகவே தீ எரிவதாகவும், ஆனால் அதிகாரிகளின் அலட்சியத்தால் இதுவரை தீ அணைக்கப்படவில்லை எனவும் குரங்கணி பகுதியை சேர்ந்த ஒருவர் கூறியுள்ளார். இதுகுறித்து அவர் கூறும்போது, “ மலைப்பகுதியில் அடிக்கடி தீ விபத்து ஏற்படுகிறது. ஆனால் இந்த முறை கடந்த ஒருவாரமாகவே தீ எரிந்து வருகிறது. நாங்களும் ஃபேஸ்புக் உள்ளிட்டவைகள் மூலம் விழிப்புணர்வு ஏற்படுத்தினோம். ஆனால் அதிகாரிகள் தீயை அணைக்க எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை” என தெரிவித்தார்.

தீ விபத்திற்கான காரணங்கள் குறித்து அப்பகுதியைச் சேர்ந்தவர்கள் கூறும்போது, “ இப்பகுதியில் அடிக்கடி மழை பெய்வது இல்லை. இதனால் அதிகப்படியான வெப்பத்தால் அடிக்கடி தீ விபத்து ஏற்படுகிறது. இதுஒரு புறம் இருந்தாலும் ஒருசிலர்கள் மலைக்கு கீழே பீடி, சிகரெட் போன்றவற்றை பற்றவைத்து அதனை அணைக்காமல் அப்படியே போட்டுவிட்டு சென்றுவிடுகின்றனர். இதனால் தீ மெது மெதுவாக பற்றி எரிந்து மலையின் உச்சிக்கே சென்றுவிடுகிறது.

இதுமட்டுமல்லாமல், மலைப்பகுதியில்

தற்போது நிலவி வரும் கடும் வறட்சி காரணமாக அங்கு வாழும் உயிரினங்களுக்கு சரிவர உணவு கிடைப்பதில்லை. எனவே அவை உணவை தேடி கீழே வருகின்றன. கீழே வரும் விலங்குகள் தோட்டப் பயிர்களை மேய்ந்துவிடுமோ என்ற பயத்தில் சிலர் வேண்டுமென்று தீ வைக்கின்றனர். அந்தத் தீயும் மேலே வரை பலநேரங்களில் சென்றுவிடுகிறது” எனத் தெரிவித்தனர்.

அடுத்து, திண்டுக்கல் மாவட்டம் ஆத்தூர் காமராஜர் அணை அருகே உள்ள மேற்கு தொடர்ச்சி மலைப்பகுதிகளில் விலை உயர்ந்த மரங்களும், அரிய வகை மூலிகை செடிகளும் உள்ளன. மேலும் புலி, சிறுத்தை, மான், காட்டுமாடு, காட்டு எருமை, காட்டு பன்றி, கரடி, முயல் போன்ற விலங்குகளும், மயில் போன்ற பறவைகளும் உள்ளது.

இந்நிலையில் ஒரு கும்பல் மரங்களை வெட்டி திருட்டுத்தனமாக கடத்துவதற்கு வசதியாக மரங்களுக்குத் தீ வைக்கின்றனர். மறுநாள் காலை எளிதாக மரங்களை வெட்டிச் செல்லுகின்றனர். இதனால் வனப்பகுதிகள் அழிந்து வருவதுடன் மலைகளில் உள்ள விலங்குகள்

மலைக்கிராமங்கள் மற்றும் கீழே உள்ள மல்லையாபுரம், பாறைப்பட்டி, ஆத்தூர் போன்ற கிராமங்களுக்குள் புகுந்து விட்டுகின்றன.

மலையில் உள்ள மரங்களுக்கு தீ வைத்து தீ மளமளவென்று பற்றி எரிய தொடங்கியதும் தீயின் சூடு தாங்காமல், காட்டு பன்றிகளும், காட்டு மாடுகளும்

பழனி, செம்பட்டி சாலை கடக்கும் போது விபத்துக்குள்ளாகுகின்றன.

மலைப்பகுதியில் மரங்களுக்கு

தீ வைத்து அழிப்பதையும், மரங்களை கடத்துவதையும் இலட்சியமாக கொண்டு

மலைக்கு மனிதர்கள் தீ வைக்கிறார்கள் . இதனால் தனக்கு சுவாசிக்க உயிர் காற்றைத் தந்த மரத்திற்கு மரணத்தைக் கொடுக்கும் மனிதர்களை என்னென்று சொல்வது ?

"கியாமத் நாள் வந்தாலும், கையில் இருக்கும் விதையை பூமியில் ஊன்றிவிடுங்கள் ".

- நபி (ஸல்) அவர்கள்

ர.ரா

இறையின் சீற்றங்களே   இயற்கையின் சீற்றங்கள் O6

(மரம்தான் நல்ல வரம் தான்)



நான்கு சதுர மைல் பரப்புள்ள ஒரு காட்டுப் பகுதி அழிக்கப்படும் போது - மர வகைகள் 750, பூக்கும் தாவரங்கள் 15,000 , பறவை இனங்கள் 400 , பாலூட்டிகள் 100 , ஊர்வன வகை விலங்குகள் 100 , நிலநீர் வாழ் விலங்குகள் 60 ஆகியவையும் சேர்ந்து அழிகின்றன.
பிரேசில் இருக்கும் அமேஸான் காடுகளில் ஒவ்வொரு நிமிடமும் ஏழு கால்பந்து மைதானங்கள் அளவுக்கு காடுகள் கபளீகரம் செய்யப்படுகின்றன .
அமெரிக்கா போன்ற நாடுகள் மரம் வெட்டுவதை ஒரு தொழிலாக அங்கீகரித்து, நிறைய பேருக்கு வேலைப்பு தருகின்றனவாம் .

அமெரிக்காவில் காடு அழிப்பதை சுற்றுச்சூழல் அமைப்புகள் எதிர்ப்பு தெரிவிப்பதை அடுத்து , மரம் வெட்டும் அமெரிக்க நிறுவனம் ஏழை நாடுகளை குறிவைத்துப் போய்விட்டன.
ரஷ்யாவில் சோவியத் யூனியன் வீழ்ச்சிக்குப் பிறகு ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் சமாளிக்க ரஷியா மரம் வெட்டும் அமெரிக்க நிறுவனங்களுக்கு தனது கதவுகளை திறந்து விட்டுள்ளது.

ரஷ்யாவின் **'தைகா' காடுகள்** புகழ் பெற்ற அமேஸான் காடுகளை விட இரண்டு மடங்கு பெரியவை .உலகின் மிகப் பழமையான மரங்களில் கால் பங்கு இங்குதான் இருக்கின்றன.
இதில் அமெரிக்க நிறுவனங்கள் ஒருபுறம் சுரண்ட , இன்னொரு பக்கம் கள்ளக் கடத்தல் பேர்வழிகள் செடார் , எல்ம் .. போன்ற விலை மதிப்பற்ற மரங்களை திருட்டுத்தனமாக வெட்டி சீனா , ஜப்பான், தென்கொரியா போன்ற நாடுகளுக்கு கடத்துகின்றன. இந்தக் காடுகளை மொட்டையடிப்பதுதான் இப்போதைக்கு அந்த நிறுவனத்தின் முழுநேர வேலையாக இருக்கிறது

மரங்களை வியாபாரத்துக்காக வெட்டும் நாடுகளில் முன்னணியில் இருப்பது மலேசியாதான் . 50 ஆயிரம் சதுர மைல் பரப்பு கொண்ட அந்த நாட்டில் 34 ஆயிரம் சதுர மைல் பரப்பில் காடுகள் இருந்தன .இவற்றில் 90 சதவிகிதத்தை வெட்டித்தள்ள அந் நாட்டு அரசு உரிமம் கொடுத்திருக்கிறது .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ் ...
"வித்துக்களையும், கொட்டைகளையும் நிச்சயமாக அல்லாஹ்தான் வெடி(த்து முளை)க்கச் செய்கிறான்" குர்ஆன் (6: 95)
சொர்க்த்தைப்பற்றி வர்ணிக்கும் அல்லாஹ் அதில் மரங்களின் செழிப்பைப் பற்றியே பேசுகிறான் .
" இரு சொர்க்கச் சோலைகளின் பழங்களும் பறிப்பதற்கு நெருங்கி இருக்கிறது. குர்ஆன் (55 : 54)

"ஸித்ரத்துல் முன்தஹா" என்னும் (இலந்தை) மரத்தின் சமீபத்தில்.

அதன் சமீபத்தில்தான் (நல்லடியார்கள்) தங்கும் சுவனபதி இருக்கின்றது.
அந்த மரத்தை மூடியிருந்தவை அதனை முற்றிலும் மூடிக்கொண்டன"
(அல்குர்ஆன்: 53:14-16)

மனிதர்கள் வாழும் இந்த பூமியையும் சொர்க்க பூமியாக மாற்ற எண்ணியே இறைவன் காடுகளையும் அதில் மரங்களையும் உற்பத்தி செய்ததாக குர்ஆனில் ...
" அவன்தான் மேகத்திலிருந்து மழையை இறக்கி வைக்கின்றான். அதைக் கொண்டே சகல வகைப் புற்பூண்டுகளையும் நாம் முளைக்க வைத்து, அதில் இருந்து பசுமையான தழைகளையும் நாம் வெளியாக்குகின்றோம். அதிலிருந்தே அடர்ந்த வித்துக்களை (யுடைய கதிர்களை)யும் நாம் வெளியாக்குகின்றோம். பேரீச்ச மரத்தின் பாளைகளில் வளைந்து தொங்கும் பழக்குலைகளும் இருக்கின்றன. (அவற்றையும் நாமே வெளியாக்குகின்றோம்.) திராட்சைத் தோட்டங்களையும், (பார்வைக்கு) ஒன்றுபோலும் (ரசனையில்) வெவ்வேறாகவும் உள்ள மாதுளை, ஜெய்த்தூன் (ஒலிவம்) ஆகியவற்றையும் (நாமே வெளியாக்குகின்றோம்.) அவை (பூத்துக்) காய்ப்பதையும், பின்னர் கனிந்து பழமாகும் விதத்தையும் (மக்களே!) உற்று நோக்குங்கள். நம்பிக்கை கொள்ளும் மக்களுக்கு நிச்சயமாக இதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 6:99)
அவன் பாவிகள் ஒதுங்கும் இடமாக நரகத்தை படைத்து அதில் கூட மரங்களை முளைப்பித்தாக அல்லாஹ்

" கொழுந்து விட்டெறியும் நெருப்பில் ... அவர்களுக்கு விஷச்செடிகளைத் தவிர வேறு உணவில்லை"
குர்ஆன் (88 : 4-6 )
" நிச்சயமாக, ஜக்கூம் என்ற கள்ளி மரம் அதுவே பாவிகளுக்குரிய உணவு "
குர்ஆன் (44 : 44)
ஆனால் மனிதன் நரகத்தை விடவும் மிக மோசமாக பூமியை மாற்ற எண்ணி காடுகளை வேக வேகமாக மனிதன் அழிப்பதை என்ன சொல்வது ?
ஸ்டூவர்ட் பிம் என்ற உயிரியல் அறிஞர்
" இன்றைக்கு மட்டுமில்லை... இனி வரும் கால காலங்களில் " மனிதன் இழைத்த கொடுமைகளில் மிகக் கொடூரமானது ? என்ற கேள்வி எழுப்படும் போதெல்லாம் அதற்கு சொல்லப்படும் ஒரே பதில் 'மரங்களை அழித்தது ' என்பதாகத்தான் இருக்கும் " என்று வேதனை பொங்கச் சொல்கிறார் .
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் O7 (பூமியின் உயிரின அழிவுகள்)




அலையடிக்கும் கடல்கரையோரம் குழந்தைகள் மணல் வீடு கட்டி விளையாடுவதைப் பார்த்திருப்பீர்கள் ... ஈர மணலில் அவர்கள் வீடு கட்டி முடிக்கும் வரை காத்திருந்தது போல ஒரு பெரிய அலை பொங்கி வந்து , அந்த வீட்டை அழித்துவிட்டுப் போகும் !

சளைக்காமல் அந்தக் குழந்தைகள் மீண்டும் அதே மாதிரி ஒரு வீட்டை கட்ட ஆரம்பிப்பார்கள் .திரும்பவும் அலை வந்து அழிக்கும் .

கிட்டதட்ட இதே மாதிரியான அழித்தல் விளையாட்டு மிகப் பெரிய அளவில் இந்த பூமியில் கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு ஒரு முறை நடந்தபடி இருக்கிறது . அதுதான் "உயிரினங்களின் பேரழிவு "

உயிரினங்கள் ஒவ்வொன்றாகத் தோன்றி இனப்பெருக்கம் செய்து கணிசமான எண்ணிக்கையில் பெருகிய பிறகு திடீரென பூமியின் சூழ்நிலை மாறி அவை ஒட்டுமொத்தமாக அழிந்து போயின . பூமியின் 350 கோடி வருஷ வரலாற்றில் பூமி இதுவரை இப்படிப்பட்ட பேரழிவை ஐந்து தடவை சந்தித்திருக்கிறது .
இந்த புதன்கிழமையிலிருந்து சுமார் 44 கோடி வருஷங்களுக்கு முன்பு முதல் கட்ட உயிரின பேரழிவு . பூமியின் இரண்டு துருவங்கவிலும் இந்த நிலப்பரப்பில் மிகப் பெரிய பனிக்கட்டி அடுக்கு உருவானது . பூமி சில்லிட ஆரம்பித்து உயிரினங்கள் பனியில் உறைந்து அத்தனையும் செத்தது .

பின் எஞ்சியிருந்த உயிரினங்கள் புதிய சூழ்நிலைக்கு பழகி இனப்பெருக்கம் செய்தது. இன்றிலிருந்து 37 கோடி வருஷத்தில் இரண்டாம் உயிரின பேரிழிவு . தாங்க முடியாத வெப்பம் உருவாகி பனிப் பானங்கள் உருகி நீர் மட்டம் உயர்ந்து அத்தனை உயிரினங்கள் செத்தது .

பின் எஞ்சியிருந்த உயிரினங்கள் புதிய சூழ்நிலைக்கு பழகி இனப்பெருக்கம் செய்தது. இன்றிலிருந்து 25 கோடி வருஷத்தில் மூன்றாம் கட்ட உயிரின பேரிழிவு . தனித்தனி நிலப்பரப்புகளான கண்டங்கள் நகர்ந்து இணைந்து "பாஞ்சிய" என்ற கண்டம் உருவெடுத்து .

கடலின் அகலம் பெரிதாகி கடல் மட்டம் தடாலடியாக குறைந்து கடலுக்கடியில் மூழ்கியிருந்த இருந்த இடங்கள் வெளிவந்து நிலப்பரப்பாக மாறின.
நான்காம் கட்ட உயிரின பேரழிவு இன்றைக்கு கிட்டதட்ட 21 கோடி ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. என்ன நடந்தது என்று தெரியவில்லை என்கிறது விஞ்ஞானம் .
ஐந்தாம் கட்ட உயிரின பேரழிவு இன்றைக்கு கிட்டதட்ட 6 கோடி ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. இந்த அழிவில் விண்வெளியில் இருந்து பெரிய பாறை விழுந்து , விழுந்த இடம் பெரும் பள்ளமாகி தூசிகளால் சூரியனே மறைக்கப்பட்டு டினோஸர்கள் அழிந்தன.
உயிரின பேரழிவுப் பற்றி குர்ஆன் பேசுவது :

وَلَوْ يُؤَاخِذُ اللّٰهُ النَّاسَ بِظُلْمِهِمْ مَّا تَرَكَ عَلَيْهَا مِنْ دَآبَّةٍ وَّلٰـكِنْ يُّؤَخِّرُهُمْ اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى فَاِذَا جَآءَ اَجَلُهُمْ لَا يَسْتَاْخِرُوْنَ سَاعَةً وَّلَا يَسْتَقْدِمُوْنَ
"மனிதர்கள் செய்யும் குற்றங் குறைகளைப் பற்றி அவர்களை அல்லாஹ் (உடனுக்குடன்) பிடிப்பதாக இருந்தால் (பூமியில்) ஓர் உயிரினைத்தையுமே அவன் விட்டுவைக்க மாட்டான். எனினும், ஒரு குறிப்பிட்ட தவணை வரையில் (பிடிக்காது) அவர்களைப் பிற்படுத்துகிறான். அவர்களுடைய தவணை வரும் பட்சத்தில் ஒரு விநாடியும் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள்". குர்ஆன் : (16:61)

மனிதர்கள் படைக்கப்படுவதற்கு முன்பே இந்த உலகில் உயிரின பேரழிவு நடந்திருக்கிறதா ? ஆம். நடந்திருக்கிறது உண்மைதான் .மனிதர்கள் படைக்கப்படுவதற்கு முன்பாக ...

وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ مِنْ صَلْصَالٍ مِّنْ حَمَاٍ مَّسْنُوْنٍ
(காய்ந்தால் "கன் கன்" என்று) சப்தம் கொடுக்கக்கூடிய பிசுபிசுப்பான களிமண்ணால் நிச்சயமாக நாமே (உங்கள் மூலப் பிதாவாகிய முதல்) மனிதனை படைத்தோம்.

وَالْجَآنَّ خَلَقْنٰهُ مِنْ قَبْلُ مِنْ نَّارِ السَّمُوْمِ
அதற்கு முன்னதாக ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம். குர்ஆன் : (15: 26, 27)
குர்ஆன் 16 : 61
வசனத்தை மனிதர்களுக்கு பதிலாக ...ஜின்கள் செய்யும் குற்றங் குறைகளைப் பற்றி அவர்களை அல்லாஹ் உடனுக்குடன் பிடிக்கப்பட்டு பூமியில் ஓர் உயிரினைத்தையுமே அவன் விட்டுவைக்காமல் அழித்திருக்கிறான் என்பது விஞ்ஞானபூர்வமாக தெரியவருகிறது .

மனித வர்க்கத்திற்கு முன் ஜின் இனங்கள் இப் பூமியில் படைக்கப்பட்டு, அவைகள் கொடூரமான கொடுமைகள் புரிந்ததைப் பற்றி மலக்குமார்கள் ஜின் வர்க்கம் மாதிரி தானே மனித வர்க்கமும் இருக்கும் என்று எண்ணி,

وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ جَاعِلٌ فِى الْاَرْضِ خَلِيْفَةً قَالُوْٓا اَتَجْعَلُ فِيْهَا مَنْ يُّفْسِدُ فِيْهَا وَيَسْفِكُ الدِّمَآءَ وَنَحْنُ نُسَبِّحُ بِحَمْدِكَ وَنُقَدِّسُ لَـكَ قَالَ اِنِّىْٓ اَعْلَمُ مَا لَا تَعْلَمُوْنَ

(நபியே!) உங்களது இறைவன் மலக்குகளை நோக்கி "நான் பூமியில் (என்னுடைய) பிரதிநிதியை (ஆதமை) நிச்சயமாக ஏற்படுத்தப் போகிறேன்" எனக் கூறிய சமயத்தில் (அதற்கு) அவர்கள் "(பூமியில்) விஷமம் செய்து இரத்தம் சிந்தக்கூடிய (சந்ததிகளைப் பெறும்) அவரை அதில் (உன்னுடைய பிரதிநிதியாக) ஆக்குகிறாயா? நாங்களோ உன்னுடைய பரிசுத்தத் தன்மையைக் கூறி உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை புகழ்ந்து கொண்டிருக்கிறோம்" என்று கூறினார்கள். அதற்கவன் "நீங்கள் அறியாதவற்றை எல்லாம் நிச்சயமாக நான் நன்கறிவேன்" எனக் கூறிவிட்டான்.
(அல்குர்ஆன்: 2:30)
இறையின் சீற்றங்களால்தான்
இயற்கையின் சீற்றங்கள் ஏற்பட்டு, உயிரின பேரழிவு நடந்திருக்கிறது .
ர.ரா

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் O8

(உங்களை அழித்து மற்றொரு படைப்பு)



1999 -ம் ஆண்டு ' நேச்சர் ' என்ற ஆங்கில இதழில் புரூஸ் ஸ்டெர்லிங் என்ற சுற்றுச்சூழல் அறிஞர் எழுதிய ஒரு கற்பனைக் கட்டுரை உலகம் முழுக்க சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் மத்தியில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

2380 ம் ஆண்டில் நடக்கும் ஒர் ஆராய்ச்சியை நேரடியாக விவரிப்பது, செய்வது மாதிரியான பாணியில் அமைந்த கட்டுரை அது!

ஆனால் அந்த ஆராய்ச்சியை செய்வது மனிதர்கள் அல்ல. ... மனிதர்களுக்கு மாற்றாக பூமியில் உருவான வேறொரு புதிய இனம் . அந்த ஆராய்ச்சியோ மனிதர்களையும் , மனிதர்களின் அழிவையும் பற்றியது .

திபெத்தின் உயர்ந்த மலைப் பகுதிகளில் இருந்து பிரேஸிலின் அமேஸான் காடுகள் வரை எல்லா இடங்களிலும் பத்து ஆண்டுகளாக தேடிப் பார்த்து விட்டோம். ஒரு இண்டு இடுக்கு விடாமல் அலசி

விட்டோம். ஆனால் , எங்குமே மனித இனத்தைச் சேர்ந்த யாரும் உயிரோடு வாழ்வதற்கான அறிகுறிகள் தெரியவில்லை .அந்த இனம் முழுமையாக அழிந்துவிட்ட இனமாகக் கருதப்படுகிறது .

எப்படி மனித இனம் முற்றிலுமாக அழிந்தது என்பதற்கு விரிவான விளக்கங்கள் தேவையில்லை. மற்ற பல உயிரினங்கள் அழித்ததற்கு மனிதர்களே காரணம். அதேபோல தங்களது அழிவையும் மனிதர்களே தேடிக் கொண்டனர் . எனவே மனித இனத்தை இனிமேலும் தேடுதல் குறித்து இத்துடன் நிறுத்தப்படுகிறது.
தொலைந்தான் மனிதன் !

இந்த அழிவு பற்றித் தெரிந்ததும் காட்டு மிருகங்கள் , வீட்டு விலங்குகள் என எல்லாமே சந்தோஷத்தில் ஆரவாரம் செய்தன " என்று ஆராய்ச்சிக் குழு தலைவர் தனது முடிவை அறிவிப்பார்.
கூடவே மனித இனம் பற்றிய பல தகவல்களையும் அவர் கொடுப்பார். இப்போது டைனோஸர்கள் பற்றிய விவரங்களை நாம் சுவாரஸ்யமாக கேட்கிறோமில்லையா ... அப்படி அந்தக் காலத்தில் வாழ்கிற புதிய இனத்தினர் இதையெல்லாம் கேட்டு ஆச்சரியப்படுகிறார்கள். மனிதர்கள் கட்டிய சீனப் பெருஞ்சுவரைப் பார்த்து பார்த்து வியக்கிறார்கள்.
கடைசியாக அந்த இன ஆராய்ச்சிக் குழு தலைவர் சொல்லும் விஷயம்
சுவாராஸ்யமானது ,
" எங்கள் ஆய்வுக்கூடத்தில் பாதுகாத்து வைத்திருக்கும் மனித சிசுக்களை வைத்து, மனித இனத்தை மீண்டும் நாம் உருவாக்க முடியும். ஆனால் , அதைச் செய்ய தயக்கமாக இருக்கிறது.

மனிதன் புத்திசாலி. அவன் மூளை பலத்தை வைத்து மற்ற உயிரினங்களை அடக்கி உலகத்தையே கட்டி ஆண்டவன். ஆனால் , அவனுக்கு முன் யோசனை ரொம்பவும் குறைவு . இதனால்தான் எதிர்காலத்தைப் பற்றிய கவலை இல்லாமல் எல்லாவற்றையும் அழித்து , அழித்து அவனும் அழிந்து போனான். அந்த மனித வர்க்கத்தை மீண்டும் நம்மால் உருவாக்க முடியும் , உருவாக்கினால் அழிவு இன்னும் தொடருமோ என்ற பயம் இருக்கிறது " என்பார் அவர் .

اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ اَيُّهَا النَّاسُ وَيَاْتِ بِاٰخَرِيْنَ وَكَانَ اللّٰهُ عَلٰى ذٰلِكَ قَدِيْرًا
மனிதர்களே! அவன் விரும்பினால் உங்களை அழித்து (உங்களுக்குப் பதிலாக) வேறு மனிதர்களைக் கொண்டு வந்து விடுவான். அல்லாஹ் இவ்வாறு செய்ய ஆற்றலுடையவனாகவே இருக்கின்றான்.
குர்ஆன் : (4:133)

اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ وَيَاْتِ بِخَلْقٍ جَدِيْدٍ
அவன் விரும்பினால் உங்களை அழித்து மற்றொரு புதிய படைப்பைக் கொண்டு வந்துவிடுவான்.
குர்ஆன் : (35:16)

وَمَا ذٰ لِكَ عَلَى اللّٰهِ بِعَزِيْزٍ
இது அல்லாஹ்வுக்கு ஒரு சிரமமானது அல்ல. குர்ஆன் (35:17)

اَلَمْ تَرَ اَنَّ اللّٰهَ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ بِالْحَـقِّ اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ وَيَاْتِ بِخَلْقٍ جَدِيْدٍۙ
நிச்சயமாக அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும் மிக்க மேலான அமைப்பில் படைத்திருக்கிறான் என்பதை (மனிதனே!) நீ கவனிக்கவில்லையா? அவன் விரும்பினால் உங்களைப் போக்கி விட்டு (உங்களைப் போன்ற) புதியதோர் படைப்பைக் கொண்டு வந்துவிடுவான். குர்ஆன் : (14:19)

وَّمَا ذٰلِكَ عَلَى اللّٰهِ بِعَزِيْزٍ
அல்லாஹ்வுக்கு இது ஒரு சிரமமான காரியம் அல்ல குர்ஆன் : (14:20)

விஞ்ஞானி புரூஸ் ஸ்டெர்லிங் கற்பனையாக சொல்லப்பட்ட இந்த புதிய இன விஷயம் குர்ஆனில் வேத வசனமாக சொல்லி , இறைவன் அதை அச்சுறுத்துகிறான்.
முந்தய பதிவில் சொல்லப்பட்ட ஐந்து கட்ட உயிரின பேரழிவை ஆராய்ந்த விஞ்ஞானிகள் , வரப்போகும் ஆறாம் கட்ட உயிரின பேரழிவு மற்றவற்றில் இருந்து வித்தியாசப்படுகிறது.

ஆறாவது அறிவு இருந்தும் அதைப் பயன்படுத்தத் தெரியாத மனிதர்களால் நிகழ்த்தப்படும் அழிவு அது !
நுனி மரக் கொப்பில் இருந்து கொண்டு கிளையை வெட்டுவது மாதிரி !

" இன்று புதிய நாள் விடிகிறது. இந்த ஒரு நாளில் மட்டும் ஒரு நொடிக்கு ஒரு ஏக்கர் என்கிற அளவில் 116 சதுர மைல் மழைக்காடுகளை நாம் இழந்திருப்போம்.

72 சதுர மைல் பரப்பு நல்ல நிலம் பாலைவனமாகிவிடும் இந்த நாள் முடிவதற்குள் 40 முதல் 100 உயிரினங்கள் முற்றிலுமாக அழிந்து விட்டிருக்கும்.
உலகின் மக்கட்தொகையில் இரண்டரை லட்சம் பேர் புதிதாக கூடியிருப்பார்கள்.

2700 டன் குளோரோ ஃபுளுரோ கார்பனும் ஒன்றரை லட்சம் டன் கார்பன் - டை -ஆக்சைடும் இன்று காற்றில் கலக்கப்படுகிறது.
இதனால் இன்று இரவு நேற்றைக்கு இருந்ததை விட பூமி சற்றே அதிகமாக சூடாகி இருக்கும். தண்ணீரில் அமிலத்தன்மை அதிகரித்து இருக்கும். வாழ்க்கை என்னும் நளினமான நூலாடை மேலும் தைந்திருக்கும் .
ர.ரா

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் O9

(ஜீவராசிகளின் பங்களிப்பு)



மனிதன் வாழ்வதற்கு ஏற்ற இந்த பூமியையும் அதைப் போல் அதிலுள்ள ஜீவராசியையும் அவைகள் தத்தம் இயற்கையோடு இயந்த நல் வாழ்வதற்கு ஏற்ற வகையில் சிருஷ்டித்தான் . ஒவ்வொரு ஜீவராசிகள் அதன் பங்களிப்பை வழங்குவதன் மூலம் பூமியை உயிர்த்துடிப்புள்ளதாகவே மாற்றுகிறது .

தவளைகள் எண்ணிக்கை குறைந்ததால் கொசுக்கள் கட்டுக்கடங்காமல் பெருகி டெங்கு உள்ளிட்ட நோய்கள் வேகமாக பரவி வருவதாக சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் தெரிவித்துள்ளனர்.
தவளைகள் எண்ணிக்கை குறைந்ததால் கொசுகள் அதிகமாக பெருகிவருகிறது. தவளைகள் அதிகமாக இருந்தால் தண்ணீரில் மிதக்கும் கொசுகளின் லார்வாக்களை அவை சாப்பிட்டுவிடும்.
அண்மையில் டெல்லியில் நடத்திய ஆய்வில் இந்தியாவில் பெரும்பாலான பகுதிகளில் தவளைகளே இல்லை என்று தெரியவந்துள்ளது. இதனால், தவளைகளை காப்பாற்ற வேண்டும் என்று சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் கோரிக்கை விடுத்துள்ளனர்.

இதனால்தானோ என்னவோ

நபி (ஸல்) அவர்கள் தவளையை கொல்வதை தடைசெய்தார்கள்.
நூல் : தாரமீ (1914)

நபி (ஸல் ) அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு பூமியில் தவளையின் பங்களிப்பு தெரியாமல் கூட இருந்திருக்கலாம் . ஆனால் நவீன காலத்தில் அதன் முக்கியத்துவம் தெரிந்திருக்கிறது.

'ஒரு மனிதன் வீணாக ஒரு சிட்டுக் குருவியை கொலை செய்தால், மறுமையில் அது இந்த மனிதன் என்னை எந்தப் பயனுள்ள தேவைக்காகவும் கொல்லவில்லை. வெறுமனே வீணுக்காகவே கொன்றான் என்று முறையிடும்' என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பசு மாடுகள் மனித நலனுக்காக உள்ள பொதுச் சொத்தாகும். எனவே அவற்றை அறுக்காதீர்கள் என நபி (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.
நபிகளாருக்கு விருந்தளித்த ஒரு அன்ஸாரி தோழரிடம் பால் தரும் ஆட்டை அறுத்து விடாதே என எச்சரித்த செய்தியை இமாம் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.
நாய்கள் கூட மனிதன் போன்ற ஒரு சமூகமே. அதுவும் சுற்றுச் சூழலில் வாழவேண்டும். அந்த இனம் அழியக் கூடாது. எனவே அதனை கொல்லாதீர்கள் என நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள்.
இன்றைய நாகரிக உலகின் மிகப்பெரிய சுற்றுச்சூழல் பிரச்சனை எது ? இப்படி ஒரு கேள்வியோடு அமெரிக்க இயற்கை வரலாற்று மியூஸியம் 400 விஞ்ஞானிகளிடம் ஒரு கருத்துக் கணிப்பு நடத்தியது .

சூழல் மாசுபடுவது , ஓஸோன் படலத்தில் ஓட்டை விழுந்திருப்பது , உலகம் சூடேறுவது என தலைப்போகும் பிரச்சனைகளை விட பெரிய அபாயமாக எல்லா விஞ்ஞானிகளும் குறிப்பிட்டது உயிரினங்கள் நம் பூமியில் தறி கெட்ட வேகத்தில் அழிக்கப்படுவதைத்தான் !

உலக உயிரினப் பராமரிப்பு ஒன்றியம் ஒவ்வொரு ஆண்டும் அழியும் அபாயத்திலிருக்கும் உயிரினங்களின் பட்டியலை வெளியிடும் **.(Redlist of Threatened speies)**எனப்படும் சிவப்பு பட்டியல் .இதில் ஒவ்வொரு ஆண்டும் இடம் பெறும் உயிர்களின் எண்ணிக்கைக் கூடிக் கொண்டே போகிறது !

2004 ம் ஆண்டு வெளியிடப்பட்ட அழியும் அபாயத்திலிருக்கும் உயிரினங்களின் எண்ணிக்கை 15,589
டென்னஸி பல்கலைக்கழக சுற்றுச்சூழல் விஞ்ஞானி ஸ்டுவர்ட் பிம் " இந்த அழிவின் வேகம் ஒரு விண்கல் வந்து பூமியைத் தாக்குவதால் ஏற்படும் அழிவுக்கு இணையானது. அழிந்து போகும் எதையும் நம்மால் திரும்ப உருவாக்க முடியாது. 'ஜுராஸிக் பார்க்' போன்ற திரைப்படங்களில் வேண்டுமானால் உயிர்களைத் திரும்பவும் உருவாக்குதாக கனவு காணலாம் '' என்கிறார்

ஒவ்வொரு ஜீவராசிகளின் அழிவும் பிரபஞ்சத்தில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துகிறது .
கியாமத் நாளின் அதாவது உலகம் இறுதி நாளின் அடையாளமாக ஒவ்வொரு ஜீவராசிகளும் அழிக்கப்படும் இதில் முதன் முதலில் அழிக்கப்படும் ஜீவராசி 'வெட்டுக்கிளி ' .
ஒரு சமயம் தாங்கள் வாழும் பகுதியில் வெட்டுக்கிளியைப் பார்க்கவில்லை என்ற போது அதனை நபி (ஸல்) அவர்கள் தேடச் சொன்னார்கள் .எங்கோ ஒரு இடத்தில் வெட்டுக்கிளியைக் கண்டதாக நபித்தோழர்கள் தெரிவித்த போதுதான் நிம்மதியடைந்தார்கள் உயிரியல் வல்லுநர்கள் தயாரிக்கும்
Red list 1400 வருடங்களுக்கு முன்பே நபி (ஸல்) அவர்களுக்கு இறைவன் அறிவித்துக் கொடுத்திருக்கிறான்.
கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பாருங்கள் வாழ்வியல் சூத்திரம் நமக்கு புரியும். அதாவது எந்த உயிரினமும், மற்றவற்றைச் சாராமல் வாழ முடியாது ஒரு காடு ஒரு குளம் அல்லது கடல் என எதை எடுத்துக் கொண்டாலும் எல்லா குழல் மண்டலங்களிலும் உணவுச் சங்கிலி ஒன்று தெரியும் .உணவுக்கான தொடர்பு கிளை விட்டு படரும் போது , அதுவே ஒரு வலை போல் விரியும். இறுக்கமாக பின்னப்பட்ட ஒரு வலையில் எங்கோ ஓரிடத்தில் ஒரு முடிச்சி அறுந்து போனால் எப்படி வலையின் அமைப்பு குலைந்து போகிறதோ அப்படித்தான் ஒவ்வொரு உயிரினத்தின் அழிவையும் கருத வேண்டும் .
செடி கொடிகளைத் தின்று மான் வாழும் , அதைப் புலி அடித்துச் சாப்பிடும் ; புலி இறந்ததும் கண்ணுக்குத் தெரியாத நுண்ணுயிர்கள் அதைச் சிதைத்து மண்ணோடு மண்ணாக்கும் அது திரும்பவும் செடிக்கு உரமாகும்.

مَا خَلَقْنٰهُمَاۤ اِلَّا بِالْحَقِّ وَلٰكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ
நிச்சயமாக தக்க காரணத்திற்காகவே அன்றி, இவைகளை நாம் படைக்கவில்லை. எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் இதனை அறிந்துகொள்வதில்லை.(அல்குர்ஆன்: 44:39)

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் 10

(எரிமலைகளின் சீற்றங்கள்)




ஒரே ஒரு சம்பவம் உலகின் வெப்ப நிலையை தலைகீழாக குலுக்கிப் போட்டுக் கோடை காலத்தையே குளிர வைக்கும் என்றால் நம்புவீர்களா ? நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும் . அந்த சக்தி எரிமலை சீற்றங்களுக்கு உண்டு !

1815 - ம் ஆண்டு ஏப்ரல் மாதம் இந்தோனேஷியா "டம்போரா " எரிமலை சீறியதில் 92,000 பேர் இறந்தனர். எரிமலையின் புழுதிப் படலமும், வாயுக்களின் கலவையும் உலகின் மொத்த வெப்பநிலையை 3 டிகிரி செல்சியஸ் அளவுக்கு உயர்த்தியது.

1816 - ம் ஆண்டை வட அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவின் பெரும்பாலான நாடுகள் 'கோடைக்காலம் இல்லாத ஆண்டாக ' குறிப்பிடுகின்றன.
1991-ம் ஆண்டு ஜூன் 15 பிலிப்பைன்ஸ் நாட்டு லூசான் தீவில் தலைநகர் மணிலாவில் இருந்து 90 கிமீ தூரத்தில் 'பினாடுபோ ' எரிமலை சீறியபோது இப்படித்தான் நிகழ்ந்தது.
இதற்கு முன் 'லாவா' எனப்படும் எரிமலைக் குழம்பை இந்த பினாடுபோ கக்கி ஐந்நூறு ஆண்டுகள் ஆகின்றன .

எரிமலைகள் எப்போதும் சீறியபடி இருப்பதில்லை . பூமிக்கடியில் நடக்கும் மாற்றங்களைப் பொறுத்து திடீரென சீறும் .
'இந்த பினாடுபோதான் நெருப்பை கக்கி ஐந்நூறு ஆண்டுகள் ஆகின்றனவே, இது அவ்வளவுதான் என்று பல விஞ்ஞானிகள் அதனை தட்டி கொட்டி உள்ளே இறங்கி நாடிப் பிடித்துப் பார்த்ததில், செத்தேப் போச்சு ஊருக்கு சொல்லுங்க' என்றதும் அதன் செழிப்பான அடிவாரப் பகுதி நெல் வயல்களாக மாறியது. ரியல் எஸ்டேட் பிளாட் போட்டு விற்று பல குடியிருப்புகள் முளைத்தன.

சில விஞ்ஞானிகள் , "ச்சே.. ச்சே , பார்ட்டி சாகவில்லை ஆழ்ந்த தவத்திலோ , தூக்கத்திலோ இருக்கு .என்றாவது ஒரு நாள் திடீரென விழித்துக் கொள்ளும். அப்போ அதன் சீற்றம் அளவுக்கு அதிகமாக இருக்கும். உடனே பிளாட் வியாபாரம் மந்தமாகியது
நில புரோக்கர்கள் " இந்த விஞ்ஞானிகள் புதுப் படிப்பு ,விஷயம் , விவரம் பத்தாது . செத்தது செத்ததுதான் என்று அனுபவ விஞ்ஞானிகள் சொல்லியாச்சி ' என்றதும் அடுத்து பிளாட் சூடு பிடித்து மொத்தமும் விற்பனையானது.
1990 ம் ஆண்டு ஜூலை
மாதம் **பினாடுபோ** எரிமலைக்கு 100 கிமீ தூரத்தில் 7.8 ரிக்டர் அளவில் பூகம்பம் வந்தாச்சி . இதுதான் ' தூங்கியது போதும் பொங்கி எழு ' எழுப்பி விட பார்ட்டி கண் திறந்து பார்க்க பத்து மாதங்கள் ஆயின.

1991-ம் ஆண்டு ஏபரல் 2 ந் தேதி எரிமலையின் வாயிலிருந்து மெல்லிய தூசுப் படலம் வெளியேறியது. மே மாதத்தில் மேகத்தை தொடுமளவுக்கு உச்சமானது . ஜூனில் வெறி கிளம்பியது .

விழித்துக் கொண்ட அரசு , முதலில் 20 கி.மீ சுற்றளவில் உள்ள மக்களை வெளியேற்றியது .அப்புறம் 30 கி.மீ . அப்புறம் 40 , 50 , 60 . ஜூன் 15 -ல் பாறைகள் வெடித்து வானத்தில் சிதறின . வெடிச் சத்தம் லூசான் தீவை தாண்டியும் கேட்டது. நிலம் நடுங்கியது . பிளாட்டில் கட்டப்பட்ட வீடுகள் தரைமட்டமாயின. ''எங்கே வந்து யார் இடத்திலே பிளாட் போடுவீங்க'

اِذَا زُلْزِلَتِ الْاَرْضُ زِلْزَالَهَا ۙ
(பூகம்பத்தால்) பூமி பலமாக அசைக்கப்படும்போது,

وَاَخْرَجَتِ الْاَرْضُ اَثْقَالَهَا ۙ
அது, தான் சுமந்திருப்பவைகளை (எல்லாம் வெளியில்) எறிந்துவிடும் சமயத்தில்,

وَقَالَ الْاِنْسَانُ مَا لَهَا
மனிதன் (திடுக்கிட்டு) இதற்கென்ன நேர்ந்தது, (ஏன் இவ்வாறு அசைக்கப்பட்டது?) என்று கேட்பான்.

يَوْمَٮِٕذٍ تُحَدِّثُ اَخْبَارَهَا ۙ
بِاَنَّ رَبَّكَ اَوْحٰى لَهَا
அந்நாளில் அது, தனக்குத் தெரிந்தவைகளை எல்லாம் அறிவித்து (இவ்வாறே) உங்களது இறைவன் வஹீ மூலம் (தனக்கு) கட்டளை இட்டிருக்கின்றான் என்று கூறும். குர்ஆன் : (99: 1 - 5)

1745 மீட்டர் (அடி அல்ல, 1745 மீட்டர் 3.25 பெருக்கவும் அடியில் தெரியும்) உயரமிருந்த பினாடுபோ சீற்றமெல்லாம் தணிந்த பிறகு அளந்தபோது 1485 மீட்டர் உயரம். அது கோபப்பட்டதில் 260 மீட்டர் உயர பாறைகள் உடைந்து சிதறி உயரம் குறைந்துவிட்டது .

30 கி.மீ உயரத்துக்கு பாறைத் துகள்களும் ,மலையைச் சுற்றி 18 கி.மீ சுற்றளவுக்கு தூசுப் படலமும் தகிக்கும் அனலும் பரவியது. அந்நேரம் பார்த்து அடை மழை , நீரில் தூசிக் கரைந்து1000 கி.மீ சுற்றளவில் இருந்த எல்லா நிலத்திலும் படிந்தது.

எரிமலை சீற்றத்திற்கு நேரடியாக யாரும் பலியாக விட்டாலும் , அரசு வற்புறுத்தியும் ' படி தாண்ட மாட்டேன் ' என்று மல்லுக்கட்டிய 847 பேர் சேற்றுப் படலம் வீட்டின் கூரைகளில் படிந்து , வீட்டோடு சமாதியாயினர். கூடவே நிறைய வீடுகள் , சாலைகள் , பாலங்கள் , அட , கால்வாய்கள் கூட காணாமல் போயின .
இந்த தூசிப் படலம் உலகமெங்கும் பரவியது. 22 லட்சம் டன் **கந்தக டை ஆக்சைடு** வெளியாகி காற்று மண்டலத்தை கந்தக அமிலாக மாறி, ஒரு திரை போல் நின்று சூரிய வெளிச்சத்தை மறைத்தது.
"ஆயிரம் கைகள் மறைத்து நின்றாலும்
மறையாத ஆதவன் , தூசிப் படலம் மறைத்தன் விளைவு உலகின் வெப்ப நிலை 0.5 டிகிரி குறைந்தது .'92 ஆகஸ்டில் கடுங்குளிரில் நிறைய பேர் மாண்டனர் . அமெரிக்காவில் கோடை இல்லாமல் போய் தட்பவெப்ப நிலை மாறி மிசிசிப்பி ஆற்றில் கடும் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு பெரிய சேதத்தை ஏற்படுத்தியது.
இந்த எரிமலை சீற்றத்திற்கு பின்னால் இருக்கும் சினத்தை யாருமே கண்டுக்க வில்லை .
ர. ரா

**Rahmath Rajakumaran**
உலகில் எரிமலை வெடிப்பு நேரும் ஆபத்து ஆக அதிகமுள்ள நாடு இந்தோனேசியா. தற்போது, "அகுங் " என்ற எரிமலை தொடர்பான அச்சுறுத்தல் காரணமாக சுமார் 40,000 பேர் வெளியேற்றப்பட்டுள்ளனர்.
சுமார் 17,000 தீவுகளையும் எந்நேரமும் வெடிக்கக்கூடிய கிட்டத்தட்ட 130 எரிமலைகளையும் கொண்டிருக்கும் இடமாக உள்ளது இந்தோனேசியா.
அங்கு நிகழ்ந்த எரிமலை வெடிப்புச் சம்பவங்களில் சில:
டம்போரா
சும்பாவா தீவிலுள்ள தம்போரா மலை 1815ஆம் ஆண்டு வெடித்தது. வரலாற்றில் ஆகப் பெரிய எரிமலை வெடிப்புச் சம்பவங்களில் ஒன்றாக அது இருந்தது.

வெடிப்பில் கிட்டத்தட்ட 12,000 பேர் மாண்டனர்.
கிரக்கத்துவா
1883ஆம் ஆண்டில் கிரக்கத்துவா தீவில் நடந்த வெடிப்பில் மொத்த தீவே அழிந்துபோனது.
வெடிப்பினாலும் அதனால் ஏற்பட்ட சுனாமியாலும் சுமார் 36,000 பேர் மாண்டனர்.
மெராப்பி
1930இல் மெராப்பி எரிமலை வெடித்தபோது 1,300க்கும் அதிகமானோர் மாண்டனர். 2010இல் அது மீண்டும் வெடித்ததில் 300 பேர் மாண்டனர். 280,000 பேர் அந்த இடத்தைவிட்டு வெளியேற நேரிட்டது.
அகுங்
தற்போது குமுறிக்கொண்டிருக்கும் அகுங் எரிமலை, 1963ஆம் ஆண்டில் பலமுறை வெடித்தது. அப்போது சுமார் 1,600 பேர் மாண்டனர்.

**Rahmath Rajakumaran**

அந்தமான் எரிமலை!
இந்தியா மற்றும் தெற்காசியா பகுதிகளில், உயிர்ப்புடன் இருக்கும் ஒரே ஒரு எரிமலையான பாரன் தீவு எரிமலை, புகை மற்றும் லாவாவை வெளியேற்றத் துவங்கியுள்ளது. அந்தமான் நிகோபார் தீவுகளில் இருக்கும் இந்த எரிமலையானது சுமார் 150 வருடங்களாக செயலற்று இருந்தது. பிறகு திடீரென கடந்த 1991-ம் ஆண்டு வெடித்தது; அப்போது புகை மற்றும் எரிமலைக் குழம்புகளை வெளியிட்டது. பிறகு 1994-95 காலகட்டத்தில் மீண்டும் வெடித்தது. அதன்பிறகு இந்த பெரியஅளவில் எரிமலையில் சீற்றங்கள் ஏற்பட்டதில்லை. 1787-ம் ஆண்டுதான் இதன் முதல் வெடிப்பு பதிவு செய்யப்பட்டுள்ளது. அதன் பிறகு 1789, 1795, 1803–04, மற்றும் 1852-ம் ஆண்டுகளுக்குப் பின்பு 1991-ம் ஆண்டுதான் எரிமலை வெடிப்பு பதிவானது. 2005-07 காலகட்டத்திலும் இந்த எரிமலையில் சீற்றங்கள் ஏற்பட்டாலும், அது 2004-ம் ஆண்டு ஏற்பட்ட சுனாமியின் தாக்கத்தால் ஏற்பட்டது எனக் கண்டறியப்பட்டது.
தற்போது மீண்டும் இந்த எரிமலையில் இருந்து புகை வெளியேறுவதாகக் கண்டறிந்துள்ளனர் கோவாவைச் சேர்ந்த கடலியல் விஞ்ஞானிகள். இதுகுறித்துக் கூறிய சி.எஸ்.ஐ.ஆர் மற்றும் தேசிய கடலியல் நிறுவனத்தின் விஞ்ஞானிகள், "இந்தியாவில் உயிருடன் இருக்கும் ஒரே எரிமலையான பாரன் தீவுகள் எரிமலை மீண்டும் வெடித்துள்ளது. இது அந்தமான் தலைநகர் போர்ட்ப்ளேயரில் இருந்து 140 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. சுமார் 150 ஆண்டுகளாக வெடிக்காத இது கடந்த 1991-ல் வெடித்தது. கடந்த ஜனவரி மாதம் 23-ம் தேதி, புகை மற்றும் எரிமலைக்குழம்பு இரண்டையும் வெளியிட்டது" என்றனர்.
எரிமலை வெளியிடும் சாம்பல் மற்றும் புகையின் மாதிரிகளையும் விஞ்ஞானிகள் சேமித்துள்ளனர். இதன்மூலம் எரிமலை வெடிப்பு பற்றிய தன்மையை நம்மால் அறிந்துகொள்ள முடியும். கடந்த ஜனவரி மாதம் 23-ம் தேதி மதியம் எரிமலையில் இருந்து வெளியேறிய மாதிரிகளை சேமித்துள்ளனர்.
மீண்டும் ஜனவரி 26-ம் தேதி அங்கே சென்று ஆராய்ந்த விஞ்ஞானிகள், அன்றும் எரிமலையில் இருந்து புகை மற்றும் எரிமலைக் குழம்பு வெளியேறியதை கண்டுள்ளனர். பகல் நேரத்தில் புகையை வெளியிட்ட எரிமலையானது, இரவு நேரத்தில் லாவாவை வெளியிட்டுள்ளது.
பாரன் தீவு எரிமலையானது அந்தமான் தலைநகர் போர்ட்ப்ளேயரில் இருந்து சுமார் 140 கி.மீ தொலைவில் இருக்கிறது. இந்தப் பகுதியில் மனிதர்கள் யாரும் வசிப்பதில்லை. இந்தப் பகுதிக்கு பொதுமக்கள் செல்ல வேண்டும் என்றாலும், போர்ட்ப்ளேயரில் வனத்துறையிடம் சிறப்பு அனுமதி பெற்றபின்பே செல்ல முடியும். அரசுக்கு அதிக வருவாய் தரும் சுற்றுலாத் தளங்களில் ஒன்றாக உள்ளது இந்தப் பகுதி.

சந்திரன் பயனளிக்குமா ?



وَسَخَّرَ لَـكُمُ الشَّمْسَ وَالْقَمَرَ دَآٮِٕبَيْنِ‌ وَسَخَّرَ لَـكُمُ الَّيْلَ وَالنَّهَارَ‌

(தவறாது) ஒழுங்காக நடைபெற்று வருமாறு சூரியனையும் சந்திரனையும் உங்களுக்குப் பயனளிக்கக் கூடிய விதத்தில் (படைத்து) அமைத்தான். (மாறி மாறி) வரக்கூடிய இரவு பகலையும் உங்களுக்காக (அமைத்து அதில்) பயனடைய வகை செய்தான்.
(அல்குர்ஆன்: 14:33)

சந்திராயன்-2 வெற்றி 50% தோல்வி 50% நள்ளிரவில் என்னாச்சு இஸ்ரோவுக்கு.!
இஸ்ரோ சார்பில் நிலவுக்கு அனுப்பிட்ட சந்திராயன்-2 விண்கலன் 50 சதவீதம் வெற்றியும் 50 சதவீதம் தோல்வியுமாக அடைந்துள்ளது.
அதாவது, விக்ரம் லேண்டரில் இருந்து இஸ்ரோவுக்கு சிக்னல் கிடைக்கவில்லை. ஆனால் ஆர்பிட்டர் தொடர்ந்து இயங்கி கொண்டிருக்கின்றது. இது நிலவை தொடர்ந்து ஆய்வு செய்யும் இஸ்ரோ தெரிவித்துள்ளது.

2.1 கி.மீ முன் சிக்னல் கட்
நிலவின் தென் துருவத்தில் தரையிறங்க இருந்த விக்ரம் லேண்டரில் இருந்து, நிலவின் தரைப்பகுதிக்கு 2.1 கி.மீ தொலைவில் இருந்து சிக்னல் கிடைக்கவில்லை என்று இஸ்ரோ தலைவர் சிவன் தெரிவித்துள்ளார்.
சந்திராயன்-2 விண்கலனை இஸ்ரோ கடந்த ஜூலை 22ம் தேதி , ஜிஎஸ்எல்வி ராக்கெட்டில் ஆர்பிட்டர், லேண்டர், ரோவர் ஆகிய 3 கலன்களுடன் செலுத்தியது.
ஆர்பிட்டர் வெற்றி
சந்திராயன்-2ல் இருந்து பிரிந்த ஆர்பிட்டர் சாட்டிலைட் கருவி, நிலவின் சுற்றுவட்ட பாதையில், ஏற்கனவே சுற்றி வர துவங்கிவிட்டது.
விக்ரம் லேண்டர் தொடர்பு கட்?
ரோவருடன் தரையிறக்க உதவிம் விக்ரம் லேண்டர், நிலவில் தரையிறங்கவில்லை. நிலவின் இருந்து 2.1 கி.மீ முன் அதன் இஸ்ரோ மையத்துடனான தொடர்பை முற்றிலும் இழந்துள்ளது.
ஓராண்டு ஆய்வு செய்யும்
ஆர்பிட்டர் மட்டும் தொடர்ந்து செயல்பாட்டில் இருக்கின்றது. இது நிலவை தொடர்ந்து ஓராண்டுக்கு ஆய்வு செய்யும். மேலும், தென்துருவத்தில் சுற்றுவட்ட பாதையில் ஆர்பிட்டர் சுற்றிவருகின்றது. இது நிலவை ஆய்வு செய்து வருகின்றது.

50% வெற்றி 50%தோல்வி
சந்திரயான்- 2ன் மற்றொரு பகுதியான ஆர்பிட்டர் தொடர்ந்து செயல்பட்டு நிலவை ஆய்வு செய்யும் என விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளனர். ஆர்பிட்டர் 95% பணி செய்யும் என இஸ்ரோ விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளனர். லேண்டர் நிலவில் தரையிறங்கினாலும் கூட 14 நாட்கள் மட்டும் ஆய்வு செய்து இருக்கும். இந்த திட்டம் முழு தோல்வி என கூற முடியாது என்று இஸ்ரோ விளக்கம் அளித்துள்ளது.
மோடி விஞ்ஞானிகளுக்கு ஆறுதல்

பெங்களூர் இஸ்ரோ மையத்திற்கு நிலவில் தரையிறங்கும் காட்சியை காண வந்த பிரதமர் மோடி வாழ்கை என்றால் மேடு பள்ளம் இருக்கத்தான் செய்யும் என விஞ்ஞானிகளுக்கு ஆறுதல் கூறினார்.
சந்திராயன்-2 நிலவை நெருங்கியது மிகப்பெரிய சாதனை. கடுமையாக விண்வெளி சேவையாற்றியுள்ளீர்கள் என்று இஸ்ரோ தலைவர் சிவன் உள்ளிட்டோர்களை மோடி தட்டிக் கொடுத்தார்.

يٰمَعْشَرَ الْجِنِّ وَالْاِنْسِ اِنِ اسْتَطَعْتُمْ اَنْ تَنْفُذُوْا مِنْ اَقْطَارِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ فَانْفُذُوْا لَا تَنْفُذُوْنَ اِلَّا بِسُلْطٰنٍ
மனித, ஜின் கூட்டத்தார்களே! நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்றுவிட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள். ஆயினும், (அவைகளை ஆட்சி புரியக்கூடிய) மிகப்பெரும் பலத்தைக் கொண்டே தவிர நீங்கள் செல்ல முடியாது. (குர்ஆன்: 55:33)

இதன் மூலம் மனித குலம் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்றும் ஆட்சி செய்யும் . இன்ஷா அல்லாஹ் .
ர.ரா
பின்னூட்டம் கண்டிப்பாக படிக்கவும்

**Rahmath Rajakumaran**
விண்வெளி ஆராய்ச்சியில் கொடி கட்டிப்பறக்கும் அமெரிக்கா, நிலவுக்கு அரை நூற்றாண்டுக்கு முன்பே நீல் ஆம்ஸ்ட்ராங்கை அனுப்பி வைத்து, நடைபோட வைத்தது. அந்த அமெரிக்கா கூட, நிலவின் தென்துருவப்பகுதியில் கால் பதித்தது இல்லை. எந்த விண்கலத்தையும் அனுப்பி தரை இறங்க செய்தது இல்லை.
விண்வெளி ஆராய்ச்சியில் முன்னணியில் உள்ள ரஷியா.. சீனா கூட இந்த சோதனையில் இறங்கியது இல்லை.
அதில் வளர்ந்து வருகிற இந்தியா இறங்குகிறது என்றால்?
நமது வளர்ச்சியில் நம்மை விட நமது எதிரிகள்தான் கவனமாகவும், கண்காணிப்பாகவும் இருப்பார்கள் என்பதுபோலத்தான் இதுவும்.
சந்திரயான்-2 விண்கலம், கடந்த ஜூலை மாதம் 22-ந்தேதி பகல் 2.43 மணிக்கு, ஜி.எஸ்.எல்.வி. மார்க்-3 ராக்கெட் மூலம் ஸ்ரீஹரிகோட்டாவில் உள்ள சதீஷ்தவான் விண்வெளி ஆய்வு மையத்தில் உள்ள 2-வது ஏவுதளத்தில் இருந்து விண்ணில் செலுத்தப்பட்டது அல்லவா? அந்த கணத்தில் இருந்து அமெரிக்கா, ரஷியா, சீனா, இங்கிலாந்து என உலக நாடுகள், விண்வெளி ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்ட அத்தனை நாடுகளின் பார்வையும் சந்திரயான்-2 மீது பதிந்து விட்டது.
அதன் ஒவ்வொரு அசைவையும் அந்த நாடுகள் எல்லாம் கண்காணிக்கத் தொடங்கின.விண்ணில் வெற்றிகரமாக செலுத்தியதே ஒரு சாதனை. பூமியின் சுற்றுப்பாதையில் நிலை நிறுத்தியதும் சாதனை. நிலவை நோக்கிய சந்திரயான்-2 விண்கலத்தின் பயணத்தை ஆகஸ்டு 14-ந்தேதி இஸ்ரோ விஞ்ஞானிகள் தொடங்கி வைத்தது சாதனை. நிலவின் சுற்றுவட்டப்பாதையில் ஆகஸ்டு 20-ந்தேதி சந்திரயான்-2 நுழைந்தது சாதனை.
இந்த சாதனைகளைத் தொடர்ந்து புரிந்த மகத்தான சாதனைதான், சந்திரயான்-2 ஆர்பிட்டரில் இருந்து விக்ரம் லேண்டர் கடந்த 2-ந்தேதி பிரிந்த செயல்.
சந்திரயான்-2 என பேசி வந்தவர்கள் திடீரென ஆர்பிட்டர் என்கிறார்கள், லேண்டர் என்கிறார்கள், ரோவர் என்கிறார்கள் ஒன்றுமே புரியவில்லையே என்று சாமானியர்கள் நினைக்கக்கூடும். இப்படி நினைத்தால் அதில் தப்பே இல்லை.
எப்படி மனிதர்களான நாம் கண், காது, மூக்கு, வாய், கை, கால் என உறுப்புகளுடன் பிறந்திருக்கிறோமோ அதே போன்றுதான் இந்த சந்திரயான்-2 விண்கலமும் 3 முக்கிய கலன்களை கொண்டிருக்கிறது.

**Rahmath Rajakumaran**
அதில் ஒன்று, ஆர்பிட்டர். இதுதான் சுற்றுவட்டக்கலன். இதுதான் நிலவை ஓராண்டு காலம் சுற்றக்கூடிய கலன். ஆங்கிலத்தில் இது ஆர்பிட்டர். இதன் எடை 2,379 கிலோ. இதுதான் பெங்களூரு அருகே பைலாலுவில் அமைந்துள்ள இஸ்ரோ மையத்துடன் தகவல் பரிமாற்றம் செய்யக்கூடியது.
இரண்டாவது கலன்தான் லேண்டர். இதன் எடை 1,471 கிலோ. இந்திய விண்வெளி ஆராய்ச்சி திட்டங்களின் தந்தை என்று அழைக்கப்படுகிற விண்வெளி விஞ்ஞானி விக்ரம் சாராபாயின் பெயரைத்தான் இந்த லேண்டருக்கு விக்ரம் என சூட்டி இருக்கிறார்கள். இது ஒரு சந்திர நாள் இயங்கும் வகையில் வடிவமைக்கப்பட்டது. ஒரு சந்திர நாள் என்பது பூமியின் 14 நாட்களுக்கு சமம். இதுவும் இஸ்ரோ மையத்துடன் தகவல் பரிமாற்றம் செய்ய முடியும்.

மூன்றாவது கலன்தான் ரோவர். இதன் எடை 27 கிலோ. இதற்கு பிரக்யான் என பெயர் சூட்டப்பட்டது. பிரக்யான் என்றால் சமஸ்கிருதத்தில் ஞானம் அல்லது அறிவு என பொருள். இது 6 சக்கரங்களைக் கொண்ட ரோபோ வாகனம். ரோவரைப் பொறுத்தமட்டில் அது விக்ரம் லேண்டருடன் மட்டுமே தகவல் தொடர்பு பரிமாற முடியும்.
தென் துருவப்பகுதியில் விக்ரம் லேண்டரின் 'சாப்ட் லேண்டிங்' தான் மிகப்பெரும் சவாலான பணி ஆகும். அப்படி என்ன பெரிய சவால் என மனித மனங்கள் கேட்பது இயல்பு.

**Rahmath Rajakumaran**

பூமியைப் போன்று நிலவில் காற்று மண்டலம் கிடையாது. இதனால் லேண்டரை தரை இறக்க பாராசூட்டைப் பயன்படுத்த முடியாது. எரிபொருளைப் பயன்படுத்தி, சம நிலையில் மெல்ல மெல்ல தரை இறங்கச்செய்வதுதான் ஒரே வழி.
லேண்டர்தான் தனது சொந்த ராக்கெட் என்ஜினைக் கொண்டு, அதன் வேகத்தை சீராக குறைத்துக்கொள்ளும்.
நிலவின் தென் துருவத்தின் மேற்பகுதியை நெருங்க நெருங்க லேண்டரும் நகர்வது இயல்பான நிகழ்வு.
நிலவின் தென் துருவப்பகுதியில் லேண்டர் தரை இறங்கும் தருணத்தில், அதன் ராக்கெட் என்ஜின் தனது நகர்வை நிறுத்துவதும், இறக்கத்தின் வேகத்தையும் கட்டுப்படுத்துவதும்தான் சவாலோ சவால். இதைத்தான் விண்வெளி விஞ்ஞானிகள் 'சாப்ட் லேண்டிங்' என்று சொல்கிறார்கள்.
இந்த லேண்டருக்குள்தான் பிரக்யான் என்னும் ரோவர் ரோபோவும் அடக்கம். ரோபோவால் நிலவின் மேற்பரப்பில் அரை கி.மீ. தொலைவுக்கு மெல்ல மெல்ல ஊர்ந்து செல்ல முடியும்.
மொத்தத்தில் சந்திரயான்-2 விண்கலத்தில் 14 கருவிகள் உள்ளடக்கம். அவற்றில் 13, இந்தியாவினுடையது. எஞ்சிய ஒன்று, அமெரிக்காவின் நாசா விண்வெளி ஆராய்ச்சி மையத்துக்கு உரியது.
உலகின் பார்வையை சந்திரயான்-2 எப்படியெல்லாம் ஈர்த்திருக்கிறது என்பதற்கு, "ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்பார்களே, அப்படித்தான் நாசா விஞ்ஞானி ஜெர்ரி லினெங்கர் சொல்வதை எடுத்துக்கொள்ள வேண்டும்.
அவர், "இந்த சந்திரயான்-2 திட்டம் ஒரு

**அருமையான**

பணி. அனைவரையும் உற்சாகத்தில் வைத்த திட்டம். என்னை இருக்கையின் விளிம்பில் தள்ளிய திட்டம்" என்று ஆச்சரியத்தை வெளிப்படுத்துகிறார்.
"இது உண்மையிலேயே இந்தியாவுக்கு மட்டுமல்ல, இந்தியாவின் அறிவியல், தொழில் நுட்பத்தின் முன்னேற்றத்துக்கு மட்டுமல்ல, பூமியில் உள்ள அனைத்து விண்வெளி பயண நாடுகளும் முன்னேறுவதற்கு உதவக்கூடியதாகும். நிலவுக்கான எங்கள் ஆய்வு மற்றும் நிலவில் மனிதனின் நிரந்தர இருப்பை ஏற்படுத்த இன்னும் சொல்வதானால் நிலவின் மனிதனை இருக்கச்செய்வதற்கும்கூட உதவும்".
வெறும் ரூ.978 கோடியில், ஹாலிவுட் வெற்றிப்படம் அவெஞ்சர்ஸ் எண்ட் கேம்-ஐ விட குறைந்த பட்ஜெட்டில், சந்திரயான்-2 திட்டத்தை இந்திய விஞ்ஞானிகள் தீட்டி செயல்படுத்தியதைக் கண்டு நாசா விஞ்ஞானி ஜெர்ரி லினெங்கர் வியக்கிறார்.
"இதில் இருந்து உலகம் கற்றுக்கொள்ள முடியும். மலிவான செலவில் விண்வெளி திட்டங்களை தீட்ட இயலும். இன்னும் அதிகமான திட்டங்களை செயல்படுத்தி கற்றுக்கொள்ள முடியும். இது மனித குலத்தின் அறிவு முன்னேற்றத்துக்கு வழிவகுக்கும்" என்கிறார் இவர்.
மொத்தத்தில் இந்திய விண்வெளித் துறைக்கு ஒரு ராயல் சலியூட்

**Rahmath Rajakumaran**

பூமியின் துணைக்கோளான நிலா இரவில் பார்ப்பதற்கு ரம்மியாக காட்சியளித்தாலும், அது தனக்குள் பல்வேறு மர்மங்களை உள்ளடக்கியது. குறிப்பாக, நிலவின் தென் துருவத்தில் சுமார் 100 பில்லியன் ஆண்டுகளாக சூரிய வெளிச்சம் படாத அநேக பள்ளங்களும், குகைகளும் இருக்கின்றன. அவற்றை ஆராய்ந்தால் சூரிய குடும்பத்தின் தோற்றம் குறித்து பல்வேறு அரிய தகவல்கள் கிடைக்கும். மேலும், அங்குள்ள பள்ளங்களில் உறைநிலையில் 80 மில்லியன் டன் அளவுக்கு தண்ணீர் இருப்பதுடன், அதிக ஆற்றல் வாய்ந்த ஹீலியம், ஹைட்ரஜன், மீத்தேன் உள்ளிட்ட மூலக்கூறுகள் இருக்கின்றன. இப்போது பூமியில் தண்ணீருக்கு அடுத்தபடியாக எரிபொருள் தேவைதான் உலக நாடுகளுக்கு முக்கிய தேவையாக இருக்கிறது. எனவே, கதிர்வீச்சு அபாயமில்லாத அதிக ஆற்றல் கொண்ட ஹீலியம் மூலக்கூறுகளை பூமிக்கு கொண்டு வருவதற்கான முயற்சிகள் முன்னெடுக்கப்படுகின்றன.

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் 11

(வானத்திலிருந்து வீசப்படும் கற்கள்)




விண்வீழ்கல் **(Meteorite)** என்பது பூமிக்கு வெளியிலிருந்து, பூமியின் மேற்பரப்பை அடையும் பொருளாகும். விண்வெளியில் இருக்கும்போது இது "விண்கல் "என அழைக்கப்படுகிறது.

சூரிய மண்டலத்தில் பில்லியன் கணக்கில் சிறு கற்களும், உலோகப் பாறைகளும் மிதந்து கொண்டிருக்கின்றன. இந்த விண்கற்கள் பூமியின் காற்று மண்டலத்தின் வழியாக அதிவேகத்தில் வந்தடையும்போது, வளிமண்டலத்தின் உராய்வு வெப்பத்தினால் எரிந்து, ஒளிரும் பாதையை ஏற்படுத்துகின்றன. அப்போது இவை எரிகல் அல்லது எரி நட்சத்திரம் (எரி வெள்ளி) என அழைக்கப்படுகின்றன.

இந்த விண்கற்கள் எங்கிருந்து வருகிறது? சொல்றேன் . சூரியனைச் சுற்றும் ஒவ்வொரு கோள்களுக்கும் இடையே உள்ள தூரத்தின் விகிதாச்சாரம் ஒரளவு சமமாக இருந்தாலும் , செவ்வாய் கோளுக்கும் , வியாழன் கோளுக்கும் இடையே உள்ள தூரம் இரு மடங்காக இருக்கிறது !
செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையே ஒரு கோள் இருந்திருக்கிறது . அது உடைந்து சிறு துண்டு முதல் சிறு குன்று வரை சூரியனைச் சுற்றி வருகிறது

இவைகளுக்கு **"அஸ்ட்ராய்டுகள் "**என்று பெயர் .
செவ்வாய் கிரகத்திற்கும் வியாழன் கிரகத்திற்கும் இடையே இருந்த கிரகத்தில் மனிதர்கள் இருந்திருக்கலாம். அவர்கள் நம்மை விட அறிவாளியாக இருந்து அணு ஆயுதங்களை அப்போதே பயன்படுத்தி கிரகத்தை உடைத்திருக்கலாம்.
விண்கற்கள் சில முழுவதுமாக எரிந்து வளிமண்டலத்துடன் கலந்து விடுகின்றன. சில பூமியிலே விழுந்து பெரிய பள்ளங்களையும் ஏற்படுத்தியுள்ளன.

ஆனால் இந்த எரி விண்கற்களைப் பற்றியோ அல்லது விஞ்ஞானம் இதுவரை அறியாத வான் எரிகொள்ளியைப் பற்றியோ குர்ஆனில் அல்லாஹ் ...

الْمَلَاِ الْاَعْلٰى وَيُقْذَفُوْنَ مِنْ كُلِّ جَانِبٍ
மேல் உலகத்தில் உள்ளவர்களின் விஷயங்களை (ஷைத்தான்கள்) செவியுற முடியாது. (ஏனென்றால், அதனை நெருங்கும் ஒவ்வொருவரும்) பல பாகங்களிலிருந்தும் (கொள்ளி களால்) எறியப்பட்டு விரட்டப்படுகின்றனர். குர்ஆன் : ( 37:8)

اِلَّا مَنْ خَطِفَ الْخَطْفَةَ فَاَتْبَعَهٗ شِهَابٌ ثَاقِبٌ
(தப்பித் தவறி யாதொரு வார்த்தையை) இறாய்ஞ்சிச் செல்ல நெருங்கினால், உடனே அவனை (க்கொழுந்துவிட்டெரியும்) பிரகாசமான நெருப்பு பின்தொடர்கிறது
குர்ஆன் : (37:10)

தென் அமெரிக்க நாடான அர்ஜெண்டினாவின் கேம்போ டெல் செலியோ பகுதியில் தோண்டும் இடமெல்லாம் விண்கற்களாக கிடைக்கிறது இதனால் இவ்விடத்தை 'விண்கற்களின் சொர்க்கம் ' என்று அழைக்கின்றனர் .

**சாகோ (EL -CHACO)** இதே பகுதி 37 டன் எடை கொண்ட அந்த விண்கல்லை 1980 ல் கண்டுபிடித்து இருக்கிறார்கள்
இந்த விண்கற்கள் சுமார் 4 ஆயிரம் வருடங்களுக்கு முன் பூமியின் மீது மோதிய விண்கல்லில் இருந்து சிதறியவைகள் என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்து இருக்கிறார்கள்
உலகில் மிகப்பெரிய விண்கல் தென் ஆப்பிரிக்க நாடான நமீபியாவில் 1920 ஆண்டு கண்டுபிடித்து இருக்கிறார்கள் இக்கல்லின் எடை 66 டன் இவ்விண்கல்லிற்கு கோபா
(HOBA) என்று பெயர் சூட்டி இருக்கிறார்கள்
இந்த விண்கல்லில் 84 சதவிகிதம் இரும்பும் , 14 சதவீதம் நிக்கலும் இருக்கிறது இந்தக் கல் மோதியபோது பூமி எப்படி அதிர்ந்திருக்கும் கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள்
கஃபாவில் பதிக்கப்பட்டிருக்கும் "ஹஜ்ருல் அஸ்வத் " கல்லும் விண்கல் ஆகும் . இதனை நபி ஆதம் (அலை) அவர்கள் விண்ணிலிருந்து இறங்கும் போது கொண்டு வந்தாக கூறப்படுகிறது அஸ்வத் கல்லைப் பற்றி நீண்ட நெடிய வரலாறு உள்ளது
" இந்த பெரிய பெரிய விண்கற்கள் தற்போது பூமியில் விழவில்லையே
ஏன் ? "
" தன் அனுமதி இன்றி பூமியின் மீது வானம் விழுந்து விடாதவாறு அவன் தடுத்துக் கொண்டு இருக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது மிக்க அன்பும் கிருபையும் உடையவனாக இருக்கின்றான் ".
குர்ஆன் (22 : 65 )

நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணத்தின் போது வானில் குடம் அளவிற்கு கற்கள் குவிக்கப்பட்டிருப்பதைக் கண்டு , ஜிப்ரயீலிடம், நபி (ஸல்) அவர்கள் வினவிய போது , " அதைப் பற்றி இப்பொழுது வினவ வேண்டாம் " என்று ஜிப்ரயீல் (அலை) கூறினார்கள் .
பின்னர் , இறைவனுடன் வசனத்து விட்டு, அவ்வழியே வந்த நபி (ஸல்) அவர்கள் குவிக்கப்பட்டிருந்த கற்களைப் பற்றி மீண்டும் விசாரித்தார்கள் .

" இவை லூத்துடைய கூட்டத்தினர் மீது எறியப்பட்டது போக எஞ்சி இருப்பவை தங்களின் சமூகத்திலுள்ள ஓரின புணர்ச்சியாளர்களாகி (ஹோமோ செக்ஸ் ) மானங்கெட்ட அநியாயக்காரர்கள் இந்த தவற்றை செய்யும்போது, அவர்கள் பெயர் பொறிக்கப்பட்ட கல் மழையாய் அவர்கள் மீது பொழியப்படும் " என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கூறினார்கள் .

مُّسَوَّمَةً عِنْدَ رَبِّكَ وَ مَا هِىَ مِنَ الظّٰلِمِيْنَ بِبَعِيْدٍ
(எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும்) உங்கள் இறைவனால் அடையாளமிடப்பட்டிருந்தது. (புரட்டப்பட்ட) அவ்வூர் இவ்வக்கிரமக்காரர்களுக்கு வெகு தூரமுமல்ல; (விரும்பினால் அதனை இவர்கள் நேரில் சென்று பார்த்துக் கொள்ளலாம்.) குர்ஆன் : ( 11:83)
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 12 பூகம்பங்கள் ஏன் ஏற்படுகின்றன ?




பூமிக்கு அடியில் பாறைத் தட்டுகள் கொதிக்கும் குழம்பில் மிதக்கின்றன. இப்பாறைத் தட்டுகள் மீதுதான் கண்டங்கள் அமைந்து பாறைத் தட்டுகள் சென்டிமீட்டர் கணக்கில் நகர்ந்து பக்கத்து பாறைகள் மீது மோதி , இமயமலையே உருவாகிக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன் .

எங்காவது பூகம்பம் நிகழ்ந்தால், உடனே அதன் அளவை ரிக்டரில் சொல்கிறார்கள் அது என்ன ரிக்டர் ?
ஆரம்பத்தில் பூகம்பங்களின் சேதத்தை மதிப்பிட 1902 ல் கியூசெப்
மெர்கால்லி கண்டு பிடித்த மெர்கால்லி அளவை என்ற மதிப்பீட்டு முறையைத்தான் புலியியல் நிபுணர்கள் பின்பற்றினார்கள் பூகம்பம் நிகழ்ந்த பகுதிக்கு சென்று பாதிக்கப்பட்ட மக்களை விசாரித்து , கட்டடங்கள் எப்படி விழுந்தது .... தரை எப்படி ஆடியது ... என்றெல்லாம் விசாரித்து பூகம்பத்தின் மையப்புள்ளி , அளவு ... ஆகியவற்றை மதிப்பிட்டார்கள் .

இது யதார்த்ததில் சரிபட்டு வரவில்லை பூகம்ப பாதிப்பிலிருந்து மீண்ட பலர் தாங்களை சாகக்காரர்களாக காட்டிக் கொள்ள நிறைய்ய பொய் சொன்னார்கள் .இதனால் ஒரே பூகம்பத்திற்கு பல மையப்புள்ளி கிடைத்தன.
அமெரிக்காவின் தெற்கு கலிபோர்னியாவில் அடிக்கடி பூகம்பம் நிகழும் எனவே இங்குள்ள விஞ்ஞானி சார்ல்ஸ் ரிக்டர் 1934 உருவாக்கிய பூகம்பமானிதான் ரிக்டர் .பூகம்பத்தின் போது பரவும் அதிர்வலைகள் இந்தக் கருவியில் மெல்லிய கோடுகளைக் கொண்ட அலைப் படங்களாக பதிவாகின்றன இதை ஆராய்ந்து அதன் மையம், தீவிரம் ஆகியவற்றைக் கணிக்கலாம் .
ரிக்டர் அளவீட்டின்படி

1 - 3 ரிக்டர் பூகம்பமானியில் மட்டுமே பதிவாகும் மனிதர்களால் உணரப்படாது
3 - 4 ரிக்டர் மனிதர்களால் லேசாக உணர முடியும் ஆனால் பாதிப்பு கிடையாது
5 ரிக்டர்: பரவலாக உணரப்படும் பூகம்பத்தின் மையப் புள்ளியில் மட்டும் சேதம்
6 ரிக்டர்: பத்து கி.மீ சுற்றளவில் கட்டடங்கள் மோசமாக சேதமடையும்
7 ரிக்டர்: பெரிய பூகம்பகம் |00 கி.மீ சுற்றளவுக்கு சேதம் இருக்கும்
8 ரிக்டர்: மிகப் பெரிய பூகம்பகம் சில நூறு சுற்றளவுக்கு சேதம் இருக்கும்
9 ரிக்டர்: மிகவும் அரிதாக நிகழக்கூடிய பூகம்பம் :1000 கி.மீ சுற்றளவு வரை சேதம் டிசம்பர் 26 சுமத்ரா தீவில் மையக் கொண்டு , சுனாமியை தட்டி எழுப்பி நர்த்தனமாடிய நாகசூர பூகம்பம். மறக்க முடியலே .
இந்த பூகம்பங்களை முன்கூட்டியே அறிந்து பாம்பு , எலி, எறும்பு , கட்டிப்போடாத எல்லா ஜீவராசிகளும் தப்பித்து ஓடி விடுகின்றன. மனிதர்கள் மட்டும்தான் கார்பரேஷன் காரர்கள் அடித்துப் போட்ட நாய் மாதிரி சிக்கி மாண்டு போகிறார்கள் .

தற்காலத்தில் கொலராடோ பல்கலைக்கழக பூகம்ப இயல் பேராசிரியர் "ரோஜர் பில்ஹாம் **(Roger Bilham )** பூமிக்கு மேலே 24 ஆயிரம் கி.மீ உயரத்தில் சுற்றிக் கொண்டு இருக்கும் செயற்கைகோள்கள் **GPS (Global positioning system )** மூலமாக கணிக்க முடியும் என்று கூறியுள்ளதாக தகவல்.
GPS என்ற கருவி காரில் பொருத்தப்பட்டு மும்பாயிக்குப் போப்பா என்று சொன்னதும் GPS-ல் மும்பை செட் செய்து டிரைவர் ரோட்டில் யாரிடமும் வழி கேட்காமலே போவதற்கு GPS தேவை.
ஆமா , பூகம்பம் ஏன் வருவதுன்னு சொல்லவே இல்லையே ? அதுதான் சொன்னேனே பாறை தட்டு நகர்ந்து .... முட்டும் போது பூகம்பம் ,,,, அப்போ பாறைத் தட்டு ஏன் நகர்கிறது ?
விட மாட்டார்கள் போலிருக்கே ....

மத்யன் தேசத்து ஐக்கா வாசிகள்
ஷாம் - மிஸ்ர் வழியில் அமர்ந்து மக்களிடம் அநியாயமாக சுங்கம் வசூல் செய்தனர் ,
வியாபாரத்தில் கொள்முதல் செய்வதற்கு பெரிய அளவீடும் விற்பனைக்கு சின்ன அளவீடும் பயன்படுத்தினார்கள்.

பதுங்கு குழியில் பதுங்கியிருந்து கொள்ளை முடிந்தால் கொலை கற்பழிப்பு என்று நம்ம நவீன கால ரேஞ்ச்க்கு செய்தனர்.
ஒரு புதன்கிழமை ஷுஐப் (அலை) அவர்கள் l700 பேர்களோடு ஐக்காவை விட்டு வெளியேற ,
"மிகப் கொடூரமான பூகம்பம் பிடித்துக் கொண்டது அவர்கள் தங்கள் வீடுகளில் இருந்தவாறே இறந்து அழிந்து விட்டனர்

ஷுஐபை பொய்யாக்கியவர்கள் தங்கள் ஊர்களில் ஒருக்காலத்திலுமே வசதிக்காதவர்களைப் போல் ஆக்கி அவர்கள்தான் முற்றிலும் நஷ்டமடைந்தார்கள்
குர்ஆன் 7 : 91 , 92

(ரிக்டர் அளவு அட்டவணைப் புரிந்து நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்)
மலையைபிளந்து ஓட்டகம் கேட்டார்கள் வந்த ஒட்டகம் உடனேயே கன்று ஈனி பால் தரக் கேட்டார்கள் ரபியுல் ஆகிர் 16 ஆம் நாள் புதன்கிழமை ஒட்டகத்தின் கால் நரம்பை துண்டித்தார்கள் .
அவர்களுக்கு நபியாக வந்த ஸாலிஹ் நபி ஹிஜ்ர் ஊரை விட்டு வெளியேறியதும் , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் தன் சுயரூபத்தில் விஸ்வரூபமாக வந்து " மூக்தூ வ அலைக்கும் **லஃனத்துல்லாஹ்** (செத்து மடியுங்கள் உங்கள் மீது அல்லாஹ்வின் சாபம் வந்து இறங்கட்டும்) ஒரே ஒரு சப்தம்தான்
(ரிக்டர் அளவு அட்டவணையை பார்க்கவும்)

"ஆகவே(முன்னர் அவர்களுக்கு எச்சரிக்கப்பட்டு வந்த ) பூகம்பம் அவர்களைப் பிடித்துக் கொண்டது .அவர்கள் தங்கள் வீடுகளில் இருந்தவாறே இறந்து கிடந்தனர்
குர்ஆன் 7 : 78

ஐந்து நகரங்களுக்கு நபியாக வந்தார்கள். மக்கள் ஆண் புணர்ச்சிகளாக ஹோமோசெக்ஸில் மாய்ஞ்சி மாய்ஞ்சி திளைத்தனர் . அவர்களுக்கு நபியாக வந்த லூத் நபி அவர்கள்வசித்த ஸதூம் நகரை விட்டு வெளியேறியதும் ,
கி.மு 1919 முஹர்ரம் பிறை 10 வெள்ளிக்கிழமை 5 நகரங்களையும் ஜிப்ரயீல் (அலை) தன்னுடைய இறக்கையால் பூமியிலிருந்து தனியே தூக்கி ரொட்டியைப் புரட்டுவது போல் புரட்டி தலைகீழாக அடித்தார்கள் ஏன் புரட்ட வேண்டும் ? ஆணை புணரும் போது புரட்டித்தானே போட்டார்கள். பின்னே புரட்டாமல் என்ன செய்வது அதனாலதான் புரட்டி ....

"நம்முடைய கட்டளையின் நேரம் வந்ததும். அவர்களுடைய ஊரை மேல் கீழாக கவிழ்த்து புரட்டி விட்டோம் . அன்றி அதற்கு முன்னர் அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்களை(மழையைப்போல் ) பொழியச் செய்தோம்"
குர்ஆன் 11 : 82
(இது எந்த ரிக்டர் பூகம்பமானிகளாலும் அளக்க முடியாது அட்டவணையில் இதல்லாம் இல்லை )
பூகம்பங்கள் ஏன் வருகிறது ?
பூமியின் அடியிலுள்ள பாறைத் தட்டுகள் நகரும்படி அதன் மீது உள்ள மக்கள் செய்யும் கொடும் செயல்களால்தான்,
விஞ்ஞானிகள் சொன்னா கேட்பாங்களா ? (மீள்)
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 13
(சுனாமி)




சுனாமி என்பது ஜப்பானிய சொல்.

சு - என்றால் துறைமுகம். நாமி- என்றால் அலை, எனவே சுனாமி என்றால் "துறைமுக அலை" என்று பொருள். சுனாமியால் அதிகம் பாதிக்கப்படும் நாடு ஜப்பான்தான் அதனால் ஜப்பானியர்கள் வைத்த பெயரை உலகம் ஏற்றுக் கொண்டது. " சுனாமி "
சுனாமியை தமிழில் “ஆழிப்பேரலை" ஆக்கினஸ் மொழியில் சுனாமியை “பியுனா" அல்லது “அலோன்" என்பர்.

**“அலோன்"** என்ற வார்த்தைக்குப் பிலிப்பைன்ஸ் மக்களின் மொழியில் “அலை" என்று பெயர். இந்தோனேசியாவின் மேற்கு சுமித்ரா கடற்கரையில் உள்ள சிமிலி தீவில் உள்ள மொழியில் “சுமாங்" என்றும் சிகுலி மொழியில் “எமாங்" என்றும் அழைப்பர் .அதை என்ன பெயர் சொல்லி அழைத்தாலும் வந்தால் அழிவு அழிவுதான் .
நிலநடுக்கம் (பூமி அதிர்ச்சி), மண்சரிவுகள், எரிமலை வெடிப்பு, விண்பொருட்களின் மோதுகை போன்றவை சுனாமி அலைகளை ஏற்படுத்தக் கூடிய மூலக் காரணிகள்.
கடலாழத்தில் ஏற்படும் எந்தப் பாதிப்பின் போதும் சுனாமி வரும் . கடலை ஒட்டிய நிலப்பகுதியில் ஏற்படும் பூகம்பத்தால் சுனாமி வரும்.மலையில் எரிமலை உண்டாகி, அதனாலும் சுனாமி வரும்.வானில் கிரகங்களின் செயல்பாடுகள் மாறும் போதும் சுனாமி ஏற்பட வாய்ப்புண்டு (இது இன்னும் உறுதிப்படுத்தப் படவில்லை)கடலில் இயற்பியல் மாற்றங்கள் ஏற்பட்டாலும் சுனாமி வரும்.

وَلَا تَمْشِ فِى الْاَرْضِ مَرَحًا اِنَّكَ لَنْ تَخْرِقَ الْاَرْضَ وَلَنْ تَبْلُغَ الْجِبَالَ طُوْلًا
பூமியில் (பெருமையுடன்) கர்வம் கொண்டு நடக்க வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாகப் பூமியைப் பிளந்து விடவோ அல்லது மலையின் உச்சியை அடைந்து விடவோ உங்களால் முடியாது. (குர்ஆன் : 17:37)

ஆனாலும் உங்களின் கெட்ட நடவடிக்கையால் பூமியின் டெக்டானிக் நிலநடுக்கங்கள், பூமியின் புவி ஓடு உருக்குலைவதால் போன்றவை மனிதர்களின் பாவத்தினால் உண்டாகும் என்பதாக இஸ்லாம் வலியுறுத்துகிறது .
விஞ்ஞானம் மனிதர்களின் பாவங்களைப் பற்றி சிந்திக்காமல் ,கடல் படுகையில் திடீரென ஏற்படும் மாற்றதால் மேலிருக்கும் தண்ணீர் செங்குத்தாக இடமாற்றம் அடைவதால் சுனாமி உருவாகும் என்கிறது. டெக்டானிக் தட்டுகளின் தவறான சுழற்சியால் நிலநடுக்கங்கள், பூமியின் புவி ஓடு உருக்குலைவதால் உண்டாகும், இது கடலுக்கு அடியில் ஏற்படும் போது சிதைக்கப்பட்ட பகுதியிலுள்ள தண்ணீர், சமநிலையில் இருந்து இடம் பெயரும் இதனால் சுனாமி வரும் .

கி.மு. 426 கிரேக்க வரலாற்றாசிரியர் தியுசிடைட்ஸ், சுனாமி ஏற்படுவதற்கான காரணங்களை “பிலோப்போனேசியப் போர் வரலாறு” என்ற புத்தகத்தில் கூறியுள்ளார். அவர் தான் முதன்முதலில் கடலில் நிலநடுக்கம் ஏற்பட்டது என்றும், எந்த இடத்தில் நிலநடுக்கம் கடலில் உண்டானதோ அங்கு கடல்

உள்வாங்கும். பின்பு திடீர் பின்வாங்குதலும், மறு இரட்டை சக்தியும் கொண்ட வெள்ளப் பெருக்கு ஏற்படுகிறது. நிலநடுக்கம் ஏற்படாமல் இப்படி ஒரு விபத்து ஏற்பட வாய்ப்பே இல்லை என குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. 365 ல் அலெக்சாந்திரியாவில்
மிகப் பெரிய அழிவுக்குப்பின் ரோமன்
வரலாற்றாசிரியர் அம்மியனஸ் மாசில்லினுஸ் " சுனாமி என்பது, நிலநடுக்கத்தில் தொடங்கி கடல் நீர் பின்னடைவு, அதைத் தொடர்ந்து ராட்சத அலை என்ற தொடர்ச்சியான நிகழ்வாக அமைகிறது " என்றார்.
அதாவது, நிலநடுக்கம் என்பது நிலப்பகுதியில், கடல் பகுதியில், மலைப்பகுதியில் ஏற்படும். நிலப்பகுதியில் வந்தால் நிலத்தில் உள்ளவை அதிர்ந்து சேதமாகிறது. கடலில் வந்தால் கடலின் ஆழமான பகுதியிலுள்ள நிலத்தட்டுக்களின் அசைவு பெரிய அலைகளை உருவாக்குகின்றது. மலையில் எரிமலையாக உருவெடுகிறது.

பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரே நிலத்தட்டுத்தான் இருந்தது. அதன் மீது தான் பூமி இருந்தது. ஆனால் கண்டங்களாகப் பிரிய, பிரிய, அதன் தட்பவெப்ப, இயற்கை சூழ்நிலைகளுக்கு ஏற்ப, பல்வேறு நிலத்தட்டுக்கள் உருவாகின. இந்தத் தட்டுக்களின் மீதுதான் ஒவ்வொரு கண்டமும் இருக்கின்றன. நிலம், கடல் எல்லாவற்றையும் தாங்கி நிற்பது இந்த நிலத்தட்டுக்கள் தான். இதைத் தான் ‘டெக்டானிக் பிளேட்கள்’ என்று புவியியல் நிபுணர்கள் கூறுகின்றனர்.

2004ல் இந்தியப் பெருங்கடலில் ஏற்பட்ட நிலநடுக்கம் மற்றும் மிக மோசமான ஆழிப்பேரலை காரணமாக 2,30,000 மக்கள் உயிரிழந்தனர். சுமித்ரா பகுதியில் அடிக்கடி நிலநடுக்கங்கள் ஏற்படுவதால் அங்கு சுனாமிக்கான வாய்ப்புகள் அதிகம்.

2004 ஆம் ஆண்டில், டிசம்பர் 26 ஆம் நாளன்று, யுரேஷியன் நிலத்தட்டின் ஒரு பகுதியாகக் கருதப்படும் பர்மா நிலத்தட்டும், இந்தோ-ஆஸ்திரேலியன் நிலத்தட்டின் ஒரு பகுதியாகிய இந்திய நிலத்தட்டும், இந்தோனேசியாவின் வடக்கே சுமாத்திரா தீவில், கடலுக்கடியில் மோதியது. அதனால் ஏற்பட்ட பூகம்பத்தால் தோன்றிய அலைகள் தான் இந்தியப் பெருங்கடலில் சுனாமியை ஏற்படுத்தியது. இதுவே 2004 ஆம் ஆண்டின் மிகப்பெரிய இயற்கை அழிவாகக் கருதப்பட்டது. இது 2004 ஆம் ஆண்டு - இந்தியப் பெருங்கடலின் பூகம்பமும், ஆழிப்பேரலையும் எனப்படுகின்றது.

فَكَذَّبُوْهُ فَنَجَّيْنٰهُ وَمَنْ مَّعَهٗ فِى الْـفُلْكِ وَجَعَلْنٰهُمْ خَلٰٓٮِٕفَ وَاَغْرَقْنَا الَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا‌ فَانْظُرْ كَيْفَ كَانَ عَاقِبَةُ الْمُنْذَرِيْنَ
(எனினும்) அவர்களோ (நூஹை) பொய்யரென்றே கூறினார்கள். ஆகவே, அவரையும் அவரைச் சார்ந்தவர்களையும் கப்பலில் (ஏற்றி) பாதுகாத்துக் கொண்டு நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கியவர்களை (வெள்ளப் பிரளயத்தில்) மூழ்கடித்தோம்.
அவர்களுக்குப் பதிலாக (அவர்களுடைய பூமியில் நாம் பாதுகாத்துக் கொண்ட) இவர்களை அதிபதிகளாக ஆக்கினோம். அச்சமூட்டி எச்சரிக்கை செய்யப்பட்ட அவர்களுடைய முடிவு எவ்வாறாயிற்று என்பதை (நபியே!) நீங்கள் கவனியுங்கள். (குர்ஆன்: 10:73)

மேற்கண்ட வரலாற்றில் சுனாமி வெள்ளப் பேரழிவால் வாழ்க்கையை இழந்தவர்களின் முடிவு மேற்கண்ட குர்ஆன் வசனப்படியே அமைந்தது .
ர.ரா

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் 14



(புயல் காற்று)

சூறாவளி அல்லது புயல் என்பது உலகின் பல்வேறு பகுதிகளில் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகிறது.
மேற்கிந்தியத்தீவுகளில் சூறாவளி

**(Hurricane)** என்றும், ஐக்கிய அமெரிக்காவில் சுழன்றடிக்கும் **சூறாவளி (Tornado)** என்றும், ஜப்பான் சீன கடற்கரைப்பகுதிகளில் சூறாவளிப் புயல் **(Typoon)**என்றும், மேற்கு ஆஸ்திரேலியக் கடற்கரைப் பகுதிகளில் வில்லி வில்லி **(Willy Willy)** என்றும் இந்தியப் பெருங்கடல் பகுதியில் புயல் **(Cyclone)** எனப்படுகிறது.
பெயர்கள் மாறியிருந்தாலும் அதன் செயல்பாடு ஒன்றே ஒன்றுதான் அது "பேரழிவு ".
இந்த புயல் காற்று உருவாவது எல்லாம் கடலில்தான் ! வெப்ப மண்டலப் பகுதியில் இருக்கும் கடல் நீர் கோடை காலத்தில் கடும் சூடாகிறது .

சூடாகி இந்த வெப்பம் அப்படியே கடலின் மேலடுக்கில் இருக்கும் காற்றுக்கும் பரவுகிறது . சூடானதும் அடர்த்தி குறைந்து லேசாகும் காற்று , உயரே போகிறது .இதனால் ஏற்படும் வெற்றிடத்தை நோக்கி அக்கம் பக்கத்திலுள்ள ஈரக்காற்று வேகமாக கிளம்பி வந்து நிரப்ப புயல் வந்தாச்சி .
இந்த வினை தொடர்ந்து நடக்க , ஒரு கட்டத்தில் காற்று சுழன்று வேகம் பெறுகிறது .ஏற்கனவே எப்போதும் கடலில் வீசிக் கொண்டிருக்கும் இயல்பான காற்று இந்தச் சுழலை ஊதி பெருதுப்படுத்த ஒரு பெரும் சூறாவளி உருவாகி புயலாக மாறி இது நகர்ந்து எங்கே எப்படி தாக்க வேண்டும் என்று அதற்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறேதோ அங்கே அதே நோக்கி மிகச் சரியாக தாக்க ஆரம்பிக்கிறது !
அதற்கு இலக்கை நிர்ணயித்தவன் யார் ?

புயலைக் கொண்டு ஆது சமுதாய மக்களை அழித்ததாக் குர்ஆனில் இறைவன்....
ஆது சமுதாய மக்கள் 70 அடி முதல் 75 அடி உயரம் இருந்ததாகவும் . ( படம் பார்க்கவும்) அத்தகைய பெரிய உடம்பில் உள்ள வலிமை அளப்பரியதாக இருந்ததாகவும் அதனால் அவர்களின் வாழ்நாட்கள் அதிகரித்து இருந்ததாகவும் கிதாபுகளில் காணக் கிடக்கிறது.
இவர்கள் 3 பிரிவினராக பிரிந்து யமன் நாட்டில் வாழ்ந்தனர் என்று வரலாற்று ஆங்கில ஆய்வாளர் வெல்லஸ்ட் ஜேம்ஸ் என்பவர் தன் ஆய்வில் குறிப்பிடுகிறார்.
ஆதுக்களின் நபியாக ஹுது (அலை) அவர்கள் இருந்தார்கள். நபியவர்களும் 75 அடி உயரம்தான் இருந்திருப்பார்கள்.
பெரும் பெரும் மலைப்பாறைகளை மிக எளிதாகக் தூக்கி எதிரிகளின் மீது போட்டு அவர்களை அழிப்பார்கள் .நாம பந்தை எறிந்து விளையாடுவதைப் போல சர்வசாதாரணமாக பெரிய பெரிய மரங்களை மூட்டோடு பிடுங்கி தாக்குவார்கள் .
ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒட்டகத்தை அறுத்து சுட்டு உண்ணக் கூடியவர்கள். இதனால் இறைவன் பெருகும் ஒட்டகை மந்தைகளையும் , பேரீச்ச மரங்களில் செழிப்பையும் ஏற்படுத்தி இருந்தான் இவர்களுக்காக ! இதனைக் குறித்தே இறைவன் குர்ஆனில் ....
"உங்கள் உடலில் பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7: 69)

ராஸ்கா - ( உணவு அளிக்கக்கூடியது)
ஹாஃபிதா - (பிரயாண பாதுகாப்பு அளிக்கக் கூடியது )
ஸாபிதா - (மழை பொழியச் செய்வது)

ஆகிய 3 கற்சிலைகளை செதுக்கி வழிபட்டனர் .
இறைவன் தொடர்ந்து 700 வருடங்களாக அம்மக்களுக்கு இறப்பை கொடுக்கவில்லை .இதனால் நமக்கு இறப்பு என்பது இல்லவே இல்லை நம் வலிமையைக் கொண்டுதான் நாம் இவ்வாறு இருக்கிறோம் என்று நம்பினர்.

"உங்கள் உடலில் பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7: 69)
" இவர்கள் பிடிவாதக்கார முரடர்கள் "குர்ஆன் (11: 59)

"நீங்கள் எவரையும் பிடித்தால் ஈவிரக்கமின்றி கொடுமையாக நடந்துகின்றீர்கள் " குர்ஆன் (20 : 129)
இப்பேர்பட்ட பலசாலியான ஆது சமுதாயத்தவர்களை அல்லாஹ் காற்றைக் கொண்டு அழிக்க நாடினான்

سَخَّرَهَا عَلَيْهِمْ سَبْعَ لَيَالٍ وَّثَمٰنِيَةَ اَيَّامٍۙ حُسُوْمًا ۙ فَتَرَى الْقَوْمَ فِيْهَا صَرْعٰىۙ كَاَنَّهُمْ اَعْجَازُ نَخْلٍ خَاوِيَةٍ

அவர்கள் மீது, அதை ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் தொடர்ந்து வீசச் செய்தான்; எனவே அந்த சமூகத்தினரை, அடியுடன் சாய்ந்துவிட்ட ஈச்சமரங்களைப் போல் (பூமியில்) விழுந்து கிடப்பதை (அக்காலை நீர் இருந்திருந்தால்) பார்ப்பீர். (குர்ஆன் : 69:7)

وَفِىْ عَادٍ اِذْ اَرْسَلْنَا عَلَيْهِمُ الرِّيْحَ الْعَقِيْمَ

இன்னும், "ஆது" (சமூகத்தாரிலும் ஒரு படிப்பினை இருக்கிறது); நாம் அவர்கள் மீது (நாசம் விளைவிக்கக் கூடிய) மலட்டுக்காற்றை அனுப்பிய போது;
(அல்குர்ஆன்: 51:41)

மலட்டுக்காற்று என்றால் காற்றில் இருக்கும் ஆக்ஸிஜனனான பிராண உயிர் வாயு இல்லாத காற்றாக இருந்திருக்கலாமோ ?

مَا تَذَرُ مِنْ شَىْءٍ اَتَتْ عَلَيْهِ اِلَّا جَعَلَتْهُ كَالرَّمِيْمِ

அது பட்டதையெல்லாம் தூசியா(க்கிப் பறக்கடி)க்காமல் விடவில்லை.
(அல்குர்ஆன்: 51:42)

புயல் என்றால் சில மணித்துளிகள்தான் வீசி மொத்த நாசத்தையும் ஏற்படுத்திவிட்டு உடனே போய் விடும் . அப்புறம் அந்த இடம் ' புயலுக்குப் பின் அமைதி ' யாகிவிடும். ஆது மக்களுக்கு என்ன குத்ரத்தோ தெரியவில்லை ஏழு இரவும், எட்டுப் பகலும் தொடர்ந்து வீசிக்கொண்டே இருந்தது !
நமக்குத் தெரிந்த தமிழக புயல்கள்
2005 டிசம்பர் - பானுஸ்
✅2008 நவம்பர் - நிஷா
✅2010 நவம்பர் - ஜல்
✅2011 டிசம்பர் - தானே
✅2012 அக்டோபர் - நீலம்
✅2013 டிசம்பர் - மடி புயல்
✅2015 டிசம்பர் - நாடா
✅2016 டிசம்பர் - வர்தா
✅2017 நவம்பர் - ஒகி
✅2018 நவம்பர் -கஜா
ஆமா , ஆது சமுதாயத்தவர்கள் மீது வீசிய அது என்ன புயலோ ? அதற்கு என்ன பெயரோ ? தெரியவில்லை ர.ர

இறையின் சீற்றங்களே இயற்கையின் சீற்றங்கள் 15

(நகரும் கண்டங்கள்)

Alfred L. Wegener

- Geologist Alfred Wegener noticed similar rocks & fossil remains were found on continents which seemed to fit together
- He called this "super" continent called Pangaea
- In 1912 Wegener published the first version & died defending his theory

Alfred Wegener

**Alfred Lothar Wegener** (November 1, 1880 – November 1930) was a German polar researcher, geophysicist and meteorologist who developed the first theory of continental drift and formulated the idea that a supercontinent known as Pangaea existed on the Earth millions of years ago. His ideas were largely ignored at the time they were developed but today they are very well accepted by the scientific community.

**ஜெர்மன் புவியியல் அறிஞரான ஆல்ஃபிரட் வெகனர்** - 1912 ல் "கண்டங்கள் மற்றும் கடல்களின் தோற்றம் " என்ற ஆய்வு புத்தகத்தை வெளியிட்டார். அந்தப் புத்தகத்தில் ....

தட்டுகளின் மேல் இருக்கும் கண்டங்கள் எப்படி நகர்கின்றன ?
ஒரு வெங்காயத்தை உரிக்கும் போது அடுக்கடுக்காக அதன் தோல்கள் வருகிறேதே அதுபோல பூமிப்பந்தும் வெவ்வேறு அடுக்குகளாக இருக்கிறது. இதில் மேல்தோல்தான் பாறைத்தட்டுகள் .
பூமி உருவான காலத்தில் அதன் மேல் பகுதி கிட்டத்தட்ட 10 ஆயிரம் டிகிரி செல்சியஸ் வெப்பநிலையில் கொதித்தது .அதன் பிறகு பெய்த மழையில் மேல் பகுதி குளிர்ந்தாலும் அதன் உட்கருவில் உள்ள காந்த குழம்பு கொதி நிலையில் உள்ளது. அதன் வாயுக்களின் அழுத்தத்தில் மேலே உள்ள பாறைத் தட்டை புறந்தள்ளுகிறது . இதனால் கண்டங்கள் நகர்கிறது .புவியின் மேற்புற தட்டு என்பது பூமியின் மேலுள்ள நிலப்பரப்பு நகர்வை குறிக்கிறது .

பசிபிக் தட்டு வடக்கு நோக்கி நகர வட அமெரிக்கத் தட்டு தெற்கு நோக்கி நகர்கிறது இந்த இரண்டு தட்டுகள் சந்திக்கும் இடத்தில் நிலத்தில் பெரிய பள்ளமே உருவானதோடு மட்டுமின்றி அதன் இரண்டு கரைகளிலும் மண் குவியல் சேர்ந்து விட்டது. சாலைகளில், வயல்களில் இதன் விளைவாக உண்டான பிளைவுகள் தெரிகின்றன.

இந்த இடத்தில் வரிசையாக மரங்கள் நட்டு வைத்திருந்த மர தோப்பில் சில மரங்கள் மட்டும் வரிசையிலிருந்து மாறி வந்து புதுவரிசை அமைத்திருந்தன அவை பிளவின் இந்தப் பக்கம் இருந்தவை. படம் பார்க்கவும்
நபி ( ஸல் ) அவர்கள் காலத்தில்
அபூ துஜானா (ரலி) என்ற நபித்தோழர் , பஜ்ர் தொழுது முடித்துவிட்டால் விரைவாக வெளியேறி விடுவார் நபி (ஸல்) அவர்களுடைய துஆ வைக் கேட்கின்ற வரையில் பொறுமையாக இருக்க மாட்டார்.
ஒரு நாள் இதுபற்றி அவரிடம் விபரம் கேட்டார்கள் .
"எனது பக்கத்து வீட்டு பேரீத்தப் பழங்கள் என் வீட்டில் விழுகின்றன என் குழந்தைகள் விழித்து எழுந்ததும் பசியினால் அப்பழங்களை எடுத்து சாப்பிட்டு விடுகிறார்கள் ஒரு நாள் என் குழந்தை தனது வாயில் ஒரு பழத்தை சாப்பிட முயற்சிக்கும் போது வாயில் கையை விட்டு வெளியே எடுத்து விட்டேன். ஆகவே அவர்கள் விழிப்பதற்கு முன்பே அவைகளை எடுத்து பக்கத்து வீட்டில் ஒப்படைக்க விரைகிறேன்
யா ரசூல்லாஹ் !
நபி (ஸல்) அவர்கள் அந்த பக்கத்து வீட்டுக்காரரிடம் "இந்த ஒரு மரத்திற்கு பகரமாக சுவனத்தில் 10 மரத்திற்கு நான் பொறுப்பேற்கிறேன் சுவனத்து மரங்கள் அவற்றின் வேர்கள் பச்சை மரகதம் அவற்றின் தண்டுகள் செந்நிறத் தங்கம் அவற்றின் கிளைகள் வெண் மாணிக்கமுத்துக்கள் அம்மரத்தில் எத்தனை பழங்கள் இருக்கிறதோ அத்தனை ஹூருல் ஈன் பெண்களும் உமக்கு கிடைப்பார்கள் .இந்த ஒரு மரத்தை தோழருக்கு கொடுத்து விடு" என்றார்கள்
அவன் "நான் தவணைக்கு விற்பவன் அல்லன் ரொக்கத்திற்கு விற்பவன்" என்றான் .

உடனே அபூபக்கர் (ரலி ) அவர்கள் பாய்ந்து வந்து மதீனாவில் செழிப்பான இடத்தில் உள்ள 10 பேரீத்தம் மரங்களை கொடுத்து இந்த மரத்தை அபூதுஜானா (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பு செய்தார்கள்
நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களிடம் "உமக்கு சுவனத்து அந்த 10 மரங்களுக்கு நான் பொறுப்பேற்கிறேன் " என்றார்

அந்த நயவஞ்ச பக்கத்து வீட்டுக்காரன் தன் மனைவியிடம் , நடந்த சம்பவத்தைக் கூறி 10 பேரீத்த மரங்களும் நமக்கு கிடைத்துள்ளது நம் வீட்டில் நிற்கும் பேரீத்த மரத்தையும் அனுபவித்தக் கொள்ளலாம் "என்றான்.
அன்று இரவு தூங்கி விழித்தபோது அல்லாஹ்வின் மாபெரும் சக்தியால் அம்மரம் அபூதுஜானா (ரலி) அவர்களின் வீட்டிற்கு பின்புறம் இடம் பெயர்ந்து வந்து விட்டது .
'இது பூமியின் மேலுள்ள பாறைத் தட்டுகள் நகர்வதால் இப்படியும் நடக்கலாம் ' என்று விஞ்ஞான உலகம் தனக்குள்ள பகுத்தறிவால் உணர்ந்து பேசிக் கொண்டது. ஆனால் விஞ்ஞான உலகிற்கு அபூதுஜானா (ரலி) அவர்களின் இறையச்சம் தெரியாது.
ர.ரா

## இறையின் சீற்றங்களே

## இயற்கையின் சீற்றங்கள் 16
(மரபணுவிலிருந்து மறுபடியும் வாழ்வு)



நீங்கள் பார்த்த " ஜுராசிக் பார்க்" சினிமா படத்தில் தொல்லுயிர்ப் படிமத்திலிருந்து டைனோஸர் செல்லின் மரபணுவைப் பிரித்தெடுத்து , அதைப் பல படிகளாகப் பெருக்கி , வேறொரு விலங்கின் கருவினுள் செலுத்தி, லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் அழிந்த டைனோஸர் இனத்தை மீண்டும் உயிரோடு உருவாக்கி விடுகிறார் ஒரு விஞ்ஞானி.
அடைத்து வைக்கப்பட்டிருந்த டைனோஸர்கள் தப்பி வெளியேறி அட்டகாசம் செய்யும்போது, அவற்றிடம் இருந்து எப்படியோ தப்பித்து , அந்த இனத்தைத் திரும்பவும் அழிக்கிறார்கள் என்பதே கதை !
இக்கதையின் கருத்து பல நாட்டு விஞ்ஞானிகளை ஈர்த்தது. எப்போதோ அழிந்து போன உயிரினங்களின் ஒற்றை செல்லை வைத்து மரபணு தொழில் நுட்ப விஞ்ஞானத்தின் மூலம் மீண்டும் அழிந்து போன உயிரினத்தை உருவாக்கலாம் என்ற கருத்து இப்போது மேலோங்கி இருக்கிறது !
அழிந்து போன ஓர் உயிரினத்தைப் போலவே குணங்களைக் கொண்ட இன்னொரு உயிரினம் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் . அதிலிருந்து கரு முட்டையைத் தனியாக பிரித்தெடுத்து அதன் செல்களில் இருக்கும் நியூக்ளிக் அமிலத்தை நீக்கிவிட்டு, அழிந்து போன உயிரினத்தின் செல்லிருந்த நியூக்ளிக் அமிலத்தை அதில் பொருத்த வேண்டும் .
பின் மிதமான மின்சாரத்தை பாய்ச்சி தூண்டி விட , இது வளர ஆரம்பிக்கும் . போதுமான வளர்ச்சி அடைந்ததும் , அந்த கருமுட்டை பிரித்தெடுக்கப்பட்ட உயிரினத்தின் கருவில் செலுத்தினால் அது அழிந்த போன உயிரினத்தின் குட்டி பிறக்கும். அவ்வளவுதான் .
1997 ஆம் ஆண்டு ஜப்பான் விஞ்ஞானிகள் 10 ஆயிரம் வருடங்களுக்கு முன் சைபீரிய பனிப் பிரதேசத்தில் வாழ்ந்து மடிந்த கம்பள யானை **(woolly Mammoth)** ஒன்று பனிப்பாறைகளில் புதைந்து

கிடந்ததை எடுத்து அந்த யானையின் செல்லை எடுத்து இப்போது வாழும் ஆப்பிரிக்க யானையின் கருவுக்குள் செலுத்தி , மீண்டும் கம்பள யானையை உருவாக்க முயற்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது !

நியூசிலாந்தின் அரிய பறவையான **"ஹுயா " (Huia)** அதன் கரு நீல நிறத்தில் இருக்கும் சிறகுகளின் விளிம்பில் வெள்ளை நிறம் ! இந்த ஓர் அழகு அம்சத்திற்காக பூர்வீக குடிகளான மாவோரிகள் , ஹுயா புல்லாங்குழலை இசைப்பது போல பாடும். இவர்களும் அதைப் போல இசைத்து பாட , "நம்ம இணைதான் நம்மை நினைத்து உருகிப்பாடுகிறது " என நினைத்து அந்த ஹுயா பறவை அடங்கிருக்கும் கூட்டில் இருந்து வெளிவர அதைச் சுட்டி வீழ்த்தியிருக்கிறார்கள்.
இன்றைக்கு ஹுயா பறவையை ஒத்திருக்கும் **மேக்பை (Magpie )** பறவையின் கருவில் ஹுயாவின் செல்லை செலுத்தி ஹுயாவை உயிர் பெற வைக்க ஆராய்ச்சிகள் நடைபெறுகிறது !
ஆஸ்திரேலியாவின் "டாஸ்மேனியா டைகர் **(Tasmanian Tiger )** என்ற அழிந்து போன ஓநாய் இனத்தை மீண்டும் உயிர்பிக்க முயற்சி நடக்கிறது !.

அதிய்யு இப்னு ரபீஆ என்பவன் ஒரு முறை நபி (ஸல்) அவர்களிடம் வந்து , "முஹம்மதே ! கியாமத் நாள் எப்பொழுது வரும் ? அதன் விஷயம் என்ன என்பதை எனக்குக் கூற வேண்டும் " என்று கேட்க, நபியவர்கள் கியாமத் நாளையும், மீண்டும் அல்லாஹ் உயிர்ப்பிப்பதையும் கூறினார்கள் .

" மிகப் பெரிதென உங்கள் மனதில் தோன்றும் வேறொரு பொருளாக ஆகிவிடுங்கள். இவ்வாறு மாறிய பின்னர் "எங்களை எவன் உயிர்ப்பிப்பான்?" என்று அவர்கள் கேட்கட்டும்.
(அவ்வாறு கேட்டால் நபியே! நீங்கள் அவர்களை நோக்கி) "உங்களை முதலாவதாக எவன் படைத்தானோ அவன்தான் (நீங்கள் மரணித்த பின்னும் உங்களை எழுப்புவான்)" என்று கூறுங்கள்.
அதற்கவர்கள் தங்கள் தலையை உங்கள் அளவில் சாய்த்து "அந்நாள் எப்பொழுது (வரும்)?" என்று கேட்பார்கள்.

அதற்கு நீங்கள் (அவர்களை நோக்கி "அது தூரத்தில் இல்லை) வெகு சீக்கிரத்தில் வந்துவிடலாம்" என்று கூறுங்கள்" . (குர்ஆன்: 17:51)

وَضَرَبَ لَنَا مَثَلًا وَّ نَسِىَ خَلْقَهٗ قَالَ مَنْ يُّحْىِ الْعِظَامَ وَهِىَ رَمِيْمٌ ,
(மரணித்தவர்களை உயிர்ப்பிக்க நம்மால் முடியாதென எண்ணிக்கொண்டு அவர்களில் ஒருவன்) ஓர் உதாரணத்தை நம்மிடம் எடுத்துக் காட்டுகின்றான். அவன் தன்னை படைத்த(து யார் என்ப)தை மறந்துவிட்டு "உக்கி மண்ணாகிப் போன இந்த எலும்பை உயிர்ப்பிப்பவன் யார்?" என்று (ஓர் எலும்பை எடுத்து அதனை தூளாக்கி ஊதிவிட்டு) அவன் கேட்கின்றான். (குர்ஆன்: 36:78)

இறைவன் மீண்டும் உயிர்ப்பிப்பதை காண ஆவல் கொண்ட உஜைர் நபி (அலை) அவர்கள் முன்பு இறைவன் மீண்டும் உயிர்ப்பிப்பதை அவர் முன் நேரடியாக செய்து காட்டியதை குர்ஆனில் ....
" (நபியே!) அல்லது ஒரு கிராமத்தின் மீது சென்றவரைப் போல் (நீங்கள் பார்த்திருக்கின்றீரா? அவர்) அ(க்கிராமத்)திலுள்ள (வீடுகளின்) முகடுகளெல்லாம் இடிந்து (பாழாய்க்) கிடக்க(க் கண்டு) "இவ்வூர் (மக்கள் இவ்வாறு அழிந்து) இறந்தபின் அல்லாஹ் இதனை எவ்வாறு உயிர்ப்பிப்பான்?" என்று கூறினார்.
ஆகவே, (அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதற்காக) அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரையில் மரணித்திருக்கச் செய்து ,

பின்னர் அவரை உயிர்ப்பித்து (அவரை நோக்கி "இந்நிலையில்) நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள்" எனக் கேட்க "ஒருநாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன்" எனக் கூறினார்.
(அதற்கு அவன்) "அல்ல! நீங்கள் நூறு ஆண்டுகள் (இந்நிலையில்) இருந்தீர்கள். (இதோ!) உங்களுடைய உணவையும், உங்களுடைய பானத்தையும் பாருங்கள். (அவை இதுவரை) கெட்டுப்போகவில்லை. (ஆனால்) உங்களுடைய கழுதையைப் பாருங்கள். (அது செத்து மக்கி எலும்பாகக் கிடக்கின்றது.)
இன்னும் உங்களை(ப் போல் சந்தேகிக்கும்) மனிதர் களுக்கு ஓர் அத்தாட்சியாக ஆக்குவதற்காக (கழுதையின்) எலும்புகளையும் நீங்கள் பாருங்கள். எவ்வாறு அவைகளைக் கூடாகச் சேர்த்து அதன் மீது மாமிசத்தை அமைக்கின்றோம் என்று கூறி (அவ்வாறே உயிர்ப்பித்துக் காட்டி)னான். (இவை அனைத்தும்) அவர் முன் தெளிவாக நடைபெற்றபோது (அவர்) "நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக பேராற்றலுடையவன் என்பதை நான் உறுதியாக அறிந்துகொண்டேன்" என்று கூறினார்.
(குர்ஆன்: 2:259)

மீண்டும் உயிர்பிக்க விஞ்ஞானத்திற்கு வேண்டுமானால் செல் , கரு முட்டை , கருப்பப்பை இவைகளெல்லாம் தேவை. ஆனால் இறைவனுக்கு இது மாதிரி எதுவும் தேவையில்லை.

اَيَحْسَبُ الْاِنْسَانُ اَلَّنْ نَّجْمَعَ عِظَامَهٗ
(இறந்து உக்கி மண்ணாய்ப் போன) அவனுடைய எலும்புகளை, நாம் ஒன்று சேர்க்கமாட்டோம் என்று மனிதன் எண்ணிக் கொண்டிருக்கின்றானா?
(அல்குர்ஆன்: 75:3)

بَلٰى قٰدِرِيْنَ عَلٰٓى اَنْ نُّسَوِّىَ بَنَانَهٗ
அன்று! அவனுடைய (சரீர) அமைப்பை (இறந்த பின்னரும் முன்னிருந்தபடி) சரிப்படுத்த நாம் ஆற்றலுடையோம்.
(அல்குர்ஆன்: 75:4)

بَلٰى قٰدِرِيْنَ عَلٰٓى اَنْ نُّسَوِّىَ بَنَانَهٗ
அன்று; அவன் நுனி விரல்களையும் (முன்னிருந்தவாறே) செவ்வையாக்க நாம் ஆற்றலுடையோம்.
(அல்குர்ஆன்:75:4)

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 17விஞ்ஞானத்தின் விபரீதங்கள் 01



விஞ்ஞானத்தின் மகத்துவங்களையும் , நல்லதனங்களையும் பற்றித்தான் இதுவரை எழுதி வந்துள்ளேன். இருந்தாலும் விஞ்ஞானம் ஒன்றும் வேத ஞானம் அல்ல , மாறுதலுக்குரியது அதன் இன்னொரு முகம் கொடிய அகங்காரம் கொண்டது என்பதையும் சொல்லித்தானே ஆக வேண்டும். சொல்றேன்.

ஒரு சமயம் ஆஸ்ப்ரின் மருந்து உடலுக்குக் கெடுதல் என்றார்கள். இப்போதைக்கு தினம் ஓர் ஆஸ்ப்ரின் சாப்பிட்டால் ஹார்ட் அட்டாக்கே வராது என்கிறார்கள் .இதை நம்பி ஜனங்கள் , அடுத்த வருஷம் ஆஸ்ப்ரின் மூளையைப் பாதிக்கும் என்று யாராவது ரிப்போர்ட் கொடுக்கும் வரை சாப்பிடுவார்கள். அதற்கு அடுத்த வருஷம் அந்த ரிப்போர்ட் தப்பு என்று மற்றொருவர் நிரூபிக்க , மறுபடி ஆஸ்ப்ரின் விழுங்கத் துவங்குவார்கள் .
இது விஞ்ஞானத்தின் மிகப் பெரிய அபாயம் .ஒரு விஞ்ஞானப் பத்திரிகையிலோ அல்லது பொதுவாக அச்சிலோ வந்துவிட்டால் , அது வேதவாக்கு என்று நம்புகிறோம். இங்கிலாந்தின் பழம்பெரும் பத்திரிக்கையான ' **நேச்சர் ' (Nature )** இதழில் கூட பல அபத்தமான ஆபத்தான விஞ்ஞானக் கட்டுரைகள் வந்திருக்கின்றன !
விஞ்ஞானத்தின் பொறுப்பில்லாத ஆராய்ச்சிகள் அபாயமானது. பிரேக் இல்லாத தண்ணி லாரி மாதிரி... அணுகுண்டு , ஹைட்ரஜன் துண்டு , கண்டுபிடித்து அதை வெடித்து விட்டு, அப்புறம் அணுசக்தியின் சமாதான உபயோகங்கள், ஒப்பந்தங்கள் என்று ஐ.நாவில் கூடுவது , இது நவீன விஞ்ஞானத்தின் மகத்தான தவறு. மஹாபாவம் !

க்ருவென்தால் (Gruenthal ) என்கிற ஜெர்மன் கம்பெனி கண்டு பிடித்த "தாலிடோமைடு **" (Thalidomide )** என்கிற மருந்து ஒரு காலகட்டத்தில் ரொம்ப பத்திரமான ஆறுதல் மருந்து என்று நாற்பத்தாறு தேசங்களில் சுலபமாக விற்கப்பட்டன. இம்மருந்தை கர்ப்பிணிகள் உட்கொண்டு விகாரமான குழந்தைகள் பிறக்கவே இந்த மருந்து உலகம் முழுவதும் தடை செய்யப்பட்டது .

" ...நீங்கள் ஒரு பொருளை வெறுக்கலாம்; ஆனால் அது உங்களுக்கு நன்மை பயப்பதாக இருக்கும்; ஒரு பொருளை நீங்கள் விரும்பலாம், ஆனால் அது உங்களுக்குத் தீமை பயப்பதாக இருக்கும். (இவற்றையெல்லாம்) அல்லாஹ் அறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள். (குர்ஆன்: 2:216)

போபால் விஷவாயு விபத்தில் ஆதாரமான ஒரு செய்தியை நாம் எல்லோரும் மறந்து போகிறோம். போபால் போன்ற அத்தனை பெரிய நகருக்கு அருகே அந்த பாக்ட்ரியை அமைக்க அனுமதி தந்தவர்கள் யார் ? அவர்கள் எங்கே ?அவர்களுக்கு யாராவது தண்டனை கொடுத்தார்களா? எல்லாம் மறைக்கப்பட்டுவிட்டது. நம் யுத்தங்களில் நாம் உபயோகிக்கும் விஷவாயுக்கள் கணக்கில்லாதவை . வியட்நாம் போரில் அமெரிக்க 2 - 4 - 5 டி (D) என்கிற விஷமருந்தை 50 ஆயிரம் ஏக்கர் பசும் வயல்களிலும் 45 லட்சம் ஏக்கர் காடுகளிலும் தெளித்து விட்டு பறந்து போன குற்றத்தை சரித்திரம் மன்னிக்காது. அதன் விளைவாக வியட்நாம் மக்களிடையே விகாரமாகப் பிறந்த குழந்தைகளைப் பற்றிய ரிப்போர்ட்டை மறைத்து வைத்திருக்கிறார்கள் .

அடுத்து நவீன காலத்தில் நடந்த சிரியா யுத்தத்திலும் சகட்டுமேனிக்கு விஷவாயுக்களை பயன்படுத்தி இருக்கிறார்கள் . சிரியா பாவம் உங்களை சும்மா விடாது.
நியூக்ளியர் ஃபியூயல் ப்ளாண்ட் என்று நம் தேசத்தில் நிறைய இருக்கிறது. அதில் அணு ஆராய்ச்சிக்கும் அணு சக்திக்கும் தேவையான என்ரிச்மெண்ட் போன்ற காரியங்கள் செய்கிறார்கள்.
இதில் வேலை செய்பவர்கள் யாவரும் கதிர்வீச்சின் பார்வைக்குள்பட்டு உடல் நிலை பாதிக்கப்படக் கூடிய ஆபத்தில் இருக்கிறார்கள்.

எத்தனையோ ஆஸ்பத்திரிகளில் எக்ஸ்ரே கருவிகளின் அருகில் வேலை செய்பவர்கள் இந்த ஆபத்தின் நிழலில் இருந்தார்கள். ரேடார் போன்ற கருவிகளை பயன்படுத்துவர்களின் கதியும் அஃதே . இவர்களுக்கெல்லாம் ரத்த கான்ஸர் வர சாத்தியக்கூறு அதிகம் உள்ளது. இது ஏன் என்றால் இதற்கு விஞ்ஞானத்திடம் பதில் இல்லை
நமக்கு அணுவைப் பற்றியும் அதன் அதீத கதிர்வீச்சின் இயற்கை குணத்தைப் பற்றியும் முழுமையாக இன்னும் நாம் தெரிந்து கொள்ளாத போது , அதை வீட்டுச் சமையல் கட்டுவரை கொண்டு வந்துள்ளோமே இதை என்ன சொல்வது?

மைக்ரோவேவ் ஓவன் என்று மிக எளிதாக அடுப்பில்லாமல், நெருப்பில்லாம் சமைக்கும் சாதனம் வந்திருக்கிறது. அதிக அளவில் மேல்நாடுகளில் பயன்படுகிறது .அதில் கண்களில் காட்டராக்ட் ஆபத்து உள்ளது என்று சொன்ன டாக்டரின் வாயை அடைத்து வைத்திருக்கக் காரணம் . வியாபாரம் .

" உங்களுக்குச் சிறிது ஞானம் இருந்த விஷயங்களில் (இதுவரை) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தீர்கள்; (அப்படியிருக்க) உங்களுக்குச் சிறிதுகூட ஞானம் இல்லாத விஷயங்களில் ஏன் விவாதம் செய்ய முற்படுகிறீர்கள்? அல்லாஹ்தான் அறிவான்; நீங்கள் அறியமாட்டீர்கள் " . (குர்ஆன் : 3:66)
இயற்கை திருப்பி அடித்தால் , தாங்க மாட்டீர்கள் .
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 18விஞ்ஞானத்தின் விபரீதங்கள் 02

தவளைக்கு எத்தனை கால்கள் ? நான்கு .
1995 ஆம் ஆண்டு அமெரிக்கா மின்னசோட்டாவில் இருக்கும்
"நியூ கண்ட்ரி" பள்ளி கூட 8 ஆம் வகுப்பு மாணவர்கள் கல்வி பயணமாக ஒரு குளத்தைப் போய் ஆராய ....
ஒரு மாணவன் ஒரு தவளையைப் பிடித்து உயரத்தில் தூக்கி காட்டினான் . ஐந்து கால்கள் ,சில மாணவர்கள் பிடித்த அதே குளத்து தவளைக்கு மூணு கால், சில ஆறு கால் , இரண்டரை காலில் கூட தவளைகள் கிடைத்தன .

மாணவர்களுக்கு சந்தேகம் தவளைக்கு எத்தனை கால்கள் ? எத்தனை வேண்டுமானாலும் இருக்கலாம் என எழுதி வைத்துக் கொண்டனர் .அதை பரப்பினர்.
.... இப்படி தவளைகள் உருமாறியதற்கு காரணம் " களைக்கொல்லிகள் " என்று அமெரிக்க கலிஃபோர்னியா பல்கலை கழகத்தில் பணிபுரியும் உயிரியல் விஞ்ஞானி டைரன் ஹேய்ஸ் என்பவர் " "அட்ராசின் " (Atrazine ) என்ற களைக்கொல்லிதான் காரணம் என்று தன் ஆய்வு மூலம் நிருபித்தார் .
விவசாயிகள் தங்கள் வயல்களில் தெளித்த களைக்கொல்லி குளத்தில் போய் சேர, தவளைகள் பாதித்தன. இத்தோடு அந்த ஆய்வுகள் தொடர்ந்தன. தவளைகளின் இனப்பெருக்கம் செய்யும் திறனையே பாதித்ததுள்ளது என ஆய்வு முடிவுகள் தெரிவித்தது .

ஆண் தவளைகளுக்கு விதைக்காய்களோடு சேர்த்து கருப்பைகளும் உருவாகி இருந்தன. இதனால் பெண்மைத்தன்மை அதிகமாகி விட விதைகளில் கருப்பைகள் உருவாகின்றன .
இதே போன்ற பாதிப்பு மனிதர்களைப் பொறுத்தவரை வளர்ந்த பெரியவர்களுக்கு வராமல் போகலாம். ஆனால் மழலைகளுக்கு பாலியல் பாதிப்புகள் ஏற்பட்டு திருநங்கை மாதிரியான உடலமைப்பை பெறக்கூடும்
உலகில் 80 தேசங்களில் கடந்த 40 ஆண்டுகளாக இந்த மருந்தைப் பயன்படுத்தி வந்திருக்கின்றன . இப்பிரச்சனைக்குப் பிறகு ஃபிரான்ஸ் , பெல்ஜியம், ஜெர்மனி, இத்தாலி , ஸ்வீடன் , நார்வே ஆகிய நாடுகள் இதைத் தடை செய்தன.
ஆர்க்டிக் பனிப் பிரதேசத்தில் எங்குமே
டி.டி.டீ பூச்சி மருந்து தெளிக்கப்பட்டதாக வரலாறே இல்லை. ஆனால் உலகிலேயே ஆர்க்டிக் பனிப் பிரதேசத்தில் வாழும் எஸ்கிமோக்கள் உடம்பில்தான் அதிக அளவு டி.டி.டீ பூச்சி மருந்து இருக்கிறது . எப்படி ?

டி.டி.டீ பூச்சி மருந்து உலகமெங்கும் புறப்பட்டு கடலில் ஆயிரக்கணக்கான கி.மீ பயணித்து எஸ்கிமோக்கள் உடம்பில் தஞ்சம் புகுந்திருக்கிறது என்றால் அது கடலில் பயணித்த இடங்களின் உயிரினங்களின் வாழ்க்கை ?
கப்பல்களின் அடிப்பாகம் துரு பிடிக்காமல் இருக்க, " ட்ரை புடில்டின் " என்ற புது வகை வர்ணத்தை அடித்தார்கள் . மெள்ள கடல் நீரில் கலந்து உணவுச் சங்கிலியில் புகுந்த இந்த வர்ணம் 29 வகையான கடல் வாழினங்களைப் பாதித்து விட்டது .
நதிகள் வழியாக நகரக் கழிவுகள் , உரங்கள் , பூச்சி மருந்துகள் , களைக் கொல்லிகள் என எல்லாம் கடலில் வந்து கலக்கின்றன. எங்கெல்லாம் இப்படி கலக்கிறதோ அங்கெல்லாம் உயிரினங்களின் பாதிப்புகள் ஏற்படுகின்றன .

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ

மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது.
(அல்குர்ஆன்: 30:41)

**Rahmath Rajakumaran**

இன்றைய கடல் வாழ்வின் உயிரியலாளர்கள் **(marine Biologists )** இன்னம் 30 வருஷங்களில் நம் கடல் களும் சமுத்திரங்களும் செத்து போய் விடும் என்கிறார்கள் . சென்ற 60 வருஷங்களில் நாம் நம் கடலில் கொட்டிய குப்பைகள் அளவில்லாதவை .
பிரிட்டன் மட்டுமே ஐரிஷ் கடலில் வருஷத்துக்கு ஒரு லட்சத்து இருபத்து நாலாயிரம் டன் தொழிற்சாலைக் குப்பை களையும், வீட்டுக் குப்பைகளையும் கொட்டுகிறது . இங்கிலீஷ் கால்வாயிலே மட்டும் எண்பத்தாறாயிரம் டன் கொட்டுகிறது . மொத்தம் தன்னைச் சுற்றியுள்ள கடல்களில் பிரிட்டன் இரண்டரை கோடி டன் குப்பை ..... வெறும் குப்பை கொட்டியிருக்கிறது .
கடலில் கொட்டும் குப்பை, மீன்களை உடனே கொல்வதில்லை. பொதிந்திருக்கும் ரசாயன விஷயங்கள் மெல்ல மெல்லத்தான் கடலின் உயிரினங்களை நாசமாக்கும். இதனால் சில மீன்களின் வம்சங்களே நசித்துப் போய் எதிர்காலத்தில் மீன் சாப்பிடும் பழக்கத்தையே விட வேண்டிய வரும்.
இதனால் நம் உணவுச் சக்கரம் பாதிக்கப்பட்டு , அதன் விளைவாக என்ன ஆகும் என்று சொல்வது கடினமாக இருக்கிறது .

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 19விஞ்ஞானத்தின் விபரீதங்கள் 03



பொதுவாக ஒரு ஆட்டுக்குட்டி பிறக்க வேண்டுமானால் ஒரு கிடா ஆடும் , பெட்டை ஆடும் இணைய வேண்டும் என்பதுதான் இயற்கையின் நியதி.
அல்லது , கிடா ஆட்டிடமிருந்து எடுக்கப்பட்ட விந்துவை செயற்கை முறையில் பெண் ஆட்டின் கருப்பையில் செலுத்தி , அதைக் கருவுறச் செய்ய வேண்டும் . இது விஞ்ஞானிகளின் வழி.
ஆனால் 1977-ல் ஸ்காட்லாந்து

Dr. இயான் வில்மட் என்ற விஞ்ஞானி ஒரு வெள்ளை நிறப் பெண் செம்மறி ஆட்டின் பால் சுரப்பியிலிருந்து ஒரு செல்லைப் பிரித்தெடுத்து, அதை வேறொரு கறுப்பு நிறப் பெண் செம்மறி ஆட்டின் முட்டை செல்லில் உட்கருவை மட்டும் நீக்கி விட்டு பிரித்தெடுத்த செல்லை வைத்து கரு உருவாக்கப்பட்டது.

(இரு ஆம்லெட் முட்டையின் ஒரு முட்டையின் மஞ்சள் கருவை எடுத்து கிடாசி விட்டு இன்னொரு முட்டையின் மஞ்சள் கருவை இதில் வைப்பது மாதிரி)
இரு ஆட்டிலிருந்து உருவான கருவை வேறு ஒரு மூன்றாவது ஆட்டின் கர்ப்பப்பைக்குள் செலுத்த ...150 நாளைக்குப் பிறகு வெள்ளை நிறப் பெண் செம்மறி ஆட்டின் அச்சு அசலாக ஒரு ஆட்டுக்குட்டி பிறந்தது. அதன் பெயர் டாலி (Dolly) . பிறக்க கையாளப்பட்ட விஞ்ஞான யுக்தி " **க்ளோனிங் "(Cloning)**
விஷப்பாம்பைப் பார்த்த மாதிரி , இந்த விஞ்ஞான அதிசயத்தைப் பார்த்து ஏன் பயப்படுகிறீர்கள் ?

டாக்டர் சுக்ரத் மிடாலிபோவ் கூறுவது : மனிதனின் தோல் செல்லை குளோனிங் முறையில் உருவாக்கும் ஆராய்ச்சி வெற்றிகரமாக முடிந்துள்ளது. இதுபோல குளோனிங் முறையில் உருவாக்கப்படும் கருமுட்டையில் இருந்து ஸ்டெம்செல் உருவாக்கி அதன் மூலம் பல்வேறு வகையான திசு செல்களை உருவாக்க முடியும். உறுப்பு மாற்று ஆபரேஷன்களுக்கு இது முக்கிய பங்களிக்கும். உறுப்பு செல்களை வளர வைத்து, செயற்கை உறுப்புகள் தயாரிப்பது, தேவைப்படுவோருக்கு பொருத்துவதற்கான முயற்சிகளும் வெற்றி பெறும்.

குளோனிங் முறையில் தயாரிக்கப்பட்டிருக்கும் மனித ஸ்டெம்செல்லுக்கு வேறு செல்கள், திசுக்கள், உறுப்புகளை வளர வைக்கிற திறன் இருப்பது உறுதியாக தெரிகிறது. பார்வை கோளாறுகள், தண்டுவட பாதிப்புகள், பார்கின்சன்ஸ் டிசீஸ் எனப்படும் மூளை முடக்குவாதம், நரம்பு மண்டல பாதிப்புகள் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டவர்களின் செல்லை எடுத்து அதை கருமுட்டையாக மாற்றி வளர வைத்தால் செல்களின் ஜெராக்ஸ் பிரதிகளை உருவாக்க முடியும். பாதிக்கப்பட்ட செல்களை அகற்றிவிட்டு இந்த புதிய செல்களை பொருத்துவதன்மூலம் அவர்களை குணமாக்க முடியும். அதே நேரம், இந்த குளோனிங் ஸ்டெம் செல்லுக்கு இனப்பெருக்க குணம் இருக்கிறதா என்பது பற்றி உறுதியாக தெரியவில்லை. அதில் நாங்கள் ஆர்வமும் காட்டவில்லை. இயற்கை மனித உடலிலிருந்தே செயற்கை உறுப்புகளை தயாரிப்பதற்காகவே இந்த க்ளோனிங் முறையை உண்டாக்க ஏற்றுள்ளது. இவ்வாறு மிடாலிபோவ் சமாதானம் கூறினார்.
ஆனால், உலகம் இந்த வாதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. க்ளோனிங் முறைப்படி டாலி உருவானது மாதிரி மனிதர்களையும் உருவாக்க முடியும் என்ற நிலை வந்தால், எதிர்காலத்தில் குழந்தை பிறப்புக்கும் , ஆண் - பெண் உடலுறவுக்கும் இடையே இருக்கும் தேவை கூட மறைந்து விடும்.
காதல், கவிதை , ஓயாத செல் உரையாடல் , பார்க் , பீச், கூடவே நிறைய பொய் .... இதெல்லாம் தேவை இல்லாது போகலாம் .

எதிர்காலத்தில் ஒரே தெருவில் 10 ரஜனிகாந்தும் , 20 கமலும் இருப்பார்கள். அதை விட கொடுமை எகிப்து கெய்ரோவில் படுத்திருக்கும்
ஃ பிர்அவ்னின் உடலிலிருந்து செல்லை பிரித்து எடுத்து மீண்டும் ஃ பிர்அவ்ன் வந்து எகிப்து அரசாங்கத்தைக் கைப்பற்றி ' என்னது ' என்பானா ?
"பைபிள்படி ஆண்டவன் வேண்டுமானால் ஆதாமின் விலா எலும்பை எடுத்து ஏவாளை உருவாக்கி இருக்கலாம். ஆனால் மனிதன் ஆண்டவனாக முயற்சி செய்யக் கூடாது ! விஞ்ஞானிகள் தங்கள் வரம்பை மீறக்கூடாது ! " என்று ஒட்டு மொத்த உலகம் குரல் கொடுக்கிறது .
" நிச்சயமாக "(நம்முடைய) பொறுப்பைச் சுமந்து கொள்வீர்களா?" என்று நாம் வானங்கள், பூமி, மலைகள் ஆகியவற்றிடம் வினவினோம்.
அதற்கு அவை அதனைப் பற்றிப் பயந்து, அதனைச் சுமந்து கொள்ளாது விலகிவிட்டன. அத்தகைய பொறுப்பைத்தான் மனிதன் சுமந்துகொண்டான். (ஆகவே) நிச்சயமாக அவன் அறியாமையால் தனக்குத்தானே தீங்கிழைத்துக் கொண்டான். (குர்ஆன்: 33:72)

ஏன் , விஞ்ஞானத்தால் இன்னுமொரு ஆல்பர்ட் ஐன்ஸ்டினையோ , மகாத்மா காந்தியையோ மீண்டும் உருவாக்க முடியும் என்றால் .... அது உலகுக்கு நன்மைதானே என்று யாராலும் வாதிட முடியாது. காரணம் க்ளோனிங் முறைப்படி மகாத்மா காந்தி மாதிரி முகமும் , உடம்பும் கொண்ட ஒருவரை வேண்டுமானால் உருவாக்கலாம். ஆனால் அந்த நகல் மகாத்மா அசல் காந்தி மாதிரி சிந்தனையும், தியாக உள்ளமும் கொண்டவராக இருப்பார் என்பதற்கு உத்திரவாதம் இல்லை.
இதில் நண்பர்கள் முக்கியமாக டேலியைப் பற்றி கவனிக்க வேண்டியது , இறைவன் படைத்த பெண் ஆட்டுக்குட்டியின் பால் மடியிலிருந்தே ஒரு செல்லை எடுத்து , இறைவன் படைத்த இன்னொரு

ஆட்டுக்குட்டியின் சினைமுட்டையில் வைத்து , இறைவன் படைத்த மூன்றாவது ஆட்டுக்குட்டியின் கருப்பப்பையில் அதை வைத்து கருதரித்து வெளிவந்த 4 வது பெண் ஆட்டுக்குட்டி எப்படி மனிதன் படைத்தாக ஆக முடியும் ? அவனை எப்படி சிருஷ்டி கர்த்தவாக விஞ்ஞானம் புகழ முடியும் ?
ஆனால் குர்ஆனில் அல்லாஹ் ..
" மனிதர்களே! உங்களுக்கு ஓர் உதாரணம் கூறப்படுகிறது: அதனைச் செவி தாழ்த்திக் கேளுங்கள். அல்லாஹ் அல்லாத எவற்றை நீங்கள் (தெய்வங்களென) அழைக்கின்றீர்களோ அவை யாவும் ஒன்று சேர்ந்(து முயற்சித்)த போதிலும் ஓர் ஈயைக் கூட படைக்க முடியாது. (ஈயைப் படைப்பதென்ன!) ஒரு ஈ அவற்றினுடைய யாதொரு பொருளை எடுத்துக் கொண்டபோதிலும் அந்த ஈயிடமிருந்து அதனை விடுவிக்கவும் அவைகளால் முடியாது. (அவர்கள் தெய்வங்களென அழைக்கும்) அவை அவ்வளவு பலவீனமானவை! ஆகவே, அவற்றை(த் தெய்வங்களென) அழைப்பவர்களும் பலவீனமானவர்களே! (குர்ஆன்: 22:73)

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 20விஞ்ஞானத்தின் விபரீதங்கள் 04




டைனமைட் கண்டுபிடிப்பதற்கு சுமார் 600 வருஷங்களுக்கு முன்பே துப்பாக்கிக்கான வெடிமருந்து புழக்கத்தில்தான் இருந்தது என்பது உங்களுக்குத் தெரியுமா ?
துப்பாக்கி வெடிமருந்துகளை விட சக்தி வாய்ந்த ஆயுதத்தைக் கண்டுபிக்க விஞ்ஞானிகளை இராணுவம் நிர்பந்தித்தது ! விஞ்ஞானிகள் நைட்ரோ கிளிசிரினைக் கொண்ட வெடி மருந்து நிலையற்றது , பாதுகாப்பு இல்லாதது.
அதைத்தான் கண்டுபிடித்தார்கள் வெடிப்பதற்கு ! நிறைய பேருக்கு விரல்கள் சிதறி , மூஞ்சி மொரக்கட்டையெல்லாம் பேந்து போச்சி !
**1867 -ல் ஆல்ஃபிரெட்** நோபல் டைனமைட்டைக் கண்டு பிடித்தார். பாதுகாப்பானது . தொட்டதுக்கெல்லாம் முனுக் என்று நைட்ரோ கிளிசிரின் மாதிரி வெடிக்காது.

நிலக்கரிச் சுரங்கத்திற்கு கேட்டு வந்தார்கள் 1875 -ல் டைனமைட் உற்பத்தி மூவாயிரம் டன். பிறகு ஜெலட்டினையும் கண்டுபிடித்தார். நோபலிடம் கணக்கு வழக்கு இல்லாமல் பணம் குவிய , ஐரோப்பா பெரும் பணக்காரர்களில் ஒருவர் ஆனார். உலக சமாதானத்தை நோபல் விரும்பினாலும் 90 ஆயுத தொழிற்சாலைகளை நிறுவினார் !

டைனமைட்டை கண்டு பிடித்ததோடு 1875-ல் டைனமைட்டை விட சக்தி வாய்ந்த கெலிக்னிட்டை கண்டுபிடித்தார் ஆய்வில் ஈடுபட்டிருந்த போது நடந்த விபத்தில் தன் இளைய சகோதரன் எமில் உட்பட 5 பேர் உடல் கருகிச் செத்துப் போனார்கள்.

தான் கண்டுபிடித்த டைனமைட் வருங்காலத்தில் எத்தனை ஆயிரம் உயிர்களை குடிக்குமோ என்ற பயமும் , கவலையும் அவரின் தூக்கத்தைக் கெடுத்து நிம்மதி இழந்தார் .
நோபல் திருமணம் செய்து கொள்ளவில்லை. விஞ்ஞான ஆய்வுக்கே நேரம் போதாத போது , வேறு என்ன ஆய்வுக்கு நேரம் ஒதுக்க முடியும் ? கடவுள் நம்பிக்கை இல்லாதவர் .கடைசிக் காலத்தில் தனது மனசில் இருந்த ஆதங்கத்தைச் சொல்லி அழக்கூட ஆளில்லாமல் அவர் தனிமையில் தவிர்த்தார் .' பிறந்த அந்தக் கணமே தான் கொல்லப்பட்டிருக்க கூடாதா ?' என்று கவிதை கூட எழுதினார் .
1888 ம் ஆண்டு சகோதரன் லுட்விக் இறந்ததைத் தொடர்ந்து,பல செய்திதாள் நோபலின் இரங்கலை தவறாக வெளியிட்டன. " மரண வியாபாரி மரணமானான் " என்று !
" வருங்கால சந்ததிக்கு மிகப் பெரிய துரோகம் செய்து விட்டோமே செயற்கை ரப்பர் செயற்கைத் தோல், செயற்கைப் பட்டு கண்டுபிடிக்கப் பட்ட கஷ்டத்தை விட டைனமைட்டை மிக சுலபமாக நம்மால் எப்படி கண்டு பிடிக்க முடிந்தது? "

என்று கடைசி வரை புலம்பிக் கொண்டே இருந்தார் .
உலக நாடுகள் எப்படி ஒற்றுமையாக வாழலாம் என்று அவரே ஒரு திட்டம் தீட்டிக் கொடுத்தார். ' குழந்தையைக் கிள்ளி விட்டு தொட்டிலையும் எப்படி உன்னால் ஆட்ட முடிகிறது? என்று பத்திரிக்கைகள் கிண்டலடித்தன.
மனம் வெறுத்துப் போன நோபல் தன் பெயரிலேயே ஒரு அறக்கட்டளையைத் தோற்றுவித்தார் .தனது சொத்துக்கள் அத்தனையும் அதற்கு எழுதி வைத்துவிட்டு , ஸ்வீடன் நாட்டில் உறவினர்கள் யாருமே பக்கத்தில் இல்லாமல் அவர் எப்போது இறந்தார் என்பது கூட தெரியாத ஓர் அநாதையைப் போல் செத்துப் போனார் .
டைனமைட் கண்டுபிடிக்கப்பட்ட நொடியில் இருந்து உலகில் விஷமம் செய்து இரத்தம் சிந்தத் தொடங்கியது .

وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ جَاعِلٌ فِى الْاَرْضِ خَلِيْفَةً قَالُوْٓا اَتَجْعَلُ فِيْهَا مَنْ يُّفْسِدُ فِيْهَا وَيَسْفِكُ الدِّمَآءَ وَنَحْنُ نُسَبِّحُ بِحَمْدِكَ وَنُقَدِّسُ لَـكَ قَالَ اِنِّىْٓ اَعْلَمُ مَا لَا تَعْلَمُوْنَ
(நபியே!) உங்களது இறைவன் மலக்குகளை நோக்கி "நான் பூமியில் (என்னுடைய) பிரதிநிதியை (ஆதமை) நிச்சயமாக ஏற்படுத்தப் போகிறேன்" எனக் கூறிய சமயத்தில் (அதற்கு) அவர்கள் :
"(பூமியில்) விஷமம் செய்து இரத்தம் சிந்தக்கூடிய (சந்ததிகளைப் பெறும்) அவரை அதில் (உன்னுடைய பிரதிநிதியாக) ஆக்குகிறாயா? நாங்களோ உன்னுடைய பரிசுத்தத் தன்மையைக் கூறி உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை புகழ்ந்து கொண்டிருக்கிறோம்" என்று கூறினார்கள்.
அதற்கவன் "நீங்கள் அறியாதவற்றை எல்லாம் நிச்சயமாக நான் நன்கறிவேன்" எனக் கூறிவிட்டான். (குர்ஆன்: 2:30)
அல்லாஹ்வே அறிவான் .
ர.ரா
**Rahmath Rajakumaran**
" இறையின் சீற்றங்களே
இயற்கையின் சீற்றங்கள் "
20 பதிவுகளாக தொடர்ந்த இத்தொடர் பதிவுகள் 10 இன்னும் பதிவுகளோடு அதாவது மொத்தம் 30 பதிவுகளோடு இன்ஷா அல்லாஹ் நிறைவு செய்ய உள்ளேன்.
நண்பர்கள் அடுத்த தொடர் பதிவுகள் குறித்து உங்கள் கருத்துக்களை எதிர்நோக்குகிறேன்.
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 21(மரணத் தொழிற்சாலை)



இறை சீற்றங்கள் இயற்கையின் சீற்றங்கள் மட்டும் அல்ல ; கொடூரமான ஆட்சியாளர்களைக் கொண்டு வதைக்கப்படுவதும் இறைச் சீற்றங்களே என்பதற்கு **ஹிட்லர் Vs யூதர்கள் .**

ஹிட்லர் தனது நாஜி கட்சியினரிடையே கேள்வி - பதில் பாணியில்,
" எனதருமை ஜெர்மன் மக்களே.... முதல் உலகப் போரில் நாம் தோல்வி அடைந்தோம் . நம் வசம் இருந்த நிலப்பகுதிகளை இழந்தோம். எதிரி நாடுகளுக்குப் போரில் ஏற்பட்ட இழப்புகளுக்கு நாம் பொறுப்பேற்றுக் கொண்டு அதற்கு நஷ்டஈடு கொடுக்கிறோம் ! இந்தக் கடன் சுமை நமது அடிப்படை வசதிகளைப் பறிக்கிறது ! நமது தலைச்சுமையைக் கூட்டுகிறது. இதற்கு யார் காரணம் ?

" ஆட்சி முறை " - இது ஹிட்லரால் மூளைச்சலவை செய்யப்பட்ட நாஜிக் கட்சியினரின் கோஷம்!
" இந்த ஆட்சிக்குப் பின்னணியில் இருப்பவர்கள் யார்? "
" யூதர்கள்! யூதர்கள் ! ! "
" இந்தத் துரோகிகள் பிரச்சனைக்கு நாம் கடைசி வரை தீர்வு கண்டாக வேண்டும் "
ஹிட்லர் ஆரம்பித்து வைத்த இரண்டாம் உலகப்போர் காவு வாங்கியது எத்தனை உயிர்களைத் தெரியுமா ? சுமார் ஆறரைக் கோடி பேர் ! இதில் மிகப் பெரிய சோகம் என்னவென்றால் , இறந்தவர்களில் சுமார் ஐந்து கோடிப் பேர் எந்த வம்பு தும்புக்கும் போகாத பொதுமக்கள் !

யூதர்களைக் கொலை செய்வதற்கு என்று தனி அமைச்சகம்..... யூத மக்களை விதவிதமாக கொலை செய்வதற்கு என்றே நாடு முழுவதும் மரணத் தொழிற்சாலைகள்....
கொல்லும் யூதர்களின் எண்ணிக்கை கணக்கில் வைத்துக் கொள்வதற்கு எளிய வழி , யூதர்களின் கை அல்லது காலில் ஒரு செம்பு வளையம் மாட்டப்படும் .பல சித்ரவதைகளுக்குப் பிறகு அவர்கள் கொல்லப்பட்டதும் பிணங்களை மொத்தமாக குவித்து கொளுத்தப்படும் . சடலங்கள் சாம்பலானதும் , சாம்பலிருந்து செம்பு வளையங்களை பிரித்து எடுத்து எண்ணிக் கொள்வார்கள். ஒரு நாளைக்கு குறைந்தபட்ச இலக்கு இரண்டாயிரம் யூதர்கள் கொன்று சாம்பலாக்க வேண்டும் .

மனிதர்களை கொல்வதற்கு என்னென்ன முறைகள் இருக்கிறதோ அத்தனை முறைகளையும் ஹிட்லரின் நாஜிப்படை யூதர்களிடம் கையாண்டது.
இதில் " காஸ் சேம்பர் " முறை விசித்தரமானது . பிடிபடும் யூதர்களை ஆடைகளை எல்லாம் களையச் சொல்லிவிட்டு , " போய் ஷவரில் குளித்து விட்டு வாருங்கள் " என்று நாஜிப்படை கட்டளையிடும் .
பெரிய குளியறையில் நுழைந்ததும் கதவுகள் சாத்தப்பட்டு விஷப்புகை ஷவரில் இருந்து வரும் அடுத்த சில நிமிடங்கள் குளியல் அறை பிண அறை .
பிடிபடும் அத்தனை யூதர்களுக்குமே இது மாதிரி சுலபமான ஈஸியான மரணம் கிடைத்து விடாது .

துப்பாக்கி முனையில் விரட்டிப் பிடிக்கப்படும் யூதர்களை , நாஜிப்படைகள் கூட்ஸ் ரயிலில் ஏற்றிக் கொண்டு தொலை தூரத்திற்குக் கொண்டு போகும் . ரயிலின் கூட்ஸ் கேரேஜ் கதவை திறக்கும் போது நிறைய பேர் மூச்சி திணறியே செத்துப் போய் இருப்பார்கள் .

எஞ்சியிருப்பவர்களைக் கொண்டு சவக்குழிகள் தோண்டச் சொல்லும் . அவர்களின் கண் எதிரிலேயே சுட்டுக் கொல்லப்பட்ட தாய், தந்தை, சகோதரி , பிள்ளைகள் போன்றவர்களின் சடலங்களை அவர்களை விட்டே குழியில் தள்ளி மூடச் சொல்லும் அதன் பின் துப்பாக்கி முன் வந்து பரிதாபமாக வந்து நிற்கும் அவர்களை ஈவு இரக்கமின்றி சுட்டுக் கொல்லும் .
இந்த நிகழ்வை படிக்கும் போது எனக்கு குர்ஆனில் யூதர்களைப் பற்றி ஒரு வசனம் ஞாபகத்திற்கு வருகிறது .

وَاِذْ قَالَ مُوْسٰى لِقَوْمِهٖ يٰقَوْمِ اِنَّكُمْ ظَلَمْتُمْ اَنْفُسَكُمْ بِاتِّخَاذِكُمُ الْعِجْلَ فَتُوْبُوْآ اِلٰى بَارِٮِٕكُمْ فَاقْتُلُوْٓا اَنْفُسَكُمْ ذٰ لِكُمْ خَيْرٌ لَّـكُمْ عِنْدَ بَارِٮِٕكُمْ فَتَابَ عَلَيْكُمْ اِنَّهٗ هُوَ التَّوَّابُ الرَّحِيْمُ
பின்னும் (நினைத்துப் பாருங்கள்:) மூஸா தன் சமூகத்தாரை நோக்கி "என்னுடைய சமூகத்தாரே! நீங்கள் காளைக்கன்றை(த் தெய்வமாக) எடுத்துக் கொண்டதனால் (பகுத்தறிவுடைய) நீங்கள் (கேவலம் ஒரு மிருகத்தை வணங்கி) உண்மையாகவே உங்களுக்கு தீங்கிழைத்துக் கொண்டீர்கள். நீங்கள் மனம் வருந்தி உங்களை படைத்தவனிடம் மீண்டு உங்(களிலுள்ள வரம்பு மீறியவர்)களை நீங்களே கொன்று விடுங்கள். இதுதான் உங்களை படைத்தவனிடம் உங்களுக்கு நன்மை தரும்" என்று கூறினார். ஆகவே (அவ்வாறே நீங்களும் செய்ததனால்) உங்களை (அல்லாஹ்) மன்னித்துவிட்டான். நிச்சயமாக அவன் மிக மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையவனுமாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 2:54)

மேற்கண்ட நிகழ்வு குறித்து விவிலியம் பழைய ஏற்பாட்டில் , "அவர் அவர்களை நோக்கி , 'உங்களில் ஒவ்வொருவனும் தன் பட்டயத்தைத் தன் அரையிலே கட்டிக் கொண்டு பாளையமெங்கும் உள்ளும் புறமும் வாசலுக்கு வாசல் போய், ஒவ்வொருவனும் தன் தன் சகோதரனையும் , சிநேகிதனையும் , அயலானையும் கொன்றுபோடக் கடவன் என்று இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சொல்கிறார் " என்றார் .
(யாத்திராகமம் 32 : 27 )

சுண்டெலிகளை வைத்துச் சோதனைகள் செய்வது மாதிரி யூதர்களை வைத்து பல மருத்துவ பரிசோதனைகள் மயக்க மருந்து கொடுக்காமல் நடத்தப்பட்டன !
துப்பாக்கி சுடும் பயிற்சிக்கு சோளப் பொம்மைகளுக்கு பதிலாக யூதர்களை பயன்படுத்தினர்.
எத்தனை நாளைக்குத்தான் இந்த கொடுமையை அனுபவிப்பது என்று யூத இளைஞர்கள் நாஜிப்படை வீரர்களை 25 பேரைக் கொன்றனர் .
இந்தச் சம்பவம் நடந்த சில மணி நேரத்திற்குள் யூத இளைஞர்களின் குடியிருப்பு கசாப்புக் கடையை விட கேவலமாக குழந்தைகள், பெண்கள், வயோதிகர்கள் , நோயாளிகள் அத்தனை பேரையும் கொடூரமாக கொன்று
இரத்த வெள்ளத்தில் மிதக்க விட்டனர் நாஜிப்படைகள் !.
யூதர்கள் செய்த அழிச்சாட்டியத்தைப் பற்றியும் அதற்குரிய தண்டனையைப் பற்றியும் குர்ஆர்னில் ...

وَقَضَيْنَاۤ اِلٰى بَنِىْۤ اِسْرَآءِيْلَ فِى الْكِتٰبِ لَـتُفْسِدُنَّ فِى الْاَرْضِ مَرَّتَيْنِ وَلَتَعْلُنَّ عُلُوًّا كَبِيْرًا
இஸ்ராயீலின் சந்ததிகளே! நிச்சயமாக நீங்கள் பூமியில் இரண்டு முறை விஷமம் செய்வீர்கள் என்றும், நிச்சயமாக நீங்கள் பெரும் மேன்மைகளை அடை(ந்து கர்வம் கொண்டு அநியாயம் செய்)வீர்கள்! என்றும் (உங்களுக்கு அளித்த) வேதத்தில் நாம் முடிவு செய்துள்ளோம்.
(அல்குர்ஆன்: 17:4)

فَاِذَا جَآءَ وَعْدُ اُوْلٰٮهُمَا بَعَثْنَا عَلَيْكُمْ عِبَادًا لَّنَاۤ اُولِىْ بَاْسٍ شَدِيْدٍ فَجَاسُوْا خِلٰلَ الدِّيَارِ‌ وَكَانَ وَعْدًا مَّفْعُوْلًا
அவ்விரண்டில் முதல் தவணை வந்த சமயத்தில் (நீங்கள் செய்து கொண்டிருந்த குற்றங்களுக்குத் தண்டனையாக இரக்கமற்ற) பெரும் பலவான்களாகிய மனிதர்களை உங்கள் மீது ஏவிவிட்டோம். அவர்கள் (பைத்துல் முகத்தஸிலிருந்த உங்கள்) வீடுகளுக்கு ஊடுருவிச்சென்று (தங்கள் கைக்குக் கிட்டியதையெல்லாம் இடித்தழித்து நாசமாக்கி) விட்டார்கள். (அதனால் பைத்துல் முகத்தஸிலிருந்த ஆலயமும், அவ்வூரும் அழிந்து நாசமாயின. இவ்வாறு நம்முடைய முந்திய) வாக்குறுதி நிறைவேறியது.
(அல்குர்ஆன்: 17:5)

ثُمَّ رَدَدْنَا لَـكُمُ الْكَرَّةَ عَلَيْهِمْ وَاَمْدَدْنٰـكُمْ بِاَمْوَالٍ وَّبَنِيْنَ وَجَعَلْنٰكُمْ اَكْثَرَ نَفِيْرًا
பின்னர் (உங்கள்) காலச் சக்கரத்தைத் திருப்பி உங்களுக்கு வெற்றியைக் கொடுத்து (ஏராளமான) பொருள்களையும் மக்களையும் கொண்டு நாம் உங்களுக்கு உதவி புரிந்து உங்களைப் பெரும் கூட்டத்தினராகவும் ஆக்கினோம்.
(அல்குர்ஆன்: 17:6)

اِنْ اَحْسَنْتُمْ اَحْسَنْتُمْ لِاَنْفُسِكُمْ وَاِنْ اَسَاْتُمْ فَلَهَا ‌ فَاِذَا جَآءَ وَعْدُ الْاٰخِرَةِ لِيَسُوْٓءٗا وُجُوْهَكُمْ وَلِيَدْخُلُوا الْمَسْجِدَ كَمَا دَخَلُوْهُ اَوَّلَ مَرَّةٍ وَّلِيُتَبِّرُوْا مَا عَلَوْا تَتْبِيْرًا ■
(அச்சமயம் அவர்களை நோக்கி) நீங்கள் நன்மை செய்தால் (அது) உங்களுக்குத்தான் நன்று. நீங்கள் தீமை செய்தால் அது உங்களுக்கே (கேடாகும் என்றும் நாம் கூறினோம். எனினும், அவர்கள் அநியாயம் செய்யவே ஆரம்பித்தனர். ஆகவே) இரண்டாவது தவணை வந்த சமயத்தில் (உங்களைத் துன்புறுத்தி) உங்களுடைய முகங்களை கெடுத்து, (துன்புறுத்தி) முந்திய தடவை மஸ்ஜிதுல் அக்ஸாவில் நுழைந்தவாறே (இந்தத் தடவையும் அதனுள்) நுழைந்து, தங்கள் கைக்குக் கிடைத்தவைகளையெல்லாம் இடித்தழித்து நாசமாக்கக் கூடிய (கடின சித்தமுடைய) அவர்களை (நாம் உங்கள் மீது) ஏவினோம்.
(அல்குர்ஆன் :17:7)

عَسٰى رَبُّكُمْ اَنْ يَّرْحَمَكُمْ‌ وَاِنْ عُدْتُّمْ عُدْنَا‌ ۘ وَجَعَلْنَا جَهَنَّمَ لِلْكٰفِرِيْنَ حَصِيْرًا
(நீங்கள் விஷமம் செய்வதைவிட்டுப் பின்னும் விலகிக் கொண்டால்) உங்கள் இறைவன் உங்கள் மீது கருணைப் புரியலாம். (அவ்வாறன்றி உங்கள் விஷமத்தின் பக்கமே) பின்னும் நீங்கள் திரும்பினால் நாமும் (உங்களை முன் போல தண்டிக்க) முன் வருவோம். அன்றி (இத்தகைய) நிராகரிப்பவரை நரகம் சூழ்ந்து கொள்ளும்படியும் செய்வோம்.
(அல்குர்ஆன்: 17:8)

..... சுமார் 4000 வருடத்திற்கு முன் அன்றைக்கு தொடங்கி 1935 வரை யூதர்களை வதம் செய்ய ஹிட்லரை ஏவினான் போலும் இறைவன்.
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 22( அடிமைகள் 01 )



நபி (ஸல்) அவர்கள் தமது இறுதி மூச்சின்போது கூட அடிமைகள் விஷயத்தில் அல்லாஹ்வின் சீற்றத்திற்கு அஞ்சி கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள் . ஏன் "அடிமை" என்று அழைப்பதற்குக் கூட நபியவர்கள் தடை விதித்தார்கள் .
ஆமா , அடிமைகள் என்றொரு இனம் எப்படி மனித சமுதாயத்திற்குள் வந்தது ?
சுமார் நான்காயிரம் வருடங்களுக்கு முன்பு எகிப்து நாட்டில் பிரமாண்டமான பிரமிடுகள் கட்டப்பட்ட காலத்திலிருந்தே நடந்து வரும் கொடுமை இந்த " அடிமை "
15 நூற்றாண்டின் இறுதியில் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடிக்க...... உலக வரைபடம் விரிந்தது! ஆனால், மனிதனின் மனிதத்தன்மை சுயநலத்தால் சுருங்கியது !

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட பூமியைத் தேடி ஸ்பெயின், போர்ச்சுகல், இங்கிலாந்து , பிரான்ஸ் , நெதர்லாந்து போன்ற நாடுகள் முண்டியடித்து ஓடி , பூமியிலுள்ள தங்கம் மற்றும் வெள்ளிச் சுரங்களில் , விவசாய பணிகள் செய்ய கடினமான வேலைக்கு மலிவான விலையில் மனித சக்தி அந்த நாடுகளுக்குத் தேவைப்பட்டது. அவர்களின் கழுகுப்பார்வை 'ஆப்பிரிக்கா ' மீது திரும்பியது !

மதுபானங்கள் , துப்பாக்கி , துணிமணி ஆகியவற்றுக்காக தன் சொந்த இன மக்களையே அடிமைகளாகப் பிடித்துக் கொடுக்க சில வியாபாரிகளே முன்வந்தனர்.
பெரிய பாறாங்கல்லைக் கொடுத்து தலையில் தூக்கிக் கொண்டு நடையும் ஒட்டமுமாக ஓடி வரச் செய்து அடிமையின் விலை நிர்ணயம் செய்யப்படும் .
ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரையில் அடிமைகள் , ஐரோப்பிய கப்பல் மாலுமிகளிடம் ஏலம் விடப்பட்டு கைமாறும்போது வேதனை உச்சக்கட்டத்தை அடையும். ஆடு, மாடு, பன்றி மாதிரி மிருகங்களை அடைப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட கப்பலின் இருட்டான அடித்தளத்தில் அடிமைகளுக்கான இடம். மூச்சு விடக் கூட இடம் இல்லாத அளவுக்கு ஆண் பெண் குழந்தைகள் என்று அத்தனை பேர் கால்களையும் இரும்புச் சங்கிலியால் இறுக்கமாக பிணைக்கப்படும். நகரக் கூட முடியாத பயணம் .
பயணம் தொடங்கிய இரண்டு நாட்களுக்குள்ளே கப்பல் மல ஜலங்களால் சாக்கடையாக மாறிவிடும்.
பலர் நோய்வாய்ப்படுவார்கள் . நோயால் பாதிக்கப்பட்ட அடிமையை கப்பலில் வைத்திருந்தால் மற்ற அடிமைகளுக்கு நோய் பரவி விடும் . இல்லையா ? அதனால் கப்பல் மாலுமிகள் அவர்களை கடலில் வீசி எறிந்து விடுவார்கள் .

கப்பல், அமெரிக்க நாடுகளை அடைந்தும், வேதனை வேறு வடிவம் எடுக்கும் .தாய், தகப்பன் , அத்தை, மாமா, பெரியப்பா, பெரியம்மா, சித்தப்பா , சித்தி , அண்ணன் , தம்பி , கணவன் , மனைவி என்று பெரிய பெரிய குடும்பமாக பாசத்தோடு பழகிய குடும்பங்கள் ஆளுக்கொரு திசையாக கதற கதற குழந்தைகள் என்று பாராமல் இழுத்துச் செல்லப் படுவார்கள் .
அடிமையை வாங்கிய எஜமானிக்கு உடற்பசி வந்தால் பெண் அடிமைகள் அதையும் தீர்க்க வேண்டும்.
' ஐயோ முடியாது ' என்று சொன்னால் பழுக்கக் காய்ச்சிய இரும்பு கம்பி உயிர்ப் பிரதேசங்களையெல்லாம் தொட்டுப் பார்க்கும்.

439. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
" ஓர் அரபுக் கோத்திரத்திற்கு அடிமையாக இருந்து, பின்னர் அவர்களால் விடுதலை செய்யப்பட்டு, அவர்களுடன் வசித்து வந்த கறுப்பு அடிமைப் பெண் தன் கடந்த கால நிகழ்ச்சியைப் பின் வருமாறு என்னிடம் தெரிவித்தார்.
'நான் அவர்களுடனிருக்கும்போது அவர்களைச் சேர்ந்த சிறுமி ஒருத்தி சிவப்புத் தோலில் முத்துப் பதிக்கப்பட்ட ஓர் ஆபரணத்துடன் வந்தாள். அதை அவள் கழற்றி வைத்தாள் . அல்லது அது தானாகக் கீழே விழுந்தவிட்டது.
அப்போது அவளருகே வந்த சிறு பருந்து ஒன்று, கீழே போடப்பட்ட அந்த ஆபரணத்தை மாமிசம் என எண்ணித் தூக்கிச் சென்றது. அவர்கள் தேடிப் பார்த்தபோது கிடைக்கவில்லை.
அவர்கள் என்னைச்
சந்தேகிக்கலானார்கள். என்னுடைய மர்மஸ்தானம் உட்படப் பல இடங்களிலும் அவர்கள் தேடிப் பார்த்தார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் அவர்களுடன் நின்றிருந்தபோது அந்தச் சிறிய பருந்து (திரும்பவும்) வந்த அதைக் கீழே போட்டதும் அவர்களுக்கருகில் அது விழுந்தது. எதைப் பற்றி என்னைச் சந்தேகித்தீர்களோ அதுதான் இது. நான் அதைத் திருடுவதைவிட்டுப் பரிசுத்தமானவள் என்று கூறினேன்.
இதன்பிறகு நபி(ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை தழுவினேன்'
அந்தப் பெண்ணுக்குப் பள்ளி வாசலில் கூடாரம் ஒன்று இருந்தது. அதிலிருந்து என்னிடம் வந்து அப்பெண் பேசிக் கொண்டிருப்பாள். என்னைச் சந்திக்கும் போதெல்லாம் பின்வரும் பாடலை அவள் பாடாமலிருந்ததில்லை.
'அந்த ஆபரணம் சம்பந்தப்பட்ட அந்த நாள் நம்முடைய இறைவனின் அற்புதங்களில் ஒன்றாகும். தெரிந்து கொள்ளுங்கள்! அவன்தான், இறைமறுப்பாளர்களின் ஊரிலிருந்து நிச்சயமாக என்னைக் காப்பாற்றினான்'. (இது கவிதையின் பொருள்).
இந்தக் கவிதையை அடிக்கடி என்னிடம் கூறுகிறாயே என்ன விஷயம் என்று நான் அப்பெண்ணிடம் கேட்டபோது மேற்கண்ட நிகழ்ச்சியை அவள் என்னிடம் கூறினாள். (ஸஹீஹ் புகாரி )
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 23( அடிமைகள் 02 )



சக மனிதர்களை மிருகங்கள் மாதிரி அடிமையாக நடத்துவது கொடுமையானது என்று மனிதனுக்கு உரைக்க ஆரம்பித்ததே 19-ம் நூற்றாண்டில்தான் வில்லியம் வில்பர் போர்ஸ் என்பவர் அடிமைத்தனத்தை ஒழிக்க வேண்டும் என்று நாற்பது வருடம் போராடிய பின்னர் , கடைசியில் 1833-ம் ஆண்டு இங்கிலாந்து இது சம்பந்தமாகச் சட்டம் இயற்றியது .

'அடிமைகள் ' பிரச்சனைகளை முன்வைத்து தொடங்கப்பட்ட ரிபப்ளிக்கன் கட்சியின் சார்பாக அமெரிக்காவில் ஆபிரகாம் லிங்கன் பிரசாரம் செய்தார். அடிமைகளை முற்றிலும் ஒழித்துவிட்டால் , நாட்டின் பொருளாதாரமே தரைமட்டமாகிவிடும் என்று பல ஐரோப்பிய நாடுகள் பயந்த மாதிரியே அமெரிக்கர்களும் பயந்தார்கள் .

அதனால் ஆபிரகாம் லிங்கனே கூட அடிமைத்தனத்தை ஒரேயடியாக ஒழிக்க வேண்டும் என்று சொல்லவில்லை . படிப்படியாக காலப்போக்கில் ஒழிக்க வேண்டும் என்றே சொன்னார்.

ஆனால் 6 ம் நூற்றாண்டில் அதாவது நபிகளார் காலத்தில் இஸ்ஸாத்தில் அடிமைகள் நிலை இதற்கு நேர்மாறானதாக இருந்தது.

தற்காப்புக்காக மார்க்கம் அனுமதிக்கின்ற அறப்போர்களில் பிடிக்கப்படும் போர்க் கைதிகளை நான்கு முறைகளில் நடத்த ஆட்சித்தலைவருக்கு அதிகாரம் உண்டு.

1) பிணைத் தொகை வாங்கிக்கொண்டு விடுதலை செய்யலாம்.

2) எந்தத் தொகையும் வாங்காலேயே விடுதலை செய்யலாம்.

3) மரண தண்டனை வழங்கலாம்

4) அடிமைகளாக்கிப் போர் வீரர்களுக்கு பிரித்துக் கொடுத்து விடலாம். சூழ்நிலைக்கேற்ப முடிவு எடுக்க ஆட்சியாளருக்கு உரிமை உண்டு.

ஆயினும் , சில வேளைகளில் போர்க் கைதிகளை அடிமைகளாக ஆக்குவதே ஏற்ற முடிவாக இருக்கும்.

ஏனெனில் , போர்க் கைதிகள் அனைவருக்கும் மரண தண்டனை விதிப்பதென்பது ,மனித ஆற்றலை பாழடிப்பதாகிவிடும் .

அனைவரையும் விடுதலை செய்தால் என்ன ? அப்போது அவர்களே மீண்டும் வந்து நம்மைத் தாக்க மாட்டார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம் ?

போர்க் கைதிகளை ஆயுள் கைதிகளாக அடைத்து வைத்தால் என்ன ? இது அவர்களின் திறமைகளை வீணாக்குவதாகிவிடும். அத்துடன் பயனே இல்லாமல் அவர்களுக்குச் செய்ப்படும் செலவினங்கள் சுமை சமூகத்தின் தலையில் விழும் .

இஸ்லாத்தில் அடிமைகள் சகோதகர்களாக நடத்தப்பட்ட காரணத்தாலேயே அடிமைகளில் பலர் சிறந்த கல்வியாளர்களாகவும் , தலைவர்களாகவும் கூட விளங்கினார்கள் .

இந்த வகையில் மக்காவில் அதாஉ பின் அபீ ரபாஹ் (ரஹ்) , யமன் நாட்டில் தாவூஸ் பின் கைசான் (ரஹ்) , எகிப்தில் யஸீத் பின் ஹபீப் (ரஹ்) , சிரியாவில் மக்ஹூல் (ரஹ்) , ஹிஜாஸில் ஈஹ்ஹாக் பின் முஸாஹிம் (ரஹ்) ஆகியோர் அடிமைகளாக இருந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் .

30. 'நான் அபூ தர்(ரலி)யை (மதீனாவிற்கு அருகிலுள்ள) 'ரபதா' என்ற இடத்தில் சந்தித்தேன்.

அப்போது அவரின் மீது ஒரு ஜோடி ஆடையும் (அவ்வாறே) அவரின் அடிமை மீது ஒரு ஜோடி ஆடையும் கிடப்பதைப் பார்த்தேன். நான்(ஆச்சரியமுற்றவனாக) அதைப் பற்றி அவரிடம் கேட்டதற்கு,

'நான் (ஒருமுறை) ஒரு மனிதரை ஏசிவிட்டு அவரின் தாயையும் குறை கூறி விட்டேன்.

அப்போது நபியவர்கள் கூறினார்கள்: 'அபூதர், அவரையும் தாயையும் சேர்த்துக் குறை கூறி விட்டீரே! நீர் அறியாமைக் காலத்துப் பழக்கம் குடி கொண்டிருக்கும் மனிதராகவே இருக்கிறீர்! உங்களுடைய அடிமைகள் உங்களின்
சகோதரர்களாவர். அல்லாஹ்தான் அவர்களை உங்கள் அதிகாரத்தின் கீழ் வைத்திருக்கிறான். எனவே ஒருவரின் சகோதரர் அவரின் அதிகாரத்தின் கீழ் இருந்தால் அவர், தாம் உண்பதிலிருந்து அவருக்கும் புசிக்கக் கொடுக்கட்டும். தாம் உடுத்துவதிலிருந்து அவருக்கும் உடுத்தக் கொடுக்கட்டும். அவர்களின் சக்திக்கு மீறிய பணிகளைக் கொடுத்து அவர்களைச் சிரமப்படுத்த வேண்டாம். அவ்வாறு அவர்களை நீங்கள் சிரமமான பணியில் ஈடுபடுத்தினால் நீங்கள் அவர்களுக்கு உதவியாயிருங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
(இதனால்தான் நான் அணிவது போல் என் அடிமைக்கும் உடை அளித்தேன்' என அபூதர் கூறினார்' என மஃரூர் கூறினார்.
(ஸஹீஹ் புகாரி)

இதனால்தான் , பிரான்ஸ் எழுத்தாளர் மோசே ஆபோ : அடிமையாக இருப்பதென்பது இஸ்லாமிய நாடுகளில் ஒரு குறையே அல்ல.சொல்லப்போனால், காண்ஸ்டாண்டிநோபிள் மன்னர்கள் அனைவரும் அடிமைப் பெண்களுக்குப் பிறந்தவர்களே. அவர்களின் வீரமும் , தீரமும் சற்றும் குறைந்ததல்ல . எகிப்து ஆட்சியாளர்கள் பலர் அடிமைகளை விலைக்கு வாங்கி கல்வி போதித்து வளர்த்து ஆளாக்கித் தம் புதல்வியரையே அந்த அடிமைகளுக்கு மணமுடித்து வைத்திருக்கிறார்கள் கெய்ரோ ஆட்சியாளர்கள் , படைத் தளபதிகள் மற்றும் தலைவர்களில்
பெரும்பாலோர் ஒரு காலத்தில் நூறு காசுகளுக்குச் சந்தையில் விற்கப்பட்டவர்கள்தாம் . - (தக்மிலத்து ஃபத்ஹில் முல்ஹிம் )
நபி (ஸல்) அவர்கள் தமது வயதைப் போன்றே 63 அடிமைகளை விடுதலை செய்துள்ளார்கள் . அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் 69 அடிமைகளையும் , அப்பாஸ் (ரலி) அவர்கள் 70 அடிமைகளையும் .அபூபக்ர் (ரலி) அவர்கள் ஏராளமான அடிமைகளையும் விடுதலை செய்துள்ளார்கள் .
ர.ரா

இறையின் சீற்றங்களே

இயற்கையின் சீற்றங்கள் 24 (விலை போகும் விளைநிலங்கள் )



உணவுப் பொருட்கள் விளையும் நிலங்களையே கான்கிரீட் காடுகளாக ஆக்கினால் பின் உணவு உற்பத்திக்கு மனிதன் என்ன செய்வான் ? இச்செயல் நுனிக் கிளையில் உட்கார்ந்து கொண்டு அடிக் கிளையை வெட்டுவதற்குச் சமமான புத்திக்கெட்ட செயல் அல்லவா ?
தமிழ் நாட்டின் ஒட்டு மொத்த உற்பத்தியில் விவசாயம் மற்றும் விவசாயம் சார்ந்த தொழில்களின் பங்களிப்பு வெறும் எட்டு சதவிகிதம்தான் இந்த 8 சதவிகித வருமானத்தை நம்பி தான் 40 சதவிகித விவசாயிகள் பிழைத்து வருகிறார்கள் !
இந்தப் போக்கு இன்னும் தொடர்ந்தால் 'விவசாயிகள் ' என்ற உழைப்பாளர்கள் இருக்க மாட்டார்கள் என்பது மட்டும் அல்ல விளைநிலங்களே இல்லாமல் போய் உணவுத் தட்டுபாடும் , பஞ்சமும் தலைவிரித்து ஆட வாய்ப்புள்ளது .

விவசாயி , விவசாய நிலங்கள் பாதிக்கக் கூடாது என்பதுதான் அல்லாஹ்வின் நாட்டம் என்பதற்கு சாட்சியாக குர்ஆனில்

وَدَاوٗدَ وَسُلَيْمٰنَ اِذْ يَحْكُمٰنِ فِى الْحَـرْثِ اِذْ نَفَشَتْ فِيْهِ غَنَمُ الْقَوْمِ وَكُنَّا لِحُكْمِهِمْ شٰهِدِيْنَ ۙ
தாவூதையும் ஸுலைமானையும் (நபியாக அனுப்பி வைத்தோம்.) ஒருவருடைய ஆடுகள் மற்றொருவரின் பயிரை மேய்ந்துவிட்டது பற்றி (தாவூத், சுலைமான் ஆகிய) இருவரும் தீர்ப்புக் கூற இருந்த சமயத்தில் அவர்களுடைய தீர்ப்பை நாம் (கவனித்துப்) பார்த்துக் கொண்டிருந்தோம்.
(குர்ஆன்:21:78)

பாதிப்புக்குள்ளான விவசாய நிலத்தை ஆடு மேய்ப்பாளர் விளையும் பயிரை அறுவடைக்கு தயாராக்கி மீண்டும் விவசாயிடம் கொடுத்து விட்டு தன்னுடைய ஆடுகளை விவசாயிடமிருந்து மீட்டிக் கொள்ளலாம். அதுவரை விவசாயி பாதிப்படையாமல் இருப்பதற்காக ஆடுகளை ஈடாக வாங்கிய காலத்திலிருந்து அத்தனை பயன்களையும் விவசாயி அனுபவித்துக் கொள்ளலாம் என்கிற தீர்ப்பபை 17 வயது சுலைமான் (அலை) அவர்கள்
வழங்கினார்கள் .
நபி (ஸல்) அவர்கள் தன்னை
விளைநிலத்தோடு ஒப்பிட்டு,
" மழை தண்ணீரை தேக்கி வைத்து தானும் பயன்பெற்று பிறருக்கும் பயனளிக்கும் சதுப்பு நிலத்தைப் போன்றவன் நான் " – ஹதீஸ்

மேலும் விளைநிலத்தை உங்கள் மனைவிக்கு ஒப்பாக குர்ஆனில்....

نِسَاۗؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَاْتُوْا حَرْثَكُمْ اَنّٰى شِئْتُمْ وَقَدِّمُوْا لِاَنْفُسِكُمْ وَاتَّقُوا اللّٰهَ وَاعْلَمُوْٓا اَنَّكُمْ مُّلٰقُوْهُ ۗ وَ بَشِّرِ الْمُؤْمِنِيْنَ
உங்கள் மனைவிகள் உங்கள் விளைநிலங்கள். ஆகவே, உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு சென்று உங்களுடைய பிற்காலத்திற்கு (வேண்டிய சந்ததியை)த் தேடிக் கொள்ளுங்கள். நிச்சயமாக, நீங்கள் அல்லாஹ்வைச் சந்திப்பீர்கள் என்பதையும் உறுதியாக அறிந்து அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள். (நபியே! நேர்மையுள்ள) நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறுங்கள்.
(குர்ஆன்: 2:223)

மேலும் இப்பூமியைப் படைத்ததை விட இப்பூமியிலுள்ள உயிர்களுக்கு தேவையான இன்றியமையாத உணவு உற்பத்தி தளத்தை உருவாக்குவதற்கு அதிக நாட்கள் எடுத்துக் கொண்டதாக அல்லாஹ் குர்ஆனில்....
(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "(இவ்வளவு பெரிய) பூமியை இரண்டே நாள்களில் படைத்தவனை நீங்கள் நிராகரித்துவிட்டு (மற்றவைகளை) அவனுக்கு இணையாக்குகின்றீர்களா? .....
அன்றி, அதில் (வசிப்பவர்களுக்கு) வேண்டிய உணவையும் நான்கு நாள்களில் நிர்ணயம் செய்தான். (அதுவும் நல்லவர்கள் தீயவர்கள் என்ற வித்தியாசமின்றி) கேட்பவர்கள் அனைவருக்கும் சமமாகக் கிடைக்குமாறும் செய்தான்.
(குர்ஆன் : 41: 09 , 10)

மொத்த பூமியை இரண்டு நாளில் படைத்த இறைவன் , அதில் உள்ளவர்களுக்குரிய உணவு உற்பத்தி தளத்தை நிர்ணய செய்ய நான்கு நாட்கள் எடுத்துக் கொண்டதாக இறைவனே கூறுகிறான் என்றால் விவசாயத்திற்கு இறைவன் கொடுக்கும் முக்கியத்துவத்தை நீங்கள் உணர்ந்து கொள்ளுங்கள்.
வயல்வெளிகளை குடியிருப்பு பகுதிகளாக மாற்றிய வரலாறுதான் உலகமெங்கும் உண்டு. எங்கேனும் குடியிருப்பு பகுதிகள் விவசாய நிலங்களாக மாறிய வரலாறு உலகின் எந்த மூலையிலும் நடைபெற்றதாக வரலாறு இல்லை

உங்களின் கனவு இல்லத்திற்காக விளைநிலத்தை கான்கிரீட் குப்பைகளாக மாற்றி இறைவனின் சீற்றத்தை பெற்றுக் கொள்ளாதீர்கள் .
"படைப்புகள் வசித்திருக்க வசதியாகப் பூமியைப் படைத்தான் " குர்ஆன் 55: 10
ர.ரா

**Rahmath Rajakumaran**

விளை நிலத்தில் வீடு கட்டினால் ரிஜிஸ்டர் பண்ணப்படாது! – ஐகோர்ட் ஆர்டர்

ரொம்பக் காலத்துக்கு முன்னாடி இந்தியா ஒரு விவசாய நாடு என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். விளைநிலங்கள்தான் விலை மதிப்பில்லா நிலங்கள் என்ற நிலை இருந்ததெல்லாம் உண்மைதான். ஆனால், அவை விலை நிலங்களாக மாறிப் போன கொடுமையை என்ன சொல்வது! கிராமத்தில் ஒருவர் செல்வந்தர் என்று நினைப்பது அவர்களுக்கு நில உரிமை இருப்பதுதான். அந்தக் காலக் கணக்குப்படி ஒரு குழி நிலம் இருந்தாலே தலை நிமிர்ந்து நடப்பார்.

இந்த நிலை இன்று தலைகீழாகப் போய் விட்டது; விளை நிலங்கள் ரியல் எஸ்டேட் என்கிற வியாபார வலைக்குள் சிக்கி விட்டது. பயணம் செய்பவர்கள் பல விளம்பரப் பலகைகளைப் பார்க்கலாம்; ரியல் எஸ்டேட் விளம்பரம் – வீட்டு மனை விற்பனை என்று பதாகையைப் பார்க்க முடியும். நெல் வளர்ந்த வயல்களில் கான்கிரீட் வீடுகள் ஓங்கி நிற்கின்றன. கிராமங்கள் நகர்ப்புறமாவது என்பது இந்த வகையில் தான் இருக்கிறது. 2011க்கும் – 2016க்கும் இடையில் 18,67,502 தமிழ் நாட்டின் விவசாயிகள் தங்களின் வேளாண் தொழிலைக் கை விட்டு விட்டனர்.

வீட்டு மனைகளாக விற்க வேண்டுமானால், அவை விளை நிலங்கள் அல்ல என்ற தடையில்லாச் சான்றிதழ் வேளாண் துறை இணை இயக்குநரிடம் பெற வேண்டும் என்றிருந்த நிபந்தனைகள் எல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக்காய் ஆகி விட்டன. குறிப்பாக தமிழ்நாட்டில் 50 ஆண்டுகளுக்கு மேலாக விவசாயம் என்பது நலிந்த ஒன்றாகி விட்டது. காவிரி நீர் உரிமையைப் பறி கொடுத்ததால், நிலத்தை நம்பி வாழ்ந்த விவசாயிகள் கண்ணீர் உகுக்கும் நிலை. எத்தனை எத்தனையோ போராட்டங்கள் நடத்தப் பட்டன. அரசுகள் அனைத்துக் கட்சி மாநாடுகளைக் கூட்டித் தீர்மானங்கள் எல்லாம் நிறைவேற்றப்பட்டதுண்டு. அனைத்துக் கட்சிக் குழு இந்தியப் பிரதமர், குடியரசு தலைவரைச் சந்தித்து மனுக்கள் கொடுத்துக் கொடுத்து அலுத்துப் போனதுதான் மிச்சம்.

இந்நிலையில் விளைநிலங்களை வீட்டு மனைகளாக மாற்றி விற்றால், எந்தக் காரணம் கொண்டும் பதிவு செய்யக் கூடாது என்று பத்திரப் பதிவுத்துறைக்கு சென்னை ஐகோர்ட் உத்தரவிட்டுள்ளது. அதாவது முறையற்ற முறையில் விளை நிலங்களை வீட்டு மனைகளாக மாற்றுவதற்குத் தடை விதிக்க வேண்டும் என்றும் அங்கீகாரமில்லாத வீட்டு மனைகளை பதிவு செய்யக் கூடாது என்றும் கூறி சென்னை ஐகோர்ட்டில் வழக்குரைஞர் யானை ராஜேந்திரன் பொது நல மனுவை தாக்கல் செய்திருந்தார்.

இந்த மனுவை விசாரித்த தலைமை நீதிபதி எஸ்.கே.கௌல், நீதிபதி ஆர்.மகாதேவன் ஆகியோர் அடங்கிய முதல் அமர்வு பிறப்பித்த உத்தரவு இதுதான்:

3 ஆண்டுகளுக்கு மேல் விளையாமல் தரிசாக போடப்பட்டுள்ள விளை நிலங்களை குடியிருப்பு பகுதிகளாகவோ அல்லது பிற உபயோகத்திற்காகவோ மாற்றுவதற்கு எந்த விதிகளும் வகுக்கப்படவில்லை. இதனால் 5 சதவீத இடத்துக்கு மட்டும் அனுமதி கோரிவிட்டு, எஞ்சிய 95 சதவீத இடம், முறைகேடாக வீட்டு மனைகளாக மாற்றப்படுகிறது. சென்னையில் 80 சதவீதமாக இருந்த விளைநிலப் பகுதி இப்போது 15 சதவீதமாகச் சுருங்கி விட்டதாக செய்திகள் மூலம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

விளைநிலங்களை வீட்டு மனைகளாக “லே-அவுட்’ போட்டு அங்கீகாரமில்லாமல் விற்பனை செய்யும்போது அந்த நிலத்தையோ அல்லது அதில் உள்ள கட்டடத்தையோ பத்திரப் பதிவுத் துறையினர் எந்தவிதக் காரணம் கொண்டும் பதிவு செய்யக்கூடாது.

அடுத்த தொடர் இன்ஷா அல்லாஹ் ....

"நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் "




திருக்குர்ஆனில் அல்லாஹ் ஒரு நிகழ்வை சொல்லி அந்த நிகழ்வுக்குரிய காரணகாரியத்தை பல இடங்களில் குறிப்பிட்டு , அதற்கென்று ஒரு சித்தாந்தத்தை வகுத்து இது இப்படி இப்படிதான் என்று விதியாக்குவான்.
(உ-ம்) தகப்பன் சொத்தில் ஆணுக்கு
2 பங்கு பெண்ணுக்கு 1 பங்கு என்பதற்கு காரணம் காரியம் .....
இது மாதிரியான ஆய்வு . இந்த ஆய்வுக்கு நிரூபணமாக ஆங்காங்கே விஞ்ஞான விளக்கம் சொல்லப்படும் .
சரி , இப்போ நீங்க சொல்லுங்க ...தகப்பன் சொத்தில் ஆணுக்கு 2 பங்கு , பெண்ணுக்கு 1 பங்கு என்பதற்கு என்ன காரணம் ?
ர.ரா

**Rahmath Rajakumaran**

يُوْصِيْكُمُ اللّٰهُ فِىْۤ اَوْلَادِكُمْ لِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْاُنْثَيَيْنِ فَاِنْ كُنَّ نِسَآءً فَوْقَ اثْنَتَيْنِ فَلَهُنَّ ثُلُثَا مَا تَرَكَ وَاِنْ كَانَتْ وَاحِدَةً فَلَهَا النِّصْفُ وَلِاَ بَوَيْهِ لِكُلِّ وَاحِدٍ مِّنْهُمَا السُّدُسُ مِمَّا تَرَكَ اِنْ كَانَ لَهٗ وَلَدٌ فَاِنْ لَّمْ يَكُنْ لَّهٗ وَلَدٌ وَّوَرِثَهٗۤ اَبَوٰهُ فَلِاُمِّهِ الثُّلُثُ فَاِنْ كَانَ لَهٗۤ اِخْوَةٌ فَلِاُمِّهِ السُّدُسُ مِنْ بَعْدِ وَصِيَّةٍ يُّوْصِىْ بِهَاۤ اَوْ دَيْنٍ اٰبَآؤُكُمْ وَاَبْنَآؤُكُمْ لَا تَدْرُوْنَ اَيُّهُمْ اَقْرَبُ لَـكُمْ نَفْعًا فَرِيْضَةً مِّنَ اللّٰهِ اِنَّ اللّٰهَ كَانَ عَلِيْمًا حَكِيْمًا
உங்கள் சந்ததியில் (ஆணும், பெண்ணும் இருந்தால்) ஒரு ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பாகம் உண்டென்று அல்லாஹ் உங்களுக்கு உபதேசிக்கின்றான். (உங்கள் சந்ததிகளாகிய) அவர்கள் (ஆணன்றிப்) பெண்களாகவே இருந்து அவர்கள் (இருவராகவும் அல்லது) இருவருக்கு அதிகமாகவும் இருந்தால் (எத்தனை பேர்கள் இருந்தபோதிலும்) அவர் (இறந்தவர்) விட்டுச் சென்ற (சொத்)தில் மூன்றில் இரண்டையே (சமமாக) அடைவார்கள். ஒரே பெண்ணாக இருந்தால் அவளுக்கு (இறந்தவர் விட்டுச் சென்ற பொருளில்) பாதி உண்டு. (உங்களில்) இறந்தவருக்கு சந்ததியுமிருந்து (தாய் தந்தையும் இருந்தால்) தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் (இறந்தவர்) விட்டுச்சென்ற (சொத்)தில் ஆறில் ஒரு பாகமுண்டு. இறந்தவருக்கு வாரிசு இல்லாமலிருந்து தாய், தந்தைகளே, வாரிசுக்காரர்களானால் தாய்க்கு மூன்றில் ஒரு பாகம்தான். (மற்ற இரு பாகமும் தந்தையைச் சாரும். இத்தகைய நிலைமையில் இறந்தவருக்கு பல) சகோதரர்கள் இருந்தால் தாய்க்கு ஆறில் ஒன்றுதான் (மீதமுள்ளது தந்தையைச் சாரும். ஒரு சகோதரன் அல்லது ஒரு சகோதரி மட்டும் இருந்தால் தாய்க்கு மூன்றில் ஒன்று உண்டு. இவை அனைத்தும் வஸீயத் எனும்) மரண சாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னரே (மீதமுள்ள சொத்தில் பங்கு பிரிக்க வேண்டும்.) உங்கள் தந்தைகளோ அல்லது உங்கள் சந்ததிகளோ (இவர்களில்) உங்களுக்குப் பலனளிப்பதில் நெருங்கியவர்கள் யாரென்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். (ஆகவே இவை) அல்லாஹ்வினால் (உங்கள் மீது) விதிக்கப்பட்டுள்ளன. நிச்சயமாக அல்லாஹ் மிக அறிந்தவனும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். (ஆகையால் அவன் விதித்தபடி பங்கிட்டுக் கொள்ளுங்கள்.)
(அல்குர்ஆன் : 4:11)

நிகழ்வுகளும்,

அதன் சித்தாந்தங்களும் 01(பாகப் பிரிவினை)



பாகப் பிரிவினை அல்லது சொத்து பங்கீடு என்பது குடும்பத்திலும் , சமூகத்திலும் மிகப் பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் முக்கியமானதொரு பிரச்சனை ஆகும் .பாகப் பிரிவினை நீதியோடும் , நேர்மையோடும் நடக்காவிட்டால் , தலைமுறை தலைமுறைக்கு அது மோசமான விளைவுகளை ஏற்படுத்தி விடும்.
இந்த நேர்மையான விரிவான பங்கீட்டு முறை குர்ஆனில் தவிர வேறு எந்த வேதங்களிலோ , மனிதர்கள் இயற்றிய சட்டங்களிலோ முழுமையாக கிடையாது.

தவிரவும் குர்ஆன் கூறும் இந்தப் பங்கீட்டு முறை எல்லாம் வல்ல இறைவன் வகுத்த விதியாகும் .இதில் எந்த மனிதர்களின் தலையீடும் இல்லை. எனவே பாகப் பிரிவினைச் சட்டவியல் அனைவரும் அறிந்திருக்க வேண்டிய முக்கியமான கல்வியாகும் .-தப்ஸீர் மாஜிதீ .

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள் : " பாகப் பிரிவினைச் சட்டத்தை நீங்களும் கற்றுப் பிறருக்கும் கற்றுக் கொடுங்கள் .
ஏனெனில், இது கல்வியில் பாதியாகும் இது விரைவில் மறக்கடிக்கப்படும் . என் சமுதாயத்தாரிடமிருந்து பறிக்கப்படும் முதலாவது கல்வியும் இதுதான் " .
194. 'நான் நோயுற்றிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னை நலம் விசாரிக்க வந்தார்கள். நான் மயக்க நிலையில் இருந்தேன்.
அப்போது நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்துவிட்டு அந்தத் தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். உடனே நான் மயக்கத்திலிருந்து (தெளிந்து) உணர்வு பெற்றேன்.
அப்போது நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! என்னுடைய சொத்துக்கு வாரிசு யார்? என்னுடன் உடன் பிறப்புகள் மட்டுமே எனக்கு வாரிசாகும் நிலையில் நான் உள்ளேனே?' என்று நான் கேட்டபோது பாகப்பிரிவினை பற்றிய (திருக்குர்ஆன் 04:11-வது) வசனம் அருளப்பட்டது' என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி

" உங்கள் சந்ததியில் (ஆணும், பெண்ணும் இருந்தால்) ஒரு ஆணுக்கு இரு பெண்களுக்குரியது போன்ற பாகம் உண்டென்று அல்லாஹ் உங்களுக்கு உபதேசிக்கின்றான்.
(உங்கள் சந்ததிகளாகிய) அவர்கள் (ஆணன்றிப்) பெண்களாகவே இருந்து அவர்கள் (இருவராகவும் அல்லது) இருவருக்கு அதிகமாகவும் இருந்தால் (எத்தனை பேர்கள் இருந்தபோதிலும்) அவர் (இறந்தவர்) விட்டுச் சென்ற (சொத்)தில் மூன்றில் இரண்டையே (சமமாக) அடைவார்கள்.
ஒரே பெண்ணாக இருந்தால் அவளுக்கு (இறந்தவர் விட்டுச் சென்ற பொருளில்) பாதி உண்டு.
(உங்களில்) இறந்தவருக்கு சந்ததியுமிருந்து (தாய் தந்தையும் இருந்தால்) தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் (இறந்தவர்) விட்டுச்சென்ற (சொத்)தில் ஆறில் ஒரு பாகமுண்டு.

இறந்தவருக்கு வாரிசு இல்லாமலிருந்து தாய், தந்தைகளே, வாரிசுக்காரர்களானால் தாய்க்கு மூன்றில் ஒரு பாகம்தான்.
(மற்ற இரு பாகமும் தந்தையைச் சாரும். இத்தகைய நிலைமையில் இறந்தவருக்கு பல) சகோதரர்கள் இருந்தால் தாய்க்கு ஆறில் ஒன்றுதான் (மீதமுள்ளது தந்தையைச் சாரும். ஒரு சகோதரன் அல்லது ஒரு சகோதரி மட்டும் இருந்தால் தாய்க்கு மூன்றில் ஒன்று உண்டு.
இவை அனைத்தும் வஸீயத் எனும்) மரண சாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னரே (மீதமுள்ள சொத்தில் பங்கு பிரிக்க வேண்டும்.)
உங்கள் தந்தைகளோ அல்லது உங்கள் சந்ததிகளோ (இவர்களில்) உங்களுக்குப் பலனளிப்பதில் நெருங்கியவர்கள் யாரென்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். (ஆகவே இவை) அல்லாஹ்வினால் (உங்கள் மீது) விதிக்கப்பட்டுள்ளன.
நிச்சயமாக அல்லாஹ் மிக அறிந்தவனும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான். (ஆகையால் அவன் விதித்தபடி பங்கிட்டுக் கொள்ளுங்கள்.)
(அல்குர்ஆன்: 4:11)

மற்றோர் அறிவிப்பில் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியிருப்பதாவது :
"சஅத் பின் அர்ரபீஉ (ரலி) அவர்களின் துணைவியார் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து ,
"யா ரசூல்லாஹ்! இதோ இவ்விருவரும் சஅத் பின் அர்ரபீஇன் புதல்வியர் ஆவர். தங்களுடன் உஹூதுப் போரில் கலந்து கொண்ட இவர்களின் தந்தை வீரமரணம் அடைந்துவிட்டார். இவர்களது செல்வம் முழுவதையும் இவர்களுடைய தந்தையின் சகோதரர் எடுத்துக் கொண்டார் .இவர்களுக்காக எதையும் அவர் விட்டுவைக்கவில்லை . இவர்களுக்குச் செல்வம் இருந்தால்தான் திருமணம் நடக்கும் "
அதற்கு நபி (ஸல்) அவர்கள் , " அல்லாஹ் இதற்கு ஒரு தீர்வை அளிப்பான் " என்று கூறினார்கள். அப்போதுதான் வாரிசுரிமை மேற்கண்ட வசனம் 4:11 அருளப்பெற்றது.

உடனே அவர்களின் தந்தையின் சகோதரை அழைத்து வரும்படி ஆளனுப்பினார்கள்.
அவர் அழைத்து வரப்பட்டதும் , நபி(ஸல்) அவர்கள் அவரிடம் , " சஅதுடைய பெண் மக்கள் இருவருக்கும் மூன்றில் இரு பாகங்களும் , அவர்களின் தாய்க்கு எட்டில் ஒரு பாகமும் கொடுத்து விடுங்கள். மீதி உங்களுக்குரியதாகும்" .
இரு பெண்களின் பாகம் ஓர் ஆணுக்குக் கிடைக்கும் என்ற விதி நியாயமானதுதான்.
இஸ்லாமிய குடும்ப வாழ்க்கை அமைப்பில் பெண்ணை விட ஆணுக்கே பொருளாதாரச் சுமை அதிகம். ஒரு பெண் பிறந்த வீட்டில் இருக்கும் வரை , அவளுடைய பெற்றோரின் பொறுப்பிலும் பாதுகாப்பிலும் இருக்கிறாள். தந்தை அல்லது சகோதரர்களின் பராமரிப்பில் அவள் வளர்கிறாள். எனவே பொருளாதாரத்தைத் தேடும் சுமை அப்போது பெண்ணுக்கு இல்லை.
திருமணமாகிப் புகுந்த வீட்டிற்கு ஒரு பெண் சென்றால், அங்கே கணவனின் முழுப்பொறுப்பிலும் , பராமரிப்பிலும் வந்து விடுகிறாள். அங்கும் அவளுக்குப் பொருளாதாரத்தைத் தேடும் சுமை இருக்காது. இது ஓர் ஆணின் பாதி சுமையாகத்தான் இருக்கும்.

அதே நேரத்தில் ,ஓர் ஆண் தந்தையாக, சகோதரனாக , கணவனாக இருந்து தனது பொறுப்பில் உள்ள அனைவரையும் கவனித்தாக வேண்டும் அனைவரின் பொருளாதாரத் தேவைகளையும் பூர்த்தி செய்தாக வேண்டும் .ஆகவே ஆண்தான் பொருளாதாரத் தேவை அதிகமுள்ளவனாக இருக்கிறான் . அவனுக்கு இரு பாகங்கள் அளிப்பது மிகப் பொருத்தமானதும் அவசியமானதும் கூட .
இறைவன் வகுத்த பங்கு விகிதாச்சாரத்தை கணக்கிட்டால் , அது அந்த சொத்தின் பங்குதாரர் அந்த குடும்பத்திற்கு ஆற்றவேண்டிய கடமையையும் , அவர் எடுத்துக் கொள்ளும் உரிமையையும் பொருளாதார ரீதியில் அது சமமாக இருக்கும் என்பதைக் கருத்தில் கொண்டு வல்ல ரஹ்மான் அந்த பங்கீட்டு முறையை வேதமாக ஆக்கியுள்ளான் .
ர.ரா

நிகழ்வுகளும்,

அதன் சித்தாந்தங்களும் 02(பைஅத்தின் ரகசியம் 01)



நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஹுதைபிய்யா என்ற இடத்தில் தங்கியிருந்துகொண்டு உதுமான் (ரலி) அவர்களை அழைத்து , " நீங்கள் மக்காவாசிகளிடம் போய் , நாங்கள் போரிடும் நோக்கத்துடன் வரவில்லை திருமக்காவிற்கு வந்து உம்ரா செய்து விட்டுத் திரும்பி விடவே வருகின்றோம் " என்ற செய்தியை சொல்லி அனுப்பினார்கள் .

இச்செய்தியைக் கொண்டு சென்ற **ஹஜ்ரத் உதுமான் (ரலி)** அவர்களை மக்காவில் குறைஷியர்கள் கைது செய்து காவலில் வைத்து விட்டார்கள். ஆனால் உதுமான் (ரலி) அவர்கள் கொல்லப்பட்டு விட்டார்களென்று வதந்தியொன்றை எவரோ கிளப்பி விட்டார்.
இதனை செவியேற்ற முஸ்லிம்கள் கொதித்தெழுந்தார்கள் . அச்சமயம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஹுதைபிய்யா என்னும் இடத்தில் 'ஸமுரா ' என்னும் கருவேல மரத்தின் நிழலின் கீழ் அமர்ந்து , தங்களது தோழர்களிடம் , போர் நடைபெற்றாலும் புறமுதுகு காட்டி ஓடுவதில்லை என்றும் , அல்லாஹ்வின் தூதருக்குக் கட்டுப்பட்டு நடப்பதாகவும் வாக்குறுதி வாங்கிக் கொண்டிருந்தார்கள் .
ஒவ்வொரு தோழராக பெருமானாரின் திருக்கரத்தின் மீது தங்கள் கரத்தை வைத்து , ' நாங்கள் எதிரிகளுடன் போரிடுவோம் ; புறமுதுகு காட்டி ஓட மாட்டோம் .இது எங்கள் உறுதி மொழியாகும் " என்று ஆயிரத்து நானூறு பேர்கள் இவ்வாறு வாக்குறுதி அளித்தனர் .
ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் திரு மக்காவில் இருந்ததால் , அன்னார் சார்பில் பெருமானர் (ஸல்) அவர்கள் தங்களது திருக்கரங்களில் ஒன்றை மற்றொன்றின் மீது அடித்துக் கொண்டு , ''இது உதுமானுக்காக செய்து கொள்ளப்பட்ட பைஅத்" என்றார்கள் .
இந்நிகழ்வில் இருந்து நபிகளாருக்குரிய மறைவான ஞானத்தால் உதுமான் (ரலி) அவர்கள் கொல்லப்படவில்லை, அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொண்டார்கள் .

اِنَّ الَّذِيْنَ يُبَايِعُوْنَكَ اِنَّمَا يُبَايِعُوْنَ اللّٰهَ يَدُ اللّٰهِ فَوْقَ اَيْدِيْهِمْ فَمَنْ نَّكَثَ فَاِنَّمَا يَنْكُثُ عَلٰى نَفْسِهٖ وَمَنْ اَوْفٰى بِمَا عٰهَدَ عَلَيْهُ اللّٰهَ فَسَيُؤْتِيْهِ اَجْرًا عَظِيْمًا
(நபியே!) எவர்கள் (தம்முடைய உடல், பொருள், ஆவியை தியாகம் செய்து உங்களுக்கு உதவி புரிவதாக ஹுதைபிய்யாவில்) உங்களுடைய கையைப் பிடித்து வாக்குறுதி செய்கின்றார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்கின்றனர். அவர்கள் கை மீது அல்லாஹ்வுடைய கைதான் இருக்கின்றது. ஆகவே, (அவ்வாக்குறுதியை) எவன் முறித்து விடுகின்றானோ, அவன் தனக்குக் கேடாகவே அதனை முறிக்கின்றான். எவன் அல்லாஹ்விடம் செய்த அந்த வாக்குறுதியை முழுமைப்படுத்தி வைக்கின்றானோ, அவனுக்கு அல்லாஹ் மகத்தான கூலியை அதி சீக்கிரத்தில் (நிச்சயமாக) கொடுப்பான்.
(அல்குர்ஆன் :48:10)

மேற்கண்ட வசனத்தில் " உங்களுடைய கையைப் பிடித்து வாக்குறுதி செய்கின்றார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்கின்றனர். அவர்கள் கை மீது அல்லாஹ்வுடைய கைதான் இருக்கின்றது " என்ற இறை வசனம் கூறிய காரணத்தால் , நபி (ஸல்) அவர்கள் , ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களுக்கும் அந்த பாக்கியம் கிடைக்க வேண்டுமென்பதற்காக தங்கள் ஒரு கை மீது மற்றொரு கையை வைத்து உதுமானுக்காக இந்த பைஅத் என்றார்கள் . பைஅத் முக்கியத்துவம் தெரிகிறதா ?

அல்லாஹ்வின் கை அவர்களுடைய கைகளுக்கு மேல் இருக்கிறது என்பது , "எவர் ரசூலுக்கு கீழ்படித்தாரோ அவர் அல்லாஹ்வுக்கு கீழ்படித்தார் " என்ற வசனத்தை போன்று உள்ளது.
ஏனெனில் , நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தம்முடைய உஜுதை விட்டு முற்றிலும் நிக்கிரஹஜ் செய்து அவனது தாத்திலும் , ஸிஃபத்திலும் , செய்கையிலும் அல்லாஹ்வைக் கொண்டு ஸ்திரமாகி விட்டார்கள் .
ஆகவே புறத்தில் அவர்களிலிருந்து நிகழ்ந்த யாவும் , அகத்தில் அல்லாஹ்தஆலாவிலிருந்தே நிகழ்ந்திருக்கின்றன. இது போன்று அவர்களிடம் பைஅத்துச் செய்தது , அல்லாஹு தஆலாவிடத்தில் பைஅத்துச் செய்வதாகக் கூறப்பட்டிருக்கிறது .
" பஷரிய்யத் (அதாவது மனித உடல்) நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களுக்கு இரவலாக மட்டும்தான் இருக்கிறது. யதார்த்தமாக இல்லை அதாவது புறக்கோலம் சிருஷ்டிப் பொருளாக இருப்பதைத் தவிர வேறில்லை " என்பதையே இறைவன் இவ்வசனத்தில் கூறியுள்ளான் என்று வாஸித்தீ குத்திஸ ஸிர்ருஹு அவர்கள் கூறியுள்ளார்கள் .
(இன்னும் சொல்ல வேண்டியது நிறைய இருக்கிறது எப்படிச் சொல்வது என்றுதான் தெரியவில்லை)
**ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாக இமாம் ஹுமைதி (ரஹ்) அவர்கள் அறிவித்திருக்கிறார்கள் :**
ஹுதைபிய்யா உடன்படிக்கை நடைபெற்ற நாளில் 1400 பேர் இருந்தோம். நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள் : " இன்று இப்புவிவாழ் மக்களிலேயே நீங்கள்தாம் சிறந்தவர்கள் ஆவீர் "
அந்திம காலத்தில் ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள் :
" நான் பார்வை உடையவனாக இருந்தால் அந்த மரத்தின் இடத்தை உங்களுக்குக் காண்பித்துக் கொடுத்திருப்பேன் " புகாரி 4187
நபிகளாரின் கையைத் தொட்டு பைஅத் செய்த அன்றைய நிகழ்வில் இருந்துதான் " பைஅத் " என்கிற ஒரு சித்தாந்தத்தை ஆன்மீக ஞானிகள் வகுத்திருக்கிறார்கள்.
பின் சேர்க்கை :
பைஅத்தைப் பற்றி நிறைய நண்பர்கள் போன் செய்து ' இத்தலைப்பை தொடராக எழுதுங்களேன் ' என்றார்கள்.
இன்னும் சிலர் நண்பர்கள் நபி (ஸல்) அவர்கள் "பைஅத் " என்கிற உறுதிமொழி யுத்ததத்திலிருந்து பின்வாங்கோ அல்லது புறமுதுகு காட்டி ஓடிடவோ கூடாது என்பதற்காகத்தானே தவிர நீங்கள் சொல்லும் ' அந்த ' பைஅத் அல்ல "
இதில் தரீக்கா செய்குமார்களுக்கு இந்த வேலையை ஏன் செய்கிறார்கள் ? இப்போது என்ன யுத்தமா நடக்கிறது ?
பதில் : ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் தபூக்கு யுத்தத்தில் வெற்றி பெற்று ஜெயபேரிகையுடன் ஸஹாபாக்கள் சகிதம் மதீனா நகருக்குள் நுழைந்தபோது , " சிறிய போரிலிருந்து பெரிய போர் அளவில் மீண்டுள்ளோம் " என்று கூறினார்கள் நபிகளார் .
உடனே, ஸஹாபாக்கள்,
" யா ரசூல்லாஹ்! இப்போது பீஸபீல் ( போர்) செய்து திரும்பினோம் .இதை விட பெரிய பீஸபீல் யாது ? என வினவ,
நபி (ஸல்) அவர்கள் , " நபுஸுடன் போராடுவதுதான் பெரிய (பீஸபீல் ) போரான போராட்டம் "
இந்த நபுஸுடன் போராடுவது என்கிற பெரிய போருக்கு தரீக்கா செய்குமார் தேவைப்படுகிறார்கள் .
கரு இல்லாத உயிர் இல்லை
குரு இல்லாத ஞானம் இல்லை .
குரு இல்லாதவனுக்கு சைத்தானே குருவாக இருப்பான் .
ர.ரா
**Rahmath Rajakumaran**
பைஅத்தைப் பற்றி நிறைய நண்பர்கள் போன் செய்து ' இத்தலைப்பை தொடராக எழுதுங்களேன் ' என்றார்கள்.
இன்னும் சிலர் நண்பர்கள் நபி (ஸல்) அவர்கள் "பைஅத் " என்கிற உறுதிமொழி யுத்ததத்திலிருந்து பின்வாங்கோ அல்லது புறமுதுகு காட்டி ஓடிடவோ கூடாது என்பதற்காகத்தானே தவிர நீங்கள் சொல்லும் 'அந்த' பைஅத் அல்ல "
இதில் தரீக்கா செய்குமார்களுக்கு இந்த வேலையை ஏன் செய்கிறார்கள் ? இப்போது என்ன யுத்தமா நடக்கிறது ?
பதில் : ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் தபூக்கு யுத்தத்தில் வெற்றி பெற்று ஜெயபேரிகையுடன் ஸஹாபாக்கள் சகிதம் மதீனா நகருக்குள் நுழைந்தபோது , " சிறிய போரிலிருந்து பெரிய போர் அளவில் மீண்டுள்ளோம் " என்று கூறினார்கள் நபிகளார் .
உடனே, ஸஹாபாக்கள்,

" யா ரசூல்லாஹ் ! இப்போது பீஸபீல் ( போர்) செய்து திரும்பினோம் .இதை விட பெரிய பீஸபீல் யாது ? என வினவ,
நபி (ஸல்) அவர்கள் , " நபுஸுடன் போராடுவதுதான் பெரிய (பீஸபீல் ) போரான போராட்டம் "
இந்த நபுஸுடன் போராடுவது என்கிற பெரிய போருக்கு தரீக்கா செய்குமார் தேவைப்படுகிறார்கள் .
கரு இல்லாத உயிர் இல்லை
குரு இல்லாத ஞானம் இல்லை .
குரு இல்லாதவனுக்கு சைத்தானே குருவாக இருப்பான் .

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 03

(பைஅத்தின் ரகசியம் 02)
ஒரு முறை நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களோடு நாங்கள் இருந்து கொண்டிருந்த பொழுது ,
"உங்களில் அந்நியர் இருக்கிறாரா? "
" இல்லை யா ரசூலல்லாஹ் "
அப்பொழுது தலைவாசலை அடைக்குமாறு கட்டளையிட்டார்கள் .
பின்னர் , " உங்களுடைய கைகளை உயர்த்தி , ' லா இலாஹ இல்லல்லாஹு " என்று கூறங்களெனக் ' கூறினார்கள் .
நாங்கள் சிறிது நேரம் உயர்த்திக் கொண்டிருந்தோம் .பின்னர் தங்களது கையை வைத்தார்கள் .

" அல்ஹம்துலில்லாஹி அல்லாஹும்ம இன்னக்க பஅஸ்தனீ பி ஹாதிஹில் கலிமத்தி வ அமர்த்தனீ பிஹா , வவஅத்தனீ அலைஹல் ஜன்னத்த இன்னக்க லாதுக்லி ஃபு மீஆத் "
எல்லா புகழும் அல்லாஹ்வுக்கே .
நாயனே ! நிச்சயமாக நீ இந்த வார்த்தையைக் கொண்டு என்னை அனுப்பினாய். இன்னும் அதனைக் கொண்டு என்னை ஏவினாய். இன்னும் அதன் பேரில் எனக்கு சுவர்க்கத்தை வாக்களித்தாய் .நிச்சயமாக நீ வாக்குறுதிக்கு மாறு செய்ய மாட்டாய் "
என்று கூறி , " நற்செய்தி பெறுங்கள் ; அல்லாஹ் நிச்சயமாக உங்களை மன்னித்து விட்டான் " என்று கூறினார்கள் . என்று ஷத்தாதுப்னு அவ்ஸ் (ரலி) , உபாதத்துப்னுஸ்ஸாமித் (ரலி) _ நூல் தர்வீஹுல் குலூப்
இந்த நிகழ்வின் அடிப்படையில்தான் ஆன்மீக ஷைய்குமார்கள் பைஅத் தை ரகசியமான முறையில் சொல்லிக் கொடுக்கும் சித்தாந்தத்தை உருவாக்கி இருக்கிறார்கள்.
ர.ரா

**Rahmath Rajakumaran**

கலிமா

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 13 )

கலிமா பற்றியும் எழுதுங்கள் என்று நண்பர் Ramees Deen பின்னூட்டத்தில் கேட்டுக் கொண்டதற்கு ,

**#RameesDeen** இன்ஷா அல்லாஹ் . கலிமா வெறும் ஈரடிகள் கொண்ட மாதிரி சின்ன விஷயம் அன்று . அது மிகப் பெரிய விஷயம் . அதனால் இறைவன் குர்ஆனில் ,

اَلَمْ تَرَ كَيْفَ ضَرَبَ اللّٰهُ مَثَلًا كَلِمَةً طَيِّبَةً كَشَجَرَةٍ طَيِّبَةٍ اَصْلُهَا ثَابِتٌ وَّفَرْعُهَا فِى السَّمَآءِۙ

(நபியே! "தவ்ஹீத் கலிமா" என்னும்) நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு (மிக்க மேலான) உதாரணத்தைக் கூறுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? (அவ்வாக்கியம்) வானளாவிய கிளைகளையும் (பூமியில்) ஆழப்பாய்ந்த வேரையும் உடைய ஒரு நல்ல மரத்திற்கு ஒப்பாக இருக்கிறது.

(அல்குர்ஆன் : 14:24)

ஷரியத் , தரீக்கத் . அகீகத் , மஃஹ்றிபத் ஆகிய 4 நிலைகளில் கலிமா பார்க்கப்படுகிறது .இது அசாதாரணமானது. சிந்திக்க ஏதுமில்லாத வெறும் நம்பிக்கை மட்டும் அடிப்படையாகக் கொண்டது . சிந்தனைகள் இல்லா சிந்தனை .இதை எப்படிச் சொல்வது ? இதனால்தான் இதை புரிய வைக்க முடியாது. புரிய வைக்க முற்பட்டால் தப்பர்த்தம் கொள்ள பல வழிகள் பிறக்கும் .

அதனால்தான் " பைஅத் " தில் மானசீகமாக சொல்லி தரப்பட்டு, 'ஆயுளில் 1 லட்சம் தடவையாவது ஓதிக் கொள் ' என்று அவரின் குருமார்கள் வழிகாட்டி , வழிவிட்டு ஒதுங்கிக் கொள்கிறார்கள் .

வெளிப்படையான இந்த கலிமாவை ஏன் மானசீகமாக ரகசியமாக செய்குமார்கள் போதிக்க வேண்டும் ?

அதனை சற்று மறைத்து ரகசியமாக போதிக்கும் போது அதன் பொருள் விரியும் . விரிந்த பொருளால் எல்லையில்லாத பெருவெளியில் ஆன்மா ஆனந்தம் பெறும்

இறக்கை முளைத்த பிறகு தாய்ப்பறவை இல்லாமல் ஏகாந்த வானத்தை குஞ்சு ஏறிட்டு பார்த்து பறந்து கொள்ள வேண்டியது அதனதன் ஆற்றலைப் பொறுத்து .

பொது தளத்தில் எழுதுவதற்கு சற்று யோசிக்க வேண்டும் . சில கேள்விகளுக்கு பதில் சொன்னாலும் பல கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாது .கூடாது .அது உணர வேண்டிய விஷயங்கள் .

கலிமாவின் கட்டமைப்புகள் வித்தியாசமானவை .

அதன் சொல் அமைப்பை ஒருமைப்பட்டோடு உச்சரித்ததும் உணரும் நிலை பரவசமானது.

ஏகாந்த நிலையில் காணும் காட்சிகளுக்கு மொழியில் வார்த்தைகள் இல்லை . காரணம் கண்ட காட்சி கண்களால் அல்ல ; ஆன்மாவால் . இதனால்தான் இதனை விவரிக்க முடியவில்லை .

பய பக்தியுடையோர்கள் மறைவானவற்றை உண்டென்று ஈமான் கொள்வார்கள் (குர்ஆன்)

இவங்களுக்குத்தான் உணர்த்த முடியும் . அதுவும் எழுதி சொல்ல முடியாது.

உடல் ஆரோக்கியமாக ஒருமித்த மனோ நிலையில் இறைவனின் ஒரு சில திக்ரியாத்துக்களை தியானித்துக் கொண்டிருக்கும் பரவச ஐக்கிய நிலையில் 'இப்போது மரணித்தால்தான் என்ன ' என்று ஆன்மா யோசிக்க வைக்கும் .

அந்த வகையில் " லாயிலாஹ இல்லல்லாஹ் " என்ற இந்த கலிமா விற்கு அந்த உணர்வு ஏற்படும் .

எனவேதான் மரணப்படுக்கையில் இருப்பவர்களுக்கு இதனை ஓதிக் காண்பிக்கப்படுகிறது.

ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 04

(ஹஜ் அழைப்பு)



நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் திருக் கஃபாவை கட்டி முடித்தவுடன் , ஹஜ்ஜுக்கு வரும்படி ஜனங்களை அழைக்குமாறு அல்லாஹ்தஆலா கட்டளையிட்டான் .
அதற்கு நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் " மனித சஞ்சாரமற்ற இந்த பாலைவன பிராந்தியத்தில் என் சப்தம் அவர்களுக்கு எட்டாதே " என்று கூறினார்கள் .
" அறிவிப்பது உமது கடமை. அது கிடைக்குமாறு செய்வது என் பொறுப்பு "
உடனே ஸஃபா மலையின் மீது ஏறி இப்ராஹீம் (அலை ) அவர்கள் தமது இரு விரல்களையும் தம் இரு செவிப்புலன்களிலும் வைத்து , தெற்கு, வடக்கு, மேற்கு , கிழக்கு ஆகிய நான்கு திசைகளிலும் திரும்பி,
" ஜனங்களே! அறிந்து கொள்ளுங்கள் : உங்களது றப்பு ஒரு ஆலயத்தைக் கட்டி , பழமையான அந்த ஆலயத்துக்கு வர வேண்டும் என உங்கள் மீது விதித்திருக்கிறான். உங்களது றப்புக்கு நீங்கள் பதிலளியுங்கள் . அவனது சங்கையான ஆலயத்திற்கு வந்து ஹஜ்ஜு செய்யுங்கள் .
ஏனெனில் , அதனைக் கொண்டு உங்களுக்கு அவன் சுவர்க்கத்தைப் பிரதிபலனாக அளிப்பான். இன்னும் (நரக ) நெருப்பை விட்டு உங்களுக்கு ஈடேற்றமளிப்பான் "

இச்சொல்லை வானுக்கும் . பூமிக்கும் இடையிலுள்ளவர்கள் செவியேற்றனர்.
இச் சப்தத்தைக் கேட்ட யாவரும்
"லப்பைக், அல்லாஹும்ம் லப்பைக் "
(பணிந்தேன். றப்பே பணிந்தேன்) என்று கூறி வராமல் இருக்கவில்லை . வருவார்கள் . அவர்கள் கால்நடையாகவும் உங்களிடம் வருவார்கள்; இளைத்த ஒட்டகங்களின் மீது வெகு தொலை தூரத்திலிருந்தும் வருவார்கள். அதிக தூரத்தில் இருந்து வருவதால் களைப்பின் காரண ஏற்பட்ட இளைத்தல் ஆகும்.

وَاَذِّنْ فِى النَّاسِ بِالْحَجِّ يَاْتُوْكَ رِجَالًا وَّعَلٰى كُلِّ ضَامِرٍ يَّاْتِيْنَ مِنْ كُلِّ فَجٍّ عَمِيْقٍ ۙ
(அவரை நோக்கி) "ஹஜ்ஜுக்கு வருமாறு நீங்கள் மனிதர்களுக்கு அறிக்கையிடுங்கள். (அவர்கள்) கால்நடையாகவும் உங்களிடம் வருவார்கள்; இளைத்த ஒட்டகங்களின் மீது வெகு தொலை தூரத்திலிருந்தும் (உங்களிடம்) வருவார்கள்.
(குர்ஆன்: 22:27)
" ஒரு முறை பதில் கூறியவர் ஒரு முறை ஹஜ்ஜு செய்வார் . இரு முறை அல்லது அதிகமாகப் பதில் கூறியவர் இருமுறை அல்லது அதிகமாக ஹஜ்ஜு செய்வார் "
மனித சஞ்சாரமற்ற ஓர் இடத்தில் இருந்து நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் அழைத்தது எப்படி இதுவரை ஹஜ்ஜு செய்தவர்களுக்கும், இனிமேல் பிறந்து ஹஜ் செய்ய வரப்போகும் மனிதர்களுக்கும் எப்படி கேட்கும் ?

وَ اِذْ اَخَذَ رَبُّكَ مِنْ بَنِىْٓ اٰدَمَ مِنْ ظُهُوْرِهِمْ ذُرِّيَّتَهُمْ وَ اَشْهَدَهُمْ عَلٰٓى اَنْفُسِهِمْ اَلَسْتُ بِرَبِّكُمْ قَالُوْا بَلٰى ۛ شَهِدْنَا ۛ اَنْ تَقُوْلُوْا يَوْمَ الْقِيٰمَةِ اِنَّا كُنَّا عَنْ هٰذَا غٰفِلِيْنَ ۙ

(நபியே!) உங்களது இறைவன் ஆதமுடைய மக்களை அவர்களுடைய (தந்தைகளின்) முதுகுகளிலிருந்து அவர்களுடைய சந்ததிகளாக வெளியாக்கி, அவர்களையே அவர்களுக்கு சாட்சியமாகவும் வைத்து (அவர்களை நோக்கி)
"நான் உங்கள் இறைவனாக இல்லையா?" என்று கேட்டதற்கு,
"ஏன் இல்லை (நீதான் எங்கள் இறைவன்! என்று) நாங்கள் சாட்சியம் கூறுகிறோம்" என்று அவர்கள் கூறியதை (நீங்கள் அவர்களுக்கு) ஞாபகமூட்டுங்கள்.
ஏனென்றால் (இதனை ஒருவரும் எங்களுக்கு ஞாபகமூட்டாததால்) நிச்சயமாக நாங்கள் இதனை (மறந்து) விட்டுப் பராமுகமாகி இருந்தோம்" என்று மறுமை நாளில் சொல்லாமல் இருப்பதற்காகவும், (குர்ஆன் : 7:172)
ஆலம் அர்வாஹ் என்கிற உடல் இல்லாத ரூஹ் என்கிற ஆவியாக மட்டும் இருக்கிற அந்த ஆவிலோகத்தில் இறைவன் நம்மோடு பேசியதையும்,நாம் அவனுடன் பேசியதையும் , நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஹஜ்ஜ் செய்ய நம்மை அழைத்த அழைப்பையும் , அதற்கு பதில் கூற நம்மை வைத்ததையும் வேதத்தில் பதிவு செய்கிறான் இறைவன்.
ஐவேளை தொழுகை என்கிற கடமைக்கு முஅத்தின் ஐவேளையும் பாங்கு சொல்லி அழைக்க , ஹஜ் என்கிற கடமைக்கு நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஒரே ஒரு தடவைதான் அழைத்தார்கள் .அந்த அழைப்பை ஏற்று பிறந்தவர்களும் இனிப் பிறக்கப்போகிறவர்களும் இன்ஷா அல்லாஹ் ஹஜ்ஜ் செய்வார்கள்
நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் கஃபாவைக் கட்டி ஹஜ்ஜிற்கு அழைத்த அந்த ஒரே ஒரு நிகழ்வுக்கு , ஹஜ்ஜ் இறைவனுக்காக செய்ய வேண்டிய கடமை என்கிற ஒரு சித்தாந்தத்தை உருவாக்கி அதை கியாமத் நாள் வரையும் இறைவன் செய்யும்படி வகுத்தான் .
ர.ரா

r**ahmath Rajakumaran**
கல் சுமக்கும் கர்ப்பம்
ஹஜ் 2004 லும் 2018 லும் குடும்பத்தோடு செய்தேன். ஹஜ்ஜின் ஒவ்வொரு செயலிலும் அவன் வைத்திருக்கும் அற்புதம் சொல்லி சொல்லி மாளாது .
மேற்கண்ட பதிவுக் கூட ஹஜ்ஜின் தாக்கம்தான் . உங்களுக்குத் தெரியுமா ? ஹரம் பேசும் . அது என்னோடு பேசியது . அது அலங்கார வார்த்தைகளால் அல்ல; அதன் கம்பீரத்தால் ஆயிரமாயிரம் பேசும் .
ஹரத்தின் மூலையில் பதிக்கப்பட்டுள்ள ஹஜ்ருல் அஸ்வத் என்கிற கல் கூட கஃபா கர்ப்பத்தில் சுமக்கும் சிசுவாகத்தான் எனக்குப் படுகிறது . அஸ்வத் என்ற அக்குழந்தையை முத்தமிட போட்டிப் போடும் கோடான கோடி ஹாஜிகள்.
முத்தமிட அப்படி என்ன விசித்திரம் ?
அந்த குழந்தையை முத்தமிடுபவர்களின் பாவங்களையெல்லாம் மன்னிக்கப்பட்டு முத்தமிட்டவர்கள் கூட அன்று பிறந்த பால்கனாய் குழந்தையாய் மாறி விடும் அற்புதம் அங்கேதான் நடக்கிறது .
ஒரு குழந்தையை முத்தமிட்ட காரணத்தால் வயோதிகர்கள் கூட குழந்தையான அற்புதம் இந்த உலகில் வேறெங்கெனும் உண்டா ?
தேடுகிறது கஃபாவை தேடுகிறது .
கஃபா என்னைத் தேடுகிறது என்பதை நானறிவேன் .

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 05

(தொழுகையில் இரண்டு சஜதாக்கள்)



"ஆலம் அர்வாஹ்" என்னும் உடல் இல்லாத ஆன்மலோகத்தில் எல்லா ஆன்மாக்களையும் ஒன்று கூட்டி இறைவன் அவர்களிடம்
" அலஸ்து பி ரப்பிகும் " _ (நான் உங்களுடைய இறைவனல்லவா? )
உடனே தம் உள்ளம் இறைவனின் பேரொளியால் நிரம்பப் பெற்றிருந்த ஸாபிகூன்களாகிய நபிமார்களும் , வலிமார்களும் ,
" பலா " (ஆம்) ; நிச்சயமாக நாங்கள் நேசித்து வழிபடும் ஒரு தனி முதல்வன் நீயே அல்லாஹ் "
அதன்பின் இறைவனின் வலக்கையிலிருந்து வெளிப்போந்த இறை நம்பிக்கையுள்ள அஸ்ஸாபுல் மைமனாக்கள் ,
" பலா (ஆம்) ; நிச்சயமாக நாங்கள் நேசித்து வழிபடும் ஒரு தனி முதல்வன் நீயே அல்லாஹ் "
அதன்பின் இறைவனின் இடக் கையிலிருந்து வெளிப்போந்த இறை மறுப்பவர்களும் , நயவஞ்சகர்களும்
" பலா (ஆம் ) ; நிச்சயமாக " - என்று வேண்டா வெறுப்பாகக் கூறினார்கள்
மறுமை நாளில் இதனை ஒருவரும் எங்களுக்கு ஞாபகமூட்டாததால் நிச்சயமாக நாங்கள் இதனை மறந்து விட்டுப் பராமுகமாகி இருந்தோம்" என்று மறுமை நாளில் சொல்லாமல் இருப்பதற்காகவும், (குர்ஆன் : 7:172) இதனை அவர்களுக்கு நினைவுறுத்துமாறு இறைவன் நம் பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஆணையிடுகின்றான் .
அப்பொழுது இறைவன் அவர்களை நோக்கி, "நீங்கள் இந்த வாக்குறுதியில் உறுதியாகவும், உண்மையாகவும் இருப்பின் எனக்குப் பணியுங்கள் "
உடனே இறைவனின் வலப்புறம் நின்று கொண்டிருந்தவர்கள் இறைவனுக்கு பணிந்தார்கள் .
இறைவனின் இடதுபுறம் நின்று கொண்டிருந்தவர்கள் இறைவனுக்கு பணியவில்லை.
இதைக் கண்ட இறைவன் அவர்கள் அனைவரையும் மீண்டும் நோக்கி , "எனக்குப் பணியுங்கள் ! "
அப்பொழுது வலப்புறம் நின்று கொண்டிருந்தவர்களில் சிலர் பணிந்தார்கள் , சிலர் பணியவில்லை .
இடப்புறம் நின்று கொண்டிருந்தவர்களில் சிலர் பணிந்தார்கள் , சிலர் பணியவில்லை .
இதனைக் கண்டு வியப்புற்ற ஆதம் (அலை) அவர்கள் இறைவனை நோக்கி , " இறைவா ! இது என்ன புதுமையாக இருக்கிறது ! இதன் உட்கருத்துதான் என்ன ?
அதற்கு இறைவன் , " எவர்கள் முதலாவது கட்டளையிலும் , இரண்டாவது கட்டளையிலும் பணிந்தார்களோ அவர்கள் இறை நம்பிக்கையாளர்களாகவே பிறந்து இறை நம்பிக்கையாளர்களாகவே இறந்து விடுவார்கள் !
எவர்கள் முதலாவது கட்டளையில் பணியாது இரண்டாவது கட்டளையில் மட்டும் பணிந்தார்களோ அவர்கள் இறைமறுப்பாளராக பிறந்து இறை நம்பிக்கையாளர்களாக இறந்து விடுவார்கள் !
எவர்கள் முதலாவது கட்டளையில் மட்டும் பணிந்து , இரண்டாவது கட்டளையில் பணியவில்லையோ அவர்கள் இறை நம்பிக்கையாளர்களாக பிறந்து இறைமறுப்பாளராக இறந்து விடுவார்கள் !

எவர்கள் முதலாவது கட்டளையிலும் இரண்டாவது கட்டளையிலும் பணியவில்லையோ அவர்கள் இறைமறுப்பாளராக பிறந்து இறைமறுப்பாளராக இறந்து விடுவார்கள் !
இதன் காரணமாகத்தான் இறைவணக்கமான தொழுகையில் இரண்டு சஜதாக்களை ஏற்படுத்தினான்.
இரண்டு சஜதாக்களை ஏற்படுத்திய நிகழ்வின் மூலம் அவர்களை இறைநம்பிக்கையாளர்கள் பணிவார்கள் இறைமறுப்பாளர்கள் பணிய மாட்டார்கள் என்கிற சித்தாந்தத்தை இறைவன் ஏற்படுத்தினான்.
இன்னொரு வரலாறு ...
இறை ஆணையை ஏற்று ஆதத்தின் முன் பணிந்து கிடந்த மலக்குமார்கள்
மெதுவாகத் தலையைத் தூக்கி பார்த்தனர்.
அப்பொழுது இப்லீஸ் நின்று கொண்டு ஆதத்தை இழித்துரைத்துக் கொண்டிருப்பதையும் , அவனைப் போன்று தங்களை வழிகேடர்களாக்காது இறைவன் காத்தருள் புரிந்ததற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துவதற்காகவும் மீண்டும் தலையைத் தரையிலே வைத்து ஆதத்தின் முன் பணிந்து கிடந்தார்கள் .
இதன் காரணமாகவே தொழுகையில் ஒரு ரகஅத்தில் இரண்டு சுஜூது செய்வது ஏற்பட்டது என்று வேறொரு கிதாபில் சொல்லப்பட்டிருக்கிறது.
ர.ரா

## நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 06

(உண்ட உணவும் அதன் செயல்பாடும்)



சுவனத்தில் இறைவனால் தடுக்கப்பட்ட கோதுமைக் கனியை உண்டதன் காரணமாகவே ஆதம் (அலை) அவர்களும் , ஹவ்வா அவர்களும் ஒருவரை மற்றொருவர் மருவி காபில் தரித்தான் என்றும் எனினும் உலகிலேயே பிறந்தான் என்றும் அவனின் பெற்றோர்கள் இறைவனுக்கு மாறு செய்ததன் காரணமாகப் பிறந்ததனால் அவனும் இறைவனுக்கு மாறு செய்தான் என்றும் அதே போன்றுதான் அவனின் மக்களும் மாறு செய்தனர் என்றும் ஹதீஸ் ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள் .
விலக்கப்பட்ட கனியின் விஸ்வருபம் காபில் .
உண்ணும் உணவு அது உருவான விதம் தெரிய வேண்டும் . கிடைச்சிப் போச்சு கிடைச்சிப் போச்சு என்று அள்ளி திணித்துக் கொள்ளக் கூடாது.
ஆதம் (அலை ) அவர்களை இத்தோடு சைத்தான் விட்டானா ? அதே மாதிரி உணவு மூலம் மீண்டும் வெற்றிகொண்டான் .

ஒரு நாள் ஆதம் (அலை ) அவர்கள் அலுவவின் நிமித்தம் வெளியே சென்றிருந்தார்கள் . அப்பொழுது இப்லீஸ் தன் சின்னஞ் சிறு மகன் ஹன்னாஸை ஹவ்வா அவர்களிடம் கொண்டு வந்து கொடுத்து,
" நான் முக்கியமான அலுவலின் காரணமாக வெளியே செல்ல வேண்டியுள்ளது. நான் திரும்பி வரும் வரை இவனை உம்மோடு வைத்திரும் ! "
(இந்த ஹன்னாஸ் யார் தெரிகிறதா?

الَّذِىْ يُوَسْوِسُ فِىْ صُدُوْرِ النَّاسِۙ
மனிதர்களுடைய உள்ளங்களில் (வீணான) சந்தேகங்களை உண்டு பண்ணிவிட்டு, மறைந்துகொள்ளும் விஷமிகளின் தீங்கை விட்டும் (பாதுகாக்கக் கோருகின்றேன்.)
(குர்ஆன்: 114:4-5)

இந்த விஷமிதான் ஹன்னாஸ் )
ஆதம் (அலை ) திரும்பிய பொழுது ஹவ்வா அவர்கள் மடியில் ஒரு குழந்தை இருப்பதைக் கண்டு , '' யார் இது ? "
" இப்லீஸின் மகன் தான் முக்கிய அலுவல் பொருட்டு வெளியே செல்வதால் திரும்பி வரும் வரை இவனை வைத்திருக்கச் சொன்னான் "

" ஏன் அதற்கு சம்மதித்தாய்? என்று மனைவி மீது கோபபப்பட்டு , ஹன்னாஸின் மீது பாய்ந்து , அவனை கண்ட துண்டமாக வெட்டி வீசி விட்டார்.
ஆதம் வெளியே சென்றிருந்த சமயம் இப்லீஸ் வந்து தன் மகன் ஹன்னாஸைக் கேட்க , விபரம் சொல்ல,
" ஓ ...ஹன்னாஸ்! ஹன்னாஸ் !! " என்று அழைக்க அங்கு கிடைந்த சதைத் துண்டுகள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து ஹன்னாஸ் உருப்பெற்று உயிரோடு மீண்டு வந்தான் .

அடுத்து ஒரு சமயம் ,ஆதம் (அலை) அவர்கள் வெளியே சென்றிருந்த சமயம் , மீண்டும் ஹன்னாஸோடு வந்த இப்லீஸ் , "நான் முக்கியமான அலுவலின் காரணமாக அவசரமாக வெளியே செல்ல வேண்டியுள்ளது. நான் திரும்பி வரும் வரை உம்மோடு வைத்திரும் ! "
ஹவ்வா மறுக்க , பல்வேறு மாய , ஜால வார்த்தைகள் பேசி இணங்கச் செய்தான்.
வீடு திரும்பிய ஆதம் (அலை) அவர்கள் ஹன்னாஸைக் கண்டத்தும் ," இவன் எப்படி மீண்டும் இங்கு வந்தான் ? "
ஆதம் (அலை) அவர்கள் ஹவ்வா அவர்களை அடித்து விட்டார்கள் .
அதன் பின் ஹன்னாஸைக் கொன்று அவனுடைய உடலை எரித்துச் சாம்பலாக்கி காற்றில் பாதியும் , மீதி கடலில் பாதியும் கரைத்து விட்டார்கள் .
ஆதம் வெளியே சென்றிருந்த சமயம் இப்லீஸ் வந்து தன் மகன் ஹன்னாஸைக் கேட்க , விபரம் சொல்ல,
" ஓ... ஹன்னாஸ்! ஹன்னாஸ் !! " என்று அழைக்க , காற்றிலிருந்தும் , கடலில் இருந்தும் அவனது உடல் பாகங்கள் பறந்து வந்து சேர்ந்து , ஹன்னாஸ் உயிர் பெற்றான் .
அதன்பின் இப்லீஸ் தன் மகன் ஹன்னாஸை செம்மறியாட்டின் உருவில் ஆக்கி ஹவ்வா அவர்களிடம் பொய் சத்தியங்களெல்லாம் செய்து மீண்டும் வந்து , "இந்த ஆட்டையாவது பார்த்துக் கொள்ளுங்கள் " என்றான்.
" ஆடுதானே " என்றெண்ணி ஹவ்வா ஆட்டோடு இருக்க ஆதம் (அலை) அவர்கள் செம்மறியாட்டின் உருவில் ஹன்னாஸ் இருப்பதைக் கண்டு,"இவனை எப்படி ஒழித்தாலும் மீண்டு வருவதால் மீண்டும் அவன் உயிர்ப் பெற்று வராமல் இருக்க அந்த செம்மறியாட்டை அறுத்து சமைத்து தாம் ஒரு பாதியும் , மற்றொரு பாதியை தம் ஹவ்வாவிற்கும் கொடுத்து உண்டார்கள்.
இதனை அறிந்த இப்லீஸ் மிகுந்த மகிழ்ச்சியடைந்து , " உம்மில் ஒரு பகுதியாய் நான் என்னென்றும் நீங்காது இருக்கும் இடம் பெற்றுவிட்டேன் "
தடுக்கப்பட்ட உணவுகளை உண்ட நிகழ்வு அதனால் மோசமான செயல்பாடுகளை வாழ்வில் ஏற்படுத்தும் என்கிற சித்தாந்தம் உருவானது .
இந்தக் கருத்தை மையமாக வைத்து, ஆதத்தின் மக்களின் இரத்த நாளங்களில் இரத்தத்தோடு இரத்தமாக இப்லீஸ் ஓடிக்கொண்டிருக்கிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
நபி (ஸல்) அவர்கள் தங்களுக்கு நிகழ்ந்த ஒரு சம்பவத்தோடு இந்த சொற்றொடரை அழகாக சொல்லுகிறார்கள் .
7171. அலீ இப்னு ஹுசைன்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

" நபி(ஸல்) அவர்களிடம் (அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாஃபில் இருந்தபோது அவர்களின் துணைவியார்) ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி) அவர்கள் வந்தார்கள். அவர்கள் திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்களும் ஸஃபிய்யாவுடன் (சிறிது தூரம் நடந்து) சென்றார்கள்.
அப்போது அன்சாரிகளில் இருவர் அவர்களைக் கடந்து சென்றனர். உடனே நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் அழைத்து, 'இவர் (வேறு யாருமல்லர். என் துணைவி) ஸஃபிய்யாதாம்' என்றார்கள்.
உடனே அவ்விருவரும் அல்லாஹ் தூயவன் (உங்களின் மீதா சந்தேகப்படுவோம்)' என்று கேட்டனர்.
நபி(ஸல்) அவர்கள், 'மனிதனின் இரத்த நாளங்களில் எல்லாம் ஷைத்தான் ஊடுருவியுள்ளான்' என்றார்கள்.
(ஸஹீஹ் புகாரி)
ர.ரா

**Rahmath Rajakumaran**

அன்றி, இப்ராஹீம் (இறைவனை நோக்கி) "என் இறைவனே! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கின்றாய். (அதை) நீ எனக்குக் காண்பி" எனக் கூறியபோது, அவன் (இதை) "நீங்கள் நம்பவில்லையா?" என்று கேட்டான். (அதற்கு) அவர் "நான் நம்பியே இருக்கின்றேன். ஆயினும், (அதனை என் கண்ணால் கண்டு) என்னுடைய உள்ளம் திருப்தியடைவதற்காக (அதனைக் காண்பி)" எனக் கூறினார். (அதற்கவன்) "நான்கு பறவைகளைப் பிடித்து நீங்கள் அவைகளைப் பழக்கி, பின்னர் (அவைகளைத் துண்டு துண்டாக ஆக்கி) அவற்றில் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு மலையின் மீதும் வைத்துவிட்டு (நடுவில் இருந்துகொண்டு) அவைகளை நீங்கள் கூப்பிடுங்கள். அவை உங்களிடம் பறந்துவந்து சேரும் (எனக் கூறி, அவ்வாறு செய்து காண்பித்து) "நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனும், மிக்க நுண்ணறிவுடையவனுமாக இருக்கின்றான் என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்" என்றான்.
(அல்குர்ஆன் : 2:260)
இதைத் தானே இப்லீஸும் செய்தான் .வெட்டுப்பட்டு செத்த தன் மகன் ஹன்னாஸை அழைக்க அவன் உயிரோடு வந்தான்
இதற்குரிய வித்தியாசத்தை விளக்கமாக நீங்கள் சொல்லுங்கள் .

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 07

(தொழுகைக்கு அழைத்தல்)



இஸ்லாத்தின் பிரதான கொள்கை ஒரே இறைவனை வணங்குதல்.
எல்லோரும் ஒன்று கூடி வணங்குவதே மேலானது. அவ்வாறு கூடிச் செய்யும் வணக்கத்துக்கு, மக்களை எல்லாம் அழைப்பதற்கு எவ்வித ஒழுங்கும் ஏற்படுத்தப் படாமல் ஆரம்பத்தில் இருந்து வந்தது. மக்கள் முன்னும் பின்னும் தங்கள் நோக்கம் போல் வந்து, தொழுது வந்தார்கள்.
குறிப்பிட்ட நேரத்தில், மக்களைத் தொழுகைக்கு அழைப்பதற்கு ஒரு திட்டமான அடையாளம் இல்லாததால், தொழுகை நேரத்தில் மக்களை அழைத்து வருவதற்காகச் சிலரை நியமிக்கலாம் எனப் பெருமானார் கருதினார்கள்.
ஆனால், அவ்வாறு செய்வது மிகவும் சிரமமாக இருக்கும் என்பதால், எல்லோரும் கூடி ஆலோசித்தனர்.
ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனை கூறினார்கள்:
“தொழுகை நேரத்தில், மக்கள் பார்க்கும்படியான உயரமான இடத்தில் ஒரு கொடியைக் கட்டச் செய்யலாம்” என்றார் ஒருவர்.

“தொழுகை நேரத்தில், மணி அடிக்கச் செய்யலாம்” என்றார் மற்றொருவர்.
“சங்கு ஊதலாம்” என்றனர் சிலர்.
“அடையாளத்துக்காக, நெருப்பைக் கொளுத்தலாம்” என்று சிலர் கூறினர்.
அவற்றை எல்லாம் பெருமானார் (ஸல்) அவர்கள் அங்கீகரிக்கவில்லை.
இப்போது இருக்கும் இந்த அழைப்பு முறையை சிறந்த நபித்தோழர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு ஜைது இப்னு அப்துரப்பி (ரழி) என்பவர் கனவில் பார்த்து நபி (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கவே அதை நபி (ஸல்) அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள்.
இதே கனவைத்தான் உமர் இப்னு கத்தாஃப் (ரழி) அவர்களும் கண்டார்கள். (ஸுனனுத் திர்மிதி)
ஹிஜ்ராவின் அந்த தொடக்க காலங்களில்தான் இன்று உலகெங்கும் ரீங்காரமிடும் உயர்ந்த, கண்ணியமிக்க அந்த ராகம் 'அதான்' (பாங்கு) மார்க்கமாக்கப்பட்டது.
இந்த ஒலி உலகத்தின் மூலை, முடுக்குகளை உலுக்கியது.
ஒவ்வொரு நாளும் ஐந்து முறை “லாயிலாஹஇல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் - அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அல்லாஹ்வே உயர்ந்தவன், முஹம்மது ரஸூலுல்லாஹ்வின் மார்க்கத்தைத் தவிர வேறு எந்த மார்க்கமும் இவ்வுலகத்தில் உயர்ந்தது இல்லை” என்பதை பறைசாற்றுகிறது.
முதன்முதலாக, இம்முறை, அந்தப் புதிய பள்ளியான மஸ்ஜித் நபவி
பள்ளிவாசலிலேயே தொடங்கப்பட்டது.
பாங்கு சொல்லும் விதத்தை அன்று கனவில் கண்ட அந்த ஒரு நிகழ்வை கியாமத் நாள் வரையிலும் இந்த முறைப்படியே சித்தாந்தமாக்கினான் இறைவன்.
ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 08

(ஒளுவின் மகத்துவம்)



ஒருவர் திர்மிதீ (ரஹ்) அவர்களை அண்மி , " அசுத்தம் வெளிவரக் கூடிய மூக்கு , வாய் , கழிப்பிட உறுப்புகள் ஆகியவற்றை " ஒளு " வில் சுத்தம் செய்வது கட்டாயமாக்கப்படாமல் முகம் , கை, கால் ஆகியவற்றை கழுவி சுத்தம் செய்வது கட்டாயமாக்கப்பட்டிருக்கிறதே இது ஏன் ?
" ஆதம் (அலை) அவர்கள் விலக்கப்பட்ட கனியை உண்பதற்கு ஹவ்வா அவர்கள் அழைத்ததை தம் காதால் கேட்டு முகத்தால் முன்னோக்கி , காலால் நடந்து சென்று அதன் பின் அதனைத் தம் கைகளால் பறித்து ,வாயால் மென்று நாவால் ருசித்து தின்றதால் , வாய் , நாக்கு, முகம், கைகள் , காதுகள் , கால்கள் ஆகியவற்றை கழுவுவது அவர்களின் வழித் தோன்றல்கள் ஒளு செய்யும் பொழுது அவற்றை
வெளிரங்கத்தில் சுத்தம் செய்வது மட்டும் அல்லாமல் , அவர்களின் பாவங்களும் உள்ளரங்கத்தில் கழுவி நீக்கி சுத்தம் செய்யப்படுகிறது என்பதுதான் உண்மை.
இதற்கு ஆதாரமாக ,

அல்லாஹ் கூறுகிறான் :
"விசுவாசங்கொண்டோரே...! நீங்கள் தொழுகைக்காக தயாரானால் (அதற்கு முன்னதாக) உங்கள் முகங்களையும், முழங்கைகள் வரையில் உங்கள் இரு கைகளையும், கழுவிக் கொள்ளுங்கள்,
(நீரைத் தொட்டு) உங்கள் தலைகளையும் தடவி (மஸ்ஹுசெய்து)க் கொள்ளுங்கள், கணுக்கால் வரையில் உங்கள் இரு பாதங்களையும் கழுவிக் கொள்ளுங்கள்.
யார் இவ்வாறு (நபியவர்கள் செய்தது போல்) ஒளு செய்கின்றாரோ அவர் முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும் என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)
ஒரு முஸ்லிமான அல்லது முஃமினான அடியான் ஒளு செய்து தனது முகத்தை கழுவினால் அவர் கண்ணினால் செய்த எல்லா பாவங்களும் முகத்திலிருந்து வெளியாகும் முதல் தண்ணீரோடு அல்லது கடைசி துளியோடு மன்னிக்கப்படும்,
தனது இரு கைகளையும் கழுவினால் இரு கைகளினால் செய்த பாவங்கள் கைகளிலிருந்து வெளியாகும் தண்ணீரோடு அல்லது கடைசி துளியோடு மன்னிக்கப்படும்,
தன்னுடைய இரு கால்களையும் கழுவினால் இரு கால்களினால் செய்த பாவங்கள் தண்ணீரோடு அல்லது கடைசித்துளியோடு மன்னிக்கப்பட்டு தூய்மையான மனிதராகி விடுகின்றார். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)
யார் நல்ல முறையில் ஒளு செய்கின்றாரோ அவருடைய நகத்துக்குக் கீழிலிருந்து கூட அவருடைய உடம்பால் செய்த பாவங்கள் வெளியாகிவிடும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)
ஒளு செய்ததின் காரணமாக என் உம்மத்தினர் நாளை மறுமையில் முகம்,கால் வெண்மை உள்ளவர்களாக எழுப்பப்படுவார்கள் என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், (இதைக்கேட்ட ) அபூஹுரைரா(ரலி)அவர்கள் உங்களில் எவருக்கு முக வெண்மையை நீளமாக்கிக்கொள்ள முடியுமோ அவர் அதை செய்து கொள்ளட்டும் என்பதாக கூறினார்கள். புகாரி , முஸ்லிம்
அன்றைக்கு ஆதம் (அலை) அவர்கள் பாவம் செய்வதற்குரிய உடல் உறுப்புகளை கழுவி சுத்தம் செய்யும் ஒளு என்கிற ஒரு சித்தாந்தத்தை ஏற்படுத்தி அதன் மூலம் சுத்தமாகி , தொழுகை என்கிற இறை சந்திப்புக்கு தயாராகச் சொல்கிறான் இறைவன் .
ர.ரா

## நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 09

### (பாங்கொலியின் மகத்துவம்)

ஆதம் (அலை) அவர்கள் இறைவனிடம் ,
" மலக்குமார்கள் அனை
வரும் தம்முன் பணிந்தற்குரிய காரணம் என்ன ? "
"முஹம்மதிய்யாவின் போராளி உம் நெற்றியில் ஒளிர்வதால் "

" என்னால் அதைக் காண முடியவில்லையே அதைக் கண்டு களிக்கும் பாக்கியத்தை எனக்கும் தந்தருள வேண்டும் "
அதனை சிறுது எடுத்து ஆதம் (அலை) அவர்களின் கைகளின் இரு பெரு விரல்களிலும் இறைவன் வைத்தான் .
உடனே ஆதம் , ' யாகுர்ரத்த ஐனைய

(என் கண்களின் குளிர்ச்சியே! " ) என்று கூறித் தம் இரு பெருவிரல்களையும் தம் இரு கண்களிலும் தடவிக் கொண்டனர்.
இந்த நிகழ்வை பின்பற்றியே பாங்கில் , "அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூல்லாஹ் " என்று கூறப்பட்டதும் , "மர்ஹபன் பி ஹபீபி வ குர்ரத்த அய்னி முஹம்மதிப்னு அப்துல்லாஹ் (ஸல்) " என்று கூறி....தம் இருபெரு விரல் நகங்களையும் முத்தமிட்டு , தம் கண்களில் ஒத்திக் கொண்டு , " அல்லாஹும்ம மத்தி ஃனீ பிஸம்இ வல் பஸரி " என்று கூறுகின்றனர்.
இதுவே அந்த நிகழ்வுக்குரிய சித்தாந்தமாக இன்றும் உலக முஸ்லிம் மக்கள் கடைப்பிடிக்கின்றனர்.
இவ்விதம் செய்பவர்களுக்குப் பார்வை மங்கவோ , கண் குருடாகவோ செய்யாதென்றும் அவர்களை மறுமையில் தாம் 'ஸப் ' களில் ( அணி வரிசைகளில் ) தேடிக் கண்டு பிடித்து தம்முடன் சுவனம் அழைத்துச் செல்வதாகவும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

" கை நகம் கண் தொட்டு
கனிகின்ற ஸலவாத்தில்
கஸ்தூரி மணம் கமழும் - எம்மான்
அவரின் கருணைக்கு அழுகின்றேன் இந்நாள்
அவரின் கருணைக்கு அழுகின்றேன் இந்நாள் "
...தென்றல் காற்றே கொஞ்சம் நில்லு ... கொஞ்சம் நில்லு எங்கள் திருநபி இடம் போய் சொல்லு ஸலாம் சொல்லு "
ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 10

(வாழையடி வாழை)



" ஆதமே! ஹவ்வாவே ! அதோ பாருங்கள் "
அவர்கள் ஏறிட்டுப் பார்த்து , அந்த மரத்தின் அழகில் சொக்கி , தங்களை அறியாமல் , " அல்லாஹ் மிகத் தூய்மையானவன் "
" நான் அந்த மரத்தை உங்களுக்கு அன்பளிப்பாகத் தந்துள்ளேன் எனினும் அதன் பழங்களை நீங்கள் உண்ணக் கூடாது "
" இறைவா! இது என்ன புதுமை ! நீ தான் அந்த மரத்தையே எங்களுக்கு அன்பளிப்பாக வழங்கி விட்டாயே ! அதன் பின் அந்த மரத்தின் பழங்களை நாங்கள் ஏன் உண்ணக் கூடாது ? இது என்ன நிபந்தனை ? "

" ஆதமே நீர் என் வீட்டில் விருத்தினராய் இருக்கிறீர். இந்த மரம் உங்களுடையதாக நான்தான் கொடுத்தேன் . விருந்தினராய் வந்திருக்கும்பொழுது , என் பொருளைத்தான் உண்ண வேண்டுமேயன்றி , உங்களுடைய பொருளை என் வீட்டில் உண்பது பண்பல்ல .ஆதலின் அம்மரத்தின் பழங்களை மட்டும் உண்ணாதீர்கள். உண்ணுவீர்களாயின் நீங்கள் அநியாயக்காரர்களாகி விடுவீர்கள் .
மேலும் நான் உங்களுக்கு இப்லீஸைப் பற்றி எச்சரிக்கை செய்கிறேன். ஆதமே !
அவன் உமக்கும் உம் மனவிக்கும் விரோதியாவான் . அவன் வழி கெடுத்து சுவனப் பூங்காவிலிருந்து உங்களை அப்புறப்படுத்தி விடுவான்.

அந்த மரம் கோதுமைக் கனி மரம் என்றும், மஞ்சனத்திம மரமென்றும் , இலுமிச்சை மரம் என்றும் , அத்தி மரம் என்றும் முந்திரிச் செடியென்றும் , துரியான் மரம் என்றும் (துரியான் பழத்தின் வாடை நரக வாடை போன்றிருந்த போதினும் , அதன் ருசி சுவன ருசி போன்றிருப்பதும் , அது வீரிய உணர்வை அளிக்க வல்லது)

அண்மையில் அது என்ன மரம் ? என்று ஆய்வு நடத்தியதில் அது வாழை மரமாகவே இருக்க வேண்டும் .காரணம் மற்ற மரங்களில் ஆண், பெண் மகரந்தச் சேர்க்கை வண்டுகள் , தேனீக்களால் ஏற்படுத்தப்படும் போது , மகரந்தச் சேர்க்கை தானாகவே ஏற்பட்டு, காய்த்துப் பழுக்கும் தன்மை வாழை மரத்திற்கே உண்டு என்றும் , அதுவே மரங்களின் முதல் படைப்பாக இருக்கலாமென்றும் , அதன் இலையே ஒருவரின் உடலை மறைக்கப் போதிய விசாலமுடையதாக இருக்கிறது என்றும் அதைக் கொண்டே ஆதமும் , ஹவ்வாவும் தம் உடலை மறைத்திருக்கலாமென்றும் அந்த ஆய்வு கூறுகிறது .
**ஆதம் (அலை) சுவனத்தில் இருந்து இறங்கிய இடம் இலங்கை உள்ளடக்கிய இந்தியா .**
வாழைப்பழம் விளைவிப்பதில் உலகிலேயே உச்சத்தில் நிற்பது நமது இந்தியாதான். இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் 170 லட்சம் டன் வாழைப் பழம் உற்பத்தி செய்யப்படுகிறது.

வாழையின் மற்றொரு சிறப்பு என்னவென்றால், அரபிய பேரீத்தம் மரத்தைப் போன்றே வாழை மரத்தின் அனைத்து பாகங்களும் மக்களுக்கு பயன்படுகிறது. பூ, இலை, காய், கனி, தண்டு, நார்ப் பகுதி எனற எதுவும் வீணாகாது.

**நம் அனைவருக்கும் தெரிந்த ஒன்று தான் இந்த வாழை இலை. தமிழர் பண்பாடு மற்றும் உணவு முறையில் பெரும் பங்கு வகிக்கும் . நபி ஆதம் (அலை) பேசிய மொழி தமிழ் .**

தமிழர் கலாச்சாரம் திருமணம் போன்ற எந்த நிகழ்ச்சிக்கும் வாழை மரத்தை முன்வாசலில் வைத்து கட்டப்படுகிறது

நாம் உட்கொள்ளும் உணவை வாழை இலையில் பரிமாறும் போது நமக்கு ஏராளமான ஊட்ட சத்துக்கள் கிடைக்கின்றன. இதற்க்கு காரணம் நாம் சூடாக உணவுகளை பரிமாறும் போது வாழை இலையில் உள்ள ஊட்ட சத்துக்களை உணவு பொருட்கள் உறிஞ்சுகின்றன.

நாம் தினமும் ஒரு வாழைப்பழத்தை சாப்பிடுவதால் நமக்கு கண் பிரச்சனைகள் வராமல் பார்த்து கொள்ளலாம். இதில் உள்ள ஊட்ட சத்துகள் நமக்க தேவையான வைட்டமின்களை தருகிறது. எனவே நமக்கு மாலை கண் வரும் அபாயம் தடுக்க படுகிறது.

குழந்தையை அதிகாலையில் சூரிய ஒளியில் காட்டும் போது வாழை இலையில் எண்ணையை தடவி சூரிய ஒளி படும்படி வைப்பதால் குழந்தைக்கு தேவையான வைட்டமின் டி சத்துக்கள் கிடைக்கின்றன. எனவே இதனை தவறாமல் செய்வதால் குழந்தையின் சரும பிரச்சனைகள் நீங்கும்.

வாழை இழையில் சிறிது தேங்காய் எண்ணெய் ஊற்றி நம்முடைய சருமத்தில் அரிப்பு ஏற்படும் இடத்தில் வைக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் நம் தோல் தொடர்பான பிரச்சனைகள் நீங்கும். இதனை தொடர்ந்து செய்வதால் நமக்கு தோல் அரிப்பு ஏற்படுவது தடுக்க படுகிறது.

தீக்காயம் ஏற்பட்டால் வாழை இலையில் தான் படுக்கவைப்பார்கள். இதற்கு காரணம் வாழை இலையில் உள்ள குளிர்ச்சி சக்தி தான். வாழை இலை வெப்பத்தை வெளிப்படுத்தமல் இருக்கும். எனவே வாழை இலையில் இன்ஜி எண்ணையை ஊற்றி நம்முடைய தீக்காயம் உள்ள இடத்தில் வைத்தால் நமக்கு விரைவில் காயம் சரியாகும்.

வாழை இலையில் அதிக அளவு ஆன்டி-ஆக்சிடென்ட்கள் உள்ளது. எனவே தினமும் வாழை இலையில் உணவு உண்பது நல்லது.

வாழை இலையில் உணவுகளை கட்டி எடுத்து செல்வதால் நம்முடைய உணவு கெட்டு போகாமல் இருக்கும்.இதில் அதிக அளவு ஆன்டி-ஆக்சிடென்கள் இருப்பதால் நம் உடலுக்கு நோய் எதிர்ப்பு சக்தியும் அதிகரிக்கிறது.

ஆதம் (அலை) உண்டது வாழைப் பழமா ?

ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 11

(ஆணுக்கு வழங்கிய தண்டனைகள்)

(தவறிழைத்தற்காக அல்லாஹ் ஆதம் (அலை) அவர்களுக்கும் அவர்களுடைய சந்ததிகளுக்கும் அளித்த 10 தண்டனைகள்)

1) அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாதல்

2) குற்றத்தைக் கொண்டு அவர்களை அவமானப்படுத்தல்

3) அவர்களின் உடல் கறுத்தல்

4) தன் அண்மையை விட்டும் ஆதத்தை அப்புறப்படுத்தல்

5) மனைவி ஹவ்வாவை விட்டும் 100 ஆண்டுகள் பிரித்துவைத்தல்

6) தம்பதியரிடையே வெறுப்பையும் விரோதத்தையும் ஏற்படுத்தல்

7) அவர்களைப் பாவிகளாக்கல்

8) ஆதத்துடைய வழித்தோன்றல்கள் மீது இப்லீஸை ஏவி அவர்களிடையே விரோதத்தையும் குரோதத்தையும் ஏற்படுத்தல்

9) உலகத்தை ஒரு சிறைச்சாலையாக அவர்களுக்கும் அவர்களின் வழித்தோன்றல்களுக்கும் ஆக்கல் மேலும் அவர்களுக்கு உலக ஆசை மிகைக்கவும் அவர்களை உலகில் சூடு குளிர்ச்சி ஆகியவற்றை நுகரவும் செய்தல் .

(சுவனத்தில் சூடோ குளிர்ச்சியோ இருக்காது என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்

10) ஆதத்தின் மீதும் அவர்களின் வழித்தோன்றல்கள் மீதும் உழைப்பையும், வேதனையும் ஏற்படுத்தல்.

ஆதாரம் : கிதாபுல் அராயிஸ்

ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 12

(பெண்ணுக்கு வழங்கிய தண்டனைகள்)



(தவறிழைத்தற்காக ஹவ்வா அவர்களுக்கும் அவர்களின் பெண் மக்களுக்கும் இறைவன் வழங்கிய 15 விதமான தண்டனைகள்.)

1) ஹைல் (மாதவிடாய்) , நிஃபாஸ் (பிள்ளைப்பேற்றுத் தொடக்கு ) ஆகியவற்றை ஏற்படுத்தல்.

2) ஹால் (கருவுற்றிருத்தல்) 9 மாதம் முதல் 11 மாதம் வரை).

3) பிள்ளைப் பேற்றுத் துன்பம். (ஒவ்வொரு தடவையும் இறப்பின் துன்பத்தை நுகருதல்).

4) மார்க்கத்தில் குறைவு. ( மாதவிடாய் மற்றும் பிள்ளைப் பேற்றின் தொடக்கின் போதும் தொழவோ, நோன்பு நோற்கவோ அனுமதி இல்லை )

5) இத்தா.

6) கணவர்களுக்குக் கீழ்படிந்து இருக்கும் நிலை ("பெண்கள் எப்போதும் ஆண்களின் பிடிக்குள் இருக்கும் வண்ணம் எல்லா சட்டதிட்டங்களையும் ஆண்களின் கையிலேயே கொடுப்பேன் " என இறைவன் கூறியதாக ஒரு வரலாறு).

7) தலாக் (மண விடுதலை) செய்யும் அதிகாரத்தை கணவர்களின் கையில் கொடுத்தது.

8) வாரிசு பாத்தியதையில் குறைவு.

9) சாட்சி கூறுவதில் நஷ்டம்

10) அறிவில் குறைவு.

(சாட்சி கூற ஆண்களாயிருப்பின் இருவரும் பெண்களாயிருப்பின் நால்வரும் வேண்டும் காரணம் பெண்கள் அறிவில் குறைவுடையவர்களாக இருப்பார்கள்)

11) ஸலாம் கூறக் கூடிய வாய்ப்புகளைக் குறைத்தது

12) ஜும்ஆ தொழுகையும் ஜமாத் (கூட்டுத்) தொழுகையும் இல்லாமல் ஆக்கியது

13) நபித்துவம் இல்லாமல் ஆக்கியது

(இதுவரை வந்த 1, 24, 000 நபிமார்களில் பெண்களில் ஒருவர் கூட கிடையாது)

14) அரசு அதிகாரம் ஆகியவை பெண்களுக்கு கிடையாது. எந்தப் பெண்ணும் காஜியாக நியமிக்கப் பெறுவதில்லை).

15) பிரயாணம் செய்வதோ, மார்க்கப் போர் செய்வதோ அவர்களுக்கு இல்லாமல் ஆக்கியது

(ஆனால் இத் தண்டனைகளுக்குப் பகரமாக கணவனுக்குப் பணிந்து நடக்கும் இறை நம்பிக்கையுள்ள பெண்ணுக்கு சுவனமும், மகப்பேறின் போது இறந்த பெண்ணுக்கு மார்க்கத்திற்காக உயிர் நீத்தவர்களுக்கான உயர்ந்த நற்கூலியும் வழங்கப்படும்)

ர.ரா

Baseer Ahmed Usmani : ரஹ்மத் ராஜகுமாரன் அவர்கள் தமிழில் பதிவிட்ட 15 தண்டனை குறித்த அரபி மூலம் இதோ

ولقد انفردت حواء بعقوبات خاصة بها

عقوبات اضيفت للعقوبات السابقة ذكرها وهى:

الاولى :الحيض

عندما تناولت حواء من الشجرة دميت الشجرة اى جرج من الشجرو دما

فقال تعالى لحواء(ان لك على ان ادميك انت وبناتك فى كل شهر مرة كما ادميت هذه الشجرة)

ويقول رسولنا الكريم (ان هذا الشىء كتبه الله على بنات ادم)

الثانية:ثقل الحمل

الثالثة :الطلق وال الحمل

الرابعة:نقصان دينها

الخامسة :نقصان عقلها

السادسة:ان ميراثها نصف ما يرث الرجال (للذكر مثل حظ الانثيين)

السابعة :تخصيصهم بالعدة

الثامنة :جعلهن الله تحت ايدى الرجال

(الرجال قوامون على النساء)

التاسعة:ليس لهن من الجهاد

العاشرة :حرمن الجهاد

الحادية عشر :ليس منهن نبى

الثانية عشر :ليس منهن سلطان ولاحاكم

الثالثة عشر :لاتسافر احداهن الامع ذى رحم محرم

الرابعة عشرة:لاتنعقدبهن الجمعة .

الخامسة عشرة :لايسلم عليهن .

**Rahmath Rajakumaran**

பெண் 1

ஸோஷியோ பயாலஜி என்கிற புதிய இயல் பெண்களிடம் காணும் வித்தியாசங்களை பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்துள்ளது

இந்த ஆய்வின் முடிவுகள் அப்படியே குர்ஆன் பெண்களைப் பற்றி சொல்லும் சேதிகளோடு ஒத்துப் போகிறது என்பதுதான் வற்றாத வியப்பு

ஆண் பெண் வேறுபாடே இன விருத்தியை உத்தேசித்துதான் இயற்கை படைத்துள்ளது என்கிறது ஆய்வு

கர்ப்பமாகும் கணத்திலேயே ஆண் பெண் என்ற பாகுபாடு ஏற்பட்டு விடுகிறது

பெண் தான் கருவாக இருக்கும்போதே சுமார் 40 ஆயிரம் முட்டைகள் விதைக்கப்படுகிறாள்

பெண் ஆணை விட 20 சதவிகிதம் எடை குறைவு அவளுடைய எலும்பு அமைப்பு நளினமானது அதனால்தான் சதைப் பிடிப்பும் கவர்ச்சியாக அமைகிறது

இது தன் கணவரின் கண்களுக்கு ஈர்பவை கூட்டி விடுகிறது

அவளின் உடலில் கால்ஷியம் ஸ்திரமாக அமைதில்லை மாதவிலக்கின் போதும் கர்ப்ப காலத்திலும் அவள் நிறைய கால்ஷியத்தை இழக்கிறாள்

அவள் படைக்கப்பட்டது ஆணின் எலும்பிலிருந்துதான் எனவே எலும்பின் தாதுப் பெருள் கால்ஷியம்

அவரிலிருந்து அவருடைய மனைவி படைத்தான்

. . . . . . . . . . . . . குர்ஆன் 4 : 01

இடது புறத்தில் இதயத்திற்கு அண்மையிலுள்ள கோணலான எலும்பை எடுத்து ஹவ்வா அவர்களை இறைவன் படைத்தான் என்று ஈஸா அலை அவர்கள் கூறியதாக பர்னபாஸ் சுவிசேஷத்தில் குறிப்பிட்டு உள்ளது

இதயம் உயிர் அன்பு ஆகியவற்றின் இருப்பிடம் அதன் அருகில் உள்ள எலும்பை எடுத்ததால் மனைவி கணவரின் உயிருக்கு உயிராகவும் அன்பிறகுரியவளாகவும் இருக்கிறாள்

மனிதனின் உயர்ந்த உறுப்பாகிய தலைக்கும் காலுக்கும் மத்தியில் உள்ள இடது விலா எலும்பில் இருந்து பெணணைப் படைத்ததான் எனவே ஆணிலிருந்து பெண் உயர்ந்தவளும் அல்ல தாழ்ந்தவளும் அல்ல என்பதாக சூபிகள் கருகின்றனர்

**rahmath Rajakumaran**

பெண் 3

ஆணின் மூளை 1400 ஸி ஸி சுமார் ஒன்றரை கிலோ ஆனால் பெண்களின் மூளை 1200 ஸிஸி தான் இதனால் பெண்களின் புத்திசாலிதனத்திற்கு குறைவு இல்லை ஆனால் ஞாபகத்தில் குறைவு உண்டு

மூளையில் ஸெரிபெல்லம் மெடுலா ஒப்ளங்கடா இந்த மாதிரி மூளையை ஏரியா ஏரியாவாக பிரித்து இந்த ஏரியாவிலுள்ள வேலைகளைக் குறிப்பிடப்பட்டுள்ளது

ஸெரிபெல்லம் பகுதியில் ஞாபகங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது இந்த இடத்தில் பெண்களின் மூளையின் அளவு குறைவு உள்ளது

உங்கள் ஆண்களில் இரு சாட்சியாக்கிக் கொள்ளுங்கள் இரு ஆண்கள் இல்லாத போது நீங்கள் திருப்தி அடையும ஓர் ஆணும் இரண்டு பெண்களும் சாட்சிகளாக இருக்கட்டும் அவ்விரு பெண்களில் ஒருவர் மறந்து விட்டாலும் மற்றொருவர் ஞாபகப்படுத்துவார்

. . . . . . . . குர்ஆன் 2 : 282

ஒரு பெண் நபிஸல் அவர்களிடம் யா ரசூல்லாஹ் . . அறிவிலும் ஆன்மீகத்திலும் பெண்களிடம் என்ன குறை ? என்று கேட்க

நபிஸல் அவர்கள் இரு பெண்களின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியத்திற்கு பிரிதியாக இருப்பது அவளது அறிவுக் குறைவு ஆகும்

தொழுகை நோன்பு ஆகியவற்றை மாதவிடாய் போன்ற காலங்களில் விடுவது ஆன்மீகத்தின் குறைவு ஆகும்

. . . . . . புகாரி 304 1462 1951 2658

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 13

(தாம்பத்தியத்தின் தத்துவம்)



நபித்தோழர் ஸஅதுபின் ரபீஉ தன் மனைவி ஹபீபா தனக்கு மாறுபாடு செய்தக் காரணத்தினால் கன்னத்தில் அறைந்து விட்டார் .அப்பெண்ணின் தந்தை தன் மகளை அழைத்துக் கொண்டு நபிகளாரிடம் வந்து நியாயம் கேட்க, நபி (ஸல்) அப்பெண்ணிடம் அவள் கணவரை பழிவாங்கும்படி கூறினார்கள் . அத்தருணத்தில் , " இதோ ஜிப்ரயீல் அவர்கள் இறைச் செய்திக் கொண்டு வருகிறார்கள். அது என்னவென்று பார்ப்போம் திரும்பி வாருங்கள் "

اَلرِّجَالُ قَوَّامُوْنَ عَلَى النِّسَآءِ بِمَا فَضَّلَ اللّٰهُ بَعْضَهُمْ عَلٰى بَعْضٍ وَّبِمَآ اَنْفَقُوْا مِنْ اَمْوَالِهِمْ فَالصّٰلِحٰتُ قٰنِتٰتٌ حٰفِظٰتٌ لِّلْغَيْبِ بِمَا حَفِظَ اللّٰهُ وَالّٰتِىْ تَخَافُوْنَ نُشُوْزَهُنَّ فَعِظُوْهُنَّ وَاهْجُرُوْهُنَّ فِى الْمَضَاجِعِ وَاضْرِبُوْهُنَّ فَاِنْ اَطَعْنَكُمْ فَلَا تَبْغُوْا عَلَيْهِنَّ سَبِيْلًا اِنَّ اللّٰهَ كَانَ عَلِيًّا كَبِيْرًا

(ஆண், பெண் இருபாலாரில்) ஆண் பாலாரை(ப்பெண்பாலார் மீது) அல்லாஹ் மேன்மையாக்கி வைத்திருப்பதுடன் (ஆண்பாலார்) தங்கள் பொருள்களை(ப் பெண் பாலாருக்கு)ச் செலவு செய்வதனாலும் ஆண்கள்தான் பெண்களை நிர்வகிக்கக் கூடியவர்களாக இருக்கின்றனர். ஆகவே, நல்லொழுக்கமுள்ள பெண்கள் (அல்லாஹ்வுக்கும் தங்கள் கணவனுக்கும்) பணிந்தே நடப்பார்கள். (தங்கள் கணவன்) மறைவாக உள்ள சமயத்தில் அல்லாஹ்வின் பாதுகாப்பைக் கொண்டு (தங்களையும் கணவனின் மற்ற

பொருள்களையும்) பேணிக்காத்துக் கொள்வார்கள். எவளும் கணவனுக்கு மாறு செய்வாளென்று நீங்கள் அஞ்சினால் அவளுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள். (அவள் திருந்தாவிடில்) படுக்கையில் இருந்து அவளை அப்புறப்படுத்தி வையுங்கள். (அதிலும் அவள் சீர்திருந்தாவிடில்) அவளை (இலேசாக) அடியுங்கள். அதனால் அவள் உங்களுக்கு கட்டுப்பட்டு விட்டால் அவள் மீது (வேறு குற்றங்களைச் சுமத்த) யாதொரு வழியையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக மேன்மையானவனும் மிகப் பெரியவனுமாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 4:34)

நபி (ஸல்) அவர்கள் , " நாம் ஒன்றை நாடினோம் ; அல்லாஹ் வேறு ஒன்றை நாடி விட்டான் . அல்லாஹ் எதனை
நாடுகின்றானோ அதுவே மிகச் சிறந்தது" என்று கூறி பழி வாங்குவதிலிருந்து அவர்களை தடுத்து விட்டார்கள் .
அறிவிலும் , மார்க்கத்திலும் , ஆட்சி செய்வதிலும் , போர் புரிவதிலும் ஆண்கள் சிறந்து விளங்குகின்றனர் .
ஆண்களில்தான் நபிமார்களும், அவர்களுடைய பிரதிநிதிகளும் தோன்றி இருக்கின்றனர்.
ஓர் ஆண் நான்கு பெண்களை மணந்து கொள்ளலாம் ; ஆனால் ஒரு பெண்ணோ ஒரே ஆணைத்தான் மணந்து கொள்ள வேண்டும் .

வாரிசுரிமை பாகத்திலும் ஆண்களுக்கு பெண்களை விட இரட்டிப்பு மடங்கு பங்கு கிடைக்கிறது .
பெற்ற குழந்தைகளின் பெயர்த் தொடர்பும் ஆண்களைக் கொண்டுதான் ஏற்படுகிறது .
பெண்களை ஆண்கள்தான் நிர்வாகிக்க வேண்டும் . ஆண்களின் பொருட்களிலிருந்தே பெண்களுக்குச் செலவு செய்ய வேண்டியதும் ஏற்படுகிறது .
பெண்கள் எவ்வளவு சம்பாதித்தாலும் , கொஞ்ச காலம் சம்பாதிக்க முடிகிறது . இதற்கு மேல் வீட்டு நிர்வாகம், மக்களைப் பெற்றெடுப்பது முதலானவை ஏற்பட்டு பெண்கள் சம்பாதிக்க முடியாமல் போய் விடுகிறது.
ஆக பெண்ணின் நன்மைக்காக ஓர் ஆண் சிரமம் எடுப்பது போல் ஒரு பெண்ணால் ஆணுக்காக சிரமம் எடுக்க முடியாது .

இதனாலேயே நபி (ஸல்) அவர்கள் , " "மனிதர் , மனிதருக்கு ஸுஜூது (நெற்றியை பூமியில் வைத்து வணக்கம் ) செய்யுமாறு நான் கட்டளை இடுவதென்றால், ஒரு மனைவியை அவருடைய கணவனுக்கு ஸுஜூது செய்யுமாறு ஏவியிருப்பேன். (ஆனால் அல்லாஹ்வைத் தவிர யாருக்கும் ஸுஜூது செய்யக் கூடாது ) - திர்மிதி
பெண்கள் தங்களுடைய கணவர்களுக்கு முற்றிலும் வழிபட்டு, பணிந்து நடந்து கொள்ள வேண்டும் .அக் கணவன் அவளை விட்டு வெளியிற் சென்றிருந்தால் , அவனது உடமைகளையும், அவனது மக்களையும் , தனது கற்பையும் காப்பாற்றி பாதுகாக்க வேண்டும்.

நபி (ஸல் ) அவர்களிடம் , " பெண்களிர் சிறப்புடையோர் யாவர் ?" என்று கேட்கப்பட்டது .
"கணவன் அவளை நோக்கினால் மகிழ்ச்சியூட்டுவாள். அவனது ஏவலுக்கு வழிப்படுவாள் .அவன் வெறுப்படையும் எந்தச் செய்கையையும் , தன்னிலும் சரி , அவனது பொருளிலும் சரி செய்ய மாட்டாள் .அத்தகைய பெண்ணே சிறந்தவள். - நூல் : நஸஈ
" பெண்களுக்கு நன்மையே உபதேசியுங்கள். ஏனெனில் பெண் கோணல் எலும்பினால் படைக்கப்பட்டிருக்கின்றாள். அவ்வெலும்பினை ஒரேயடியாக நேராக்க நீ முனைந்தால் , அதனை முறித்து விடுவாய். அப்படியே விட்டுக் கொண்டே வந்தால், அது அதிகக்
கோணலாக ஆகிவிடும். ஆகவே இதமாக பெண்களுக்கு உபதேசியுங்கள்.

புகாரீ முஸ்லிம்
ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 14

(மார்க்க யுத்தமா? மார்க்க கடமையா ?)



நபி சுலைமான் (அலை) அவர்கள் மார்க்க யுத்தத்திற்காக வலுவாய்ந்த எடுப்பான 1000 குதிரைகளை தேர்ந்தெடுக்க ஒன்றன் பின் ஒன்றாகப் பார்வையிடுவதில் தங்களின் முழுக்க கவனத்தையும் செலுத்தியதில்,பொழுது சாயும் வேளையில் அது வரை 900 குதிரைகளை பார்த்து முடிவதற்குள் அவர்கள் தொழுது வந்த தொழுகையை மறந்து விட்டார்கள் .

இறைவனைத் தொழுவதான கடமையின் முன் இவ்வுலகச் செல்வம் அற்பமானது என்பதை உணர்ந்த அவர்கள் இறைவனை மறப்பதற்குக் காரணமாக இருந்த அந்த 900 குதிரைகளையும் இறைவனுக்குப் பலியிட்டு அவற்றின் இறைச்சியை ஏழைகளுக்குப் பகிர்ந்தளித்து விட்டார்கள் .
(மார்க்க யுத்தத்திற்காகச் சித்தப்படுத்தப்பட்டிருந்த) உயர்ந்த குதிரைகள் (ஒரு நாளன்று) மாலை நேரத்தில், அவர் முன் கொண்டு வரப்பட்டபொழுது (அதனைப் பார்த்துக் கொண்டிருந்ததனால், சூரியன் அஸ்தமித்து அவருடைய அஸர் தொழுகை தவறி விட்டது. அதற்கவர்:
"நிச்சயமாக நான் (சூரியன்) திரைக்குள் மறைந்துவிடும் வரையில், அல்லாஹ்வின் திருப்பெயரை நினைவுகூர்வதை விட்டுப் பொருளை அதிகமாக அன்பு கொண்டு விட்டேன் (என்று மனம் வருந்தி,)
அவைகளை என்னிடம் கொண்டு வாருங்கள்" எனக் கூறி, அவைகளின் பின்னங்கால்களையும், கழுத்துக்களையும் (கையினால் நீவி) தடவிக் கொடுத்தார் "(குர்ஆன் : 38:31-33)
இவ்வுலகச் செல்வத்தில் மோகமுற்று இறைவனின் கட்டளையை மறந்தொழிவதை விட்டும் நபிமார்கள் தூயவர்கள் " என்று இப்னு அரபி (ரஹ்) தம்முடைய **" புத்தூஹாத்துல் மக்கியா"**
என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள் .

திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் சிலர்
அக் குதிரைகளின் பின்னங்காலையும், கழுத்தையும் வெட்டி அங்கவீனப்படுத்தி விட்டதாகக் கூறுகின்றனர்.
ஆனால் அந்தத் 900 குதிரைகளையும் எவ்வாறு சுலைமான் (அலை ) ஒரு கொடுங்கோலன் போன்று அக் குதிரைகளின் பின்னங்காலையும், கழுத்தையும் வெட்டி அங்கவீனப்படுத்தி இருப்பார் என்று அலி (ரலி) அவர்கள் வினவுகின்றார்கள். எனவே பின்னங்காலையும், கழுத்தையும் தடவிக் கொடுத்து மார்க்கப் போர் செய்பவர்களுக்கு அக் குதிரைகளை அன்பளிப்பு செய்து விட்டார்கள் .

நபித் தோழர் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :
நபி (ஸல் ) அவர்கள் அகழ்ப் போர் தினத்தன்று அஸ்ர் தொழ முடியாமல் போரில் , மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்
பின்னர் நாங்கள் மதீனாவிலுள்ள 'புத்ஹான் ' எனும் பள்ளத்தாக்கில் தங்கினோம் . அங்கே நபி (ஸல்) அவர்கள் தொழுக்கைக்காக அங்கத் தூய்மை (உளூ) செய்தார்கள்.நாங்களும் உளூ செய்தோம் .

பின்னர் நபி (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையை அன்றைய தினம் சூரியன் மறைந்தபின் தொழுதார்கள். அதன் பின்னர் மஃக்ரிப் தொழுதார்கள் .
புகாரி : 596, 598, முஸ்லிம் 1111,
போர் போன்ற இடையூறு ஏற்படும் போது தொழுகையைத் தாமதப்படுத்துவது சுலைமான் (அலை) அவர்களின் மார்க்கத்தில் சித்தாந்தமாக அனுமதிக்கப் பட்டிருக்கலாம் . நபி (ஸல்) அவர்களும் தொழுகை தாமதப்படுத்திருக்கிறார்கள்
ர.ரா

நிகழ்வுகளும், அதன் சித்தாந்தங்களும் 15

(இறக்கை முளைத்த குதிரைகள்)



**பெகாசசு(Pegasus)** என்னும் பறக்கும் குதிரை பண்டைய கிரேக்கம் இலக்கியத்தில் அது ஒரு கற்பனை உயிரினம் ஆகும். கிரேக்கத் தொன்மவியலில் இடம் பெற்றுள்ள இந்தக் குதிரை தூய வெள்ளை நிறத்தில், சிறகு உள்ள தெய்வீக குதிரை
கிரேக்கத் தொன்மத்தில் இடம்பெற்ற ஒரு வீரனான **"பெல்லரோபான் "** என்பவன் முரட்டுத்தனமிக்க இந்த பறக்கும் குதிரையை அடக்கி, அதை வாகனமாக பயன்படுத்திக்கொண்டான்.
இந்த இருவரும் சேர்ந்து பல சாகசங்களைச் செய்தனர். பலரைக் கொன்ற ஆபத்தான **"சிமேரா "** என்ற கொடிய விலங்கை பெல்லரோபான் பறக்கும் குதிரையில் சவாரி செய்து கொன்றான்.
இந்நிலையில் யாருமே செல்லக் கூடாது எனத் தடைவிதிக்கப்பட்டிருந்த ஒலிம்பஸ் மலைச் சிகரத்தில் பெல்லரோபான் பறக்கும் குதிரையுடன் சவாரி செய்தான்.
கிரேக்கப் புராணக் கதைகள் மூலமாகப் பிரபலமானது "பெகாசஸ்". தூய வெள்ளை நிறம் கொண்டு பறவை போல சிறகுகள் உள்ள குதிரை பெகாசஸ்.
இரண்டாம் உலகப் போரில் பிரிட்டன் நாட்டினர் பயன்படுத்திய பாரசூட்டுகளில் பெல்லரோபான், பறக்கும் குதிரை மீது அமர்ந்திருக்கும் படம் சின்னமாகப் பயன்படுத்தப்பட்டது.
நபி சுலைமான் (அலை) அவர்கள் வானவூர்தியில் ஏற்றிச் செல்லுமாறு அவர்களின் மனைவி பல்கீஸ் வேண்ட , ஏற்றிக் கொண்டார்கள் .

வானவூர்தி ஏழு கடலுக்கும் அப்பாலுள்ள ஒரு தீவில் போய் இறங்கியது . அதைக் கண்டதும் அங்கு மேய்ந்து கொண்டிருந்த பறக்கும் குதிரைகள் பறந்து விட்டன. அவற்றை பிடித்துத்துத் தருமாறு பல்கீஸ் வேண்ட, சுலைமான் (அலை) அவர்கள் ஜின்கணங்களுக்குக் கட்டளையிட்டனர்.

அதற்கு ஜின்கணங்கள் , '' அது எங்களால் இயலாது . இன்ன கடலில் "மைத்தூன் " என்ற ஒரு பெரிய ஜின் உள்ளது. அது தங்களிடம் வந்து , ஈமான் கொள்ளாது தங்களைப் புறக்கணித்து வருகிறது. நாங்கள் அதனிடம் சென்று , 'சுலைமான் இறந்து விட்டார் என்று பொய்யுரைப்பின் அது வெளியே வரும்.
அப்போது நாங்கள் அதனைப் பிடித்து வருகிறோம் . அதைக் கொண்டு அந்தப் பறக்கும் குதிரைகளைப் பிடிக்க வைப்போம் " என்று கூறின. அதற்கு சுலைமான் (அலை) ஒத்துக் கொண்டார்கள்.
ஜின்கணங்களின் தந்திர வலையில் ஸமந்தூன் சிக்கி , நபியவர்களின் சினத்தின் முன் நிறுத்தப்பட , "அல்லாஹ்வுடைய நபியே ! எனக்கு உயிர்ப் பிச்சை அளியுங்கள் ! நான் தங்களுக்கு அடிபணிந்து நடக்கிறேன் "
" நீ உன் தீவிலுள்ள பறக்கும் குதிரைகளைப் பிடித்து வா "

" யுக்தியால் அன்றி அவைகளைப் பிடிக்க முடியாதுஅவை ஒரு கால்வாயில் தண்ணீர் குடிக்கின்றன அக்கால்வாயின் தண்ணீரை இறைத்து விட்டு அதில் மதுவை நிரப்பி வைத்துவிட வேண்டும் அதனை அப் பறக்கும் குதிரைகள் அருந்தியதும் மயக்கமுற்று விடும் . பின் எளிதாக பிடித்து விடலாம் "
எவ்வாறாவது அவற்றைப் பிடித்து வருமாறு சுலைமான் ( அலை ) கூற ,
அப்பறக்கும் குதிரைகளை அந்த உபாயத்தால் பிடித்து வந்தது ஸமந்தூன் என்கிற ஜின் .

اِذْ عُرِضَ عَلَيْهِ بِالْعَشِىِّ الصّٰفِنٰتُ الْجِيَادُ ۙ
(யுத்தத்திற்காகச் சித்தப்படுத்தப்பட்டிருந்த) உயர்ந்த குதிரைகள் (ஒரு நாளன்று) மாலை நேரத்தில், அவர் முன் கொண்டு வரப்பட்டபொழுது (அதனைப் பார்த்துக் கொண்டிருந்ததனால், சூரியன் அஸ்தமித்து அவருடைய அஸர் தொழுகை தவறி விட்டது.
(குர்ஆன்: 38:31)

அப்போது அந்தி சாயும் நேரம் . அந்த பளீர் வெள்ளை நிறத்திலான குதிரைகளின் பறக்கும் அழகினை சுலைமான் (அலை) ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்ததால் , அவர்களுடைய மாலை நேர தொழுகை தவறிவிட்டது.
இதற்காக சுலைமான் (அலை ) அவர்கள் இறைவனிடம் மன்னிப்புக் கோரினார்கள் . பின்னர் அந்தக் குதிரைகளின் சிறகுகளை அறுத்து விட்டார்கள் . அதிலிருந்து குதிரைகளுக்கு இறக்கை முளைப்பதில்லை
(நபிமார்கள் வரலாறு – அப்துற் றஹீம்)

ஆயிஷா (ரலி ) அவர்கள் :
"அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் 'தபூக் ' அல்லது ' கைபர் '
போரிலிருந்து திரும்பி வந்தார்கள் .
அப்போது என்னுடைய வீட்டின் முன் புறத்திலுள்ள சுவரின் மாடத்தில் ஒரு திரைச்சீலை தொங்கிக் கொண்டிருந்தது
அந்த வேளையில் காற்று வீசியது. எனவே , அந்தக் காற்று திரைச்சீலையின் ஓரப்பகுதியை விலக்க, அங்கிருந்த என்னுடைய விளையாட்டு பொம்மைகள் வெளியே தெரிந்தன.
அப்போது நபி (ஸல்) அவர்கள் ,
"ஆயிஷா! இவை என்ன ? "
" என்னுடைய பொம்மைகள் "
அப்போது அவற்றுக்கிடையே துண்டுத் துணிகளாலான இரு இறக்கைகள் கொண்ட குதிரையைப் பார்த்த நபியவர்கள் ,
" இதோ இவற்றின் நடுவில் நான் காண்கின்ற இது என்ன? "
" குதிரை "
" அதன் மேல் என்ன இருக்கிறது?"
" இரண்டு இறக்கைகள் "
" என்ன, இறக்கைகள் முளைத்த பறக்கும் குதிரையா? "
" ஆமாம் இறக்கைகள் முளைத்த பறக்கும் குதிரை. இறைத்தூதர் சுலைமான் (அலை) அவர்களிடம் இறக்கைகள் முளைத்த குதிரைகள் இருந்தன என்பதை நீங்கள் கேள்விபட்டதில்லையா ? "
அப்போது அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள்
.
(நூல் : அபூதாவூத்)
முஸ்லிம் 259. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன். பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன். பிறகு நான் அங்கிருந்து புறப்பட்டு (மிஹ்ராஜ் சென்றேன் )
"இப்போ நீங்க சொல்லுங்க ... இறக்கை முளைத்த பறக்கும் குதிரை உண்டா?"
ர.ரா

**Rahmath Rajakumaran**

**R.M. Nowsaath** கிரேக்க இலக்கியத்திற்கு தூண்டுதலாக நபி சுலைமான் (அலை) அவர்களின் பறக்கும் குதிரையோ ... புராக் என்ற பறக்கும் குதிரையோ இருந்திருக்கலாமே ... அன்னை ஆயிஷா (ரலி) வைத்திருந்த பறக்கும் குதிரை விளையாட்டு பொம்மைக்கு எது தூண்டுதலாக இருந்திருக்கும் ?...

**Rahmath Rajakumaran**

பறக்கும் குதிரை ஏதோ ஒரு தீவில் இருப்பது உண்மைதானா ? நண்பர் கேட்டார் .
அந்த தீவில் இருக்கலாம் . அந்த தீவைத் தவிர்த்து உலகின் மற்ற பாகங்களில் பறக்கும் குதிரை வசிப்பதற்கு ஏற்ற சூழல் இல்லாமல் இருக்கலாம்.
மிகச் சிறிய பாண்டா கரடி சீனாவில் மட்டுமே வாழ்கிறது !
கங்காரு ஆஸ்திரேலியாவில் மட்டுமே வாழ்கிறது !
இது மாதிரி பறக்கும் குதிரை அந்த குறிப்பிட்ட தீவில் மட்டுமே வாழலாம்.

அடுத்த தொடர் இன்ஷா அல்லாஹ்
" தொன்மங்களின் வரலாறு " 02-10-2019

தொன்மங்களின் வரலாறு 01



காலத்தில் வேகமாகக் கரைந்து போய்விட்ட இந்த பூமிப்பந்தின் பழைய டைரி வெகு சுவாரஸ்யமானது !
இன்றிலிருந்து 650 கோடி வருடங்களுக்கு முன்பு பூமி இல்லை ! பூமிக்குப் பதிலாக நிறையத் தூசுகளும், ஏதேதோ வாயுக்களும் மட்டுமே இந்த இடத்தில் மிதந்து கொண்டிருந்தன.
இவை இறுக... இறுக..மெள்ள நமது பூமி ஒரு பந்தின் வடிவத்தை எடுத்தது ! எடுத்துச்சா.... அதே சமயம் , இந்த இறுக்கத்தால் கற்பனை செய்ய முடியாத அளவுக்கு உஷ்ணம் உண்டானது .
இதில் பூமியின் மையப்பகுதி நெருப்புக் குழம்பாக கொதித்துக் கொண்டிருந்தது !
பூமிக்குள் உள்ளே சிக்கிய தண்ணீர் பூமிக்கு வெளியே நீராவியாகவும் , கொதிநீராகவும் வந்து மற்ற மற்ற வாயுக்களோடு கூட்டணி அமைத்து உனக்கு இத்தனை இத்தனை ஷீட் , எனக்கு இத்தனை இத்தனை ஷீட் என்று பேரம் பேசாமல் பூமியின் வளிமண்டலம்
**(Atmosphere )** உருவானது !
அதன் பிறகு மழை வந்தது . கடல் வந்தது . கண்டங்கள் வந்தது . ஒற்றை வார்த்தையில் சொன்னால் உலகம் உருவானது !

قُلْ اَٮِٕنَّكُمْ لَتَكْفُرُوْنَ بِالَّذِىْ خَلَقَ الْاَرْضَ فِىْ يَوْمَيْنِ وَتَجْعَلُوْنَ لَهٗۤ اَنْدَادًا‌ ؕ ذٰ لِكَ رَبُّ الْعٰلَمِيْنَ‌

(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "(இவ்வளவு பெரிய) பூமியை இரண்டே நாள்களில் படைத்தவனை நீங்கள் நிராகரித்துவிட்டு (மற்றவைகளை) அவனுக்கு இணையாக்குகின்றீர்களா? அவன்தான் உலகத்தார் அனைவரையும் படைத்த இறைவன்." (குர்ஆன்:41:9)

இதென்ன இரண்டே நாளில் பூமிப் படைக்கப்பட்டதா ?
நம்ம கணக்குதான் 24 மணி நேரம் ஒரு நாள் , அவன் போடுகிற கணக்கு வேற ,

تَعْرُجُ الْمَلٰۤٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ
அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.
(அல்குர்ஆன்: 70:4)

இப்போ பூமி உருவாகி, அது கால வெளியில் உருண்டோடிக் கொண்டிருக்கிறது.
உருண்டோடிக் கொண்டு இருக்கட்டும் . அதை உருட்டுவதுதான் யார் ?

தொன்மங்களின் வரலாறு 02


பிரபஞ்சத்தின் வயது சுமார் 1400 கோடி ஆண்டுவரை இருக்கலாம். ஆனால் உலகம் உட்பட சூரியக் குடும்பத்தின் வயது ஏறத்தாழ 450 கோடி ஆண்டு ஆகும்.
அப்போது பூமியில் இங்கே ஒரு புல்பூண்டு கூடக் கிடையாது. ஏன் பிராணவாயு கூட இல்லை !
அப்போது உலகில் மீத்தேன் , அம்மானியா , கரியமிலவாயு போன்றவை மாத்திரமே இருந்தன.
பல இலட்சம் ஆண்டுகளாகப் பெய்த இடி மழை , வெடித்து சிதறிய எரிமலைகள் , வீசித்தள்ளிய புயல் ... இதெல்லாம் பிராணவாயுவை பிறக்கச் செய்தன.
அதன் பிறகு கடலில் பாசி உருவானது !
இதை அடுத்து நிலத்தில் புழுபூச்சிகள் தோன்றின. இவை உருவாவதற்கு கொஞ்சம் காலம் முன்பே அவற்றுக்கு உணவு .... அதாவது தாவரங்கள் முளைத்தன !

وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ مِنْ فَوْقِهَا وَبٰرَكَ فِيْهَا وَقَدَّرَ فِيْهَاۤ اَقْوَاتَهَا فِىْۤ اَرْبَعَةِ اَيَّامٍ سَوَآءً لِّلسَّآٮِٕلِيْنَ
அவனே பூமியின் மீது பெரும் மலைகளை அமைத்து, அதில் எல்லா விதமான பாக்கியங்களையும் புரிந்தான். அன்றி, அதில் (வசிப்பவர்களுக்கு) வேண்டிய உணவையும் நான்கு நாள்களில் நிர்ணயம் செய்தான். (அதுவும் நல்லவர்கள் தீயவர்கள் என்ற வித்தியாசமின்றி) கேட்பவர்கள் அனைவருக்கும் சமமாகக் கிடைக்குமாறும் செய்தான்.
(குர்ஆன் 41:10)

பின்னர் கடலில் மீன் தோன்றியது. அதன் பின் தவளை, ஓணான் , முதலை, டினோஸர் , குரங்கு என்று ஒவ்வொன்றாக உருவெடுத்து கடைசியில் ஓரளவு மனிதனின் சாயல் கொண்ட **(Ramapithecus )** என்ற உயிரினங்கள் தோன்றின. இவை ஒன்றும் மனிதனின் மூதாதையர் அல்ல . நவீன விஞ்ஞானம் மனிதன் குரங்கிலிருந்து வந்தான் என்பதை மறுக்கிறது. எதையும் முன் மாதிரி இன்றி படைக்க சக்தியுள்ள இறைவன் , இருந்தும் இருந்தும் தன் கலீபாவாகிய மனிதனைப் படைக்கவா குரங்கின் வார்ப்பு அவனுக்கு தேவைப்பட்டிருக்கும் ? நிச்சயமாக இல்லை .

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اِذَا قَضٰٓى اَمْرًا فَاِنَّمَا يَقُوْلُ لَهٗ كُنْ فَيَكُوْنُ
(அன்றி) அவனே வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றியே படைத்தவன். அவன் எதைப் படைக்கக் கருதினாலும் அதனை "ஆகுக!" எனக் கூறிய மாத்திரத்தில் உடனே அது ஆகிவிடுகிறது.
(குர்ஆன்: 2:117)

ஒளி பெற்ற ஒரு வகை நெருப்பை ஒத்த ஒளியில் வானவர்களைப் படைத்தான் .
அதன்பின் நெருப்பும் காற்றும் கலந்த புகை சூழ்ந்த நெருப்பினால் ஒருவகைப் படைப்பைப் படைத்தான் . அவைகளுக்கு ஜின் என பெயரிட்டான் .
அப்படைப்புகளின் ஆதித் தந்தையாக "**தார்னூஷ்** "என்னும் இயற் பெயர் கொண்ட ஜானைப் படைத்து அவரின் வழித் தோன்றல்களாக எண்ணற்றவர்களை மண்ணிலே வாழச் செய்தான் .
இந்த ஜின்கள் ஏறக்குறைய மிகப்பெரிய உடலமைப்பைக் கொண்ட பாதி மனித ரூபமும் , பாதி குரங்கு ரூபமும் கொண்ட உயிரினமாக ஜின்களின் உடலமைப்புகள் இருந்திருக்கலாம் . அவைகளும் இம்மண்ணில்தான் வாழ்ந்தன .

இந்த ஜின் வர்க்கத்திற்கு ஒரு சட்டத்தையும் வழங்கி அதன்படி இறைவன் செயலாற்றி வருமாறும் பணித்தான்.
நாளடைவில் அவர்களின் வழித்தோன்றல்கள் நெறிதவறி இறைவனுக்கு மாறு செய்யத் தொடங்கி விட்டனர். எனவே அவர்களை அழித்தொழித்தான் இறைவன்.
காலச் சுழன்றது . அதன் பின் ஜின் இனத்தில் "ஹலியயிஷ் " என்னும் பெயருடைய தலைவராக்கி ஜின் இனத்தை படைத்தான். அவர்கள் மாறு செய்ய அழித்தான்.
பின் "மலிகா " என்பவரை தலைவராக்கி
ஜின் இனத்தை படைத்தான். அவர்கள் மாறு செய்ய அழித்தான்.
"ஹமூஸ் " என்பவரை தலைவராக்கி
ஜின் இனத்தை படைத்தான். அவர்கள் மாறு செய்ய அவர்களை எதிர்த்து சண்டையிட்டு அழிப்பதற்காக வானவர்களை பூமிக்கு இறைவன் அனுப்பி அழித்தான் .
வாலில்லாத மனிதக் குரங்கு வடிவில் உயிரினம் நான்கு கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றின.
14 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனின் தாடை எலும்புகள் இந்தியாவில் சிவாலிக் குன்றுகளிலும் வடமேற்கு கென்யா நாட்டிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

சுமார் 4 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனை ஒத்த உயிரினத்தின் பாஸில்கள் ஜாவா தீவிலுள்ள சோலோ நதிக்கரையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.
கண்டெடுக்கப்பட்ட அத்தனை பாஸில்களும் மனிதனைப் படைப்பதற்கு முன் இவ்வுலகில் வாழ்ந்த ஜின் இனங்களின் எச்சங்கள் என்று குர்ஆன் குறிப்பிடுவதை விஞ்ஞான உலகிற்கு யார் சொல்வது ?

وَلَـقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ مِنْ صَلْصَالٍ مِّنْ حَمَاٍ مَّسْنُوْنٍ
(காய்ந்தால் "கன் கன்" என்று) சப்தம் கொடுக்கக்கூடிய பிசுபிசுப்பான களிமண்ணால் நிச்சயமாக நாமே (உங்கள் மூலப் பிதாவாகிய முதல்) மனிதனை படைத்தோம்.
(அல்குர்ஆன்: 15:26)

وَالْجَـآنَّ خَلَقْنٰهُ مِنْ قَبْلُ مِنْ نَّارِ السَّمُوْمِ
அதற்கு முன்னதாக ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம். (அல்குர்ஆன்: 15:27)
ஜின்கள் படைக்கப்பட்ட காலத்தில் பூமியும் நெருப்பாகத்தான் இருந்தது . ஆகையால் நெருப்பால் படைக்கப்பட்ட ஜின்களுக்கு பூமி ஒன்றும் பாரமாக இருக்கவில்லை .
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 03

(நாம் எத்தனையாவது ஆதத்தின் மக்கள்?)



நம் ஆதிபிதா (அலை) அவர்களின் காலம் இன்றைக்கு 8000 ஆண்டுகளுக்கு முன்தான் என்று கணிக்கப்படுகிறது.

எனினும் , இவர்களுக்கு முன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆதம்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளனர் என்று **முஹம்மது இப்னு பாக்கிர் (ரஹ்)** கூறுகின்றார் .

இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தமது ***'புத்தூஹாத்தில் மக்கிய்யா '*** என்னும் நூலில், "நம் ஆதத்திற்கு முன் ஒரு லட்சம் ஆதமும் , அவருடைய கூட்டத்தினரும் தோன்றி மறைந்துள்ளரென்றும் , தாம் ஓரிரவு கஃபாவை இடம் சுற்றி வரும்பொழுது , நீண்டு உயர்ந்த சில மனிதர்களைக் கண்டு அவர்கள் எவவெரன விசாரித்த பொழுது ,

"ஆதத்திற்கு நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்வுலகில் வாழ்த்தவர்களின் ஆன்மாக்கள் " என்றனர்

விஞ்ஞானம் கூறுவது , மனிதகுலம் ஆப்பிரிக்காவில் 2,00,000

ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது. அதில் சிற்றினங்களாக நியாண்டர்தாவர்கள் , ஹோமோ எரக்டஸ் , ஹோமோ சேப்பியன் என்ற 3 இனங்கள் தோன்றின.

இம்மூன்று இனங்களின் மனித ஃபாஸில்களாக கிடக்கின்றன. இவர்கள் 60,000 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி, எங்கெல்லாம் இந்த முதல் குடிமக்கள் உலகில் பரவினர் என்பதை கண்டுபிடிக்க ஜீனோகிராஃபிக் (**Genographic ) புரோஜெக்ட்** துவக்கப்பட்டது. நேஷனல் ஜீனோகிராஃபிக் (மாத இதழ் ) , **IBM** மற்றும் **Waitt** ஆகிய 3 நிறுவனங்கள் 40 மில்லியன் டாலர் செலவில் இந்த ஆய்வு தொடக்கப்பட்டது .

இதற்காக உலகின் எல்லா மூலை முடுக்குகளிலிருந்தும் ஒரு லட்சம் பேர்களிடமிருந்து இரத்த சேம்பிள் எடுக்கப்பட்டது. **DNA** யிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு கம்ப்யூட்டர் மூலம் அது ' மேப்' செய்யப்பட்டது

ஜிப்ரால்டர் என்ற இடத்திலுள்ள

குகையிலிருந்து அண்மையில் கிடைத்த நியாண்டர்தால் மனிதர்களின் அடிப்படையில் , இந்த மனித இனம் 2,30,000 வருடங்களுக்கு முன்பு தோன்றி , அன்றிலிருந்து 40 ,000 வருடங்களுக்கு முன்புதான் மறைந்தது என்பதற்கு ஆதாரமாக ஜிப்ரால்டர் குகைகளில் கிடைத்த எலும்புக் கரிகளின் ரேடியோ கார்பன் தேதியிடும் முறையில் மிகத்துல்லியமாக கணிக்கப்பட்டுள்ளது .

கலிபோர்னியா பல்கலைக்கழக "**சேன் பெர்னாடினோ (San Bernadino)** " என்பவர் நியாண்டர்தால் மனிதர்களின் கைவிரல் எலும்புகளைக் கொண்டு செய்த மாதிரியை கம்பூட்டரில் சிமுலேட் செய்ததில் அவர்கள் , நம்மைப் போலவே கை விரல்களைப் பயன்படுத்தி நுணுக்கமான வேலைகளைச் செய்யக் கூடியவர்கள் .

**'ஜொஹனஸ் பர்க்'** என்னுமிடத்திலுள்ள **ஸ்டெக்ஃபான்டீன்** என்ற குகையில் கிடைத்த எலும்புகள், அதில் எதுவும் சிம்பன்ஸி குரங்கு போலவோ, கொரில்லா குரங்கு போலவோ இல்லை. சிம்பன்ஸி, கொரில்லா குரங்குகள் தமது கைமுட்டிகளைத் தரையில் ஊன்றியபடி நாலுகால் நடையில் செல்வது வழக்கம். ஆனால் மனித மூதாதையர் ஃபாஸில்களில் அதுவும் 2,30,000 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த மனித ஃபாஸில்களில் கூட அப்படி குரங்குபோல நடந்ததற்கான எவ்வித தடயமும் தெரியவில்லை.

எனவே மனித மூதாதையர்கள் ஆதிகாலத்தில் இருந்தே மனிதர்களாகவேதான் இருந்திருக்கிறார்கள் என்பது இந்த ஆய்வில் தெரிய வந்துள்ளது.
இதனால் சார்லஸ் டார்வின் கொள்கையான குரங்கின் பரிமணாமத்தில் மனிதன் என்ற நியதி பொய்ப்பித்து விடுகிறது .
ஏன் நியாண்டர்தால் மனித இனம் அழிந்தது ?
உலகில் ஒரே வாழ் இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட உயிரினங்கள் வாழ்வது கடினம். அவற்றில் எது சிறந்ததோ அது நிலைக்கும் .மற்றவை மறைந்து விடும் என்பதே இயற்கையின் நியதி

اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ اَيُّهَا النَّاسُ وَيَاْتِ بِاٰخَرِيْنَ وَكَانَ اللّٰهُ عَلٰى ذٰلِكَ قَدِيْرًا
மனிதர்களே! அவன் விரும்பினால் உங்களை அழித்து (உங்களுக்குப் பதிலாக) வேறு மனிதர்களைக் கொண்டு வந்து விடுவான். அல்லாஹ் இவ்வாறு செய்ய ஆற்றலுடையவனாகவே இருக்கின்றான்.
(குர்ஆன்: 4:133)
ர.ரா

**Rahmath Rajakumaran**
மனிதர்களுக்கு முன் இந்த பூமியில் வாழ்ந்தது ஜின்கணங்கள் அல்லவா ? அவற்றின் அமைப்பு மனித அமைப்போடும் , குரங்குகள் அமைப்போடும் இருந்திருக்கலாம் . கிடைத்த எலும்புகளும் , தாடை எலும்புகளும் இதைத்தான் தெரிவுப்படுத்தின .
**Rahmath Rajakumaran**
ஒரு மனித நாகரிகத்தை 3 விஷயங்கள் வெளிப்படுத்தும் .அவை
1) இலக்கியங்கள் :
இவைகள் கற்பனை வளத்தை மிகப்படுத்தி பேசும் . உண்மைக்கு சற்று தூரமாகவே இருக்கும் .
2) கல்வெட்டுகள் :
நிறைய பொய் பேசலாம் . உண்மைக்கு வெகுதூரம் இருக்கலாம் .
3) அகழ்வாய்வு :
இது மற்ற இரண்டையும் விட சிறந்தது இது அறிவியலின் ஆய்வு. இது உண்மைக்கு மிக நெருக்கமாக இருக்கும்
ஆகையால் அகழ்வாய்வு மிகவும் தேவை

தொன்மங்களின் வரலாறு 04

(துல்கர்னைன் (அலை) 01)



மக்கா இறைமறுப்பாளர்கள் மதீனாவிலிருந்த வேதக்காரர்களிடம் ஆளனுப்பி, முஹம்மது (ஸல்) அவர்கள் இறைத்தூதரா என்பதைப் பரிசோதிப்பதற்காகச் சில கேள்விகளை கேட்டனர் .

وَيَسْـَٔــلُوْنَكَ عَنْ ذِى الْقَرْنَيْنِ قُلْ سَاَ تْلُوْا عَلَيْكُمْ مِّنْهُ ذِكْرًا

(நபியே!) துல்கர்னைனைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கின்றனர். "அவருடைய சரித்திரத்தில் சிறிது நான் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கிறேன்" என்று நீங்கள் கூறுங்கள். (குர்ஆன்: 18:83)

துல்கர்னைன் இஸ்கந்தர் யார் ? எக்காலத்தைச் சேர்ந்தவர் என்பது தொடர்பாக பல்வேறு தகவல்கள் காணப்படுகின்றன .
மேலும் இவர் நபியா ? மன்னரா ? என்ற கேள்விகள் உள்ளன.
அவர் கிருஸ்து பிறக்குமுன் வாழ்ந்தவராகவே இருக்க வேண்டும் என்பதில் மாற்றுக் கருத்து கிடையாது.
ஏனெனில் அவரைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் வினா தொடுக்குமாறு மக்காவாசிகளுக்குச் சொல்லிக் கொடுத்தே அன்றைய யூதர்கள்தான் .

யூதர்கள் தம் ஏடுகளில் படித்ததை , அல்லது வாழையடி வாழையாகக் கேள்வி பட்டதை வைத்தே இவ்வினாவைத் தொடுத்தனர் .எனவே கி.பியாக இருக்க வாய்ப்பில்லை . இதன்படி 2 கருத்துகள் உள்ளன.

1 ) நபி இப்ராஹீம் (அலை) அவர் காலத்து மன்னர்களில் ஒருவரே துல்கர்னைன் இஸ்கந்தர் . இப்ராஹீம் (அலை ) அவர்கள் கிமு 2160 ல் பிறந்து கி.மு 1985 ல் இறந்தவர்கள் .அதாவது இன்றிலிருந்து 4000 வருடத்திற்கு இப்ராஹீம் (அலை) முற்பட்டவர்கள் . மன்னர் துல்கர்னைன் இப்ராஹீம் (அலை ) அவர்களுடன் புனித கஃபாவை தவாஃப் செய்துள்ளார் . அவர் ஒரு ஓர் இறைநம்பிக்கையாளர் .

2) கிரேக்கரான மாவீரர் **(Alexandre)** இவர் கிமு 356 ஆம் ஆண்டு மாசிடோனியா பெல்லாவில் பிறந்தவர். கிமு 323 -ல் பாபிலோனில் (பாபில்) இறந்தார் . மாசிடோனியாவை ஆட்சி புரிந்த (கி.மு 336 - கி.மு 323 ) அலெக்ஸாண்டர் இரண்டாம் ஃபிலிப் உடைய புதல்வர் . தத்துவ அறிஞரான அரிஸ்டாட்டிலின் மாணவர் . இவர் எகிப்தில் அலெக்ஸாண்ட்ரியா (இஸ்கந்தரியா) நகரை உருவாக்கியவர்.
எனவே இப்ராஹீம் (அலை) அவர்கள் காலத்து துல்கர்னைன் என்பதே சரியாகும். அவர்தான் இறைநம்பிக்கைக் கொண்ட நல்ல மனிதராக வாழ்ந்தவர் .
கிரேக்க மாவீரர் அலெக்ஸாண்டர் இணை கற்பிப்பவர். பல நகரங்களை அழித்தவர். தாம் இறக்கும்போது இறுதிச் சடங்கில் தெய்வீக மரியாதைகள் தரப்பட வேண்டும் என்று கோரிக்கை வைத்தவர் பாபிலோனில் விருந்து கேளிக்கை , மதுப்பழக்கம் போன்றவற்றால் உடல் நலிவுற்று தமது 33 வது வயதில் இறந்து போனவர்.
இவர் எப்படி இங்கு அல்லாஹ் குறிப்பிடும் நற்பண்புகள் உள்ள அரசராக இருந்திருக்க முடியும் ?
ஆதார நூற்கள் : தஃப்ஸீர் இப்னு கஸீர் , அல்பிதாயா வந்நிஹாயா , அல்முன்ஜித், பிரிட்டானிகா தகவல் களஞ்சியம் .

தொன்மங்களின் வரலாறு 05

(யஃஜூஜ் – மஃஜூஜ் கூட்டம்) யார் இந்த துல்கர்னைன்...



துல்கர்னைன் என்றால் இரண்டு கொம்புக்காரர் அல்லது இரட்டை மணிமுடியார் என்பதாகும்.

ரோம், பாரசீகத்தை ஆட்சி செய்ததினால் இரட்டை மணிமுடியார் என்றும் அல்லது அவரது தலை கவசத்தில் இரண்டு கொம்புகள் போன்ற அமைப்பு இருந்ததால் இரண்டு கொம்புக்காரர் என்றும் அழைக்கப்படுவதாகவும், இவர் கிழக்கிலிருந்து மேற்கு வரை சென்றதால் சூரியனின் இரு கிரணங்களையும் அடைந்தவர் என்ற கருத்தில் துல்கர்னைன் (இரண்டு கிரணங்களை உடையவர் ) என்றும் அழைக்கப்படுகிறது .

இவர் ஓர் நல்ல இறையடியாராகவும், மேலும் மக்களை அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவராகவும் காணப்பட்டார். இவரின் இயற்பெயர் இஸ்கந்தர் என்றும், இவர் இப்றாஹீம் நபியின் காலத்தில் மன்னராக திகழ்ந்ததாகவும் வரலாறுகள் கூறுகின்றன. (பார்க்க தப்ஸீர் இப்னு கஸீர்)

அல்லாஹ் இந்த உலகத்தில் பல கோடி படைப்புகளைப் படைத்து, அந்த படைப்புகளை காலத்திற்கும், நேரத்திற்கும், ஏற்ப அல்லாஹ் வெளியாக்கிக் கொண்டிருக்கிறான். அல்லாஹ்வால் படைக்கப்பட்டு மறைக்கப்பட்ட படைப்புகளில் முக்கியமானதொரு படைப்பு தான் இந்த யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டமாகும்.
துல்கர்னும்,யஃஜூஜ், மஃஜூஜும்...

துல்கர்ன் ஆட்சி காலத்தில் மலையடிவாரத்தில் இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் காணப்பட்டதாகவும், அவர்கள் பேசும் பாஷை புரியவில்லை என்றும் அவர்கள் மக்கள் நடமாட்டத்திற்கு இடையூறு செய்வதாகவும் அன்றைய மக்கள் துல்கர்னைன் மன்னனிடம் எடுத்து கூறி, மேலும் நாங்கள் எங்கள் பொருளாதாரத்தை தருகிறோம் இந்த (யஃஜூஜ், மஃஜூஜ்) கூட்டத்தை ஏதாவது செய்யுங்கள் என்று மக்கள் வேண்டிய போது, அல்லாஹ் எனக்கு நிறைய பொருளாதாரத்தை தந்துள்ளான். என்றாலும் உங்கள் உடல் ரீதியான ஒத்துழைப்பை தாருங்கள் என்று மக்களிடம் மன்னன் கூறி விட்டு,
இரும்பு பாலங்களை தூக்கி வாருங்கள் என்று துல்கர்னைன் கட்டளையிட்டார்.

அதன் பின் யஃஜூஜ், மஃஜூஜ் இருந்த மலையடிவாரத்திற்கு மக்களோடு
துல்கர்னைன் சென்றார்.
தூக்கி கொண்டு போயிருந்த இரும்பு பாலங்களை இரண்டு மலைகளுக்கு இடையில் அடுக்க சொல்லி, அதன் பிறகு அந்த இரும்பின் மீது நெருப்பை மூட்டச் சொன்னார். அதன் பிறகு உருக்கிய செம்பை அந்த எறிக்கப்பட்ட இரும்பின் மீது துல்கர்னைன் ஊற்றினார். இனிமேல் இவர்கள் உங்களுக்கு எந்த இடையூறும் தரமுடியாது, அல்லாஹ் என்றைக்கு நாடுகிறானோ அன்றைக்கு இந்த மலையை உடைத்து விட்டு வெளியேறுவார்கள் என்று துல்கர்னைன் சொன்ன இந்த சம்பவத்தை பின் வரும் குர்ஆன் வசனங்களின் (18:94-99) மூலம் காணலாம்.
எனவே எப்படி தஜ்ஜால் படைக்கப்பட்டு மறைக்கப்பட்டுள்ளானோ, அது போல யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டமும் படைக்கப்பட்டு இரண்டு மலைகளுக்கு இடையில் அடைக்கப்பட்டுள்ளனர். யாராலும் கண்டு பிடிக்க முடியாத அளவிற்கு அந்த குறிப்பிட்ட நாள் வரைக்கும் மறைக்கப்பட்டுள்ளனர். அந்த நாள் வந்து விட்டால் வெள்ளம் பாய்ந்து
வருவதைப் போல பல திசையின் பக்கம் விரைந்து வருவார்கள் என்பதை பின் வரும் குர்ஆன் வசனம் உறுதிப்படுத்திகிறது.

“இறுதியில் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படுவார்கள். உடனே அவர்கள் (வெள்ளம் போல் ஒவ்வொரு மேட்டிலிருந்தும்) விரைந்து வருவார்கள். (அல்குர்ஆன் 21:96)
...பின்னர், அல்லாஹ் “யஃஜூஜ்” “மஃஜூஜ்” கூட்டத்தாரை அனுப்புவான். அவர்கள் ஒவ்வோர் உயரமான பகுதியிலிருந்தும் வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) “தபரிய்யா” ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்துவிடுவார்கள். அவர்களின் இறுதி அணியினர் அதைக் கடந்து செல்லும்போது. “முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந்திருக்கும்”என்று பேசிக் கொள்வார்கள். பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (தூர் மலையில்) முற்றுகையிடப்படுவார்கள். அப்போது (ஏற்படும் பட்டினியால்) அவர்களில் ஒருவருக்குக் காளை மாட்டின் தலை கிடைப்பது, இன்று உங்களில் ஒருவருக்கு நூறு பொற்காசுகள் கிடைப்பதைவிடச் சிறந்ததாக இருக்கும்.

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (அல்லாஹ்விடம் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான். அதனால் அவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில்
பலியாவார்கள்.

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். அப்போது பூமியின் எந்தவொரு சாண் அளவு இடமும், யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் (சடலங்களிலிருந்து வெளிவரும்) கொழுப்பாலும் துர்நாற்றத்தாலும் நிரம்பி இருப்பதையே காண்பார்கள்.

உடனே இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் அல்லாஹ்விடம் (அவற்றை அகற்றக்கோரிப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துகளைப் போன்று (பெரியதாக உள்ள) பறவைகளை அனுப்புவான். அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.

பின்னர் அல்லாஹ் மழை பொழியச் செய்வான். அந்த மழை எந்த மண் வீட்டிலும், எந்த முடிவீட்டிலும் படாமல் இருக்காது. இறுதியில், பூமியைக் கழுவி, கண்ணாடி போன்று (சுத்தமாக) ஆக்கிவிடும். பின்னர் பூமிக்கு, "நீ உன் கனி வர்க்கங்களை முளைக்கச் செய்வாயாக; உன்னிடமுள்ள வளங்களை மறுபடியும் தருவாயாக" என்று உத்தரவு பிறப்பிக்கப்படும்
அன்றைய நாளில் (எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில்), ஒரு குழுவினர் சேர்ந்து ஒரேயொரு மாதுளம் பழத்தை உண்பர். அதன் தொலி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும். அவர்களுக்குப் பால் வளமும் கிட்டும். எந்த அளவுக்கென்றால், பால் தரும் ஓர் ஒட்டகம் ஒரு பெரும் கூட்டத்துக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்தாருக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்திற்கே போதுமான தாயிருக்கும். இந்நிலையில் அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான். அது அவர்களின் அக்குள்களுக்குக் கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக்கொள்ளும். இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் (மட்டுமே பூமியில்) எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப் போன்று (வெட்ட வெளியில் வைத்துப் பகிரங்கமாக) உடலுறவு கொள்வார்கள். அவர்கள்மீதுதான் உலக முடிவு நாள் ஏற்படும். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. (முஸ்லிம் 5629)
மேலும் "யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் பைத்துல் முகத்தஸ் பகுதியில் உள்ள மலையில் ஏறுவார்கள். பூமியில் உள்ளவர்களை நாம் கொன்று விட்டோம். வாருங்கள் வானத்தில் உள்ளவர்களைக் கொல்வோம் என்று அவர்கள் கூறுவார்கள். தங்கள் அம்புகளை வானத்தை நோக்கி எய்வார்கள். அவர்களின் அம்புகளை ரத்தத்தில் தோய்த்து அல்லாஹ் திருப்பி அனுப்புவான் என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.
(முஸ்லிம்)
இந்தக் கூட்டத்தினர் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறிய சில விபரங்களையும் நாம் அறிந்து கொள்வோம்.
யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் வரும் வரை நீங்கள் போராடிக் கொண்டே இருப்பீர்கள். அவர்களின் முகங்கள் கேடயம் போல் அகன்றதாகவும், (வட்டமாகவும்) கண்கள் சிறியதாகவும் முடிகள் செம்பட்டையாகவும் அமைந்திருப்பார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: காலித் பின் அப்துல்லாஹ், (நூல்: அஹ்மத்)

இந்தக் கூட்டத்தினர் தனியான இனத்தவர் அன்று. ஆதம் (அலை) அவர்களின் சந்ததியில் தோன்றியவர்களே என்பதைப் பின்வரும் நபிமொழி அறிவிக்கின்றது.
யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளாவர். அவர்கள் விடுவிக்கப்பட்டால் மக்களின் வாழ்க்கையைப் பாழாக்குவார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் அல்லது அதற்கும் அதிகமான சந்ததிகளை உருவாக்காமல் மரணிப் பதில்லை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ரு (ரலி), (நூல்: தப்ரானி)

ஒவ்வொருவரும் ஆயிரம் சந்ததிகளைப் பெற்றெடுப்பார்கள் என்பதிலிருந்து அவர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காமல் இருக்கும் என்று கருத முடிகின்றது. யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் எண்ணிக்கை மிகமிக அதிகமாக இருக்கும் என்பதை நபிகள் நாயகத்தின் பொன்மொழியிலிருந்து அறிய முடிகின்றது.
...உங்களில் ஒருவர் என்றால் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் ஆயிரம் என்ற கணக்கில் நரகவாசிகளின் எண்ணிக்கை இருக்கும் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.
(புகாரி 3348)
யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் அழிக்கப்பட்ட பின் முஸ்லிம்கள் ஹஜ்ஜும் உம்ராவும் செய்வார்கள். ஹஜ் செய்வோர் யாரும் இல்லை என்ற நிலையில் தான் யுக முடிவு நாள் ஏற்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.
(புகாரி 1593)

தொன்மங்களின் வரலாறு 06

(சேற்றுக் கடல்)




اِنَّا مَكَّنَّا لَهٗ فِى الْاَرْضِ وَاٰتَيْنٰهُ مِنْ كُلِّ شَىْءٍ سَبَبًا ۙ
நிச்சயமாக நாம் அவருக்குப் (துல்கர்னைன் ) பூமியில் ஆதிக்கத்தைக் கொடுத்து வளமிக்க வசதி வாய்ப்பையும் அளித்திருந்தோம். ஒவ்வொரு பொருளையும் (தமது இஷ்டப்படி) செய்யக்கூடிய வழியையும் நாம் அவருக்கு அளித்திருந்தோம்.
فَاَ تْبَعَ سَبَبًا

அவர் (பூமியில்) ஒரு வழியைப் பின்பற்றிச் சென்றார்.
حَتّٰٓى اِذَا بَلَغَ مَغْرِبَ الشَّمْسِ وَجَدَهَا تَغْرُبُ فِىْ عَيْنٍ حَمِئَةٍ وَّوَجَدَ عِنْدَهَا قَوْمًا قُلْنَا يٰذَا الْقَرْنَيْنِ اِمَّاۤ اَنْ تُعَذِّبَ وَاِمَّاۤ اَنْ تَتَّخِذَ فِيْهِمْ حُسْنًا
சூரியன் மறையும் (மேற்குத்) திசையை அவர் அடைந்தபொழுது சேற்றுக் கடலில் சூரியன் மறைவதை(ப் போல்) கண்டார். அவ்விடத்தில் ஒருவகை மக்களையும் கண்டார். (நாம் அவரை நோக்கி) "துல்கர்னைனே! நீங்கள் (இவர்களைத் தண்டித்து) வேதனை செய்ய அல்லது அவர்களுக்கு நன்மை செய்ய (உங்களுக்கு முழு சுதந்தரம் அளித்திருக்கிறோம்)" என்று கூறினோம். (குர்ஆன்:18:84- 86)

ஹபீப் பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் : "நான் அலீ (ரலி) அவர்களுடன் இருந்த போது , அவர்களிடம் ஒருவர் துல்கர்னைன் பற்றி , " அவர் எப்படி பூமியின் கிழக்கு மற்றும் மேற்கு எல்லைகளை அடைந்தார் ? "
அதற்கு அலீ (ரலி) அவர்கள் : "தூயோன் அல்லாஹ் அவருக்கு மேகங்களை அடிபணியச் செய்து அதற்குரிய வசதி வாய்ப்புகளை வழங்கினான் .அவருக்கு தன் (அருட்) கரத்தை நீட்டினான் .
சுலைமான் ( அலை) அவர்களுக்கு காற்றை வசப்படுத்தி கொடுத்த மாதிரி குர்ஆன் (34 : 12 )

(இதனால் பூமியின் கிழக்கு மற்றும் மேற்கு தூரங்களின் பயணங்கள் துல்கர்னைன் அவர்களுக்கு இலேகுவாக இருந்தது. மேலும் ("ஒவ்வொரு பொருளையும் (தமது இஷ்டப்படி) செய்யக்கூடிய வழியையும் நாம் அவருக்கு அளித்திருந்தோம்) நூல் : அல்முக்த்தாரா
சூரியன் மறையும் (மேற்குத்) திசையை அவர் அடைந்தபொழுது சேற்றுக் கடலில் சூரியன் மறைவதை(ப் போல்) கண்டார். அவ்விடத்தில் ஒருவகை மக்களையும் கண்டார்.
சேற்றுக் கடலில் சூரியன் மறைவதாக கண்ட இடம் அநேகமாக செர்பியா (Serbia) நாடாக இருக்கலாம் . இந்நாட்டின் தெற்கே ஆச்ரிடா **(Ochrida)** என்ற பெரிய ஏரியாக அந்த இடம் இருக்கலாம் .இது தென்கிழக்கு ஐரோப்பாவில் கிரீஸ் நாட்டுக்கு வடக்கே உள்ளது.
தெற்கு ஐரோப்பாவில் மத்திய மேற்கு பால்கன் தீபகற்பத்தில் உள்ள யுகோஸ்லாவியா நாட்டிலிருந்து பிரிந்ததே செர்பியா .
ஆச்ரிடா ஏரிக்கு ,தொலைவில் உள்ள ஊற்றுகளிலிருந்து நீர் வருகிறது .477 கி.மீ அளவில் நீர் உள்ளது .
அந்நீர் எப்போதுமே கலங்கலாகவும் , கறுப்பு நிறம் கொண்டதாகவும் இருக்கும். இதனால்தான் அந்த ஏரியின் நீர் கலக்கும் ஆறுக்கு **"பிளாக் டிரைன் "**
(Black Drin) என்றே பெயர்.
செர்பியா பற்றி மேலும் .....

செர்பியா என்றழைக்கப்படும் செர்பியக் குடியரசு மத்திய மற்றும் தென்கிழக்கு ஐரோப்பாவில் உள்ள ஒரு நிலஞ்சூழ் நாடு ஆகும். இதன் தலைநகர் பெல்கிரேட் ஆகும். நாணயம்: செர்பிய தினார்

இதன் வடக்கில் ஹங்கேரியும் கிழக்கில் ருமேனியா, பல்கேரியா ஆகியனவும் தெற்கில் அல்பேனியாவும் மெசெடோனியாவும் எல்லைகளாக அமைந்துள்ளன.

இந்தியர்களிடம் விசா கேட்காத ஒரே ஐரோப்பிய நாடு!
பிரமிக்க வைக்கும் இயற்கையழகு, மலைக்க வைக்கும் கட்டிடக்கலை, அழகிய ஆல்ப்ஸ் மலை, அமைதியான, மகிழ்வூட்டும் வாழ்க்கை என, சுற்றுலா பயணியரை கவரும் அத்தனை அம்சங்களும் கொண்ட நாடு செர்பியா. இந்திய சுற்றுலா பயணியரையும், வணிகத் துறையினரையும் ஈர்க்கும் வகையில், செர்பியாவுக்கு வர விசா தேவையில்லை என்று அறிவித்துள்ளது செர்பிய அரசு.
செல்லத்தக்க பாஸ்போர்ட் கையில் இருந்தால் போதும்; தொடர்ச்சியாகவோ அல்லது விட்டுவிட்டோ, ஓர் ஆண்டில், 30 நாட்கள் வரை விசா இன்றி இனி இந்தியர்கள் செர்பியாவில் தங்கியிருக்க முடியும். செர்பியாவை சுற்றிப்பார்க்க, விமானக் கட்டணம் நீங்கலாக, 25 ஆயிரம் ரூபாய் விலையிலிருந்தே சுற்றுலா, 'பேக்கெஜ்'களை அளிக்கின்றன பயண ஏற்பாட்டு நிறுவனங்கள்.
ஒரு நடை செர்பியா போய்ட்டு வரது
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 07

(வெயில் பிரதேசம்)







ثُمَّ اَتْبَعَ سَبَبًا
பின்னர், அவர் (துல்கர்னைன்) (மற்ற) ஒரு வழியைப் பின்பற்றி நடந்தார்.

حَتّٰۤى اِذَا بَلَغَ مَطْلِعَ الشَّمْسِ وَجَدَهَا تَطْلُعُ عَلٰى قَوْمٍ لَّمْ نَجْعَلْ لَّهُمْ مِّنْ دُوْنِهَا سِتْرًا ۙ
அவர் சூரியன் உதிக்கும் (கிழக்குத்) திசையை அடைந்த பொழுது சில மக்களைக் கண்டார். அவர்கள் மீது சூரியன் உதயமாகி (அவர்கள் வெயிலில்) இருப்பதையும் கண்டார். அவர்களுக்கும் சூரியனுக்கும் இடையில் நாம் யாதொரு தடுப்பையும் ஏற்படுத்தவில்லை. (ஆடையணிந்தோ, வீடு கட்டியோ, சூரிய வெப்பத்தைத் தடுத்துக் கொள்ளக்கூடிய ஞானம் இல்லாதவர்களாக இருந்தனர்.)

كَذٰلِكَ وَقَدْ اَحَطْنَا بِمَا لَدَيْهِ خُبْرًا
(அவர்களுடைய நிலைமை உண்மையில்) இவ்வாறே இருந்தது. அவரிடமிருந்த எல்லா வசதிகளையும் நாம் நன்கறிவோம்.
(அல்குர்ஆன்: 18:89 -91)

சயீத் பின் ஜுபைர் (ரஹ்) : "அம்மக்கள் சிவந்த நிறமுடையவர்களாகவும் , குள்ளமானவர்களாகவும் இருந்தனர். மலைக்குகைகளில் வசித்து வந்தனர் . பெரும்பாலும் அவர்களின் வாழ்வாதாரம் மீனாக இருந்தது.

ஹசன் அல்பஸ் ரீ (ரஹ்) : அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதி கட்டங்களை கட்டும் நிலையில் இல்லை. சூரியன் உதித்ததும் அவர்கள் நீருக்குள்ளோ , அல்லது குகைகளின் உள்ளோ இருந்து விடுவர். சூரியன் மறைந்தே பின்னே வெளியே வருவர் . நூல் : அபூதாவூத் அத்தயாலிசீ .

தஃப்ஸீர் அல்குர்துபீ மற்றும் பிரிட்டானிகா தகவல் களஞ்சியத்தில்.....
வட ஆப்பிரிக்கா நாடான மொராக்காவின் தெற்கே உள்ள மாரக்கேஷ் நகரத்தை இது குறிக்கிறது எனலாம். அங்கு வாழ்ந்த பெர்பர் இன மக்களாக அவர்கள் இருக்கலாம்.
கி.மு 2000 த்திலேயே அங்கு பெர்பர்கள் குடியேறி விட்டனர் என்று சொல்லப்படுகிறது . அல்லது கிழக்கு ஆப்ரிக்காவில் உள்ள கறுப்பர்ககளை இது குறிக்கிறது என்பதற்கான சாட்சியங்கள் நிறைய இருப்பதாக வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள்
மொரோக்கோ - மாரக்கேஷ்
மாரக்கேஷ் : அட்லஸ் மலைகள் அடிவாரத்தில் மத்திய பகுதியில் அமைந்துள்ளது. - சுமார் 2.5 மணிநேர நெடுஞ்சாலையில் இயங்கும். 3 மணிநேரம் தொலைவில் உள்ளது. மார்கசேஷ் சுற்றுலா வழியிலும் சேர்க்கப்பட்டுள்ளது
1999 ஆம் ஆண்டில் யுனெஸ்கோ பட்டியலில் சேர்க்கப்பட்ட மனிதகுலத்தின் தொட்டில் - உலக பாரம்பரிய தளம் வரலாற்றின் வளர்ச்சியின் பார்வையில் இருந்து இது மிகவும் இயற்கைக்குரியது.
மனிதகுலத்தின் தொட்டிலில் இருக்கும் நினைவுச்சின்னம் என்ன?
இது 474 சதுர கிலோமீட்டர் பரப்பளவைக் கொண்டிருக்கும் சுண்ணாம்புக் குகைகள். 30 குகைகள் உள்ளன, அவற்றில் ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கிறது, ஏனென்றால் புராதன வரலாற்று மதிப்புள்ள புதைபடிவ மீன்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது

ஆப்பிரிக்க கண்டத்தில் முதன்முதலில் தோன்றிய முதல் மனித குடியிருப்புக்களை ஒழுங்கமைத்த முதல் ஆப்பிரிக்க பழங்குடியினரை மனித இனத்தின் தொட்டிலாகக் கருதப்படுகிறது.
தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள், பழங்கால மனித ஃபாஸில்கள் ஐந்து நூறு எஞ்சியுள்ளவற்றை கண்டுபிடித்து உதவினர், ஆப்பிரிக்க பழங்குடியினரால் செய்யப்பட்ட பல கருவிகளும் இருந்தன.
ஸ்டெர்கான்டைன் குகை;
அற்புத குகை;மலபா குகை; ஸ்வர்ட்ஸ்கிரான்ஸ் குகை
மனிதகுலத்தின் தொட்டில் என்பதற்கான மிகவும் சுவாரசியமான முக்கிய குகைகள்
குகைகளின் வயது சுமார் 20-30 மில்லியன் ஆண்டுகள், அவர்கள் 500 சதுர மீட்டர் பரப்பளவை ஆக்கிரமித்துள்ளனர்
மற்றொரு சுவாரசியமான குகை மாலப்பா குகை என்று அழைக்கப்படுகிறது. 8 ஆண்டுகளுக்கு முன்பு குகை தொல்பொருள் ஆய்வாளர்கள் அதன் வயது 1.9 மில்லியன் ஆண்டுகள் என்று கண்டறிந்துள்ளனர்
பண்டைய மக்களின் குகை **"ஸ்வர்ட்ஸ்கான்ஸ்"** மற்றும் குகை **"ரைசிங் ஸ்டார்"** ஆகியவற்றில் குறிப்பிடப்படுகின்றன. கடந்த காலங்களில், அகழ்வாராய்ச்சிகள் மிக நீண்ட காலத்திற்கு முன்னர் நடத்தப்பட்டன, 2013 முதல் 2014 வரையான காலப்பகுதிகளை உள்ளடக்கியிருந்தன, எனவே சுற்றுலா பயணிகள் பழமையான புதிய கண்டுபிடிப்பிற்காக காத்து இருக்கிறார்கள் .
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 08

(கடவுளுக்கு நேர்த்திக் கடன்)



ஆதம் (அலை) ஹவ்வா (அலை) தம்பதிகளுக்கு ஒவ்வொரு சூலிலும் ஒரு ஆண் ஒரு பெண் குழந்தைகள் பிறக்கும் .
முதல் பிரசவ ஆணுக்கும் இரண்டாம் பிரசவ பெண்ணுக்கும் திருமணம்
முதல் பிரசவ பெண்ணுக்கும் இரண்டாம் பிரசவ ஆணுக்கும் திருமணம் .இது இறைச் சட்டம் காரணம் வேறு மக்கள் எவரும் இல்லை . இப்போது இச்சட்டம் உலகில் எங்குமே இல்லை.
முதல் சூலில் காபிலும் இக்லீமா என்ற பேரழகியும் இரண்டாம் சூலில் ஹாபிலும் லுபூதா என்ற குறைவான அழகியும் பிறந்தார்கள்
காபில் இறைச் சட்டத்தை மீறி தன்னுடன் பிறந்த பேரழகி இக்லீமாவை மணப்பேன் என்று கூற .ஆதம் (அலை) அவர்கள் இறைவனின் சம்மதம் பெற குர்பானி கொடுக்கச் சொல்லி "யாருடைய குர்பானியை இறைவன் ஏற்றுக் கொள்கிறோனோ அவருக்கே பேரழகி
இக்லீமா " என்கிறார்கள்.
காபில் விவசாயி . வேளாண் விவசாயப் பொருட்களை குர்பானி கொடுத்தார் அவர் நல்ல கதிர்களையும் , பழங்களையும் தனக்கும் உம்மி தொலிகளுடன் கூடிய கதிர்களையும் பழுதான பழங்களையும் இறை குர்பானிக்கு வைத்தார்.
ஹாபில் ஆடு மேய்ப்பாளர் .நல்ல கொழுத்த ஆட்டையும் பாலடை கட்டி, வெண்ணெய் போன்றவற்றை இறை அச்சத்துடன் குர்பானிக்கு வைத்தார் .
வானில் இருந்து புகையில்லாத வெள்ளை நெருப்பு பறந்து வந்து ஹாபில் உடைய குர்பானியை கரித்துக் கொண்டு போனது .எனவே ஹாபில் குர்பானி இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டது . இக்லீமாவை நல்லபடி திருமணம் செய்தார்.

" (நபியே!) ஆதமுடைய (ஹாபீல், காபீல் என்னும்) இரு மகன்களின் உண்மைச் செய்திகளை நீங்கள் அவர்களுக்கு ஓதிக் காண்பியுங்கள். இருவரும் "குர்பானி" (பலி) கொடுத்தபோது, அவ்விருவரில் ஒருத்தருடைய (குர்பானி அ)து ஏற்றுக் கொள்ளப் பட்டது. மற்றவருடையது ஏற்கப்படவில்லை.
ஆதலால் "நிச்சயம் நான் உன்னைக் கொன்று விடுவேன்" என்றார். உடனே (குர்பானி ஏற்றுக்கொள்ளப்பட்ட நல்லவர்) "அல்லாஹ் ஏற்றுக் கொள்வ தெல்லாம் இறை அச்சமுள்ளவர்(களின் பலி)களைத்தான்" என்று பதில் கூறினார் " . (குர்ஆன்: 5:27)

தங்களுடைய உழைப்பின் பொருளை ஒரு பெண்ணுக்காக கொடுப்பதிலிருந்து திருமணத்தின் போது பெண்ணுக்கு "மஹர் " என்னும் மண கொடை முடிவு செய்யப்பட்டது அன்றிலிருந்துதான்.
'விவசாய பொருட்களையும் குர்பானிக்கு பயன்படுத்தலாம் ' என்ற கோட்பாட்டின் கீழ் தமிழர் பொங்கல் தினத்தின் போது பச்சரிசியில் பொங்கல் விளைந்த கரும்பு புதைந்த மஞ்சள் என்று இறைவனுக்கு படைத்து அந்த நெருப்பை அடுப்பில் மூட்டி அது பொங்கி வரும் போது
" பொங்கலோ பொங்கல் " என்று சப்தமிட்டு வழிபடுகின்றனர். இதுவும் தமிழர்களைப் பொறுத்தவரை குர்பானிதான்.

ஆடு ,மாடு ,ஒட்டகம் போன்றவற்றை குர்பானி கொடுக்கும் போது "அல்லாஹ் அக்பர் அல்லாஹ் அக்பர் " என்ற தக்பீர் முழக்கத்துடன் உலகம் தழுவிய இஸ்லாம் திருப்பலி எனும் குர்பானி கொடுக்கப்படுகிறது .
"ஆகவே அவ்விருவரும் (இறைவனின் விருப்பத்திற்கு) முற்றிலும் வழிப்பட்டு, (இப்ராஹீம் தன் மகன் இஸ்மாயிலை அறுத்துப் பலியிட) முகங்குப்புறக் கிடத்தினார் " குர்ஆன் (37: 103)

" ஆகவே மகத்தானதொரு பலியை அவருக்கு பகரமாக்கினோம் " குர்ஆன் (37: 107)
என்று கூறிய இறைவன் அன்றொரு நாள் ஹாபில் இடமிருந்து குர்பானியாக பெறப்பட்ட அந்த கொழுத்த செம்மறியாட்டை , இஸ்மாயில் (அலை) அவர்களுக்கு பகரமாக இறக்கி அறுக்கச் செய்தான். உயிர்ப்பலி பகரம் கணக்கு சரியானது . இதுவே எனக்கும் உங்களுக்குமான குர்பானி சட்ட கடமையாகியது.
அக்காலத்தில் அரபியர்கள் பலி பிராணிகளை கஃபாவில் வைத்து அறுத்து அதன் இரத்தத்தை கஃபாவில் தெளித்தும் , அதன் இறைச்சியை கஃபாவை சுற்றியும் வீசி எறிவார்கள் இது இறைவனுக்குப் போய் சேரும் என்று நம்பினர் உடனே இறைவன் ,
"குர்பானி மாமிசமோ அல்லது அதன் இரத்தமோ அல்லாஹ்வை அடையது விடுவது இல்லை. உங்களுடைய இறை அச்சம்தான் அவனை அடையும் "
குர்ஆன் ( 22 : 37 ) என்கிற இறை வசனம் இறங்கியது .

இந்து மதப்படி பலியிடப்படும் ஆடு மாடு போன்றவை ஆண் பாலினமாக இருக்க வேண்டும் . கோழியாக இருந்தாலும் ஆண் பாலினமான சேவலாக இருக்க வேண்டும் . பலியிடும் போது அதன் மீது மஞ்சள் நீர் தெளிக்கப்படும் போது அது மூன்று முறை தலையை குலுக்கும் போது அது தன்னை பலியிட சம்மதம் தெரிவித்து விட்டாகக் கருதி அதைப் பலி கொடுக்கின்றனர் .
" குர்பானி ஒட்டகத்தை அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் ஒன்றாக நாம் ஆக்கியிருக்கிறோம்................ ( அதன் இடப்பக்க முன் காலைக்கட்டி மற்ற மூன்று கால்களில் ) நிற்க வைத்தவாறே அல்லாஹ்வின் பெயரைக் கூறி அறுங்கள் ....... நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு இவ்வாறு அதனை உங்களுக்கு வசப்படுத்தி தந்தோம் "
திருக்குர்ஆன் : (22 : 36 )

("ஸவாப்ப" - நின்றவைகளாக இருக்கிற நிலையில் என்ற வார்த்தையில் இருந்து தெரிகிறது)
பிக்கார்ட்ஸ் என்கிற பிரிட்டிஷ் விஞ்ஞானி : "மாமிசம் காய்கறிகள் இரண்டையும் உண்ணும் வகைச் சேர்ந்தவனே மனிதன் . அசைவ உணவை தவிர்த்தல் நல்லதல்ல . காரணம் மனிதனின் குடற்பகுதியில் ஏராளமான பாக்ட்ரியாக்கள் படைக்கப்பட்டுள்ளன. இறைச்சி உட்கொள்ளும் போது அதனை எளிதாக செரிமானம் செய்து சக்தி ஆற்றலாக மாற்றவே பாக்ட் ரியாக்கள் உள்ளன . அசைவ உணவை உட்கொள்ளாத உடல் எளிதாக நோய் தொற்றிக் கொள்ளும் தளமாக மாறி விடுகிறது என்கிறார் விஞ்ஞானி ,
அட, மனிதனுக்கு இரண்டு கோரைப் பல் இருப்பதே வெந்த அசைவ உணவை மென்று உட்கொள்ளத்தான் என்பதாக பரிணாம வளர்ச்சி ஆய்வார்கள் குறிப்பிடுகின்றனர் .
ர. ரா

தொன்மங்களின் வரலாறு 09

(கப்பல் என்றால் யாது?)



وَ قَالَ نُوْحٌ رَّبِّ لَا تَذَرْ عَلَى الْاَرْضِ مِنَ الْكٰفِرِيْنَ دَيَّارًا
பின்னும், நூஹ் (தன் இறைவனை நோக்கி,) "என் இறைவனே! பூமியில் இந்நிராகரிப்பவர்களில் ஒருவரையும் நீ வசித்திருக்க விட்டு வைக்காதே!
(அல்குர்ஆன்: 71:26)

" நூஹே ... கப்பலைக் கட்டும் ! "
" கப்பல் என்றால் யாது ? "
"அது மரத்தாலான வீடு. அது நீரில் மிதக்கும் "
"அதனை எதைப் போன்று கட்டுவது? "
" சேவலைப் போன்று கட்டுக! "
" அதற்கான மரம் எங்கே கிடைக்கும்?"

இறை ஆணைப்படி ஜிப்ரீயல் (அலை) சுவர்கத்திலிருந்து ஒரு மரத்தைக் கொண்டு வந்து கொடுத்து பூமியில் நடுமாறு கொடுக்க , அது நாற்பது ஆண்டுகளில் 600 கெஜ நீளமும் 400 கெஜ சுற்றளவு உள்ள பெரு மரமாக வளர்ந்தது .
இந்த நாற்பது ஆண்டு காலத்தில் நல்ல மழை பெய்யாமல் , மக்கள் பஞ்சத்தாலும்
பசி பட்டனியாலும் நலிந்தனர். பெண்கள் கருத்தரித்து மக்களை ஈன்றெடுக்கவும் இல்லை .

اِنَّكَ اِنْ تَذَرْهُمْ يُضِلُّوْا عِبَادَكَ وَلَا يَلِدُوْۤا اِلَّا فَاجِرًا كَفَّارًا
நீ அவர்களை விட்டு வைப்பாயானால், உன்னுடைய (மற்ற) அடியார்களையும் நிச்சயமாக வழிகெடுத்தே விடுவார்கள். பாவிகளையும் நிராகரிப்பவர்களையும் அன்றி, (வேறெவரையும் குழந்தையாக) அவர்கள் பெற்றெடுக்கவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன்: 71:27)

அக்கப்பல் ஒரு பறவையே போன்று அமைக்கப்பட்டது .அதனுடைய தலை மயிலின் தலை போன்றும் , கண்கள் கழுகின் கண்கள் போன்றும் , நெஞ்சு புறாவின் நெஞ்சு போன்றும், வால் வேவலின் வால் போன்றும் இருந்தன.
இந்த வெள்ளப் பிரளயம் பற்றி எகிப்து , இந்தியா, சீனா, பர்மா , மலேயா , ஆஸ்திரேலியா, நியூகினி, அமெரிக்க, ஐரோப்பா ஆகிய நாடுகளின் பழம் வரலாற்று ஏடுகளிலும் காணப்படுவதால் , மக்கள் அனைவரும் ஓரிடத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுது, இச்சம்பவம் நிகழ்ந்தது என்கின்றனர்.
இது பைபிளில் கூறப்பட்டுள்ளது போல் அகில உலகத்தையும் தழுவிய வெள்ளப்பெருக்கு இல்லையென்றும், திஜ்லாவும் ,புராத்தும் கரை புரண்டு ஒன்றாகி அதன் இருமருங்கிலும் இருந்த 400 மைல் நீளமும், 100 மைல் அகலமும் உள்ள பகுதியை வெள்ளக்காடாக ஆக்கின என்றும் அதுவே அக்கால மக்கள் வாழ்ந்த பகுதியாக இருந்தது என்றும் பிரளயத்திற்கு பின் மக்கள் உலகின் பல்வேறு பகுதிகளிலும் பிரிந்து

சென்று வாழ்ந்த பொழுது அவர்கள் வெள்ளப்பிரளய செய்தியை எடுத்துச் சென்றனரென்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

தமிழ்நாட்டிலும் "தோணியப்பர் " பற்றிய வரலாறு பண்டு தொட்டு கூறப்படுவது நூஹ் (அலை) அவர்களின் பெயராகிய "நோவா " என்பதிலிருந்து தான் கப்பல் என்று பொருள்படும் " நாவாய் " என்ற சொல் தமிழில் ஏற்பட்டது என்று சில தமிழ் மொழி ஆய்வாளர்கள் கூறுகின்றனர் .

கிரீஸ் வரலாற்றில் இதே போன்ற செய்தி காணப்படுகிறது .அதன் முக்கிய பாத்திரங்களாக "துகாலியான்" என்பவரும் அவருடைய மனைவி "பிம்ரா" என்பவரும் குறிப்பிடப்பட்டுள்ளன .
மகா பாரத்திலும் "ஷடபாத பிரம்மணா " என்ற நூலிலும் மனுவைப் பற்றியும், ஒரு மீனைப் பற்றியும் இத்தகைய கதை பொறிக்கப்பட்டுள்ளது .
சிவப்பு இந்தியர்களிடையேயும் இத்தகைய கதை பண்டு தொட்டு வழங்கப்பட்டு வருகிறது.
விஞ்ஞானம் தன் பங்குக்கு இது பற்றி ஏதாவது சொல்ல வேண்டாமா ? இதோ ...

நூஹ் (அலை) அவர்களின் காலத்துப் பிரளயம் ஏற்பட்ட நாள் கி.மு 2349 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 28-ம் தேதி வெள்ளிக்கிழமை என்று விட்ஸன் என்ற விஞ்ஞானி கணித்துள்ளார்.
"எப்படி சொல்றீங்க விட்ஸன்? "
"அன்று ஒரு வால் நட்சத்திரம் பூமிக்கு வெகு அண்மையில் வந்தது. இதன் காரணமாக கடுமழை பொழிந்து தரைக்குமேல் ஐந்து மைல் உயரத்திற்குத் தண்ணீர் நின்றதென்றும், மீண்டும் அது பூமிக்கு அண்மையில் வருமென்றும் , அப்பொழுது அது பூமியை சூரியனுக்கு அருகில் ஆக்குமென்றும் அதன் காரணமாக பூமி சூரியனின் வெப்பம் தாங்க இயலாது பொசுங்கிச் சாம்பலாக்கும் என்றும் அவர் கூறுகிறார் .
"மிஸ்டர் விட்ஸன் இன்னும் நூறு வருடத்திற்குள் இந்த சம்பவம் நடக்குமா?
" இல்லை "
" இப்போ இரவு மணி 10:43 நிம்மதியாக தூங்குவோமே விட்ஸன் "
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 10

(அது மேகம் அல்ல; காற்று அழிக்க வந்த காற்று)



அரபு பாலைவனத்தில் தென்மேற்கில் அர்ருப்உல் காலீ எனும் பகுதிக்கும் ஹலரமெளத் எனும் ஊருக்கும் மத்தியில் அமைந்துள்ள பகுதியைத் தான் மக்கள் "அஹ்காஃப் " என்று கூறுகின்றனர் . திருக்குர்ஆனிலும் இங்கு வாழ்ந்த மக்களை "கெளமுல் அஹ்காஃப் " என்றே குறிப்பிடுகிறது. அம் மக்கள் ஆது சமுதாயத்தவர்கள் அவர்களுக்கு வந்த நபி ஹூது (அலை)
"அதற்கவர்கள் "எங்கள் மூதாதைகள் வணங்கிக் கொண்டிருந்தவைகளை நாங்கள் புறக்கணித்துவிட்டு அல்லாஹ் ஒருவனையே வணங்கும்படிச் செய்யவா நீங்கள் நம்மிடம் வந்தீர்கள்? (நாங்கள் அவ்வாறு செய்ய மாட்டோம்.) மெய்யாகவே நீங்கள் உண்மை சொல்பவராக இருந்தால் நீங்கள் நமக்கு அச்சமூட்டுவதை நம்மிடம் கொண்டு வாருங்கள்" என்று கூறினார்கள்.

அதற்கவர் "உங்கள் இறைவனின் கோபமும், வேதனையும் (உங்களுக்கு விதிக்கப்பட்டுவிட்டன. அது) நிச்சயமாக வந்தே தீரும். (அல்குர்ஆன் : 7:70 ,71)

فَلَمَّا رَاَوْهُ عَارِضًا مُّسْتَقْبِلَ اَوْدِيَتِهِمْ ۙ قَالُوْا هٰذَا عَارِضٌ مُّمْطِرُنَا بَلْ هُوَ مَا اسْتَعْجَلْتُمْ بِهٖ ؕ رِيْحٌ فِيْهَا عَذَابٌ اَ لِيْمٌ
பின்னர், (வேதனைக்கு அறிகுறியாக வந்த) மேகம் அவர்கள் இருந்த பள்ளத்தாக்குகளை நோக்கி வருவதை அவர்கள் காணவே, "இது எங்களுக்கு மழை பெய்ய வரும் மேகம்தான்" என்று கூறினார்கள். (அதற்கு அவர்களை நோக்கி) "அல்ல! இது நீங்கள் அவசரப்பட்ட வேதனைதான் என்றும், இது ஒரு காற்று; இதில் துன்புறுத்தும் வேதனை இருக்கின்றது" (என்றும் கூறப்பட்டது). (குர்ஆன்: 46:24)

" மக்களே! வரப்போகும் அபாயத்தை உணருங்கள் ! கருமுகில் மழையை பொழியாது காற்றாக வீசப் போகின்றன. நீங்கள் அவசரப்பட்டு அழைத்த இறை தண்டனை . இறைவனிடம் இப்போதாவது பாவமன்னிப்பு தேடுங்கள்"
ஆது கூட்டத்தினர் சிரித்தனர் . "மிகப் பலம் பொருந்திய எங்களை அழிக்க இருந்தும் இருந்தும் உங்கள் இறைவன் பலமில்லாத காற்றைக் கொண்டா எங்களை அழிக்கப் போகிறான் ?
காற்று வீசினும் எங்களைச் சூழ 3 பக்கங்களிலும் மலை இருக்கிறது . நான்காவது பக்கத்தில் நாங்கள் ஏழு லட்சம் ஆதுக்களும் மலையை மிஞ்சும் உயரம் நிற்போம் . அதன் பின் காற்று வந்து எங்கே , நுழைந்து எங்களை எப்படி அழிக்கும் ? "

நபி ஹூது (அலை) அவர்களை பின்பற்றி 4 ஆயிரம் ஆதுக்களை "என்போ " விற்கு அழைத்துச் சென்று , தங்களின் திருக்கரத்தால் மண்ணிலே ஒரு கோட்டைக் கிழித்தார்கள் . இதனை ஒரு அடி கூட தாண்டாது அதனையே ஒரு பாதுகாப்புக் கோட்டையெனக் கருதி அதற்குள்ளே இருக்கச் சொன்னார்கள் .
அன்று ஷவ்வால் மாதத்தின் இறுதிப் புதனாக இருந்தது. மறு புதன் வரை காற்று தொடர்ந்து அடித்தது. இந்த 8 நாட்களையும் "அய்யாமுன் நஹ்ஸாத்துன் " (தீய நாட்கள் ) என்று இறைவன் திருமறையில் குறிப்பிடுகின்றான்.
ஆது மக்கள் மீது வீசிய காற்று முதலில் மாட்டின் மூக்குத்துளை அளவிற்கு வெளிப்பட்டது . அப்பொழுது காற்றின் அதிபதியான வானவர் மீக்காயீல் (அலை) அவர்கள் இறைவனை நோக்கி,
" இந்த அளவு காற்று வீசினால் பூமி இடம் மாறி பின் முழுவதும் அழிந்து விடும் " .
எனவே காற்றை மோதிர வளைய அளவிற்கு வெளிப்படுமாறு இறைவன் பணித்தான். சில வரலாற்று ஆய்வாளர்கள் ஊசி துளை அளவு என்கிறார்கள் .

இது இருக்கட்டும் . இப்போது கொஞ்சம் விஞ்ஞானம் பேசுவோம் .
இயற்கையின் இவ்வாறான சீற்றங்கள் பூமியின் இயக்கத்தை மாற்றுமா ? என்றால் மாற்றும் . நிச்சயமாக மாற்றும் .
பூமி தனது அச்சில் 23.5 டிகிரி சாய்வாக மேற்கிலிருந்து கிழக்காக சுழன்று வருகிறது.

இந் நிலையில் 2004ம் ஆண்டு இந்தோனேஷியா அருகே ஏற்பட்ட 9.1 ரிக்டர் அளவிலான பயங்கர பூகம்பம் 2.76 இன்ச் அளவுக்கு (7 சென்டி மீட்டர்) பூமியின் சாய்வை மாற்றியது. இதனால் பூமியின் சுற்று வேகமும் குறைந்து ஒரு நாளின் சில மைக்ரோ செகன்டுகளும் குறைந்தன. மேலும் அந்தமான் தீவுகளுக்கும் இந்திய கடலோரப் பகுதிகளுக்கும் இடையிலான தூரமும் சில அடிகள் குறைந்தது.
8.9 ரிக்டர் பூகம்பம் காரணமாக, பூமி தனது அச்சிலிருந்து 4 இன்ச் அளவுக்கு இடம் மாறியுள்ளது. அதே போல ஜப்பானின் மத்திய தீவு 8 அடி தூரம் நகர்ந்துள்ளது .
சரி விஷயத்திற்கு வருவோம். ஆது பெண்ணொருத்தி " மேகத்தின் இடையில் நரகத்திலிருந்து தீப்பொறி பறந்து வந்து கொண்டிருந்தாற்போல் தோன்றியது. அவற்றின் மீது நீண்டு உயர்ந்த பெரிய மனிதர்கள் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன் " என்றாள்
"பைத்தியக்காரி, பைத்தியக்காரி " என்றார்கள் ஆதுக்கள்
இதே காட்சியை ஆதுக்களின் அரசன் ஜல்ஜானும் அவனுடைய பிரதானியும் மலைக்குகைக்குள் ஒளிந்து கொண்டிருந்து வானில் பார்த்தனர் .
ஹூது (அலை ) அவர்கள் அரசன் ஜல்ஜானை அடைந்து , பாவமன்னிப்பு இப்போவாவது கேட்கச் சொன்னார்கள் .
ஜல்ஜான் நபி ஹூது (அலை) அவர்களிடம் , மழை மேகம் போன்று வந்த அந்த மாய மேகத்தில் ஒட்டகம் ஒட்டிகள் போன்ற பல மனிதர்களைப் பார்த்தேனே , அவர்கள் யார் ?

" வானவர்களாகிய மலக்குகள் "

" நான் இறை நம்பிக்கை கொண்டால், அவர்கள் என் மக்களை ஈவிரக்கமின்றி கொன்றதற்காக இறைவன் அவர்களைப் பழி வாங்குவானா? "
" ஓர் அரசன் தன் ஆணைப்படி செயலாற்றிய வீரர்கள் மீது தண்டனை விதிப்பானா? "
ஜல்ஜான் ஒரு போதும் இறைநம்பிக்கை கொள்ள மாட்டான் என்று எண்ணி அந்த மலைக்குகையை விட்டு ஹூது (அலை) வெளியேறியதும் , படீரென உள்ளே நுழைந்த காற்று ஜல்ஜான் தூக்கி தூக்கி சுழற்றி சுழற்றி மலைக்குகையினுள் அடித்து வீசியது. இந்தக் காற்றை போயா ஆதுக்கள் பலமில்லாத காற்று என்று சொன்னார்கள் ?

سَخَّرَهَا عَلَيْهِمْ سَبْعَ لَيَالٍ وَّثَمٰنِيَةَ اَيَّامٍۙ حُسُوْمًا ۙ فَتَرَى الْقَوْمَ فِيْهَا صَرْعٰىۙ كَاَنَّهُمْ اَعْجَازُ نَخْلٍ خَاوِيَةٍ
ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் தொடர்ச்சியாக அவர்கள் மீது அக்காற்றை நடத்தி வைத்தான். (நபியே! அச்சமயம் நீங்கள் அங்கிருந்தால்) வேரற்று சாய்ந்த ஈச்சமரங்களைப் போல், அந்த மக்கள் பூமியில் விழுந்து கிடப்பதைக் கண்டிருப்பீர்கள்.
(அல்குர்ஆன்: 69:7)
ர.ரா
**Rahmath Rajakumaran**
இதையடுத்து கடந்த தென் அமெரிக்காவின் சிலி நாட்டின் அருகே ஏற்பட்ட நிலநடுக்கமும் இதே போல பூமியின் அச்சை சில செ.மீ. மாற்றி பூமியின் சுற்று நேரத்தின் சில மைக்ரோ செகண்டுகளைக் குறைத்தது. இப்போது ஜப்பானை உலுக்கிய பூகம்பமும் பூமியின் அச்சை 4 இன்ச் அளவுக்கு மாற்றியுள்ளதோடு, 24 மணி நேரத்தில் 1.6 மில்லி செகண்டுகளையும் குறைத்துவிட்டது.
அமெரிக்க பூகம்பவியல் கழக விஞ்ஞானி கென்னத் ஹட்நட் கூறுகையில், ஒட்டுமொத்த ஜப்பானும் பூமியின் அச்சிலிருந்து 8 அடி அளவுக்கு விலகியுள்ளது. ஜப்பான் வரலாற்றில் இது மிகப் பெரிய பூகம்பமாகும். இந்த கடும் பூகம்பத்தின் காரணமாக வெளியான மிக மிக அபரிதமான சக்தியே, கடலை கொந்தளிக்க வைத்து பெரும் சுனாமி அலைகளை ஏற்படுத்தக் காரணமாக அமைந்தது. 30 அடி அளவுக்கு சுனாமி அலையின் உயரம் இருந்ததற்கும் இதுவே காரணம். குறிப்பாக மியாகி மாகாணத்தை முற்றிலும் சீரழித்துள்ளது இந்த பூகம்பம் என்றார்.

**Rahmath Rajakumaran**
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
"நூஹூடைய கூட்டத்தினருக்குக் கொடுத்த தண்ணீரையும் , ஹூதுடைய கூட்டத்தினருக்கு அனுப்பிய காற்றையும் இறைவன் நமக்கு அளிக்கவில்லை. நமக்குத் தேவைப்பட்ட அளவு தண்ணீரையும் , காற்றையுமே அவன் வழங்கியுள்ளான் "

தொன்மங்களின் வரலாறு 11

(நபி சுலைமான் (அலை) அவர்களும்




எறும்புகளின் சமுதாயமும் )

ஹழ்ரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மகனான ஹழ்ரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பலஸ்தீன அரசராக முடிசூட்டிக் கொண்டபோது, அவர்களுக்கு வயது 13 .
ஒருதடவை சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வானவீதியில் தமது படையினருடன் வலம் வந்து கொண்டிருக்கும்போது ....

"அவை எறும்புகள் வசிக்கும் ஓர் ஓடையின் சமீபமாக வந்தபொழுது அதிலொரு பெண் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி) "எறும்புகளே! நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள். ஸுலைமானும் அவருடைய ராணுவமும் (நீங்கள் இருப்பதை) அறியாது உங்களை(த் தங்கள் கால்களால்) மிதித்துவிட வேண்டாம்" என்று கூறியது.
அதன் சொல்லைக் கேள்வியுற்று ஸுலைமான் சிரித்தவராக புன்னகைப் பூத்தார். (குர்ஆன்: 27: 18 ,19)

அது எறும்புகளின் அரசி என்றும், அதன் பெயர் **தாஹினா** என்றும், **கதமி என்றும், முன்திர்** என்றும், மலாஹியா என்றும், **மகுனஸாதாயித்** என்றும் பல்வேறாக குறிப்பிடுகிறார்கள். அது பெண் நொண்டி எறும்பு என்றும், ஜின்களுக்கு வாகனமாக இருந்ததாகவும் ஒரு குறிப்பில் காணப்படுகிறது.

இது சம்பந்தமாக தப்ஸீர் மஆலிமுத் தன்ஜீலில், ' ஒரு நாள் காலை நேரத்தில், தம் படைபரிவாரங்களுடன் சிரியாவிலிருந்து புறப்பட்டு எமன் நாட்டுப் பக்கம் வானவீதியில் சென்று கொண்டிருந்தார்கள். தாயிப்பிற்குத் தெற்கே ஒரு கணவாய் இருக்கிறது. அங்கு எறும்புக் கூட்டமாகவே இருந்தது. இந்த எறும்புகளெல்லாம் ஜின்வர்க்கத்திற்கு வாகனமாகப் பயன்பட்டு வந்தன. அச்சமயத்தில்தான் அந்த எறும்பு தம் கூட்டத்தாரை எச்சரித்தது.

இதைக் கேட்ட சுலைமான் நபி அவர்கள் அந்த எறும்பை நோக்கி, " எனது படையினர் யாருக்கும் தொல்லை தருவதில்லை என்பது உனக்குத் தெரியாதா? "என்று கேட்டார்கள்.

"அல்லாஹ்வின் நபி அவர்களே! தாங்கள் கூறுவது முற்றிலும் சரிதான். ஆனால் நான் எனது கூட்டத்தாருக்கு தலைமை வகித்துள்ளதால் அவர்களை எச்சரிப்பது என் பேரிலுள்ள கடமையல்லவா..." என்றது.

" உனது இனத்தின் தலைமையின் கீழ் எவ்வளவு தொகை இருக்கும்? " என்று நபியவர்கள் விசாரித்தார்கள்.
''எனது தலைமையின் கீழ் பல படைப்பிரிவுகள் உள்ளன. 4ஆயிரம் பெரிய அதிகாரிகள் உள்ளனர். ஒவ்வொரு அதிகாரியின் கீழும் 4 ஆயிரம் சிறிய அதிகாரிகள் உள்ளனர். அந்த ஒவ்வொரு சிறிய அதிகாரியின் கீழும் 40 ஆயிரம் எறும்புகள் உள்ளன " என விவரித்தது அந்த எறும்பு.
Piotr Naskrecki எழுதிய " The Smaller Majority " என்ற புத்தகத்தில் அடிபட்டு நடக்க முடியாமல் போன ஓர் எறும்பை மற்றொரு எறும்பு கூட்டுக்கு தூக்கிக்கொண்டு செல்வதை படத்தோடு ஆய்வு செய்திருக்கிறார்.
நம் உணவு இருப்பதைப் பார்க்கும் ஓர் எறும்பு அத்துகளின் அருகில் வந்து தனது உணர்நீட்சிகளால் (Antenna) அதை தொட்டுப் பார்த்துவிட்டு, அங்கிருந்து செல்லும்போது தனது உடலின் பின்பகுதியிலிருந்து ஒருவித வேதிப்பொருளை தரையில் கோடு போல் தனது கூடு வரை ஆங்காங்கே இட்டுச் செல்கிறது. இதை மோப்பம் பிடிக்கும் மற்ற எறும்புகளும் அந்தத் தடத்தைப் பின்பற்றி உணவு இருக்குமிடத்தை அடைகின்றன. இந்தத் தடம் எப்போதும் வளைந்து வளைந்துதான் இருக்கும்.

ஜெர்மனி நாட்டில் உள்ள ரெகன்ஸ்பர்க் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் டாமர் சேக்ஸ் மற்றும் அவரது சகாக்கள் எறும்புகள் மற்றும் அவற்றின் இருப்பிடம் குறித்து ஆய்வு மேற்கொண்டனர்

எறும்புகள் தங்கள் கூட்டின் ஓரத்தில் கழிப்பறைகளுக்கென்று தனி இடம் ஒதுக்கி வைத்து வாழ்கின்றன என்ற ஆச்சர்யமான விஷயம் புதிய ஆய்வு ஒன்றின் மூலம் தெரிய வந்துள்ளத அவர்களின் ஆய்வு முடிவுகள் 'ப்ளஸ் ஒன்' எனும் பிரபல அறிவியல் ஆய்விதழில் வெளியிடப்பட்டுள்ளன.
எறும்பு கடிச்சு பாத்திருப்பீங்க... விவசாயம் செய்றதை பாத்திருக்கீங்களா?
எறும்புகள் பல மில்லியன் ஆண்டுகளாக விவசாயிகள். மனிதர்கள் சில ஆயிரம் வருடங்களாகத்தானே. அது சரி, அவை ஏன் பூஞ்சைகளை அறுவடை செய்கின்றன? இலைகளில் அடங்கியிருக்கும் செலுலோஸ் (Cellulose) என்ற தாதுப்பொருள் எறும்புகளுக்குச் செரிமானம் ஆகாது. ஆனால், சில பூஞ்சை வகைகளால் அதைச் செய்யமுடியும். அதனால், தம் காலனிகளில் அந்தப் பூஞ்சைகளை வளர்க்கின்றன.
எறும்புகள் பல மில்லியன் ஆண்டுகளாக நகரக் கட்டமைப்புகளில் வாழ்ந்துகொண்டிருக்கின்றன. பல்லடுக்கு அறைகள், சுரங்கப் பாதைகள் என்று அபரிமிதமான நகரக் கட்டமைப்புகளோடு தொடர்ச்சியாகத் தம்மை மேம்படுத்திக் கொண்டே இருக்கின்றன.

சென்னை, மும்பை, மெக்சிகோ, டோக்யோ, லாஸ் ஏஞ்சல்ஸ் போன்ற நகரங்களைக் கண்டு மனிதர்களின் வளர்ச்சியை மார்தட்டிக் கொள்கிறோம். ஹோல்டாப்லர் (Hoelldobler), வில்சன் (Wilson) என்ற இரண்டு ஆராய்ச்சியாளர்கள் ஓர் எறும்பு இனத்தைப் பற்றிய சுவாரஸ்யமானதொரு தகவலைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.
ஃபார்மிகா எஸ்ஸென்சிஸ் (Formica Yessensis) என்ற எறும்பினம் ஆசியா, ஜப்பான் போன்ற பகுதிகளில் வாழ்கின்றது. அவர்கள் ஜப்பானின் ஹொக்காய்டோ (Hokaido) என்ற தீவிலிருக்கும் இஷிகாரி (Ishikari) கடற்கரையில் அதை ஆய்வு செய்தார்கள். அப்போது, மூன்றரை கோடிக்கும் அதிகமான உழைப்பாளி எறும்புகளையும் லட்சக்கணக்கான ராணி எறும்புகளையும் கொண்டதோர் எறும்புக் காலனியைக் கண்டுபிடித்தனர்.

அது 4,500 குட்டிக் காலனிகளோடு தொடர்புடைய உள்ளுக்குள்ளேயே ஒன்றொக்கொன்று சென்று வருவதற்கேற்ற பாதைகளோடு அமைக்கப்பட்டிருந்தன. இந்த எறும்பு நகரத்தின் மொத்த பரப்பளவு 2.7 சதுர கிலோமீட்டர்கள். இத்தகைய நிரந்தரமான தெளிவான நுட்பமான கட்டமைப்புகளை நம் மூதாதையர்கள்கூடச் செய்திருக்க மாட்டார்கள். இந்த எறும்புகளெல்லாம் ஜின்வர்க்கத்திற்கு வாகனமாகப் பயன்படுத்தப்படுவதாக இருக்கலாம்
(இப் பதிவு மேற்தளத்தில... எனது தலைமையின் கீழ் பல படைப்பிரிவுகள் உள்ளன. 4ஆயிரம் பெரிய அதிகாரிகள் உள்ளனர் ..... )

இவற்றோடு நிற்கவில்லை. எறும்புகள், படை திரட்டிப் பக்கத்து எறும்பு காலனியுடன் போர் புரிகின்றன. தம் கூட்டத்தை எச்சரிக்கவும், எதிரிகளைக் குழப்பவும் வேதிமங்களைத் தெளிக்கின்றன. வேதிமப் போர்முறைகளையும் சில சமயங்களில் கையாளுகின்றன. அடிமைகளைப் பிடித்துவந்து வேலைசெய்ய வைக்கின்றன, குழந்தைத் தொழிலாளிகளைப் பணி அமர்த்துகின்றன, ஆச்சர்யப்படும் விதத்திலான தகவல் தொடர்பு முறைகளைக் கையாளுகின்றன. மனிதர்கள் செய்யும் அத்தனையையும் எறும்புகள் பல லட்சம் ஆண்டுகளாகச் செய்துவருகின்றன,

நபி சுலைமான் (அலை) அவர் காலத்தில் நாட்டில் மழையின்றி பயிர்கள் எல்லாம் கருகிய போது , சுலைமான் நபியவர்கள் மக்களை கூட்டி ஊருக்கு வெளியே அழைத்து சென்று இறைவனை தொழுது கேட்க ஆய்த்தமானது போது ...

ஒரு நொண்டி எறும்பு , " இறைவனே ! உன்னுடைய படைப்புகளில் நான் ஒரு சின்னஞ்சிறு படைப்பு. ஆதத்தின் மக்கள் செய்யும் பாவத்தின் காரணமாக எங்களைத் துன்பத்திற்குள்ளாக்கி விடாதே ! எங்கள் மீது இரங்கி உன்னுடைய அருள் மழையைப் பொழிவாயாக !

நொண்டி எறும்பின் இறைஞ்சுதலை சுலைமான் (அலை) அவர்களின் செவியில் பட்டதும் , " மக்களே ! நொண்டி எறும்பின் துஆவை ஏற்றுக் கொண்டு விட்டான் .எனவே நாம் மனழக்காக இறைஞ்ச வேண்டியதில்லை ....."
என்று சொல்லி முடிப்பதற்குள் பெருமழை பொழிந்து அனைவரும் தொப்பலடைய வீடுபோய் சேர்ந்தனர் .
இந்த நிகழ்ச்சியை நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம் எடுத்துரைத்து ... "அதனால் எறும்புகளைக் கொல்ல வேண்டாம் " என்றார்கள்
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 12

(நபி சுலைமான் (அலை) அவர்களும் ஜின்களும்)







ஹழ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சுவர்க்கத்திலிருந்து கொண்டு வந்த முத்திரை மோதிரத்தை ஹழ்ரத் சுலைமான் (அலை) அவர்கள் தங்கள் விரலில் அணிந்து கொண்டதுமே, பறவையினங்கள் அனைத்துமே அணிஅணியாக அவர்களின் தலைக்கு மேல் வட்டமிட ஆரம்பித்தன. வனவிலங்குகள் அனைத்தும் காடுகளிலிருந்தும், மலைகளிலிருந்தும் வெளிப்பட்டு அவர்கள் முன்னால் அணிவகுத்து நின்றன. ஜின்கள் அவர்களுக்கு பணி செய்யக் காத்து நின்றன. அனைத்தும் அவர்களுக்கு அடிபணிந்து நின்றன.
இதை குர்ஆனில் ..

وَحُشِرَ لِسُلَيْمٰنَ جُنُوْدُهٗ مِنَ الْجِنِّ وَالْاِنْسِ وَالطَّيْرِ فَهُمْ يُوْزَعُوْنَ
ஸுலைமானுடைய ராணுவம் ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியவைகளிலிருந்து திரட்டப்பட்டு அவை இனவாரியாகப் பிரிக்கப்பட்டு அணியணியாகப் புறப்பட்டன.
(அல்குர்ஆன்: 27:17)

தம் தந்தை நபி தாவூத் (அலை ) அவர்கள் கட்ட இயலாது விட்ட பைத்துல் முகத்தஸ் இறை ஆலயத்தை நிர்மாணிக்க மனிதர்களையும் , ஜின்களையும் குழுக்களாகப் பிரித்து வேலைகளை பிரித்துக் கொடுத்தார்கள் .
பாறைகளை உடைத்துக் கொண்டு வருவதிலும் , கற்தூண்களை செதுக்குவதிலும், கடலில் முழ்கி முத்துக் கொண்டு வருவதிலும் ஜின்கள் பயன்படுத்தப்பட்டன.

"அ(ன்றி, ஜின் ஆகிய)வைகள் ஸுலைமான் விரும்பிய மாளிகைகளையும், சிலைகளையும், (பெரிய பெரிய) தண்ணீர்த் தொட்டிகளைப் போன்ற பெரும் கொப்பரைகளையும், அசைக்க முடியாத பெரிய (பெரிய) "தேகு" (சமையல் பாத்திரங்)களையும் செய்து கொண்டிருந்தன". (அல்குர்ஆன் : 34:13)

பைத்துல் முகத்தஸை அலங்கரிக்க மணிகளிலும் மாணிக்கங்களிலும் இரவு பகலாக துளை போடுவதால் ஏற்படும் சப்தம் சுலைமான் (அலை) அவர்களுக்கு சிரமாக இருக்க சப்தம் இல்லாமல் துளையிட முடியாத என்று ஜின்களிடம் கேட்க,
"சகுறுல் இப்ரீத் என்னும் ஜின்னிடம் கேட்டால் அது தக்க உபயம் சொல்லும் "
சகுறுல் இப்ரீத்தை அழைத்து வர, அது இக்காபு என்னும் குருவிக்குத் தெரியும் அதனைக் குஞ்சுகளுடன் பிடித்து வந்து ஒரு பளிங்குப் பெட்டகத்தில் அடைத்து விட்டால் , அக்குருவி எவ்வித ஒலியும் செய்யாது அதில் துளையிட்டுத் தன் குஞ்சுகளை வெளிக்கொணர்ந்து விடும்"

உடனே இக்காபு குருவியிடம் விசாரிக்க,
" எனக்கு ஒரு வெண்கல் தெரியும் அது விளையும் இடமும் தெரியும் அதைக் கொண்டு நான் எவ்வித ஒலியுமின்றி மணியிலும் மாணிக்கத்திலும் துளை செய்வேன் "

உடனே சுலைமான் (அலை) அவர்கள் அக்குருவியுடன் ஒரு ஜின்னை அனுப்பி அதனை எடுத்து வந்து ,மணியிலும் , மாணிக்கத்திலும் துளையிட்டு இறை ஆலயத்தை அழகுப்படுத்தினார்கள்.
இப்படித்தான் இப்ரீத் என்னும் ஜின் நபி சுலைமான் (அலை) அவர்களுக்கு அறிமுகமாகி , பின் ஸபா நாட்டு சிம்மாசனத்தை தூக்கி கொண்டு வரும் போட்டியில் கலந்து கொண்டு , அதுவால் முடியாமல் போக , "ஆஸிப் இப்னு பர்க்கியா "என்ற இறை நேசரால் கொண்டு வரப்பட்டதை குர்ஆன் ...
"(ஸுலைமான் தன் மந்திரிகளை நோக்கி) "சன்றோர்களே! அவர்கள் கட்டுப்பட்டவர்களாக என்னிடம் வந்து சேருவதற்கு முன்னதாகவே அவளுடைய சிம்மாசனத்தை என்னிடம் கொண்டு வருபவர் உங்களில் யார்?" என்று கேட்டார்.
அதற்கு ஜின்களிலுள்ள "இஃப்ரீத்" (என்னும் ஒரு வீரன்) "நீங்கள் இந்தச் சபையை முடித்துக்கொண்டு எழுந்திருப்பதற்கு முன்னதாகவே அதனை நான் கொண்டு வந்துவிடுவேன். நிச்சயமாக நான் இவ்வாறு செய்ய மிக்க சக்தியும் நம்பிக்கையும் உடையவன்" என்று கூறினான்.
(எனினும், அவர்களில்) வேத ஞானம் பெற்ற ஒருவர் (இருந்தார். அவர் ஸுலைமான் நபியை நோக்கி) "நீங்கள் கண்மூடித் திறப்பதற்குள் அதனை நான் உங்களிடம் கொண்டு வந்துவிடுவேன்" என்று கூறினார். (அவ்வாறே கொண்டு வந்து சேர்த்தார்) " (குர்ஆன் : 27:38 - 40)

இப்ரீத் ஜின் மறைவாக இருக்கும் ஸபா நாட்டு சிம்மாசனத்தை தூக்கி கொண்டு வரும் சக்தி இருப்பதால் ,மறைவான ஞானங்களைக் கொண்டு நமக்கு எல்லா உதவிகளையும் ஜின் இனங்களால் செய்ய முடியும் என்பதை மக்கள் நம்பி ஜின்களை வணங்க ஆரம்பித்தனர் .

" (மலக்குகளை வணங்கிக் கொண்டிருந்த) அவர்கள் அனைவரும் ஒன்று சேர்க்கப்படும் நாளில், மலக்குகளை நோக்கி "இவர்கள் உங்களையா வணங்கி வந்தார்கள்?" என்று கேட்கப்படும்.
அதற்கவர்கள் "(எங்கள் இறைவனே!) நீ மிகப் பரிசுத்தமானவன். நீதான் எங்கள் இறைவன்; அவர்களன்று. (இவர்கள் எங்களை) அல்ல! ஜின்களையே வணங்கிக் கொண்டிருந்தனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் அவர்களையே (அந்த ஜின்களையே) நம்பிக்கை கொண்டும் இருந்தார்கள்" என்று கூறுவார்கள்"(குர்ஆன் : 34:40,41)

ஜின்களுக்கு மறைவான ஞானம் இல்லை என்பதை சுட்டிக்காட்ட , இறைவன் நபி சுலைமான் (அலை) அவர்களின் மரணத்தின் மூலம் எடுத்துக் காட்டினான்.

فَلَمَّا قَضَيْنَا عَلَيْهِ الْمَوْتَ مَا دَلَّهُمْ عَلٰى مَوْتِهٖۤ اِلَّا دَآ بَّةُ الْاَرْضِ تَاْ كُلُ مِنْسَاَتَهٗ فَلَمَّا خَرَّ تَبَيَّنَتِ الْجِنُّ اَنْ لَّوْ كَانُوْا يَعْلَمُوْنَ الْغَيْبَ مَا لَبِثُوْا فِى الْعَذَابِ الْمُهِيْنِ
ஸுலைமானுக்கு நாம் மரணத்தை விதித்தபொழுது அவர் இறந்துவிட்டார் என்பதை, அவர் சாய்ந்திருந்த தடியை அரித்து விட்ட பூச்சியைத் தவிர (மற்ற எவரும்) அந்த ஜின்களுக்கு அறிவிக்கவில்லை. (அவர் சாய்ந்திருந்த தடியைக் கரையான் பூச்சிகள் அரித்துவிட்டன. ஆகவே, அதன் மீது சாய்ந்திருந்த ஸுலைமான் கீழே விழுந்துவிட்டார்.) அவர் கீழே விழவே (வேலை செய்து கொண்டிருந்த) அந்த ஜின்களுக்கு தாங்கள் மறைவான விஷயங்களை அறியக்கூடுமாக இருந்தால் (இரவு பகலாக உழைக்க வேண்டிய) இழிவு தரும் இவ்வேதனையில் தரித்திருக்கமாட்டோம் என்று தெளிவாகத் தெரிந்தது.(குர்ஆன்: 34:14)
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 13

(99+ 1)



நபி தாவூத் (அலை) அவர்கள் நபியாகவும் , அதே நேரத்தில் மன்னராகவும் இருந்தார்கள் .
ஒரு ரஜப் மாதம், 17 ஆம் நாள் , திங்கட்கிழமை தாவூது (அலை) அவர்களின் மாளிகையின் ஜன்னலில் பொன்னிறத்துப் பறவை ஒன்று வந்தது. அதன் அழகில் பிரமித்த நபியவர்கள் அதைப் பிடிக்க எத்தனிக்க , அது தங்களின் உப்பரிகையின் உச்சிக்குப் போனது.

நபி தாவூது (அலை) அவர்களும் உச்சிக்குப் போய் அந்த பறவை பிடிக்க, அது பறந்து போனது . அதே நேரத்தில் நபியவர்களின் பார்வை கீழே குளித்துக் கொண்டிருந்த ஓர் அழகிய பெண் மீது விழுந்தது .
கீழே இறங்கி வந்து அந்த அழகிய பெண்ணை விசாரிக்க , " அவள் ஊரியா என்பவரின் மனைவி , பெயர் பத்த ஷாய்ஃ "
இருப்பினும் நபியவர்களின் ஆசை அறிவை மறைத்தது. ஊரியாவை அழைத்து வர கட்டளையிட்டு , அவரின் மனைவியை மண விடுதலை செய்யுமாறும் தான் அவளை மறுமணம் செய்து வாழ இருப்பதாகவும் கூறினார்கள் , என்று ஒரு வரலாறும் ,

மன்னராகவும் , நபியாகவும் இருப்பதால் ஊரியா சம்மதித்து ஆக வேண்டிய கட்டாயம் இருந்ததாக வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர் .

இன்னொரு வரலாற்றில் பத்த ஷாயஃவை மணமுடிக்க ஊரியா விரும்பினார் . பெண்ணின் பெற்றோர்கள் ஏதோ ஒரு காரணத்தால் ஊரியாவிற்கு பெண் கொடுக்க மறுத்துவிட்டனர் . அதன் பின்னர் தாவூத் (அலை) அவர்கள் பத்த ஷாயஃவை மணமுடிக்க கேட்டு விட்டார்கள் . பெற்றோர்கள் இணங்கினார்கள் .
"இவற்றில் ஏதோ ஒன்று உண்மையாக இருக்கலாம். ஏனையவையெல்லாம் பொய் கதைகளே அன்றி வேறில்லை. பொய்க் கதை கூறுபவர்களுக்கு ஒரு நூற்று அறுபது சவுக்கடிகள் வழங்கப்பட வேண்டும் "என்று அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள் . இது இருக்கட்டும் .

அந்த அழகிய பெண் பத்த ஷாயஃ நபியவர்களிடம் , " உங்கள் மூலம் பிறக்கும் என் திருமகனுக்கே அரியணை தர உறுதியளித்தாலொழிய தாம் திருமணத்தை விரும்பவில்லை "
நபியவர்களுக்கு 99 மனைவி இருந்தும் அவர்களின் மக்கட்களுக்கு வழங்காத அரியணையை 100 வது மனைவியானவளின் திருமகனுக்கு வழங்க தாவூத் (அலை) அவர்கள் உறுதியளித்தார்கள் .

அந்த திருமகனே நபி சுலைமான் (அலை) அவர்கள் .
பத்த ஷாயஃவை நபியவர்கள் திருமணம் இனிதே முடித்தார்கள் .
ஒரு நாள் தாவூத் (அலை) அவர்கள் தங்கள் மாளிகையில் அமர்ந்து இருக்கும் பொழுது , இருவர் சுவரேறி , 'தொப்' என கீழே குதித்து உள்ளே நுழைந்தனர் . தாவூது (அலை) அவர்கள் திடுக்கிற்றார்கள் .

" தாவூதிடம் நுழைந்தபோது, அவர் அவர்களைப் பற்றி(ப் பயந்து) திடுக்கமுற்றார். அதற்கவர்கள் "(தாவூதே!) நீங்கள் பயப்படாதீர்கள். (நாங்கள் இருவரும்) இரு கட்சிக்காரர்கள். எங்களில் ஒருவர் மற்றொருவர் மீது அநியாயம் செய்திருக்கின்றார். எங்களுக்கிடையில் நீங்கள் நீதமாகத் தீர்ப்பளியுங்கள்.அதில் தவறிழைத்து விடாதீர்கள். எங்களை நேரான வழியில் செலுத்துங்கள்.
இவர் என்னுடைய சகோதரர். அவருக்கு தொண்ணூற்றி ஒன்பது ஆடுகள் இருக்கின்றன. என்னிடம் ஒரே ஒரு ஆடுதான் இருக்கின்றது. (அவ்வாறிருந்தும்) அவர் அதனையும் (தனக்குக்) கொடுத்துவிட வேண்டும் என்று கூறித் தர்க்க வாதத்தில் அவர் என்னை ஜெயித்துக் கொண்டார்" என்று கூறினார்.
அதற்கு தாவூத், "உன்னுடைய ஆட்டை, அவர் தன்னுடைய ஆடுகளுடன் சேர்த்து விடும்படி கேட்பது நிச்சயமாக அவர் உங்கள் மீது செய்யும் அநியாயமாகும். கூட்டாளிகளில் பெரும் பாலானவர்கள், ஒருவர் ஒருவரை மோசம் செய்து விடுகின்றனர்; நம்பிக்கை கொண்டு நற்செயல் செய்கிறவர்களைத் தவிர, (நம்பிக்கையாளர்கள் அவ்வாறு செய்வதில்லை. மோசம் செய்யாத) இத்தகையவர்கள் வெகு சிலரே!" என்று கூறினார். இதற்குள் நிச்சயமாக நாம் தாவூதை சோதனைக்குள்ளாக்கி விட்டோம் என்று தாவூத் எண்ணி, தன் இறைவனிடம் தன் குற்றத்தை மன்னிக்கும்படி கோரி, சிரம் பணிந்து வணங்கி தன் இறைவனை நோக்கி பிரார்த்தனை செய்தார்.
(குர்ஆன்: 38: 22 -24)

இதில் வாதியும் , பிரதிவாதியும் இரு மலக்குமார்கள் மனித வேடம் கொண்டு வந்ததாக கூறப்படுகிறது
இந்த இடத்தில் " சுபம் " எழுதி கட்டுரை நிறைவு செய்யாமல் .....

فَغَفَرْنَا لَهٗ ذٰ لِكَ وَاِنَّ لَهٗ عِنْدَنَا لَزُلْفٰى وَحُسْنَ مَاٰبٍ
ஆதலால், நாம் அவருடைய குற்றத்தை மன்னித்து விட்டோம். நிச்சயமாக அவருக்கு நம்மிடத்தில் மிக நெருங்கிய பெரும் பதவியும் அழகான இருப்பிடமும் உண்டு. (குர்ஆன்: 38:25)
"சுபம்"
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 14

(ஒரு அடி அடித்தால் நூறு அடி அடித்த மாதிரி )



ஐயூப் அல்லது அய்யூப் என்ற கிரேக்கச் சொல் என்று கூறப்படுகிறது. ஐயூப் (அலை) அவர்கள், இப்ராஹீம் (அலை) மகன் இஸ்ஹாக் (அலை) அவர்களின் முதல் மகன் ஈசுவுடைய வழியில் வந்தவர்கள் . ஐயூப் (அலை) அவர்களின் தாய் லூத் (அலை) அவர்களின் மகள் .

ஐயூப் (அலை) அவர்களின் மனைவி ரஹ்மா , நபி யூசுப் (அலை) அவர்களின் மகன் இப்ராயிமின் மகள் .
ஐயூப் (அலை) அவர்கள் வாழ்ந்த நாடு ஹவ்ரான் என்றும் , பதானியா என்றும் , சிரியாவில் திமிஷ்கிற்கும் , ரம்லாவுக்கும் இடையிலுள்ள மித்னா என்றும் கூறப்படுகிறது . திமிஷ்க் நகரின் அண்மையிலிருந்த ஹரூன் என்னும் ஊருக்கு இறைத் தூதராக வந்தார்கள் .
ஆதம் (அலை) அவர்களை வழி கெடுத்ததன் காரணமாக விண்ணகத்திலிருந்து தூக்கி வீசப்பட்ட இப்லீஸ் மண்ணகத்திலுள்ள மக்களை எல்லாம் வழி கெடுத்து விட்டதாக பெருமிதம் கொண்டான்.

" உன்னுடைய நபி ஐயூப்பிற்கு வளமான வாழ்விற்குரிய நற்பேறுகளையும் வழங்கியதால் அவர் உன்னை வணங்கி வருகிறார் அவருடைய பொருள் மீது எனக்கு ஆதிக்கம் வழங்கு! அதன் பின் அவர் உன்னை வணங்குவாரா ? "

இறைவன் இப்லீஸ் கேட்ட ஆதிக்கத்தையும் கொடுத்தான் . இதன் பொருட்டால் , ஐயூப் (அலை) அவர்களின் தோட்டம் ,துறவுகள் , எல்லாம் தீப்பற்றி எரிந்தன. ஆடு , மாடு , ஒட்டக பண்ணைகள் எல்லாவற்றிலும் நோய் பரவி செத்தன.

ஐயூப் (அலை) அவர்களின் மாளிகை புதையுண்டு அதில் உள்ள தாம் பெற்றமக்கள் எல்லோரும் அதில் மடிந்து போயினர். தன் மனைவி ரஹ்மா ஆறாத் துயரில் அழுது புலம்ப , " அஸ்ஸப்ரு மிஃப்தாஹுல் ஃபரஹ் " _ ( பொறுமையே மகிழ்ச்சியின் திறவுகோல் ) என்று நபியவர்கள் ஆறுதல் கூறினார்கள்.

அடுத்து இப்லீஸ் , நபியவர்களின் மூக்கில் நச்சுக் காற்றை ஊதினான். அது அவர்களின் உடலில் புகுந்து, உடல் கருத்து , கொப்புளங்களால் நிரம்பி , வீங்கி , சீழ் உண்டாகி, நாற்றம் ஏற்பட்டு , ஊன் நீர் வழிந்தோடி , அதில் புழுக்கள் நெளிந்தன.

நபியவர்கள் இறைவனிடம் , " இறைவா ! நான் நுகர்ந்து வரும் இத்துன்பம் உன்னுடைய நாட்டப்படி இருப்பின் நீ அதனை அதிகப்படுத்துவாயாக ! இது உன் கோபத்தின் காரணமாக இருப்பின் என்னை நீ மன்னித்தருள்வாயாக ! "
மக்கள் நபியவர்களை இறைவனின் சாபத்திற்குள்ளானவராக நித்திக்க ஆரம்பித்தனர் .
" ரஹ்மா! இனிமேல் நாம் இங்கு இருக்க வேண்டாம் . ஊருக்கு ஒதுக்குப் புறமான இடத்திற்கு என்னை தூக்கிச் செல் . மேலும் ரஹ்மா எனக்கு பசியின் கொடுமையின் தாங்க முடியலை .எங்கேனும் சென்று உணவு வாங்கி வா "
"இறைவனின் சாபத்திற்குள்ளானவருக்கு உணவு கொடுக்க முடியாது " என மக்கள் மறுக்க,
" அவர்களிடம் கூலி வேலை செய்தேனும் ஏதாவது பெற்று வா " என்றார் நபியவர்கள்.
அப்போது இப்லீஸ் கிழவியின் உருவில் எதிர்பட்டு ,

" என் மகளுக்கு சென்ற இரவு திருமணம் நிகழ்ந்தது. அவளுடைய கூந்தல் உதிர்ந்துவிட்டது . நீ உன்னுடைய நீளமான கூந்தலில் ஒரு பகுதியை வெட்டித்தரின் , உனக்கு இரண்டு ரொட்டிகள் தருகிறேன் "

" என் கணவர் நோயுற்றுள்ளார் ஊன்றுகோலைப் பிடிக்கக் கூட தெம்பில்லை
எனது இந்த தலைமுடியைப் பிடித்துக் கொண்டு தான் தொழுகையில் உட்கார்கிறார். சஜதா செய்கிறார் . எனவே தலைமுடியை வெட்டித் தர மாட்டேன் "
அப்போ , உன் கணவரின் கொடூர பசிக்கு ரொட்டித் தர மாட்டேன் "
இறுதியில் ரஹ்மா தலை முடியை வெட்டி கொடுத்து ரொட்டி வாங்கி வீடு வந்தாள்.
அதற்குள் இப்லீஸ் மாறுவேடம் பூண்டு நபியவர்களை அணுகி, " ஐயூபே ! உம் மனைவி வழுக்கி விழுந்து விட்டாள். அதன் தண்டனையாக அவளுடைய தலை முடி கத்தரிக்கப்பட்டு விட்டது "
அது கேட்டு, நபியவர்கள் , "எனக்கு உடல் நலன் ஏற்படட்டும் . அவளுக்கு நூறு சவுக்கடி கொடுப்பேன் "
ரஹ்மா தலை முடி கத்தரிக்கப்பட்டதற்கான காரணத்தை கூறியதும் ,இது இப்லீஸின் வேலை
என்பதை உணர்ந்து , நோய் தரும் துன்பம் போதாது என்று இப்லீஸ் வேறு தம்மை துன்புறுத்துவதைக் கண்டு உள்ளம் வருந்தினார்கள்.

ஓர் அசரீரி : " ஐயூபே ! வருந்தாதீர் . துன்பங்கள் வருவது சில பொழுது இறைவனின் பேரருளாகவும் இருக்கிறது
ஒரு வெள்ளிக்கிழமை நபியவர்களை பீடித்திருந்த பீடை நோய் குணமாக , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் , "நபியே ! உம்முடைய வலக் காலை மண்ணிலே அடியும் ! என்றார்கள் . அடித்ததும் வெந்நீர் ஊற்று தோன்றியது . " இதோ நீர் குளிப்பதற்கான நீர் . நபியவர்கள் குளித்தார்கள் .
40 அடி தள்ளி, " உம்முடைய இடது காலால் அடியும் " குளிர்நீர் ஊற்று தோன்றியது " இதோ நீர் குடிப்பதற்கான நீர் "
"(நபியே!) நமது அடியார் அய்யூபை நினைத்துப் பாருங்கள். அவர் தன் இறைவனிடம் பிரார்த்தனை செய்தபொழுது "நிச்சயமாக எனக்கு ஷைத்தான் துன்பத்தையும் வேதனையையும் கொடுத்து விட்டான்" (என்று கூறினார்.)

(அதற்கு நாம்) "உங்களுடைய காலை(ப் பூமியில்) தட்டுங்கள்" (என்று கூறினோம். அவர் தட்டவே ஓர் ஊற்று உதித் தோடியது. அவரை நோக்கி) "இதோ நீங்கள் குளிப்பதற்கான குளிர்ந்த நீர். (இதுவே உங்களது) பானமுமாகும்" என்று கூறினோம். (அதனால் அவருடைய நோய்கள் குணமாகி விட்டன.) (குர்ஆன் : 38:41, 42)
இந்த இரு நீர் ஊற்றுகள் சிரியாவின் உர்துன் மாநிலத்தில் நாவா என்னும் ஊருக்கு அருகில் இன்றும் "அய்னே ஐயூப்" என்ற பெயருடன் நீர் ஊற்றுகள் உள்ளது. நோயாளிகள் குளித்து நோய் நீங்கப் பெறுவதாக ரௌஸதுஸ் ஸபாவில் எழுதப்பட்டுள்து .

நோய் நீங்கப் பெற்றதும் , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ''உம் மனைவி நூறு அடிகள் அடிப்பதாக வாக்கு கொடுத்துள்ளீர் . நபிமார்கள் வாக்கு மீறுவதில்லை . எனவே நூறு புற்கள் கொண்ட ஒரு பிடி புல் கத்தையைக் கொண்டு அவளை ஓரடி அடித்தால் , அது நூறு அடி அடித்த மாதிரி "
நபியவர்கள் அந்த ஒற்றை புல் கட்டால் ஒரு அடி அடித்தார்கள் .

தொன்மங்களின் வரலாறு 15

(ஓங்கி அடிச்சா ..)



ஒரு நாள் இரவு மூஸா (அலை) அவர்கள் தெருவில் நடந்து செல்கையில் , தன்னை எடுத்து வளர்க்கும் ஃபிர்அவ்னின் அரண்மனையில் ரொட்டி சுடுகின்ற கலான் என்கிற கிப்தியானுக்கும் , பனீ இஸ்ரவேலர்களைச் சேர்ந்த மூஸா (அலை) அவர்களின் தமக்கை மகனான ஸாமிரி என்பவனுக்கும் இடையே கைகலப்பு ஏற்பட்டது.

தம்மிடமிருந்து கலான் அநியாயமாக விறகுகளை அபகரித்துக் கொண்டான் என்று கூறினான் ஸாமிரி. இது பற்றி கலானிடம் விசாரிக்க, " உன் வளர்ப்புத் தந்தையின் அரண்மனையில் அடுப்பெறிக்கத்தானே அவனிடமிருந்து பறித்தேன் "

"இது அநியாயம் எவருக்காக இருப்பினும் விறகுக்குரிய பணத்தைக் கொடுத்துதான் அதனைப் பெற வேண்டும் "அதற்கு செவிசாய்க்காத கலானை, மூஸா(அலை) அவர்கள் ஓங்கி ஒரே ஒரு குத்துக் குத்தினார்கள். அவ்வளவுதான் , அந்த உடனேயே அவன் சுருண்டு விழுந்து செத்தான் . இந்த விஷயம் ஃபிர்அவ்னுக்கு தெரிந்தால் அவன் என்ன செய்வானோ ? என்று எண்ணி அந்த இரவிலே அவனை அந்த இடத்தில் புதைத்தார்கள் .

இது பற்றி குர்ஆனில் ...
" (மூஸா ஒரு நாளன்று) மக்கள் அயர்ந்து (பராமுகமாக) இருக்கும் சமயத்தில் அவ்வூரில் சென்றபொழுது இரு வாலிபர்கள் சண்டையிட்டுக் கொண்டிருப்பதை அவர் கண்டார். ஒருவன் (இஸ்ரவேலரில் உள்ள) இவர் இனத்தைச் சேர்ந்தவன்; மற்றொருவன் (கிப்திகளாகிய ஃபிர்அவன் இனத்தை சேர்ந்தவன் ) இவருடைய எதிரிகளில் உள்ளவன். அவனுக்கு எதிராக உதவி செய்யுமாறு இவர் இனத்தைச் சேர்ந்தவன் இவரிடத்தில் கோரிக் கொண்டான். (அதற்கிணங்கி) மூஸா அவனை ஒரு குத்துக் குத்தி அவன் காரியத்தை முடித்து விட்டார். (அதனால் அவன் இறந்து விட்டான். இதை அறிந்த மூஸா) "இது ஷைத்தானுடைய வேலை. நிச்சயமாக அவன் வழி கெடுக்கக்கூடிய பகிரங்கமான எதிரி" எனக் கூறினார்.
(அல்குர்ஆன்: 28:15)
மறுநாள் காலை வெளியில் புறப்பட்டு நேற்றைய இரவில் நடந்த சம்பவம் பற்றி யாராவது தன்னை கவனித்திருப்பார்களா என்று அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டே சென்றார்.
மீண்டும் பனீ இஸ்ரவேலரான ஸாமிரி இன்றும் மற்றொரு கிப்தியானுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தான்.

" உனக்கு கிப்தியானுடன் சண்டை போடுவதைத் தவிர வேறு வேலையே இல்லையா? " என்று நபியவர்கள் ஸாமிரியை கண்டிக்க அவனோ தன்னை மூஸா கொலை செய்ய நாடுகின்றார் என்றெண்ணி, "மூஸாவ, நீர் நேற்று ஒரு கிப்தியானை கொலை செய்தது போன்று இன்று உம் இனத்தைச் சேர்ந்த என்னையும் கொல்லப் பார்க்கிறீரா? "

இதனை அங்கு நின்று கொண்டிருந்த கிப்திகளில் ஒருவன் , " நேற்று இரவு காலானை அடித்துக் கொன்றவர் மூஸாவேயன்றி வேறில்லை " என்று
ஃபிர்அவ்னிடம் கூறினான்.
இப்பொழுது மூஸா (அலை) அவர்களை பிடித்துக் கொண்டு வர அரச ஆணை வெளி வந்தவுடன் , மூஸா (அலை) அவர்கள் சிறுகுழந்தையாய் இருந்த போது அவர்களை வைத்து நைல் நதியில் விடுவதற்கு பெட்டி செய்து கொடுத்த கிஜ்பீலு , மூஸா (அலை) அவர்களை சந்தித்து , மிஸ்ர் (எகிப்து) நாட்டை விட்டு வெளியேற அறிவுறுத்தினார் .

எங்கு செல்கிறோம் , எவரிடம் செல்கிறோம் என்ற இலக்கு இல்லாமல் விதிவிட்ட வழியே அவர்கள் நடந்து சென்றார்கள் .
ஏழு இரவு , ஏழு பகல் புற்களையும் , இலைகளையும் உண்டு கொண்டு, நபி ஷுஜப் (அலை) வாழும் மத்யன் தேசம் அடைந்து ஒரு கிணற்றடியில் மர நிழலில் இளைப்பாறினார்கள் .
அக் கிணற்றில் சில ஆட்டு இடையர்கள் தங்களின் ஆடுகளுக்கு நீரை இறைத்துக் கொடுத்து விட்டு பெரிய பாறாங்கல்லை கொண்டு கிணற்றை மூடிவிட்டுச் சென்றனர்.
கிணற்றின் சற்று தொலைவில் இரு பெண்கள் தங்கள் ஆடுகளுக்கு தண்ணீர் புகட்ட முடியாமல் இருப்பதைக் கண்ட மூஸா (அலை) அவர்கள் ,

" பெண்களே! நீங்கள் யார் ? "
" நாங்கள் நபி ஷுஜப் (அலை) அவர்களின் மக்களான ஸயா ஸபூரா . தகப்பனார் அவர்களோ கிழவர் ஒவ்வொரு நாளும் இவ்விடையர்களின் ஆடுகள் குடித்தது போக எஞ்சியுள்ள நீரை எங்களுடைய ஆடுகளுக்குக் கொடுக்க , இங்கு எங்களுடைய ஆடுகளுடன் வருவோம். இன்று ஒரு சொட்டுத் தண்ணீரும் பாக்கி வைக்காது இன்றக்கப்பட்ட தண்ணீர் முழுவதையும் அவர்களின் ஆடுகளே குடித்து விட்டுச் சென்று விட்டன " என்று கூறினர் .

நபி மூஸா (அலை) தண்ணீர் இறைத்து விட்டுச் சென்றவர்களை நோக்கி ,
" அப்பெண்களின் ஆடுகளுக்கும் தண்ணீர் புகட்டி அனுப்பக் கூடாதா?"
" மாட்டோம். நீர் விரும்பினால்
கிணற்றிலிருந்து இறைத்துக் கொடும் " என்று ஏளனமான சொன்னார்கள். காரணம் அந்தக் கிணற்றை மூடியிருக்கும் பாறாங்கல்லை தனி ஒருவரால் அகற்ற முடியாது என்பதால்.
பல நாட்கள் பட்டினியோடியிருந்த மூஸா (அலை) அவர்கள் அதை மூடியிருந்த பாறாங்கல்லை தனியொருவராக தூக்கி வீசினார்கள் .
நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறைவன் நூறு பேர்களுக்கான வலுவைக் கொடுத்திருந்தான் என்றும் அதன் காரணமாக அவர்கள் பசி பட்டினியோடு இருந்தும் இலேகுவாக பாறாங்களை தூக்கி வீசயெறிய முடிந்தது.
"ஓங்கி அடிச்சா ஒன்னறை டன் வெயிட் " எங்கேயோ கேட்ட மாதிரி இருந்தது.

தொன்மங்களின் வரலாறு 16

(சொன்னது என்னாச்சி? நெருப்பு மழை பொய்யாச்சி)




நபி யூனுஸ் (அலை) அவர்களை மீன்காரரர் துன்னூன் என்று அழைக்கப்படுகிறது. அவர்களின் காலம் கி.மு 860 முதல் கி.மு 784 வரை .

" நீனவா" தஜ்லா நதியின் கரையிலே அஸ்ஸீரியர்களின் தலைநகராக இருந்தது. அங்கிருக்கும் ஒரு குன்றுக்கு இன்னும் கூட "யூனுஸ் நபி மலை " என்று பெயர் .

நீனவாவில் நூறாயிரத்திற்கும் அதிகமான மக்கள் , அத்தனை பேர்களும் உருவ வழிபாட்டாளர்கள் .
அப்போது இஸ்ரவேலர்களில் அஷ் இயா என்பவர்கள் நபியாக இருந்தார்கள். ஹஸ்கியா என்பவர் இஸ்ரவேலர்களின் அரசராக இருந்தார் . நீனவா மக்கள் இஸ்ரவேலர்கள் மீது படையெடுத்து அவர்களை சிறைப்பிடித்து அடிமைகளாகக்கினார்கள். மன்னர் ஹஸ்கியா நீனவா மீது படையெடுத்தால் சிறைப்பிடித்த இஸ்ரவேலர்களை நீனவா மக்கள் கொன்று போடுவார்கள் .

எனவே மன்னர் ஹஸ்கியா இஸ்ரவேலர்களின் நபியான அஷ் இயா அவர்களிடம் ஆலோசனை கேட்க , "உம்முடைய ஆட்சியில் ஐந்து நபிமார்கள் உள்ளனர். அவர்களில் எவரேனும் ஒருவரை நீனவா மக்களிடம் அனுப்பி அவர்களை நேர்வழிப்படுத்தி அடிமைப்படுத்தப்பட்ட இஸ்ரவேலர்களை மீட்டும் "
நபி அஷ் இயா அவர்கள் இறையாணைப்படி தேர்வு செய்யப்பட்ட நபி யூனுஸ் பின் மத்தா (அலை)
இஸ்ரவேலர்களைச் சேர்ந்த நபி யூனுஸ் (அலை) அவர்களை நீனவா மக்கள் அஸ்ஸீரியர்களுக்கு நபியாக அனுப்பபட்டது அஸ்ஸீரியர்களுக்கும் நீனவா மன்னன் முல்இப் இப்னுல் இர்ஷாக்கும் பிடிக்கவில்லை .
நபி யூனுஸ் (அலை) அவர்கள் ஏகத்துவத்தை எடுத்துச் சொல்லியும் , அடிமைப்படுத்தப்பட்ட இஸ்ரவேலர்களை விடுதலைச் செய்ய சொல்லியும் பிரச்சாரம் செய்ய , அவர்கள் கேட்கவில்லை .
" இன்னும் நாற்பது நாட்கள் உங்களுக்குத் தவணை தருகிறேன். அதற்குள் நீங்கள் நேர்வழி படாவிடில் நெருப்பு மழையில் மாண்டு போவீர்கள் "
நாற்பதாவது நாள்.அதிகாலையில் குளிர் காற்று வீசியது. நீனவா சந்தோஷப்பட்டது. நேரம் ஆக ஆக நெருப்புக் காற்றும் , வானில் ஆங்காங்கே தீப்பொறி பறக்க , வெப்பம் சூடேறியது . நீனவா பயந்து , நபி யூனுஸ் (அலை ) அவர்களைத் தேடியது. கிடைக்கவில்லை .
பயந்து போன நீனவா மக்கள் நபி யூனுஸ் (அலை ) அவர்களிடம் பைஅத் பெற்ற ஒரு ஞானியிடம் தங்களை இறை சாபத்திலிருந்து காப்பாற்ற வேண்ட ,

" யா ஹையு யா கையூம் யா ஹையு ஹீன லா ஹையு யா முஹ்யீ
யா முமீத்து யாஃதல் ஜலாலிவல் இக்ராம் " என்ற திக்ரை அந்த யூனுஸ் மலை மீது ஏறி ,ஏகத்துவத்தையும் நபி யூனுஸ் (அலை) அவர்களை திருத்தூதராக ஏற்பதாகவும் , இஸ்ரவேலர்களை விடுதலை செய்வதாகவும்

நீனவா மன்னன் முல்இப் இப்னுல் இர்ஷா இந்த நாட்டையை நபி யூனுஸ் (அலை) அவர்களுக்கு வழங்குவதாக உறுதி மொழி கொடுத்தார் .

நெருப்பு மழை போய் செழுப்பு மழை பொழிந்தது .
இப்லீஸ் மனித வேடம் தரித்து நபியவர்களை சந்தித்து , நான்
நீனவாவிலிருந்து வருகிறேன் என்று சொல்ல , " அங்கு நெருப்பு மழை பொழிந்ததா ? " என்று நபியவர்கள் கேட்க" நெருப்பு மழையா? செழிப்பு மழை பொழிந்துள்ளது " என்று கூறினான் .
பொய்யான வார்த்தைகளை தவறுதலாக சொன்னால் கூட நீனவா அஸ்ஸீரியர்கள் தலையைத் துண்டிப்பார்கள் இது வழக்கம்.

கப்பல் ஏறி நாடு கடக்க நபியவர்கள் எத்தனித்தபோது , கப்பல் நங்கூரம் போட்ட மாதிரி அசையாது நின்றது .

கப்பல் தலைவன் , " யாரோ ஒரு பெண் கணவனை விட்டோ, அல்லது ஓர் அடிமை எஜமானை விட்டோ தப்பி இக் கப்பலில் ஏறி இருக்க வேண்டும். யாரது ? அப்படி யாரேனும் இருந்தால் கடலில் குதித்து விட வேண்டும் . இல்லையேல் அந்த ஒருவருக்காக மொத்த பயணிகளும் மரணிக்கும் நிலை ஏற்படும் "
நபி யூனுஸ் (அலை) முன் வந்து , "நான்தான் அந்த பாவி .என் எஜமானுக்கு நானே மாறு செய்தவன் "
நபியவர்களின் அருள் பொழியும் முகத்தைப் பார்த்து யாரும் நம்ப இல்லை
நபியவர்களே மீண்டும் மீண்டும் வற்புறுத்த "யூனுஸ் நல்லவர் , யூனுஸ் பொல்லாதவர் " என்று இரு சீட்டுகள் திரும்ப திரும்ப குலுக்கிப் பார்த்ததில் , "யூனுஸ் பொல்லாதவர் " சீட்டே வந்தது
அவரை கடலில் தள்ள யாருமே இணங்க மறுத்த போது, ஒரு பெரு மீன் கப்பலை தூக்கி நகர்த்தது . அதன் பக்கத்தில் வந்த பெரிய மீனை இது விழுங்கி காட்டியது . மீண்டும் கப்பலை முட்டித் தள்ள , நபியவர்கள் கண்ணைக் கட்டிக் கொண்டு தானே கடலில் குதித்தார்கள் அவர்களை மீன் விழுங்கியது

- அம்மீன் பெயர் தவ்ராத்தில் " ரகா "
- ஸபூரில் " மாஹூயா " இஞ்சீலில்
- "முகினா " குர்ஆனில் " நூன் "
-

اِذْ اَبَقَ اِلَى الْفُلْكِ الْمَشْحُوْنِۙ
(மக்களால்) நிறைந்த கப்பலின் பக்கம் அவர் தப்பி ஓடிய சமயத்தில் (அதில் ஏறிக்கொண்டார்).
فَسَاهَمَ فَكَانَ مِنَ الْمُدْحَضِيْنَ
அ(க் கப்பலிலுள்ள)வர்கள் (திருவுளச்) சீட்டுப் போட்டதில் இவர் (கடலில்) எறியப்பட வேண்டியவரானார்.
فَالْتَقَمَهُ الْحُوْتُ وَهُوَ مُلِيْمٌ
மீன் அவரை விழுங்கிவிட்டது. அச்சமயம், அவர் தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டிருந்தார்.
فَلَوْلَاۤ اَنَّهٗ كَانَ مِنَ الْمُسَبِّحِيْنَۙ
நிச்சயமாக அவர் நம்மைத் துதி செய்பவர்களில் ஒருவராக இல்லாதிருந்தால்,
لَلَبِثَ فِىْ بَطْنِهٖۤ اِلٰى يَوْمِ يُبْعَثُوْنَ
(மறுமையில்) எழுப்பப்படும் நாள் (வரும்) வரையில் அவர் அதன் வயிற்றில் தங்கியிருந்திருப்பார்.
فَنَبَذْنٰهُ بِالْعَرَآءِ وَهُوَ سَقِيْمٌ
(அவர் துதி செய்திருப்பதன் காரணமாக) வெட்ட வெளியான பூமியில் (மீன் வயிற்றிலிருந்து) அவரை நாம் எறியச் செய்தோம். அச்சமயம் அவரோ மிக களைப்புடனும் சோர்வுடனும் இருந்தார்.
وَاَنْۢبَتْنَا عَلَيْهِ شَجَرَةً مِّنْ يَّقْطِيْنٍ
ஆகவே, அவருக்கு (நிழலிடுவதற்காக) ஒரு சுரைச் செடியை முளைப்பித்தோம்.
(அல்குர்ஆன்: 37:140 -146)
நீனவா மக்கள் தங்கள் நபியை தாங்கள் கண்டெடுத்து அவரை திருத்தூதராக ஏற்றுக் கொண்டனர் .
நீனவா பெருவிழா கோலம் பூண்டது .

فَلَوْلَا كَانَتْ قَرْيَةٌ اٰمَنَتْ فَنَفَعَهَاۤ اِيْمَانُهَاۤ اِلَّا قَوْمَ يُوْنُسَ لَمَّاۤ اٰمَنُوْا كَشَفْنَا عَنْهُمْ عَذَابَ الْخِزْىِ فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَمَتَّعْنٰهُمْ اِلٰى حِيْنٍ
தங்களுடைய நம்பிக்கை பலனளிக்கக்கூடிய விதத்தில் (வேதனை வருவதற்கு முன்னர் வேதனையின் அறிகுறியைக் கண்டதும், நம்பிக்கை கொண்டு வேதனையில் இருந்து தப்பித்துக் கொண்ட) "யூனுஸ்" உடைய மக்களைப் போல மற்றொரு ஊரார் இருக்க வேண்டாமா? அவர்கள் (வேதனையின் அறிகுறியைக்

கண்டதும் வேதனை வருவதற்கு முன்னதாகவே) நம்பிக்கை கொண்டதனால், இம்மையில் இழிவுபடுத்தும் வேதனையை அவர்களை விட்டு நாம் நீக்கிவிட்டோம். அன்றி, சிறிது காலம் சுகம் அனுபவிக்கவும் அவர்களை நாம் விட்டு வைத்தோம். (குர்ஆன்: 10:98)
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 17

(என் ஒட்டகத்திற்கு நான் எஜமான் காபாவிற்கு எவன் எஜமானோ அவன் அதைப் பார்த்துக் கொள்வான்)

அப்ரஹா



*********

#அபிசீனிய_சக்கரவர்த்தியின்

யெமன் நாட்டு ஆளுநராக இருந்தவன் #அப்ரஹா.

மக்காவிலிருந்த கஃபாவை தரிசிக்க மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று வருவதை பொறுக்க முடியாத இவன்

தன் தலைநகர் சன்ஆவில்

#காலிஸ் எனும் பிரம்மாண்ட ஆலயம் ஒன்றை கட்டி எழுப்பினான்.

கஃபாவுக்குச் செல்லும் மக்களை

காலிசுக்கு திரும்ப வைப்பதே

தனது லட்சியம் என்றும் அறிவித்தான்.

ஒருநாள் நுபைல் என்பவன் காலிஸ் ஆலயத்தில் ஓரிரவைத் தான் கழிக்க விரும்புவதாகக்கூறி அனுமதிபெற்று

அங்கே மலஜலம் கழித்து விட்டு ஓடிவிட்டான்.

இதை கேள்விப்பட்ட அப்ரஹா

கோபத்தில் கொந்தளித்தான்.

கஃபா இருக்கும் வரை தான் கட்டிய

காலிஸ் ஆலயத்திற்கு மரியாதை கிடைக்க வாய்ப்பே இல்லை என்று எண்ணி மக்காவின் மீது தாக்குதல் நடத்த பெரும் யானைப் படையோடு புறப்பட்டான்.

வழியில் அவனை தடுத்து நிறுத்த நினைத்தவர்களை தீர்த்துக் கட்டினான்.

கிபி. 570 ல் அவன் மக்காவை அடைந்து அங்குள்ள கால்நடைகளைக் கொள்ளையடித்தான்.

அதில் அப்துல் முத்தலிபின் இருநூறு ஒட்டகங்களும் இருந்தன.

தான் படையெடுத்து வந்த காரணத்தை மக்காவின் தலைவராக இருந்த

அப்துல் முத்தலிபுக்கு அவன் சொல்லி அனுப்பினான்.

அவனைக் காண வந்த அப்துல் முத்தலிப் தனது ஒட்டகைகளை திருப்பித் தருமாறு கேட்டார்.

அப்ரஹா ஆச்சரியத்தோடு...

" நான் கஃபாவை அழிக்க வந்திருக்கிறேன். அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் உங்கள் ஒட்டகையை மட்டும் கேட்கிறீர்களே" என்று கேட்டான்.

அப்துல் முத்தலிப் அமைதியாகச் சொன்னார்..

" ஒட்டகைகளுக்கு நான் எஜமானன். அதனால் அதைப்பற்றி பேச வந்திருக்கிறேன். கஃபாவின் எஜமானன் வேறொருவன். காபாவை அவன் பார்த்துக் கொள்வான் " என்றார்.

ஆபிரகாவுக்கு அப்போதே அபசகுனம் தட்டியது. ஆனாலும் ...

யானைப்படையை கஃபாவை நோக்கி நகர்த்தினான்.

அதில் " மஹ்மூத் " என்ற வெள்ளை யானை மட்டும் நகராமல் அங்கேயே படுத்து விட்டது. என்னதான் அதை துன்புறுத்திய போதும் அந்த வெள்ளை யானை அசையவில்லை.

அப்போது ...

வானிலிருந்து ஒரு பெரும் படையைப்போல புறப்பட்டு வந்தன அபாபீல் பறவைகள்.

அவை தங்கள் அலகிலும் கால்களிலும் சிறு சிறு கற்களை எடுத்து வந்தன.

அந்த அற்புதக் காட்சியை மக்காவின் மலைக் குன்றுகளில் இருந்து குறைஷிகள்

பார்த்து வியந்தார்கள்.

விரைந்து வந்த அபாபீல் பறவைகள் அப்ரஹாவின் யானைப்படையின் மீது தாங்கள் கொண்டு வந்த சிறு சிறு

கற்களை வீசி எறிந்தன.

அந்த சிறு கற்களின் தாக்குதலை தாக்குப் பிடிக்க முடியாமல் யானைகள் மிரண்டு ஓடின. அவற்றின் மிதிபட்டு வீரர்கள் மடிந்தார்கள்.

கல்வீச்சின் வேதனைத் தாங்காமல் ஏராளம் பேர் செத்தார்கள்.

அப்ரஹா தன் குதிரையில் ஏறி தப்பி ஓடினான்.

அவனை ஒரு அபாபீல் பறவை துரத்திச் சென்று தாக்கியது.

அவன் மீது ஒரு கல்லை வீசியது. அப்ரஹாவின் கை விரல்கள் அழுகி விழுந்தன.

அந்தப்பறவை விடாமல் அவனை துரத்தியது. அதனிடமிருந்து தப்பி அவன் தன் தலைநகரை அடைந்த போது

அரைகுறை உயிரோடு இருந்தான்.

அப்போது அவனை துரத்தி வந்த

அபாபீல் பறவை அவன் தலையில்

ஒரு கல்லைப்போட்டது.

அதன் வேதனை தாங்காமல் அவன் அப்போதே சுருண்டு விழுந்து செத்தான்.

அவன் கட்டி எழுப்பிய காலிஸ் ஆலயம் பாழடைந்தது. அங்கே ஜின்களும் ஷெய்த்தான்களும் குடியேறின.

அங்கே யாராவது சென்றால் அவர்களை தரித்திரமும் கேடுகளும் சூழ்ந்தன.

புனித கஃபாவை அழிக்க நினைத்து அழிந்து போனவனின் வரலாறு இது.

இறை மறையும் இந்த வரலாறை

பதிவு செய்துள்ளது.

எழுத்து : Abu Haashima

**Rahmath Rajakumaran**

நிலைச் சக்தி (mgh )யும் அணு சக்தியும் (Atomic Energy ) யும்
கி.பி 571 பிப்ரவரி கடைசி தினம் அல்லது மார்ச் 1 முஹர்ரம் மாதத்தில் ஏமன் நாட்டு மன்னன் அப்ரஹா யானைப் படையை திரட்டிக் கொண்டு கஃபவை நோக்கி வந்தான். இந்த நிகழ்வு நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 50 நாட்களுக்கு முன்பு நடந்தது .
கரிய நிறமும் மஞ்சள் நிற மூக்கும் அவற்றின் கழுத்து பச்சை நிறமுமாக உள்ள சிறிய பறவைக் கூட்டங்களை அனுப்பினான் இப்பறவைகளை யாரும் அதற்கு முன்னர் கண்டதில்லை அதற்குப் பின்னும் கண்டதில்லை " என்பதாக இப்னு ஜுபைர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்
ஒவ்வொரு பறவையின் வாயில் ஒரு கல்லும் , இரு கால்களில் இரு கற்களும் இருந்தன. ஒவ்வொரு கல்லிலும் எவர் மீது அது விழ வேண்டுமோ அவரது பெயர் அக்கற்களில் எழுதி இருந்தது .
அக்கல் அவர்களது தலை உச்சியில் விழுந்ததும் அவர்களது உடலுக்குள் சென்று கால் வழியாக வெளியேறிக் கீழே விழுந்தன. யானைகளின் உடலிலும் இக்கற்கள் ஊடுருவி வெளிவந்தன,
இக் கற்களில் சிலவற்றை மக்காவாசிகளால் எடுத்து வைக்கப்பட்டிருந்தன . நபி (ஸல்) அவர்களின் மாமி உம்மு ஹானீ (ரலி) அவர்களிடம் இவற்றில் சில கற்கள் இருப்பதை தாம் பார்த்ததாக இப்னு அப்பாஸ் ( ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள் .

மேற்கண்ட வசனத்தில் ' சுடப்பட்ட சிறிய கற்கள் " என்று இறைவன் குறிப்பிடுவதாலும் கிதாபுகளின் குறிப்பில் தலைபட்டு கால்வழியாக வெளியேறியதாலும் அக்கற்கள் அணு கதிர்வீச்சு கொண்ட யூரேனியம் U 231 அல்லது இருடியம், தோரியம் போன்ற கற்களாக இருக்கலாம் .இக்கற்கள் பட்டாணி கடலைப் போன்று சிறியதாக இருந்தாலும் சுய பொருண்மை திணிவு களில் மிக அதிகமான எடை கொண்டதாக இருக்கும் . எனவேதான் யானையின் உடலிலும் உட்புகுந்து அக்கற்கள் வெளியேறி இருக்கிறது .
கற்களின் வீச்சு விசையைக் கணக்கிட
mass (m) = கல்லின் பொருண்மை
10 கிராம்
gravidatio Force (g ) =
புவி ஈர்ப்பு விசை 9 . 81 Newton/ met
height ( h ) = ஒவ்வொரு கற்களும் வீசப்படும் உயரங்கள் .15 மீட்டர் (50 அடி)
செலவிடப்படும் சக்தி
Energy ( E ) = m X g X h
= 10/ 1000 X 9.81 X 15
= 1. 4715 kgm - Newton / met
ஒவ்வொரு மீட்டர் உயரத்திற்கும் ஒன்றரை கிலோ கிராம் எடை வீதம் அதிகரித்துக் கொண்டே இருக்கும்
இப்னு உமர்(ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள் : " நாங்கள் தாயிஃபிலிருந்து நபி (ஸல்) அவர்களுடன் திரும்பும்போது ஒரு கப்ரின் அருகில் சென்றோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் , " இது அபூரிகாலின் கப்ரு. இவர் தக்கீப் கோத்திரத்து தலைவர் . இவர் கஃபா ஹரமில் இருக்கும் வரை அவர் மீது கல் விழாமல் தடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது ஹரத்தை விட்டு அவர் வெளியேறியதும். அவர் பெயர் பொறிக்கப்பட்ட அவர் மீது விழுந்து இதே இடத்தில் மாண்டர். இவர்தான் அப்ரஹா மன்னனுக்கு மக்காவிற்குள் வர வழிவகுத்துக் கொடுத்தவர் .
"மக்கா கஃபா ஹரத்தை இடிக்க மஹ்மூது என்னும் பிரமாண்டமான யானை மறுத்தது அதை கொடுமைப்படுத்திக் கொண்டு வந்த படைத் தளபதியும் யானைப்பாகனும் நொண்டி சப்பாணியாகவும் , பாகன் குருடனாகவும் மக்காவில் மனிதர்களிடம் உணவு கேட்டு வாங்கி உண்டு வந்தனர் " என்று அன்னை ஆயிஷா ஸீத்தீக்கா (ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள்
ர.ரா

## தொன்மங்களின் வரலாறு 18

(கொள்ளையடித்தவன் எங்கே இருக்கிறான்? கூட்டத்தில் இருப்பான் கண்டுபிடி )

(நீண்ட நெடிய வரலாற்றின் பாகம் 01)



நபி இப்ராஹீம் (அலை) மகனார் நபி இஸ்ஹாக்கு (அலை) மகனார் நபி யாகூப் (அலை) ஆவார்கள் .

நபி யாகூப் (அலை) அவர்கள் லியா என்ற மனைவி மூலம் ஷம்ஊன் , ரூபில் போன்ற பத்து மக்களையும் , ராஹிலா என்ற மனைவி மூலம் நபி யூசுப் (அலை) , புன்யாமீன் ஆகிய இருவரையும் பெற்றார்கள் .

நபி யூசுப் (அலை) அவர்கள் மீது தனிப்பட்ட பிரியம் காட்டியதால் , முதல் பத்து மகன்களும் சேர்ந்து காட்டுக்கு வேட்டையாட போகும் போது சிறுவர் நபி யூசுப் (அலை) அவர்களை கொல்ல நினைத்து பாழும் கிணற்றில் தள்ள , அப்படியும் உயிர் பிழைத்ததால் , எகிப்து வியாபாரிகளிடம் அடிமையாக விலைக்கு விற்று விட்டனர் .

தந்தை யாகூப் (அலை) அவர்களிடம் , ஓநாய் கடித்து தின்று விட்டதாக , சிறுவர் யூசுப் (அலை) அவர்களின் சட்டையில் ஆட்டு இரத்தம் தோய்த்து ஆதாரமாக காட்டினர் .
அடிமையாக விற்கப்பட்ட சிறுவர் நபி யூசுப் (அலை) அவர்கள் குழந்தை பேறு இல்லாத எகிப்து நாட்டு மந்திரியால் விலைக்கு வாங்கப்பட்டு தத்து பிள்ளையாக வளர்க்கப்பட்டு பின் எகிப்து நாட்டு உணவு தானிய களஞ்சியத்திற்கு அதிகாரியாக நியமிக்கப்படுகிறார்கள் .
உணவு பஞ்சம் ஏற்பட சிரியாவில் இருந்து எகிப்திற்கு நபி யூசுப் (அலை) அவர்களிடம் தானியங்கள் கொள்முதல் செய்வதற்காக யாகூப் (அலை) பத்து மகன்களும் வருகிறார்கள்.
நபி யூசுப் (அலை) அவர்கள் பத்து பேர்களைக் கண்டதும் தங்கள் தமையனார்கள் என்பதைக் கண்டு கொண்டார்கள் . ஆனால் இந்த பத்து பேர்களும் தங்கள் தம்பி யூசுபை அடையாளம் காண முடியவில்லை.
" நீங்கள் பத்து பேர்களும் யார் ?

" நாங்கள் சிரியா நாட்டு நாடோடிகள். பஞ்சம் ஏற்பட்டதால் உணவு தானியங்களை கொள்முதல் செய்ய வந்தோம் " .

" உங்களைப் பார்த்தால் உளவாளிகள் போன்றல்லவா தெரிகிறது "

" ஐயகோ நாங்கள் நபி யாகூப் (அலை) அவர்களின் மக்களான வாரிசுகள் "

" அப்படியா? அவர் உயிரோடு இருக்கிறாரா ?"

" ஆம் "

" அவருக்கு எத்தனை மக்கள்?

" பனிரண்டு "

" அவர்களில் எத்தனை பேர் இங்கு வந்துள்ளீர்கள்?

" பத்து பேர் "

" மற்ற இருவர் எங்கே?

" ஒருவர் கானகம் சென்ற போது ஓநாய் கொன்று தின்று விட்டது

.அந்த மகனை நினைத்து என் தகப்பனார் அழுதழுது பார்வையை இழந்து விட்டார் "

" இப்போது நீங்கள் இங்கு வந்துவிட்டீர்களே அவருக்கு துணையாக யார் இருக்கிறார்கள்?

" அந்த இறந்த போனவருடன் உடன் பிறந்த சகோதரர் புன்யாமீன் "

" அதென்ன புன்யாமீன் என்கிற பெயர் ?"

" புன்யாமீன் பிறந்ததும் அவருடைய தாய் இறந்ததால் , அன்னை இழந்தவர் 'இப்னு யாமீன் ' அல்லது புன்யாமீன் "

" சரி .. நீங்கள் கூறியதெல்லாம் உண்மையென சான்று பகர யாராவது அழைத்து வர முடியுமா ? "

" இங்கு ஒருவரும் இல்லை எங்கள் சிரியாவில் இருக்கிறார்கள் "

" நல்லது உங்கள் புன்யாமீனை இங்கு அழைத்து வரும் வரை உங்கள் பத்து பேரில் ஒருவரை பிணையாக விடுங்கள்"

பத்து பேரில் சீட்டு குலுக்கிப் போட்டுப் பார்த்ததில் 'ஷம்ஊன்' பெயர் வந்தது .

(தொடரும்) ர.ரா

தொன்மங்களின் வரலாறு 19

(கொள்ளையடித்தவன் எங்கே இருக்கிறான்? கூட்டத்தில் இருப்பான் கண்டுபிடி 02 )

RARE EARLY 1900s Picture: This is belived to be the well that Sayyiduna Yusuf was thrown into as a child as has been mentioned in the Qur'an. He spent 3 days here. عليه السلام



தங்களின் சகோதரர்களில் ஒருவரான ஷம்ஊனை பிணையாக ஒப்படைத்து விட்டு , எங்கள் தந்தையாருடன் இருக்கும் புன்யாமீனை அழைத்து வந்து நாங்கள் சொன்னதெல்லாம் உண்மை என்பதை நிரூபிப்போம்' என்று நபி யூசுப் (அலை) அவர்களிடம் வாக்குறுதி கொடுத்தனர் .

தானியங்களை கொள்முதல் செய்வதற்கு கம்பளிக் கயிற்றையும் , நெய்யையும் பண்டமாற்ற முறையில் கொடுத்து உணவு தானியங்களை கேட்க, நபி யூசுப் (அலை) ' அதற்குரிய பணம்தான் வேண்டுமேயொழிய பண்டமாற்று பொருட்கள் தேவை இல்லை ' என்றார்கள்
இருப்பினும் என் அரண்மனையில் விருந்தாளியாக தங்கி உங்கள் பொருட்களை இங்கே இருந்து நாட்டில் விற்று பணத்தோடு வாருங்கள் என்று கூறியதோடு ராஜ உபசரணையாக 4 நாட்கள் விருந்து உபசாரம் நடந்தது.
நபியவர்கள் தங்கள் உடன் பிறந்தவர்களை நன்கு உபசரிக்க வேண்டும் என்பற்காகவே பண்டமாற்று பொருட்களை மறுத்தார்கள் .

இதன் நடுவே யூசுப் (அலை) அவர்கள் , தங்களின் ஏவலாளர்களிடம் , " அவர்கள் கிரயமாகத் தந்த தொகையை அவர்களின் மூட்டைகளில் வைத்து விடுங்கள். இதனால் அதனை நம்மிடம் மீண்டும் தர இங்கே வரலாம் "
கன்ஆன் நாட்டுக்கு மீண்ட யாகூப் (அலை) மகன்கள் நடந்தவற்றையெல்லாம் கூறி , எகிப்து அஸீஸ் தங்கள் மீது வைத்திருந்த பிரியத்தை சொன்னார்கள். ("அஸீஸ் " என்பது எகிப்து ராஜாங்க ஆளுமைகளை இவ்வாறுதான் அழைப்பாளர்கள் )

"என் மகன் ஷம்ஊன் எங்கே?
தம்பி புன்யானைக் கொண்டு போய் அந்த அஸீஸிடம் நிரூபித்தால் நாங்கள் சொன்னதை உண்மையென எண்ணி நமக்கு மீண்டும் உணவு தானியங்களை மிகுதியாக தரலாம் என்றார்கள் .
ஷம்ஊனையும் கொடுத்து விட்டு மீண்டும் புன்யாமீனையும் கொடுக்க யாகூப் (அலை) நெஞ்சம் பதறினார்கள் .
முடிவில் இறைவனிடமே பொறுப்பைச் சாட்டி என் மக்களை என்னிடமே மீட்டி தர துஆ செய்தார்கள் .
கொண்டு வந்த உணவு தானிய பொதிகை முன்வைத்து யாகூப் (அலை) துஆ செய்து திறந்த போது இவர்கள் கொடுத்த தொகை இருப்பதைக் கண்டதும், நபியின் பிள்ளைகள் , "இதிவிருந்து எகிப்து அஸீஸை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள் என்றார்கள். ஆனால் நபியவர்கள் அடுத்து எகிப்து போகும் போது இதையும் மீண்டும் அவரிடம் ஒப்படையுங்கள் என்றார்கள் .
(தொடரும்)

"அணு முதல் அண்டம் வரை " -1-10-2019
அநேக நண்பர்கள் என்னை பார்க்கும் பொழுதெல்லாம் ,
" குர்ஆனும் அறிவியலுமான தொடர் பதிவுகள் எப்போது? "
" நான் வரலாறு எழுதறது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? "
" பிடிச்சிருக்கு வரலாறு நிறைய பேர் எழுதுறாங்க. நீங்களும் எழுதியிருக்கீங்க ஆனால் குர்ஆனும் அறிவியலுமான பதிவுகள் மற்றவங்களை விட நீங்கள்தானே அதிகமாக எழுதியிருக்கிங்க . அதனாலே கேட்டேன்"
"எழுதுறேன் "
நண்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்க இன்ஷா அல்லாஹ் அறிவியல் தொடர்
" அணு முதல் அண்டம் வரை "
"அப்போ தொன்மங்களின் வரலாறு ...?"
அவ்வப்போது தொடரும் .
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 20

(பொங்கியெழுந்த சகோதரத்துவ பாசம்)



யாகூப் (அலை) அவர்களின் மக்கள் பதினோரு பேரும் மீண்டும் மிஸ்ர் தேசம் செல்ல ஆய்த்தமாயினர் . தம் தந்தையை நோக்கி , "தந்தையே...! தாங்கள் மிஸ்ர் அஸீஸ்க்கு ஒரு கடிதம் எழுதித் தந்தால் நல்லது " . நபி யாகூப் (அலை) அவர்கள் தங்களின் திருக்கரத்தால் கடிதம் எழுதி கூடவே அன்பளிப்பாக தங்களின் பாட்டனார் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் தலைப் பாகையையும் கொடுத்தனுப்பினார்கள்.

பொழுது புலர்ந்த ஒரு நாள் மிஸ்ர் அஸீஸினான நபி யூசுப் (அலை) அவர்கள் முன் தன் சகோதரர்கள் வந்ததும் பெரிதும் மகிழ்ந்தார்கள்.
"உங்கள் தந்தையார் எப்படி இருக்கிறார்? "
"எங்களின் தந்தையார் தம் அழகுத் திருமகன் யூசுபை இழந்த பின் அவரது தம்பி புன்யாமீனை அருகில் வைத்து ஆறுதல் அடைந்தார் இப்போது அவரையும் உங்களின் கட்டளையால் அழைத்துக் கொண்டு வந்து விட்டோம் "
தந்தையாரின் கடிதமும் , அன்பளிப்பையும் பெற்றுக் கொண்டு பொதியில் இருந்த பணத்தை கொடுக்க அதை திருப்பி அவர்களிடமே யூசுப் (அலை) கொடுத்து விட்டார்கள் .
பெரிய விருந்து தயாரானதும் " நீங்கள் உங்களின் உடன் பிறந்தார்களுடன் ஜோடியாக ஜோடியாக அமருங்கள் "
புன்யாமீன் மட்டும் தனியாக இருக்க , "என் உடன் பிறந்த அண்ணன் யூசுப் உயிரோடு இருப்பின் என்னுடன் அமர்த்திருப்பாரே " என்று எண்ணி வருந்த , அப்போது யூசுப் (அலை) அவர்கள் : " கன்ஆன் நாட்டு இளைஞரே !
நீர் விரும்பின் உம்முடைய உடன் பிறந்த யூசுப் இடத்தில் நான் அமர்ந்து கொள்கிறேன் "

அப்போது யூசுப் (அலை) அவர்களின் சின்னஞ்சிறு மகன் கதவருகில் இமை கொட்டாது இவ்விரையும் பார்த்து நிற்க , அச்சிறுவனைக் கண்டதும் புன்யாமீன்,

" உங்கள் மகன் என் அண்ணன் யூசுப் சிறு வயதில் இப்படியேதான் இருப்பார்" என்று சொல்லி கேவி கேவி அழுதே விட்டார் யூசுப் (அலை) அவர்களின் கண்களும் பனித்தன
உடனே அண்ணன்மார்கள் " எந்த அழகான ஆண் குழந்தையைக் கண்டாலும் , அவர் தன் அண்ணன் யூசுபை நினைத்துதான் அழுவார் "
இது போன்றே இரவிலும் விருந்தோம்பல் நடைபெற்றது. யூசுப் (அலை) அவர்கள் , " நீங்கள் உங்கள் உடன் பிறந்தார்களுடன் சேர்ந்து உறங்குங்கள் ! உங்களில் இளையாருக்கு உடன் பிறந்தார் இல்லையாதலின் அவர் பெரிதும் வருந்துகிறார். அவரை என் மாளிகைக்கு அழைத்துச் செல்றேன்"

அருமை தம்பி புன்யாமீனை அருகில் வைத்து , " உம்முடைய பெயரென்ன ? "
"புன்யாமீன் "
"அதன் பொருள் என்ன ? "
எங்களின் கன்ஆன் தேச மொழியில் யாமீன் என்றால் பிரசவ வேதனையில் இறந்தவள் என்று பொருள் . என்னை ஈன்ற வேதனையில் என் அன்னை இறந்ததால் , பிரசவ வேதனையில் இறந்தவளின் மகன் என்ற பொருளில் இப்னு யாமீன் என்று எனக்கு பெயர் . அதுவே புன்யாமீன் என்று மருவி விட்டது
" உங்கள் அன்னையின் பெயரென்ன?"
"ராஹிலா"
"உமக்கு திருமணம் ஆயிற்றா?"
"ஆம் "
" குழந்தைகள் ஏதேனும் உண்டா?"
"ஆம், மூன்று குழந்தைகள் உண்டு "
"அவர்களின் பெயர்கள்?"
" என் உடன் பிறந்த அண்ணனின் நினைவாக அவர்பட்ட பாடு ஒவ்வொன்றையும் நினைவிற்கொண்டு, அவர்களுக்கு பெயர் சூட்டினேன் "
"என்ன பெயர்கள் சூட்டியுள்ளீர்? "
" முதல் மகனுக்கு " தீப் " (ஒநாய்) என்று பெயர் வைத்தேன்.
" என்ன! நீர் ஒரு நபியுடைய மகனாக இருக்க இவ்வாறு உம் மகனுக்குப் பெயர் சூட்டியுள்ளீர் ? "
" ஆம் என் அண்ணன் யூசுபை ஓநாய் தின்று விட்டதாக என் உடன் பிறந்தார் கூறினார்கள். எனவே அப்பெயரை சூட்டினேன். என் மகனை அழைக்கும் போதெல்லாம் என் அண்ணன் நினைவு வந்து அழுவேன்
"சரி . இரண்டாம் மகனின் பெயர் ? "
" தம் (இரத்தம்) என்பதாகும் "
" ஏன் அவ்விதம் பெயர் வைத்தீர்? "
" என் உடன் பிறந்தார் என் அண்ணனின் சட்டையில் இரத்தத்தைத் தோய்த்துக் கொண்டு வந்தார்கள். அதன் காரணமாக அவனுக்கு அப்பெயர் வைத்தேன் .அதை சொல்லி அழைக்கும் போது என் அண்ணன் நினைவு வந்து அழுவேன் "
" சரி மூன்றாவது மகனின் பெயர்? "
" அவனுக்கு யூசுப் என்று என் அண்ணனின் பெயரையே வைத்து அழைக்கும் போது என் அண்ணன் நினைவு வந்து அழுவேன் "
அது கேட்டு யூசுப் (அலை) அவர்கள் கண்ணீர் சொறிந்தார்கள் .
பின் யூசுப் (அலை ) " நான் உன் உடன் பிறந்தானுக்குப் பதிலாக உனக்கு உடன் பிறந்தானாய் இருந்து கொள்கிறேன் . மகிழ்ச்சிதானே ? "
" தங்களுடைய தகுதி எவ்வளவோ உயர்வானது அதுவும் மிஸ்ர் தேச அஸீஸ் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் குடும்பத்தினருடன் உறவு வைத்துக் கொள்வது மகிழ்ச்சிக்குரியது!
எனினும் தாங்கள் மிஸ்ர் தேச அஸீஸாக இருக்கலாம் இருப்பினும் என் அண்ணனுக்குரிய இடத்தில் தங்களை பாவிக்க என்னால் முடியாது மேலும் தாங்கள் என் உடன் பிறந்தவராய் இருக்க என் தாய் ராஹிலா தங்களைப் பெறவில்லையே "

இதைச் சொன்னதும் யூசுப் (அலை) அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய் பெருக்கெடுத்தது . அதற்கு மேல் தங்களை மறைத்துக் கொள்ள இயலவில்லை. " தம்பீ ! நானே உன் உடன்பிறந்த யூசுப் " என்று கூறி கட்டி அணைத்து அழுதனர்.
" அண்ணா ...! அண்ணா ...! ! என்று பாசப் பிணைப்பில் அண்ணன் யூசுபை ஆரத் தழுவினார் புன்யாமீன் .
" தம்பீ! இதை நம் அண்ணன்மார்களிடம் சொல்லி விடாதே ! "
" அண்ணா! நான் உங்களுடன் மிஸ்ரிலே இருப்பேன் .இனியும் தங்களை விட்டு ஒரு கணம் பிரியமாட்டேன் "

" தம்பீ! தம் அருமைத் தந்தையார் என் பிரிவை நினைத்து நினைத்து பெரிதும் கவலைப்பட்டார் . நீயும் பிரிந்தால் அவரின் நிலை என்னவாகும் ? எனினும் உன்னை என்னோடு வைத்துக் கொள்ள நல்லதொர் உபயம் செய்கிறேன் "
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 21

(காணாமல் போன மரக்கால்)



கன்ஆன் தேசத்திலிருந்து தானியக் கொள்முதலுக்காக வந்திருந்த நபி யாகூப் (அலை) அவர்களின் மக்கள் பதினொரு பேரும் மிஸ்ர் தேச அஸீஸினால் நன்கு கௌரவிக்கப்பட்டு தாங்களின் ஒட்டகங்களில் தானியப் பொதிகளை ஏற்றிக் கொண்டு தங்களின் ஊர் திரும்ப கொஞ்ச தூரம்தான் வந்திருப்பார்கள் .அதற்குள் அஸீஸின் ஏவலாளர்கள் ஓடோடி வந்து ,

" ஒட்டகக் கூட்டத்தார்களே! நில்லுங்கள் ! நிச்சயமாக நீங்கள் திருடர்களாக இருக்கின்றீர்கள் "
" என்ன திருட்டுப் போய்விட்டது?
" அரசாங்கத்தின் தங்கத்திலான அளவு மரக்காலைக் காணோம் "
" நாங்கள் நிரபராதிகள் இங்கு தானியங்கள் கொள்முதல் செய்ய வந்தோமே தவிர திருடுவதற்கு வரவில்லை. உங்களின் பயிர்களை அழித்து விடக் கூடாது என்பதற்காக எங்களின் ஒட்டகங்களின் வாயைக் கூட மூடி போடு மூடி வைத்துள்ளோம் "
"மரக்கால் உங்களில் எவர் பொதியில் சிக்கினாலும் அவரை ஓராண்டிற்கு அடிமையாக்குவதே அதற்குரிய தண்டனை "
ஒவ்வொருவரின் பொதியையும் சோதிக்கப்பட்டது . இறுதியாக புன்யாமீனுடைய பொதியை அவிழ்க்கும் போது யூசுப் (அலை) அவர்கள் ,

"வேண்டாம் அதனை அவிழ்க்க வேண்டாம் "
அவர்களின் சகோதரர்கள் ,

"ஏன் அவரின் பொதியையும் சோதிக்காது விடுகிறீர்கள்? உங்கள் மனம் நிம்மதி பெறுவதற்கு - நாங்களும் நிரபராதிகள் என்று நிரூபணமாவதற்கு சோதியுங்கள் "
பரிசோதிக்கப்பட்ட போது புன்யாமீன் பொதியில் அம்மரக்கல் ஒளித்து வைக்கப்பட்டிருந்தது !
யாகூப் (அலை) அவர்களின் மக்கள் வெட்கி தலை குனிந்து , " ராஹிலா பெற்றெடுத்த மகனே ! உன்னால் நம் குலப் பெருமை பாழானது. ஒரு நபியின் மகனான நீ இவ்வாறு செய்யலாமா ?
அதற்கு புன்யாமீன் , " ராஹிலாவின் மகன்கள் இருவரில் ஒருவரான யூசுப்பிற்கு உங்களாலே பொல்லாங்கு சூழ்ந்தது .இப்போது எனக்கும் நீங்களே திருட்டுப் பட்டம் சூட்ட வைத்தீர்கள் "
" அவ்விதமாயின் அதனை யார் எடுத்து உன் பொதியில் வைத்தது? "
" அது எனக்குத் தெரியாது. நீங்கள் முதலில் தானியம் கொல்முதல் செய்த போது எவர் நீங்கள் கொடுத்த பொருளை உங்களின் தானியப் பொதியில் வைத்தாரோ அவரே இதையும் செய்திருக்கலாம் "
யூசுப் (அலை) அவர்கள் அதனை வெளியே காட்டிக் கொள்ளாது , " நீங்கள் மிகப் பெரிய பொல்லாதவர்கள் .நீங்கள் கூறுவதை அல்லாஹ் அறிவான்
யூசுப் (அலை) அந்த மரக்காலை சுண்டி தம் காதில் அது ரீங்காரம் செய்வதை வைத்து , " நீங்கள் பன்னிரண்டு பேரில் ஒருவரை விற்று விட்டீர்கள் என்று இந்த மரக்கால் கூறுகிறது.
உடனே புன்யாமீன் " அப்படியெனில் அவர் உயிரோடு இருக்கிறாரா , இறந்து விட்டாரா என்று கேளுங்கள் "
அப்போது யூசுப் (அலை) அந்த மரக்காலை சுண்ட " அவர் உயிரோடிருக்கிறார். அவரை நீர் சந்திப்பீர் " என்று மரக்கால் கூறுகிறது .

" மரக்காலை எவர் திருடினார் .... என்று மரக்காலிடமே கேளுங்கள் "
யூசுப் (அலை) அந்த மரக்காலை சுண்ட ,
" மரக்கால் சினமுறுகிறது என்னைக் களவாடி வெளியே கொண்டு செல்லப்பட்டதைக் கண்ட பின்னரும் எவர் திருடியவர் என்று என்னை ஏன் கேட்கிறீர்? " என்று வினவுகிறது.

யாகூப் (அலை) மக்களில் ஒருவர் ரூபில் : " அஸீஸே ! இப்போது நீர்
புன்யாமீனை விடவில்லையாயின் நான் சப்தமிடுவேன். அது கேட்டு மிஸ்ரிலுள்ள பெண்களின் கர்ப்பங்களெல்லாம் கீழே விழுந்து விடும் "
யாஹூதா : "அஸீஸே ! கொடிய சிங்கம் , புலி இவைகளின் வாயைப் பிடித்து இரு கூறாகப் பிளந்திடவும், யானையின்
தந்தங்களை இரு கைகளால் பிடுங்கிடவும் ஆற்றலுடையவன் நான்.
ஏனையோர் தங்களின் வீர பராக்கிரமத்தை எடுத்துரைத்து மிரட்டினர்.
உண்மையில் யாகூப் (அலை) அவர்களின் மக்களுக்குச் சினமேற்படின் அவர்களை எதிர்த்து நிற்க எவராலும் முடியாது. ஆனால் அவர்களில் ஒருவர் அவர்களைத் தொட்டுவிடின் அவர்களின் சினம் அடங்கி விடும்.
இப்படி ஒரு நியதியை ஏற்கனவே அறிந்திருந்த யூசுப் (அலை) அவர்கள் தம் மகனிடம் அவர்களைப் போய்த் தொடுமாறு கூற அவர் போய் ரூபில் , யஹூதாவின் கைகளைப் பிடித்ததும் உடனே இருவரின் சினம் அடங்கி விட்டது .
அப்போது ரூபிலுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவே இல்லை. " இங்கு யஃகூபுடைய வித்துக்களில் ஒன்று கிடக்கின்றது "
அது கேட்ட யூசுப் (அலை) " யஃகூப் என்றால் யார் ? " என்று வேண்டுமென்ற தெரியாதது போல் கேட்டார்கள் .
தம் தந்தையின் பெயரை அஸீஸ் மரியாதையின்றி கேட்டு விட்டார் என்று ரூபில் கோபமுற்று சப்தமிட முற்பட்ட போது அவரால் முடியவில்லை.
உடனே யூசுப் (அலை) ரூபில் மீது பாய்ந்து அவரை ஒரே தள்ளில் தள்ளி நிலை தடுமாறி வீழ்த்தினார்கள் .
"இப்ரானிகளே! உங்களை விட வலுமிக்கவன் வையகத்தில் ஒருவனும் இல்லை என்று எண்ணிக் கொண்டீர்களா ? "
" நிச்சயமாக இத்தனை வலிமை யாகூப்பின் சந்ததிக்கு மட்டுமே உண்டு. இருப்பினும் அஸீஸ் யாராக இருக்கக் கூடும் ? " என்ற சந்தேகப் பொறி ரூபிலின் மனதில் வந்து போனாது.
ர.ரா

தொன்மங்களின் வரலாறு 22

(கேள்வியும் நானே, பதிலும் நானே)



புன்யாமீனை எகிப்தில் விட்டுவிட்டு கன்ஆன் திரும்பிய யாகூப் (அலை) மக்கள் தந்தையிடம் நடந்த விபரத்தை சொன்னார்கள் .

நபி யாகூப் (அலை) அவர்கள் இச் செய்தி கேட்டு துடிதுடித்துப் போனார்கள். தம் மக்களை நோக்கி , "புன்யாமீன் நிச்சயமாக திருடுபவர் இல்லை . நீங்கள் கூறுவது சரியன்று .உங்களின் உள்ளம் தவறு செய்ய தூண்டி விட்டது "
" நிச்சயமாக நாங்கள் எந்த தவறு செய்யவில்லை "

" திருடியவனுக்குத் தண்டனை அவனைப் பிடித்து அவனை ஒராண்டிற்கு அடிமை கொள்வது என்று நீங்கள் தாம் அவருக்கு சொல்லியிருக்க வேண்டும் அதன்படி மிஸ்ர் அஸீஸும் செயலாற்றி இருக்கிறார்.
ஏனெனில் இச் சட்டம் யாகூப்புடைய மார்க்கத்தின் சட்டமேயன்றி மிஸ்ர் நாட்டின் சட்டம் அல்ல"
இருப்பினும் மிஸ்ர் அஸீஸ்க்கு யாகூப் (அலை) அவர்கள் கடிதம் எழுதினார்கள் .
அதில் தம்மைப் பற்றியும் தம்முடைய முன்னோர் நபி இப்ராஹீம் (அலை) வழி வந்த பரம்பரை என்றும் , தாம் தம் பாசத்தோடு வளர்த்த யூசுப்பை இழந்து பட்ட துன்பத்தைப் பற்றியும் , யூசுப்பிற்கு பதிலாக அவர் தம்பி புன்யாமீனை அன்புடன் வளர்த்து வந்தது பற்றியும், இப்போது அநியாயமாக திருட்டு பட்டம் சூட்டி அடிமையாக்கி கொண்டதையும் , நபிமார்களின் வழிவழிவந்தோர் கேவலான ஈனத் தொழில் செய்ய மாட்டார்கள் என்றும் குறிப்பிட்டு விட்டு ,
புன்யாமீனை தம்மிடம் அனுப்பி வைக்குமாறும் அவ்விதம் அனுப்பி வைப்பின் இறைவனிடம் அவருக்கு இறைஞ்சுவதாகவும் , இல்லையெனில் தம் சாபத்தை ஏற்றுக் கொள்ளுமாறும், அச் சாபத்திலிருந்து ஏழெழு தலைமுறை எவரும் தப்ப முடியாதென்றும் " கடிதம் எழுதி அனுப்பினார்கள் .

கடிதத்தை தன் பேரன் யாஹூதா மகனான பராதிடம் கொடுத்து அனுப்பினார்கள் .
கடிதத்தைப் பெற்றதும் யூசுப் (அலை) அவர்கள் தாரை தாரையாக அழுது விட்டு, பதில் கடிதம் எழுதினார்கள் .
" நபி அவர்களே ..! தங்கள் கடிதம் கிடைக்கப் பெற்றேன் . தங்களின் முன்னோர் நுகர்ந்த துன்பங்களையும் , தாங்கள் அனுபவித்து வரும் இன்னல்களையும் அறிந்து உள்ளம்
ஆறாதுயரம் கொள்கிறது. தங்கள் முன்னோர் போன்று தாங்களும் பொறுமையை மேற்கொள்ளுங்கள் ! அவர்களைப் போன்று தாங்களும் இறுதியில் மகிழ்ச்சியுறுவீர்கள் "
என்று கடிதம் எழுதி அதே பராதிடமே
யூசுப் (அலை) கொடுத்தனுப்பினார்கள்
யாகூப் (அலை) கடிதத்தைப் படித்ததும் , "இந்த வாசகங்களைப் பார்த்தால் நபிமார்களுடையவும் , அவர்களின் வழித்தோன்றல்களுடையவும் வாசகங்கள் போன்றுள்ளன "

மேலும் மிஸ்ர் அஸீஸின் தரும சிந்தனையும் , நற்குணங்களை தம் மக்கள் உரைத்தது ஞாபகத்திற்கு வரவே 'ஒரு வேளை மிஸ்ர் அஸீஸ் தம் மகன் யூசுப்பாக இருப்பாரோ என்ற சந்தேகம் யாகூப் (அலை) அவர்களுக்கு வர , தம் மக்களை மிஸ்ர் புறப்பட்டு போகச் சொல்லி, யூசுபையும் , அவருடைய சகோதரர் புன்யாமீனையும் அழைத்து வாருங்கள் என்று அனுப்பி வைத்தார்கள் .

யூசுப்பின் அண்ணன்மார்கள் இறுதியாக மிஸ்ர் அஸீஸிடம் வந்து சேர்த்தனர் . "தாங்கள் எங்களுக்கு தானமாக தானியங்களை தந்தவர். எங்களுக்கு இப்போது வந்துள்ள இன்னல்களுக்கும் நீங்களே தீர்வு காட்டுங்கள் "

யூசுப் (அலை) உணர்ச்சி வசப்பட்டு, தன் சகோதரர்களிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து , " இது ஹீப்ரு மொழியில் உள்ளது . ஹீப்ரு மொழி படித்தவர் யாரும் இங்கில்லை. இக்கடிதத்தின் பொருள் எனக்கு கூறுங்கள் "
கடித்தைப் பார்த்ததும் அவர்களின் முகங்கள் ஊரில் எல்லா பேயும் மொத்தமாக அறைந்தது போல் ஆகிவிட்டனர் .

" நாம் யூசுபை நம் அடிமை என்று மாலிக் வியாபாரிக்கு எழுதிக் கொடுத்த கிரயப் பத்திரம் எப்படி மிஸ்ர் அஸீஸ்க்கு கிடைத்தது? " என்று அவர்கள் ஹீப்ரு மொழியில் பேசியதை யூசுப் (அலை) அறிந்து கொண்டார். யூசுப் (அலை ) அவர்கள் , நாணி கோணி நிற்பதைக் கண்டு கட கட வென கடவாய்ப்பற்கள் தெரியுமளவு சிரித்தார்கள் .கடிதத்திற்குரிய கேள்வி என்ன ? பதில் என்ன ? கூறுங்கள் . அந்த பற்களும் , சிரிப்பும் அவர்களுக்கு தம் தம்பி யூசுப் பை ஞாபகப்படுத்திற்று.

யூசுப் (அலை ) தன் கிரீடமான திருமுடியை கழற்றி தன் அங்கி சட்டையை தளர்த்தி கடிதத்தின் கேள்வியும் நானே , பதிலும் நானே . என்று ஹீப்ரு மொழியில் பேசிவிட்டு பிடரிக்கு கீழே ஒரு பெரிய மச்சம் தன் தந்தை நபி யாகூப் (அலை) அவர்களுக்கு இருப்பது போல் இருந்தது .
அந்த மச்சம் நுடிவத்தின் அடையாளம் .

அண்ணன்மார்கள் , " உண்மையில் நீர் யூசுப் பாக இருப்பீரோ ? "
"ஆம் நான்தான் யூசுப். இவர் என் உடன் பிறந்த புன்யாமீன் . " நிச்சயமாக அல்லாஹ் எங்கள் மீது பேரருள் பாலித்துள்ளான் . எவர் தூய்மையாளராக இருந்து துன்பங்களை பொறுத்துக் கொள்கிறாரோ அத்தகைய நல்லோரின் கூலியை நிச்சயமாக அல்லாஹ் வீணாக்கி விடுவதில்லை" என்று யூசுப் (அலை) தன் அமுதவாய் திறந்து அழகாக கூறினார்கள் .
ர.ரா

விண்வெளிப் பயணமும் மனித வாழ்வும்




لَقَالُوْۤا اِنَّمَا سُكِّرَتْ اَبْصَارُنَا بَلْ نَحْنُ قَوْمٌ مَّسْحُوْرُوْنَ

எனினும், இவர்கள் (வானத்தில் ஏறிய பின்னரும்) "எங்களுடைய கண்கள் மயங்கிவிட்டன; நாங்கள் சூனியத்திற் குள்ளாகி விட்டோம்" என்றே கூறுவார்கள். (குர்ஆன் : 15:15)

இந்த பூமியில் கிட்டத்தட்ட 700 கோடி மக்கள் வாழ்கிறார்கள். அதில் ஒவ்வொருவரும் பல வகைகளில் வேறுபட்டிருந்தாலும், ஒருசில விஷயங்களில் ஒன்றுபட்டுள்ளனர்.
காலையில் தூக்கத்திலிருந்து எழுந்துகொள்ளுவதிலிருந்து, உண்ணும் உணவு, பயண முறைகள், படிப்பு அல்லது வேலை என பல்வேறு நடைமுறைகளில் எவரோ ஒருவரையோ, பலரையோ ஒன்றுபட்டு செயல்படுகிறோம்.
ஆனால், 700 கோடி பேரில் இந்த ஆறு பேரின் வாழ்க்கைமுறை மட்டும் தலைகீழாக உள்ளது. ஆம், நமது தலைக்கு மேலே சுமார் 400 கிலோ மீட்டர் உயரத்தில் பறந்துகொண்டிருக்கும் சர்வதேச விண்வெளி நிலையத்தில் பணிபுரிந்துகொண்டிருக்கும் ஆறு விண்வெளி வீரர்களின் தினசரி செயல்பாடுகள் முற்றிலும் வேறுபட்டவை.

சர்வதேச விண்வெளி நிலையத்தில் தூங்குவதற்கென பிரத்யேகமாக அமைக்கப்பட்டுள்ள பைக்குள் விண்வெளி வீரர்கள் இரவு முழுவதும் மிதந்துக்கொண்டே தூங்குகிறார்கள். காலை ஆறு மணிக்கு தானாக எரியும் விளக்குகளை சமிக்ஞையாக கொண்டு வீரர்கள் தூக்கத்திலிருந்து எழுகிறார்கள்.

தூங்கி எழுந்தவுடன் கழிவறைக்கு செல்வது, பல் தேய்ப்பது என வீரர்களின் வாழ்கைப்போக்கு பூமியிலுள்ளவர்களை ஒத்துக் காணப்படுகிறது. வீரர்கள் பற்பசை மற்றும் பல் துலக்கியை பயன்படுத்திவிட்டு அப்படியே விட்டுவிடுவார்கள் - அவை ஓடத்தில் மிதந்துகொண்டே இருக்கும்.
அதற்கடுத்து, சிறிது காலையுணவை சாப்பிட்டுவிட்டு, ஓடத்தின் கீழுள்ள கட்டுப்பாட்டு மையத்தில் நடக்கும் தினசரி நிகழ்வுகள் குறித்து திட்டமிடும் கூட்டத்திற்காக ஆறு வீரர்களும் கூடுவார்கள்.

தங்களது பெரும்பாலான நேரத்தை சர்வதேச விண்வெளி ஓடத்தின் பராமரிப்பு மற்றும் இயக்கத்தை நிர்வகிப்பதிலேயே விண்வெளி வீரர்கள் செலவிடுகிறார்கள். அதைவிடுத்து ஓடத்தை சுத்தம் செய்வதற்கு, பொருட்களை இடமாற்றம் செய்வதற்கு ஒருநாளும், ஓடத்தின் காற்று சுத்திகரிப்பு கருவி உள்ளிட்ட முக்கிய கருவிகளில் ஏற்படும் பழுதுகளை நீக்குவதற்கு மற்றொரு நாளையும் செலவிடுகிறார்கள்.
சர்வதேச விண்வெளி நிலையத்தில் ஏற்படும் பிரச்சனைகள் குறித்தும், அதை சரிசெய்வது குறித்தும் ஏற்கனவே எழுதப்பட்டுள்ள குறிப்பை முதலாக கொண்டே விண்வெளி வீரர்களின் முழு செயல்பாடும் அமைந்துள்ளது.

வீரர்கள் பயன்படுத்தும் பொருட்கள் அனைத்துமே விண்வெளியில் மிதந்துக்கொண்டே இருக்குமென்பதால், புதியதாக இங்கு வரும் வீரர்கள் தாங்கள் வைத்த பொருட்களை கண்டுபிடிப்பதிலேயே தொடக்க நாட்களை செலவிடுவார்கள்.

விண்வெளி வீரர்கள் எப்போதும் மிதந்துகொண்டே இருப்பார்கள் என்பதை நினைத்து அவர்கள் மகிழ்ச்சியாகவும், வேடிக்கையாகவும் உள்ளார்கள் என்று நீங்கள் நினைப்பீர்களேயானால் அது முற்றிலும் தவறு. விண்வெளி வீரர்களுக்கு நீண்டகாலத்தில் பல்வேறுவிதமான உடல்நல கோளாறுகள் ஏற்படும்.
பூஜ்ய ஈர்ப்பு விசையில் மனிதர்கள் குறிப்பிட்ட காலத்தை செலவிடும்போது ஏற்படும் உடல்ரீதியான பிரச்சனைகள் குறித்து ஆராய்வது சர்வதேச விண்வெளி நிலையத்தின் முக்கியமான நோக்கங்களில் ஒன்றாக உள்ளது. செவ்வாய் கிரகத்துக்கு மனிதனை அனுப்பும் திட்டத்திற்கு இதன் மூலம் கிடைக்கும் அனுபவங்கள் பயன்படுத்தப்படும்.

ஈர்ப்பு விசையற்ற சூழலில் வாழ்வதால் விண்வெளி வீரர்களின் எலும்புகள் உடையக்கூடிய தன்மையை அடைவதாகவும், தொடர்ந்து உடலை நகர்த்திக்கொண்டே இருக்கும்போது தசைகள் வலிமையற்று போவதாகவும் தெரியவந்துள்ளது.

மேற்குறிப்பிட்டுள்ள உடல்ரீதியான பிரச்சனைகளை தவிர்க்கும் வகையில் ஒவ்வொரு விண்வெளி வீரரும் அங்கேயே அமைக்கப்பட்டுள்ள மிதக்கும் உடற்பயிற்சி கூடத்தில் ஒருநாளைக்கு குறைந்தது இரண்டு மணிநேரம் உடற்பயிற்சி செய்கிறார்கள்.
பூமியில் இருப்பவர்களை போன்றே விண்வெளி வீரர்களின் வாழ்க்கையும் வார நாட்கள், வார இறுதி நாட்கள் என்று இரண்டாக பிரிக்கப்பட்டுள்ளது. வார நாட்களில் விண்வெளி வீரர்கள் தங்களுக்கென கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையின்படி இரண்டு பேர் சேர்ந்தோ, சிறு குழுவாகவோ பணியாற்றுகிறார்கள்.

வார நாட்களில் எப்போதாவது ஒருமுறைதான் அனைத்து வீரர்களும் ஒன்றாக மதிய உணவு உண்ணுகிறார்கள். வார இறுதிகளில் அனைத்து வீரர்களும் ஒன்றாக சேர்ந்து பேசிக்கொண்டு உண்ணுகின்றனர்.
சர்வதேச விண்வெளி நிலையத்தில் பல்வேறு நாடுகளை சேர்ந்த விண்வெளி வீரர்கள் பணிபுரிகிறார்கள் என்பதால், அவர்களுக்கான உணவிலும் பெரும் வேறுபாடு நிலவுகிறது. உதாரணத்துக்கு, ரஷ்ய விண்வெளி வீரர்கள் டின்களில் அடைக்கப்பட்ட உணவை சாப்பிடுவதற்கு முன்பு சூடுபடுத்திவிட்டு உண்ணுகின்றனர்.

பூமியில் இருப்பதைப்போன்றே தக்காளி சாஸ், கடுகு, மிளகாய் போன்றவை இங்கும் உள்ளது. ஆனால், உப்பு மற்றும் மிளகு ஆகியவற்றின் துகள்கள் ஓடத்தில் மிதக்கும் என்பதால் நீர்மநிலையில் அடைக்கப்பட்டு கொடுக்கப்படுகின்றன.

ஒவ்வொரு முறை சர்வதேச விண்வெளியத்திற்கு பூமியிலிருந்து பொருட்கள் கொண்டு செல்லப்படும்போது வீரர்களுக்கு பழங்களும் எடுத்துச் செல்லப்படுகின்றன. பூமியை விட விண்வெளியில் பொருட்கள் விரைவில் கெட்டுவிடும் என்பதால் வீரர்கள் பழங்களை உடனடியாக உண்டு விடுகின்றனர்.
ஒரே வேலையை தொடர்ந்து முற்றிலும் வேறுபட்ட சுற்றுசூழலில் மேற்கொள்வது வீரர்களுக்கு மன அழுத்தத்தை உண்டாக்கும் என்பதால், பழங்களை அனுப்புவதும், குழுவாக சாப்பிடுவதும், சிறப்பு தினங்களை கொண்டாடுவதும் வீரர்களின் மனவுறுதியை பேணும் முக்கியமான விடயங்களாக கருதப்படுகின்றன.

பூமியில் விண்வெளி சார்ந்த ஆராய்ச்சிகளை மேற்கொள்வதைவிட, விண்வெளியில் பூஜ்ய ஈர்ப்பு விசையில் தனித்துவமான முறையில் ஆராய்ச்சி செய்வதற்காகவே சர்வதேச விண்வெளி நிலையம் உருவாக்கப்பட்டுள்ளது.

சர்வதேச விண்வெளி நிலையத்திற்கு விண்வெளி வீரரொருவர் அனுப்பப்படுவதற்கு முன்னர், அங்கு மேற்கொள்ள வேண்டிய பணிகள், பரிசோதனைகள், கருவிகள் செயல்பாடு குறித்து பூமியில் அமைக்கப்பட்டுள்ள மாதிரி விண்வெளி கூடத்தில் பயிற்சி அளிக்கப்படும்.
சர்வதேச விண்வெளி நிலையத்தில் மொத்தம் ஐந்து ஆராய்ச்சி கூடங்கள் உள்ளன. ரஷ்யாவிற்கு சொந்தமாக இரண்டு சிறிய ஆராய்ச்சி கூடங்களும், அமெரிக்கா, ஐரோப்பா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கு தலா ஒரு ஆராய்ச்சி கூடங்களும் உள்ளன.

விண்வெளியிருந்து பூமியை படம் பிடிப்பது, தரவுகளை திரட்டுவது உள்ளிட்ட பணிகளோடு, ஒருசெல் உயிரிகள், எலிகள், எறும்புகள், மீன், புழுக்கள் ஆகியவற்றை பூஜ்ய ஈர்ப்பு விசையில் வைத்து பல்வேறு ஆராய்ச்சிகள் சர்வதேச விண்வெளி நிலையத்தில் மேற்கொள்ளப்படுகின்றன.
செவ்வாய் கிரகத்துக்கு மனிதனை அனுப்புவது உள்ளிட்ட பல்வேறு நாடுகளின் வருங்கால விண்வெளி தேடலுக்கு சோதனை கூடமாகவும் இது விளங்குகிறது.

சர்வதேச விண்வெளி நிலையத்தை பொறுத்தவரை வீரர்களின் செயல்பாடு பெரும்பாலும் ஓடத்தின் உள்ளேதான் இருக்கும் என்றாலும், தவிர்க்க முடியாத சில சமயங்களில் வீரர்கள் ஓடத்தின் வெளியே சென்று பழுது நீக்கும் பணிகளை மேற்கொள்ளும் மறக்கமுடியாத அனுபவத்தை வீரர்கள் பெறுவார்கள்.
இதுபோன்ற ஆபத்தான பணிகள் குறித்து கிட்டத்தட்ட ஒரு மாதத்திற்கு முன்னதாகவே திட்டமிடப்படுகிறது. ஒரு வீரர் சர்வதேச விண்வெளி நிலையத்தின் வெளிப்பகுதியில் ஏற்படும் பிரச்சனையை சரிசெய்வதற்காக வெளியே செல்வதற்கு முன்னதாக பிரத்யேக ஆடைகளை உடுத்திக்கொண்டு, கிட்டத்தட்ட 100 பக்கங்களை கொண்ட பாதுகாப்பு வழிமுறைகளை சார்பார்ப்பதற்கு நான்கு மணிநேரங்கள் ஆகும். அதுமட்டுமில்லாமல், பாதுகாப்பு காரணங்களுக்காக இதுபோன்ற பணிகளை இரண்டு வீரர்கள் மேற்கொள்கிறார்கள்.

ஒருமுறை இதுபோன்ற பணிகளுக்காக விண்வெளி வீரர்கள் வெளியே சென்றால் அதிகபட்சமாக எட்டு மணிநேரத்தை செலவிடுவார்கள். இதற்காக வீரர்கள் விண்வெளிக்கு செல்வதற்கு முன்னர் பூமியில் மிகப் பெரிய நீர்த்தொட்டியில் வைக்கப்பட்டுள்ள மாதிரி ஓடத்தில் பயிற்சி எடுக்கிறார்கள்.
ஒவ்வொரு தினமும் தங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள பணிகளை முடிந்தபின்பு மீதமுள்ள நேரத்தை தங்களது விருப்பம் போல் செலவிட்டுக்கொள்வதற்கு வீரர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். வீரர்கள் சர்வதேச விண்வெளி நிலையத்தில் இருந்துகொண்டே தங்களது குடும்பத்தினருக்கு போன் செய்யலாம்; மின்னஞ்சல் அனுப்பலாம்; திரைப்படங்களும் பார்க்க முடியும்.

சர்வதேச விண்வெளி நிலையத்தின் ட்ராங்குலிட்டி என்னும் பகுதியிலிருந்து கண்ணாடி வழியாக விண்வெளியிலிருந்து பூமியை பார்ப்பது விண்வெளி வீரர்களின் பொதுவான பொழுதுப்போக்காக உள்ளது. அதுமட்டுமின்றி, பூமியின் ஆச்சர்யமளிக்கும் வடிவத்தையும், அதிலுள்ள குறிப்பிட்ட நகரங்கள், காடுகள் குறித்த புகைப்படங்களையும் வீரர்கள் எடுக்கிறார்கள்.

சர்வதேச விண்வெளி நிலையத்தில் கிட்டார் வாசித்ததுடன், இசை காணொளி ஒன்றையும் தயாரித்த கிறிஸ் ஹாட்பீல்டு என்ற விண்வெளி வீரர் இதுநாள் வரை பிரபலமானவராக அறியப்படுகிறார்.
400 கி.மீ உயரத்தில் உள்ள விண்வெளி மையத்தில் தக்க பாதுகாப்போடு இருந்தும் இவ்வளவு கஷ்டமான வாழ்வியல் பிரச்சனைகளை சந்தித்த விண்வெளி வீரர்களிடம் , ஏழு வானம் தாண்டி நபி (ஸல்) மிஹ்ராஜ் என்னும் விண்வெளி பயணத்தை பிரத்யேக எந்த வித கதிர்வீச்சு உடையும் இல்லாமல் , விண்வெளிக்குரிய பயிற்சி ஏதுமில்லாமல் , அதுவும் இதய அறுவை சிகிச்சை முடித்து சில மணித்துளிகளில் நபியவர்களின் விண்வெளி பயணம் குறிப்பிட்டு கேட்டால் அவர்கள் என்ன சொல்வார்கள் ?

اَوْ يَكُوْنَ لَكَ بَيْتٌ مِّنْ زُخْرُفٍ اَوْ تَرْقٰى فِى السَّمَآءِ وَلَنْ نُّـؤْمِنَ لِرُقِيِّكَ حَتّٰى تُنَزِّلَ عَلَيْنَا كِتٰبًا نَّـقْرَؤُهٗ قُلْ سُبْحَانَ رَبِّىْ هَلْ كُنْتُ اِلَّا بَشَرًا رَّسُوْلًا
நீங்கள் வானத்தின் மீது ஏறியபோதிலும் நாம் ஓதக்கூடிய ஒரு வேதத்தை (நேராக) நம்மீது நீங்கள் இறக்கிவைக்காத வரையில் நீங்கள் வானத்தில் ஏறியதையும் நம்பமாட்டோம்" என்றும் கூறுகின்றனர். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: "என் இறைவன் மிகப் பரிசுத்தமானவன். நான் (உங்களைப் போன்ற) ஒரு மனிதன்தான். எனினும், நான் (அவனால் அனுப்பப்பட்ட) ஒரு தூதர் என்பதைத் தவிர வேறெதுவும் உண்டா?" (குர்ஆன்: 17:93)
ர. ரா

தொன்மங்களின் வரலாறு 23

(எங்கே என் யூசுப்? )



அண்ணன்மார்கள் யூசுப் (அலை) அவர்களிடம் , " நாங்கள்தான் உமக்குப் பெரும் தீங்கு இழைத்த போதினும் , நிச்சயமாக அல்லாஹ் எங்களை விட உம்மை உயர்த்தி எங்களுக்கு உதவி புரிவதற்கான நல்வாய்ப்பினையும் உமக்கு வழங்கினான் "

" அண்ணன்மார்களே! இன்றைய தினம் நான் உங்கள் மீது யாதொரு
குற்றத்தையும் சுமத்தவில்லை . அல்லாஹ்வும் உங்களின் குற்றங்களை மன்னிப்பானாக !
" நம் தந்தையார் எவ்வாறு உள்ளார்கள்?
" உங்களை பிரிந்ததன் காரணமாக அழுது அழுது கண்ணீர் வடித்து பார்வையை இழந்துள்ளார்கள் "
" இதோ என் சட்டை உள்ளது இதனை கொண்டு போய் நம் தந்தையார் முகத்தில் போடுங்கள்! கண்ணொளி மீளப்பெறுவர். பின்னர் நம் குடுபத்தினர் அனைவரையும் ஒருங்கழைத்து இங்கே மீளுங்கள் ! என்னுடனேயே வாழுங்கள் !"

இந்த நல்ல செய்தியோடு , யூசுப் (அலை) அவர்களின் சட்டையைப் பெற்றுக் கொண்டு ஒட்டகத்தை கன்ஆன் தேசத்திற்கு விரட்டினர்கள் .
நபி யாகூப் (அலை) அவர்கள் தம் குடும்பத்தார்களிடம் கூறியதை அல்லாஹ் குர்ஆனில் பதிவு செய்கிறான்
" (அவர்களுடைய) ஒட்டக வாகனங்கள் (மிஸ்ரை விட்டுப்) பிரிந்த நேரத்தில், அவர்களுடைய தந்தை, “நிச்சயமாக நான் யூஸுஃபின் வாடையை நுகர்கிறேன்; (இதன் காரணமாக) என்னை நீங்கள் பைத்தியக்காரன் என்று எண்ணாமல் இருக்க வேண்டுமே!” என்றார். (குர்ஆன்: 12:94)

சனிக்கிழமை எகிப்திலிருந்து புறப்பட்டு 240 மைல் தூரத்தைக் கடந்து வெள்ளியன்று கன்ஆன் வந்து சேர்த்தனர் .
அச்சட்டையை முகத்தில் போட்டதும் , யாகூப் (அலை ) அவர்களின் கண்கள் ஒளி பெற்று முன்பை விட அதிகமாக மின்னின .
பார்வையைப் பெற்றதும் தம்மக்களிடம் " "என் கண்மணி மகன் யூசுப் மிஸ்ர் தேசத்தில் எந்நிலையில் உள்ளார் ?"
" மிஸ்ர் தேச அரசாதிபத்தியத்தை மேற்கொண்டு செங்கோச்சுகின்றார் "
" அதைப்பற்றி நான் கேட்கவில்லை அரசாங்கத்தை வைத்துக் கொண்டு அவர் என்ன செய்யப் போகிறார்? நான் கேட்டது அவரை எம் மார்க்கத்தில் நீங்கள் இருக்கக் கண்டீர்கள் ? "
" அவர் நம் பாட்டனார் நபி இப்ராஹீமின் மார்க்கத்தில் இருந்து தங்களுடைய வழிமுறையைப் பின்பற்றி ஒழுகுவதையே நாங்கள் கண்டோம் "
" தந்தையே! மிஸ்ர் தேசம் புறப்பட ஆய்த்தமாகுங்கள் ! தங்களையும் நம் குடும்பத்தினர் அனைவரையும் அங்கு அழைத்துவருமாறு தம்பி கூறியுள்ளார் "

நபி யூசுப் (அலை) அவர்களின் குடும்பத்தாரை அழைத்து வர ,150 ஒட்டகங்களும் , 30 குதிரைகளும் , 20 கோவேறு கழுதைகளும் மிஸ்ர் தேசத்திலிருந்து கன்ஆன் தேசத்திற்கு எகிப்து அதிபர் ரியான் அனுப்பி வைத்தார் .

மிஸ்ர் தேசத்திற்கு குடிபெயர்வதற்கு நபி யாகூப் (அலை ) இறைவனின் விருப்பத்தை எதிர்நோக்கி காத்திருந்தார்கள் . இறைவனும் அனுமதி அளித்து வஹி அனுப்பினான் .
கன்ஆன் தேச மக்களிடம் அவர்கள் விடை பெறும் போது கன்மனத்தார் கண்களும் கூட கசிந்துருகி அழுதனர். இறுதியில் அவர்களும் பிரியா விடை கொடுத்து கன்ஆன் தேச எல்லை வரை வழி நெடுக நின்று வாழ்த்து கூறி அனுப்பி வைத்தனர் .

மிஸ்ரை நெருங்க நெருங்க அருமை மகன் யூசுப்பைக் காண வேண்டுமென்ற பேரவா யாகூப் (அலை) உள்ளத்தில் மிகைத்திருந்தது .
யாகூப் (அலை) அவர்கள் மிஸ்ருக்குள் நுழைந்த போது அவர்களை 3 லட்சம் குதிரை வீரர்களும் 12 ஆயிரம் வில்வீரர்களும் அணிவகுத்து வரவேற்றனர் .
இவரா யூசுப் ? இவரா யூசுப் ? என்று ஒவ்வொரு ஹாஜிப்கள் மொத்தம் 11 பேர் வந்து கொண்டே நபியவர்களை பணிவுடன் வரவேற்றனர் .

இறுதியாக யூசுப் (அலை) அவர் மணிமுடிதரித்து , வலப்புறம் எகிப்து அதிபர் ரியானும், இடப்புறம் அமைச்சர்களும் , பின்புறம் உம்ராக்களும் புடைசூழ வர .... யூசுப் (அலை) முன்னோக்கி வேகமாக முன் வந்து தந்தையை வரவேற்க ,
யாகூப் (அலை) அவர்கள் தன் மகன் யாஹூதாவிடம் ,

" அதோ எதிரில் மணிமுடி தரித்து வருபவர் மிஸ்ர் தேச அதிபர் ரியான் பின் வலீதா? "
"இல்லை தங்களின் அருமைத் திருமகன் யூசுப் "
அந்த ஒரு கணம் நபியவர்கள் ஓராயிரம் மகிழ்ச்சி அலையில் திக்குமுக்காடிப் போனார்கள் .
தன் மகன் மிஸ்ர் நாட்டின் அஸீஸாக மணிமுடித்தரித்து தன் முன் நின்றதும் யாகூப் (அலை) அவர்கள் ஈன்ற பொழுதினும் பெரிதும் உவந்தனர் .
அடுத்த கணம் ஒருவர் அணைப்பில் மற்றவர் சிக்கி மகிழ்ச்சிக் கண்ணீர் பொழிந்த வண்ணம் ஒருவர் தோளில் மற்றவர் தலைவைத்துச் சில கணம் மயக்க நிலையில் இருந்தனர் .
அவ்வளவுதான் மன்னர் மன்னரெல்லாம் யாகூப் (அலை ) காலில் விழுந்து முடிதரித்த தங்கள் தலையை வைத்துப் பணித்தெழும் காட்சியை வானலோக
மலக்குமார்மார்கள் எல்லோருமே கண்டனர் .
மலக்குமார்களுக்கு அந்நாளில் தாங்கள் அனைவரும ஆதம் (அலை) அவர்களுக்கு சுஜுது செய்த காட்சி அவர்களின் மனதில் வந்து போயிருக்கலாம் .நாமும் சுஜூது செய்து கொள்வோம் .
ர.ரா
(இத்துடன் தொன்மங்களின் வரலாறு தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது
அடுத்து ....? )

## சூஃபியாக்களின் பரிபாஷை 01

அபூ யஸீத் பிஸ்தாமி, ( கிபி 777 - 874 )
30 ஆண்டுகள் மௌனமாகவும் நாற்பது ஆண்டுகள் ஒரு பள்ளிவாசலில் தங்கியும் ஆன்மீகப் பயிற்சி மேற்கொண்ட பிஸ்தாமி
" நான் 30 வருஷமாக இறைவனைத் தேடிக் கொண்டிருந்தேன் கடைசியில்தான் தெரிந்தது தேடியது நானல்ல அவன்தான் என்று. தேடப்பட்டவன்தான் நான் "
' நிசப்தத்தின் விளக்கைப்போல ஒளி கொடுக்கும் விளக்கை நான் பார்த்ததில்லை " - என்றார் பிஸ்தாமி
இரவில் ஒருவர் பிஸ்தாமியின் வீட்டுக் கதவை தட்டினார் .
" யார் வேண்டும்? - வீட்டுக்குள்ளிருந்து குரல் கொடுத்தார் பிஸ்தாமி
" நான் பயாஸித் பிஸ்தாமியைத் தேடி வந்திருக்கிறேன் "
" கடந்த 30 வருஷமாக நானும் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறேன் " என்றார் பிஸ்தாமி
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 02

ஃபரீதுத்தீன் அத்தார் ( கி.பி 1120 - 1230 )
ஸூஃபியான அத்தார் அவர்களை மங்கோலிய தளபதி கைது செய்து கூட்டிச் சென்றான்.
வாசனை திரவிய அத்தார் தயாரிப்பதில் நுட்பம் தெரிந்தவர் . எனவே ஆயிரம் பொற்காசுகளுக்கு விற்க முடிவு செய்து ,
" அத்தார்! ஆயிரம் பொற்காசுகளுக்கு உம்மை விற்க முடிவு செய்துள்ளேன் "
" பொறுத்திரும் எனக்குரிய விலை இதுவல்ல "
மறுநாள் ஒருவன் அத்தாரை,
" ஒரு மூட்டை குதிரைக் கொள்ளுக்குத் தருகிறாயா? "
" சரியான விலை விற்று விடும்" என்றார் அத்தார்
மங்கோலிய தளபதி ஆத்திரமுற்று , அவரை வெட்டிக் கொல்லும் போது அவரது வாய் முணுமுணுத்தது :
" உடலுக்குள் ஆன்மா மறைந்துள்ளது
ஆன்மாவுக்குள் நீ மறைந்துள்ளாய் .
மறைந்திருப்பதில் மறைந்திருப்பவனே,
நீயே எல்லாம் "
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 03

(சிறைப்பறவை)
'அப்துல் கரீம் ஜீலீ ' என்ற ஸூஃபி. ஆட்சியாளர்களின் கருத்துக்கு மதிப்பு கொடுக்காததால் அதிக வருடங்கள் சிறையில் கழித்ததால் ' ஜீலீ ' (கைதி ) இவர் பெயருடன் சேர்ந்து கொண்டது .
ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குளித்து விட்டு நல்ல உடையைப் உடுத்திக் கொண்டு ஜும்மா கூட்டுத் தொழுகைக்காக ஜெயில் கதவு வரை போவார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்.
இப்படி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செய்வார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்..
" ஏன் இப்படி செய்கிறீர்கள்? உங்களைத்தான் வெளியே விட மாட்டார்களே " என்று கேட்கப்பட்டது .
" தெரியும். என் சக்திக்கு அப்பாற்பட்டதை நிறைவேற்றாததைப் பற்றி என்னை குறை சொல்ல முடியாது . ஜெயில் கதவுகளை திறப்பது என் கையில் இல்லை ; என்றாலும் , ஜும்மாவுக்காக கதவு வரை போவது என் கையில்தானே உள்ளது ? என்னால் முடிந்ததை மட்டுமாவது நான் நிறைவேற்ற வேண்டும் அல்லவா ? "
ஏழு வானம் தாண்டிய பெரு வெளி எல்லையின் ஆரம்பம் இவரின் சிறைக் கதவின் வாசலிருந்துதான் ஆரம்பிக்கிறது என்பதை இங்கு யார் அறிவர் ?
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 04
(மன ஓர்மை)
ஜுனைதுல் பக்தாதி (ரஹ்)
(கிபி 830 - 910)
ஒரு நாள் ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) தெருவில் போய் கொண்டிருந்தார். தூக்கிலிடப் போகும் திருடனைப் பார்த்தார். அந்த உடனே அவனருகில் சென்று அவனது பாதங்களை முத்தமிட்டார் .
அந்த வினோத செயல் பார்த்தவர் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது.
" ஏன் இப்படி செய்தீர்கள்? "
" அவன் தன் தொழிலில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தி திறம்படச் செய்தான் .அதற்காகவே தன் இன்னுயிரையும் விட்டிருக்கிறான்
ஒரு திருடனுக்கு திருடும்போது இருக்கும் மன ஓர்மை ஒரு பக்தனுக்கு ஆன்மீகத்தில் இருந்தால் நிச்சயம் வெற்றி கிடைக்கும் . அதனால்தான் அப்படிச் செய்தேன் " என்றார்
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 05

(இறைவனோடு மட்டுமே நட்புறவு)
இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ் ) அவர்கள் தம் தோழர்களுடன் அமர்ந்திருக்கும் போது ,சிற்றரசன் ஒருவன் தன் ஊழியன் மூலம் ' பலக் நாட்டு மன்னராக இருந்தவரே ' என்றெண்ணி, பதினாயிரம் திர்ஹங்களை அன்பளிப்பாக அனுப்பி வைத்தான். அவற்றை அவர்கள் ஏற்றுக் கொள்ளாது ,
" இவற்றை உம் அரசனிடமே கொண்டு போய்க் கொடுத்துவிடு. இவை அவரிடம் இல்லையெனில் அவரின் கூட்டத்தினர் ஒருவரும் அவரோடு அண்டி இருக்க மாட்டார்கள் .
அவை என்னிடம் இருப்பின் என்னுடைய கூட்டத்தினர் ஒருவரும் என்னோடு அண்டி இருக்க மாட்டார்கள் " என்று கூறித் திருப்பி அனுப்பி விட்டார்கள்.
" தாங்கள் ஏன் எவருடனும் நட்புறவாடாது ஒதுங்கி வாழ்கிறீர்கள்? "
" நான் என்னை விடத் தாழ்ந்தவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் தங்களின் மடமையினால் என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்குவார்கள்
எனக்குச் சமமானவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் என் மீது பொறாமையுறுவார்கள் .
என்னை விட உயர்ந்தவர்களுடன் நட்புறவாடினால் அவர்கள் என்னை இழிவுக் கண்களுடன் நோக்குவார்கள் .
எனவே மனிதர்களுடன் நட்புறவாடுவதை விட்டொழித்து இறைவனுடன் நட்புறவாடுவதில் என் நேரத்தை கழிக்கிறேன். அதிலே எனக்கு இன்பமேயன்றி துன்பம் ஏற்படுவதில்லை "
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 06

(அற்புதத்தை எதிர்ப்பார்க்காதீர்)
அப்துல் வாஹித் இப்னு ஸைத் (ரஹ்) அவர்கள் கூறுவது :
"ஒரு நாள் நானும் ஐயுப் ஸஹத்தியானியும் காட்டு வழியே சென்று கொண்டிருந்தோம். வழியில் ஒரு நீக்ரோ அடிமை தலையிலே விறகு கட்டு ஒன்றை மிகுந்த சிரமத்தோடு சுமந்த வண்ணம் எதிர்ப்பட்டார் . நாங்கள் அவரை எதையாவது கேட்டு சோதிப்போம் என்றெண்ணி ,
" உம் இறைவன் யார்? "
" என்னிடமா இந்தக் கேள்வி கேட்கிறீர்?"
" ஆம் உம் இறைவன் யார்? "
அந்த நீக்ரோ அடிமை விறகு கட்டை கீழே இறக்கி வைத்து விண்ணை நோக்கி,
" படைப்பவனே! (காலிக்கே ! ) இந்த விறகு கட்டுகளை தங்க கட்டியாக ஆக்கு"
அத்தனையும் தங்க கட்டிகளாக மின்னியது . உடனே மீண்டும் விண்ணை நோக்கி ,
"படைப்பவனே! (காலிக்கே ! ) இந்த தங்க கட்டிகளை மீண்டும் விறகாக ஆக்கு"
மீண்டும் விறகானது .ஒரு புன்முறுவல் பூத்து விட்டு , " இதைச் செய்ய ஆற்றலுடையவன்தான் என் ரப்பு "
" எங்களுக்குப் பசியாக இருக்கிறது தங்களிடம் ஏதாவது உணவு இருக்கிறதா ? "
உடனே அவர் தம் கையால் சமிக்ஞை செய்தார் . ஒரு தட்டில் தேன் இருந்தது அந்தத் தேன் பனிக்கட்டியை விட வெண்மையாகவும் , கஸ்தூரியை விட மணமுற்றதாகவும் இருந்தது .
அப்போது அந்த நீக்ரோ அடிமை
." இதனை நன்றாக புசியுங்கள் .இது ஈக்களின் வயிற்றிலிருந்து கிடைக்கும் தேன் அல்ல "
நாங்கள் உண்டோம் . அதைப் போன்று இனிமையான உணவை இதற்கு முன் உண்டதே இல்லை. எங்களின் வியப்பை எங்களின் முகக்குறியால் உணர்ந்த அவர் ,
" இத்தகு அற்புதச் செயல்களைக் கண்டு வியப்புறுவோர் மெய்ஞ்ஞானிகளாக மாட்டார்கள் ஒருவர் இவற்றைக் கண்டு வியப்புற்றால் அவர் இறைவனை விட்டும் தொலைவிலாகி விடுவார். ஒருவர் இவற்றைக் கண்டு இறைவனை வணங்கின் அவர் அறிவீனராகி விடுவார் " என்று கூறி விறகு கட்டை சிரமத்தோடு தலையில் வைத்து மீண்டும் புன்முறுவல் பூத்து அவர் வழியே போனார் அந்த நீக்ரோ அடிமை .
"இப்போ நீங்கள் சொல்லுங்கள் அவரது இறைவன் யார் ?

## ஸூஃபியாக்களின் பரிபாஷை 07

(மறைத்த உண்மை)
"ஸூஃபி " என்ற வார்த்தை அரபி மொழியில் உள்ளது. இது "ஸூஃபிஸம்" என்ற ஆங்கில வார்த்தையாகி உலகமெங்கும் பரவலாக பயன்படுத்தப்படுகிறது அரபியில் "தஸவ்வுஃப்" என்ற சொல்லிலும் "ஸூஃப்" இருக்கிறது.
ஸூஃபித்துவத்தின் அடிப்படையும் இஸ்லாத்தின் அடிப்படையும் ஒன்றுதான் அதன் பெயர் "தவ்ஹீது "ஏகத்துவம் என்றும், இறைவனின் ஒருமை என்றும் இது மொழி பெயர்க்கப்படுகிறது . இஸ்லாத்தின் உயிரான விஷயமும் இதுதான்
தவ்ஹீத்தின் அடிப்படையில் பார்த்தால் எல்லாமே மாயைதான், ஏனெனில் தனியாக வும் எல்லையுள்ளதாகவும் தெரிவதெல்லாமே எல்லையற்ற ஒன்றின் இருப்பில் தெரிபவைதான்.
"எங்கு திருப்பினாலும் தெரிவது இறைவனின் திருமுகமே. நிச்சயமாக இறைவன் எல்லையற்றவன், மிகப் பெரியவன், எல்லாம் அறிந்தவன் என்கிறது திருமறை (2:115)
இந்த மாய முகம் நமக்குத் தெரியவில்லை ஆனால் அதனை ஸூஃபியாக்கள் கண்டும் பேசியும் ,ஈசல்கள் போல் அதில் வெந்தும் சுகிக்கிறார்கள் இதை விட வேறு என்ன சொல்ல அவர்களைப் பற்றி ..,,
இறைவா ..
"எனக்கு நீ வெளிப்படுத்திக் காட்டிய உண்மையை இந்த மக்களுக்கும் வெளிப்படுத்தியிருந்தால் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது "
இறைவா....
"இந்த மக்களுக்கு எந்த உண்மையை நீ மறைத்தாயோ அந்த உண்மையை எனக்கு நீ மறைத்திருந்தாலும் எனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காது" என்று
"அனல் ஹக் " (நானே உண்மை) என்றுரைத்து மரண தண்டனைப் பெற்ற மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்
ர.ரா

## ஸூஃபியாக்களின் பரிபாஷை 08

(தஸவ்வுஃப் என்றால் என்ன?

இக் கேள்வியை ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கேட்டதற்கு, தஸவ்வுஃப் என்றால் " எதிலும் தொடர்பின்றி அல்லாஹ்வுடன் ஒன்றித்து இருத்தல் "

" செயல்முறை விளக்கம் ஏதாவது சொல்ல முடியுமா? "

" தஸவ்வுஃப் எட்டு நபிமார்களின் நற்பண்புகளின் மீது எழுப்பபட்டதாகும் "

- தம் அன்புத் திருமகனார் இஸ்மாயீல் (அலை) அவர்களை இறைவனுக்காகப் பலியிட முன்வந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் #தியாகம்
- தம் இன்னுயிரை இறை கட்டளைக்குக் கீழ்படிந்து இழக்க முன் வந்த இஸ்மாயீல் (அலை) அவர்களின் #இணக்கம் .
- துன்பத்தை இன்பமாகக் கருதி எவ்வித முணக்கமும் இன்றி நோயை சகித்துக் கொண்ட ஐயூப் (அலை)
- அவர்களின் #பொறுமை
- ஜகரிய்யா (அலை) அவர்களை நோக்கி இறைவன் , "நீர் மூன்று நாட்கள் வரைச் சாடையாகவன்றி மனிதர்களுடன் பேசமாட்டீர் குர்ஆன் 3:41 என்று கூறியதற்கேற்ப ஜகரிய்யா (அலை) மேற் கொண்ட #மௌனம்
- தம்முடைய நாட்டிலேயே ஓர் அந்நிய நாட்டான் போன்றும், தம்முடைய உறவினர்களிடையே அயலான் போன்றும் வாழ்ந்த யஹ்யா (அலை) அவர்களின் #பற்றற்ற-தன்மை .
- உலகப் பொருள்களை வெறுக்கத் தொடங்கி , தம்மிடம் ஒரு சீப்பையும், ஒரு குவளையுமே வைத்திருந்து , ஒருவர் தம் கையால் தண்ணீர் அள்ளி பருகுவதைக் கண்டு குவளையையும் , ஒருவர்

தம் விரல்களால் தம் தலைமுடியை ஒழுங்கு செய்வதைக் கண்டு தம்மிடமிருந்த சீப்பையும் தூக்கி எறிந்த ஈஸா (அலை) அவர்களின் #துறவு

- கம்பளி உடையணிந்து தம்மை வருத்திக் கொள்ளும் நபி மூஸா (அலை) அவர்களின் #இயல்பு

உலகக் கருவூலங்களின் திறவுகோலை அவர்களுக்கு இறைவன் அனுப்ப , " இறைவனே ! அவற்றை நான் விரும்பவில்லை .ஒரு நாளைக்கு எனக்கு உணவைத் தா ; அடுத்த நாளைக்கு என்னைப் பசித்திருக்கச் செய் " என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பிய #ஏழ்மை

ர.ரா

கராமத் என்னும் அற்புதத்தை ஏன் சொல்லவில்லை ?

சூஃபியாக்களின் கராமத் என்னும் அற்புதத்தை ஏன் சொல்லவில்லை ?
என்று கேட்கிறார்கள் . அவ்வுலியாக்கள் என்றாலே கராமத் தானா ?
இந்த தொடரின் சாரம் சூஃபியாக்களின் பரிபாஷை எனும் சொல்லாடல்கள் குறித்துதானே தவிர, கராமத்தைப் பற்றி அல்ல .
இந்த பரிபாஷைகள் மூலம் அவர்கள் சொன்னதிலிருந்து இறைவனை அவர்கள் அறிந்து கொண்டதையும், அதன் மூலம் அவர்களின் தர்ஜா இறைவன் உயர்த்தியதையும் பற்றிதான் நான் சொல்ல வருகிறேனேத் தவிர வேறில்லை !
கராமத்திற்கென்று பிற்பாடு ஒரு புதிய தொடர் ஆரம்பித்து எழுதலாம் . அதை வியக்கலாம் . அது தனி .
ஆனால் பொதுவாக கராமத் என்னும் அற்புதத்தை எந்த சூஃபியாக்களும் விருப்பப்பட்டு செய்ததாக தெரியவில்லை.
கராமத்தைப் பற்றி , ஒரு பெண் தன் முதல் மாதவிடாய் விஷயத்தைப் பற்றி சொல்ல எவ்வளவு கூச்சப்பட்டு தயங்குவாளோ அதைவிட மேலாக சூஃபியாக்கள் தங்கள் கராமத்தை செய்து காட்ட தயங்குகிறார்கள் என்பதாக நான் படித்திருக்கிறேன் .
கராமத் பற்றிய இத்தொடரின் 6-வது பதிவில் வரும் நீக்ரோ அடிமை இதற்கு நல்ல உதாரணம் . படித்துப் பாருங்கள்
கேட்ட நண்பர்கள் வருத்தப்பட வேண்டாம் அந்த கராமத்தையெல்லாம் செய்வதற்கு அவர்கள் கற்ற பாடத்தை , அனுபவத்தை , கஷ்டத்தை , பட்ட கேவலத்தை முதலில் உள் வாங்கி விளங்கிக் கொள்வோம் .
இந்த பதிவின் மூலம் உங்கள் வாழ்வில் சகிப்புத்தன்மை , தீவிர இறை சிந்தனை போன்ற நற்குணங்களால் மாற்றம் கிடைக்கப்பெற்றால் , என் பதிவுகள் இறை இடத்தில் நல்ல அங்கீகாரம் பெறலாம். இல்லையேல் மஹாராஷ்டிரத்தில் ஆட்சி மாற்றம் என்ற செய்தி போல இதுவும் கடந்து போகலாம்
வேறென்ன சொல்ல ?
ர.ரா

சூஃபியாக்களின் பரிபாஷை 09

(நல்லதொரு அறிவுரை)
பலக் தேச சூஃபி ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் மாணவர்களோடு உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது,
"நான் இறைவன் பேரில் ' தவக்கல்' வைத்து ஹஜ்ஜுச் செய்யக் கிளம்பினேன். அப்போது என் சட்டைப் பையில் ஒரு சிறு நாணயம் மட்டும் இருந்தது . நான் ஹஜ்ஜுச் செய்து விட்டுத் திரும்பிய பொழுதும் அந்த நாணயம் என் சட்டைப் பையிலேயே உள்ளது "
அப்பொழுது ஒரு மாணவர் , " ஷைகு அவர்களே ! தங்களின் சட்டைப் பையில் ஒரு சிறு நாணயம் இருக்கும்பொழுது தாங்கள் எவ்வாறு இறைவன் மீது தவக்கல் (இறை ஆதரவு ) ஹஜ்ஜுப் பயணத்தை மேற்கொண்டதாகக் கூற இயலும் ? "
அது கேட்ட ஷைகு ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் , " நீர் கூறுவது நிரம்பச் சரி , ஒருவன் இறைவன் மீது முழு ஆதரவு வைக்கும்பொழுது சட்டைப் பையில் ஒரு சிறு நாணயத்தையும் தன் உணவுச் செலவுக்காக வைத்து கொள்வதற்கு இடமில்லை தான் "
ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் மாணவர்களுக்கு அறிவுரை வழங்கிக் கொண்டிருக்கும் போது , ஒரு இறை மறுப்பாளன் அவர்களிடம் ...
" நீங்கள் உருவமற்ற ஓரிறைவனை வணங்குவதாகக் கூறுகின்றீர்கள் ஆனால் நீங்கள் உண்மையில் நீங்கள் உணவையே வணங்கிக் கொண்டுள்ளீர்கள் "

ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் சிறிது கூட கோபப்படாமல் தம் மாணவர்களை நோக்கி , " இது நல்லதொரு அறிவுரையாக உள்ளது .இதனையும் எழுதிக் கொள்ளுங்கள் "
இதைக் கண்ட இறை மறுப்பாளன் ,
" ஐய! தாங்கள் உண்மைக்கு உயரிய இடம் கொடுத்து அதனை இறை மறுப்பாளனாகிய நான் கூறியபோதினும் தாங்கள் ஏற்றுக் கொண்டதோடு தங்களின் மாணவர்களையும் எழுதிக் கொள்ளுமாறு பணித்தீர்கள் . தங்களின் மார்க்த்தின் மேன்மையை இப்போது நான் உணர்ந்து கொண்டேன் . அந்த மேதகு மார்க்கத்தில் நானும் இப்போதே இணைந்து விடுகிறேன் "
ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் அவருக்கு கலிமாவைப் போதித்து இஸ்லாத்தில் இணைந்தபின் அவரை நோக்கி ,
" உண்மை எங்குக் கிடைப்பினும் அதனை ஏற்றுச் செயலாற்ற வேண்டும் என்பதே இஸ்லாம் கற்பிக்கும் பாடமாகும். மேலும் ,
" நபி(ஸல்) அவர்களும் "அறிவு என்பது இறை நம்பிக்கையாளரின் மேலான பொருளாகும் . அது ஓர் இறை மறுப்பவனிடமிருந்து கிடைத்த போதினும் அதனை ஒரு முஸ்லிம் ஏற்றுக்கொள்ளத் தயங்கக் கூடாது "
ர.ரா

சூஃபியாக்களின் பரிபாஷை 10

(கிள்ரு (அலை) அவர்கள் அறியாத சூஃபி)
அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) பக்காத்திலிருந்து வந்து மக்கா முக்கரமாவின் அருலேயே தங்கி வாழ்ந்தார்கள் .
ஒரு நாள் பனூ ஷைபா வாசலின் அருகே தலை குனிந்த வண்ணம் ரொம்ப நேரமாக நின்று கொண்டிருந்த பொழுது அவ்வழியே வந்த பெரியவர் ஒருவர் , ஸலாம் சொல்லிவிட்டு , அவரிடம்
" மகாமெ இப்ராஹீமு க்கு நீர் வரவில்லையா? அங்கு ஒருவர் நபிமொழிகளை விளக்கம் செய்கிறாரே " என்றார் பெரியவர் .
" எவர் எவர் வாயிலாக அவர் நபிமொழிகளை அறிந்து விளக்கம் செய்கிறார்? " என்று கேட்டார் கத்தானி(ரஹ்) அவர்கள்
" அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா ஸுஹ்ரி அப்துல்லா இப்னு மஃமர்... இப்படி வழியாக வந்த நபிமொழிகளை அவர் விளக்கம் செய்கிறார் " என்றார் பெரியவர்.
" அப்படியா! அவர் சங்கிலித் தொடர் போன்று பலர் வாயிலாகக் கேட்டறிந்தவைகளை வைத்துதான் விளக்கம் செய்கிறார் .ஆனால் நாமோ எவ்விதத் தொடர்பு மூலமாக இல்லாமல் நேரடியாகவே கேட்டறிகிறோம் " என்றார் கத்தானி (ரஹ்) அவர்கள்
" நீர் எவரிடமிருந்து கேட்டறிகிறீர்? "
" இறைவனிடமிருந்து நேரடியாக என் உள்ளம் கேட்டு, எனக்குத் தெரிவிக்கிறது "
அது கேட்டு அந்த பெரியவர் விடவில்லை.
" நீர் கூறுவது உண்மை என்பதற்கு என்ன ஆதாரம்? " என்று மடக்கினார் பெரியவர்
சற்று புன்முறுவல் பூத்து கத்தானி (ரஹ்) அவர்கள் , "ஆதாரமா ? இப்பொழுது என் மனம் , தாங்கள் கிள்ரு (அலை) என்று கூறுகிறது . இதைத் தாங்கள் மறுக்க முடியாது "
அது கேட்டு, அப்பெரியவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவேயில்லை .
இதைப் பற்றி கிள்ரு (அலை) அவர்கள் , பின்னர் ஒருவரிடம் , " நான் அபூபக்ர் அல் கத்தானியைச் சந்திக்கும் வரையில் நான் அறியாத இறைநேசர் செல்வர்கள் ஒருவருமில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தேன் . நான் அவரை யார் என அறியாதபொழுது அவர் என்னை எவரென அறிந்திருந்தார் . அதன் பின் தான் நான் அறியாத ஆனால் என்னை அறிந்த பல நண்பர்களை இறைவன் பெற்றுள்ளான் என்ற உண்மை இன்று எனக்குத் தெரிய வந்தது " என்றார்கள் .
ர.ரா

ஸூஃபியாக்களின் பரிபாஷை 11

(ஞானப் பாட்டையின் படித்தரங்கள்)

கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் , ஈராக் காட்டினில் கடும் தவம் புரிந்து கொண்டிருக்கும் வேளையில் ஞானக் கொந்தளிப்பின் காரணமாக காட்டினில் தலைதெறிக்க ஓடுவார்கள் . வெருண்டோடிய அவர்கள் ஓரிடத்தில் மயக்கமுற்றுக் கீழே விழுவர்.

அப்படி ஒரு தடவை ஓடி மயக்கமுற்று எழுந்த போது அவ்விடம் , பாக்தாதிலிருந்து பன்னிரண்டு நாட்கள் பயணத் தொலைவிலுள்ள " துஸ்தர் " நகரில் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள் .

" நாம் சற்றுத் தொலைதானே ஓடினோம், அதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டோமே!

' ஷரியத் நிலையில் செய்யப்படும் சிறு செயல்கள் மஃரிபத் நிலையில் மிகப் பெரிய பலனை கொடுக்க வல்லது ' என ஞானாசிரியர்கள் இச்செயலைக் குறித்து கருத்து தெரிவிக்கிறார்கள்

"யா கௌதே! ஞானப்பட்டையின் படித்தரங்கள் என்னென்ன ? "

முதலில் " #தவக்குல் " என்ற வாயிலை வந்தடைந்தேன் . அங்கே அல்லாஹ்வே தஞ்சம் என்று கொண்ட ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

அல்லாஹ்வையன்றி வேறொன்றும் தேவையற்ற " #கினாஃ " என்னும் வாயிலை அடைந்தேன். அங்கும். ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

அல்லாஹ்வை அண்மித்தல் என்ற "#க்ரூப் " என்ற வாயிலை வந்தடைந்தேன் . அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

நான் " #ஷுக்ர் " என்ற வாயிலை அடைந்தேன் , அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

இறைவனின் அற்புதக் காட்சிகள் நிரம்பிய " #முஷாஹதா " என்ற வாயில் என் கண்களில் பட்டது. அங்கும் ஞானவான்கள் நிரம்பி வழிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். பின்னர் அதை விட்டும் நீங்கி அடியெடுத்து நடந்த போது ....

இறுதியாக அல்லாஹ்வின் மாண்புமிகு திருவாயிலாகிய " #ஃபக்ரு " என்ற வாயிலை அடைந்தேன் .அங்கு எவ்விதமான நெரிசலோ, கூச்சலோ இல்லை . எங்கும் நிசப்தம் , எங்கும் அமைதி ...அமைதி ... அமைதி மட்டுமே நிலவியது . என் குறிக்கோள் அங்குதான் நிறைவேறியது . மாபெரும் சாயுச்சிய ஞானப் பேற்றினை நான் கிடைக்கப் பெற்றேன் " .

ர.ரா

சூஃபியாக்களின் பரிபாஷை 12

(இறைக்காதல் எனும் பெருந் தீ)



ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் தவ மடத்தில் பெருந் தீயும் , அதையும் தாண்டி ஒரு கொப்பரையில் வெந்நீர் கொதித்திக் கொண்டே இருக்க வெந்தழல் நெருப்பு பற்றி எரிந்து கொண்டே இருக்கும்.
ஷைகு அலீ (ரஹ்) அவர்களிடம் தீட்சை பெற வருபவர்களிடம் , " எவர் வரினும் அந்த நெருப்புக் குண்டத்தைத் தாண்டி கொதி நீர் கொப்பறையில் குதித்து முழ்கி உடல் தூய்மை பெற்று வாரும் பின்னர் அகத்தூய்மை , ஆன்மீகத் தூய்மை பெற்றுக் கொள்ளலாம் "

இதனால் யாருமே அவர்களிடம் தீட்சை கேட்டு வருவதில்லை .
ஓர் இளவல் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் முன் வர ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் " எவர் வரினும் அந்த நெருப்புக் குண்டத்தைத் தாண்டி கொதி நீர் கொப்பறையில் குதித்து முழ்கி உடல் தூய்மை பெற்று வாரும் பின்னர் அகத்தூய்மை , ஆன்மீகத் தூய்மை பெற்றுக் கொள்ளலாம் " என்று சொல்லி முடிப்பதற்குள் ,
வெந்தழல் நெருப்பில் குளித்து , கொதிக்கும் வெந்நீரில் முழ்கி வெளி வந்தார்கள் அந்த இளவல் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் ஷைகின் கரம் பிடித்து , தீட்சை நல்கி தம் ஞானப் பாட்டையில் இணைத்து அந்த இளவலுக்கு " நத்ஹர் " என்று பெயர் சூட்டினார்கள் ஷைகு அலீ (ரஹ்)
இது பற்றி நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் கேட்ட போது, " இறைவனின் நல்லடியார்களின் உள்ளத்தில் இறைக் காதல் என்ற வெந்தழல் எப்பொழுதுமே தகித்துக் கொண்டே இருக்கும் . அதன் உக்கிரத்தைக் கண்டு நரகம் கூட நடுங்கும். அத்தகு காதல் நெருப்பை தன்னுடைய அமானிதமாக ஏற்றுக் கொள்ளுமாறு வானம் , பூமி ,சுவனம் , நரகம், ஜின் , வானவர் ஆகிய அடங்கலிடமும் இறைவன் கூறினான் என்று குர்ஆன் வசனத்தை ஓதி

اِنَّا عَرَضْنَا الْاَمَانَةَ عَلَى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَالْجِبَالِ فَاَبَيْنَ اَنْ يَّحْمِلْنَهَا وَاَشْفَقْنَ مِنْهَا وَ حَمَلَهَا الْاِنْسَانُ اِنَّهٗ كَانَ ظَلُوْمًا جَهُوْلًا ۙ
நிச்சயமாக "(நம்முடைய) பொறுப்பைச் சுமந்து கொள்வீர்களா?" என்று நாம் வானங்கள், பூமி, மலைகள் ஆகியவற்றிடம் வினவினோம். அதற்கு அவை அதனைப் பற்றிப் பயந்து, அதனைச் சுமந்து கொள்ளாது விலகிவிட்டன. அத்தகைய பொறுப்பைத்தான் மனிதன் சுமந்துகொண்டான். (ஆகவே) நிச்சயமாக அவன் அறியாமையால் தனக்குத்தானே தீங்கிழைத்துக் கொண்டான். (குர்ஆன்: 33:72)

.... ஆனால் அந்த அமானிதத்தின் சுமையைத் தங்களால் தாங்க இயலாது என்று அனைத்தும் ஒருமித்துக் கூறி விட்டன. அத்தகைய அமானிதத்தை மனிதனே ஏற்றுக்கொள்ள முன் வந்தான்.
இது " இஷ்கெ இலாஹி " என்ற இறைக் காதல் என்ற பெருந் தீ , இது எவனுடைய உள்ளத்தில் தக தக வென தகித்துக் கொண்டிருக்கின்றதோ , அவன் அந்த பொசுக்கும் தீக் குழம்பில் குதித்து , கொதிக்கும் நீரில் முழ்கி வெளிவர முடியும் . உள்ளத்தின் அந்தீக் குழம்பு அதனை எதனாலும் எதிர்த்து நிற்க முடியும் ? " என்று கூறினார்.
இதனை சற்று உதாரணத்துடன் சொல்றேன் .

நான்கு சதவீதங்கள் போக, அண்டத்தின் எஞ்சிய 96% வீதமும் வீணாக வெறுமையாக கருமையாக இருக்கின்றன என்றுதான் முன்னர் நினைத்திருந்தார்கள்.

وَمَا خَلَقْنَا السَّمَآءَ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا لٰعِبِيْنَ
வானங்களையும், பூமியையும், அதற்கு மத்தியில் உள்ளவைகளையும் வீண் விளையாட்டுக்காக நாம் படைக்கவில்லை. (குர்ஆன்: 21:16)
ஆனால் அவை வெறுமையில்லை. கரும் சக்தி (Dark Energy), கரும் பொருள் (Dark Matter) என்னும் இரண்டினால் நிரம்பி இருக்கிறது.

கரும் சக்தி, கரும் பொருள் ஆகியவை பற்றி விளக்கமாகப் பார்க்கப் போனால் அதற்குள்ளிருந்து நாம் வெளிவராமல் போகலாம் . இருந்தாலும் கரும் சக்தி பற்றி மட்டும் ஒரு சிறு உதாரணத்தைச் சொல்லிவிட்டு மேலே தொடர்கிறேன்.

டார்க் எனர்ஜி (Dark Energy) என்று சொல்லப்படும் கருமையான மிகை வலுச் சக்தியொன்று, நமது அண்டம் பூராவும் பரந்திருக்கிறது. அண்டத்தின் 73% இந்தச் சக்தியினால்தான் நிரப்பப்பட்டு இருக்கின்றது.
பூமியில் வாழும் நாம் எத்தனையோ விதங்களில் சக்திகளைக் கண்டிருக்கிறோம். அவற்றுள் அணுசக்தியையே மிகவும் வலுவானது என்றும் உணர்ந்திருக்கின்றோம். உலகில் உள்ள நாடுகள் எல்லாமே, அணுசக்தியின் மூலமாக, மின்சாரத்தைப் பெற்றுக் கொண்டு இருக்கின்றன. அணுசக்தியின் பின் விளைவுகள் மிகப் பயங்கரமானவை என்று தெரிந்தாலும், வேறு வழியின்றிப் பல நாடுகள் அதைப் பயன்படுத்தி மின்சாரத்தைப் பெற்றுவருகின்றன. ஆனால், பேரண்டத்தில் உள்ள டார்க் எனர்ஜியுடன் (கரும் சக்தியுடன்) அணுசக்தியை ஒப்பிட்டால், அணுசக்தி ஒன்றுமே இல்லை என்னும் ரகம்தான்.
டார்க் எனர்ஜியை ஒரு தேனீர் கலக்கும் கரண்டி (Teaspoon) அளவு சேகரித்து எடுத்தோமானால், அதை வைத்துக் கொண்டு, பூமியில் உள்ள அனைத்து நாடுகளுக்கும், நூறு வருடங்களுக்கு இருபத்திநான்கு மணி நேரமும் தடையில்லா மின்சாரம் வழங்கலாம். என்ன உங்களால் இதைக் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை அல்லவா?

உண்மைதான், அவ்வளவு சக்தி வாய்ந்தது இந்தக் கரும் சக்தி என்பதை விஞ்ஞானம் உலகம் கண்டு பிடித்திருக்கிறது .ஆனால் அதை எப்படிச் சேமிப்பது என்பதில்தான் பல விஞ்ஞானிகள் மூளையைப் போட்டுப் புரட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

اَلَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ ۛ اَلرَّحْمٰنُ فَسْـــَٔـــلْ بِهٖ خَبِيْرًا
அவன் எத்தகையவனென்றால் வானங்களையும், பூமியையும், இவைகளுக்கு மத்தியில் உள்ளவைகளையும் ஆறு நாள்களில் படைத்தான். பின்னர், அவன் "அர்ஷின்" மீது (தன் மகிமைக்குத் தக்கவாறு) உயர்ந்து விட்டான். அவன்தான் ரஹ்மான். (ரஹ்மான் எனப்படுபவனும் அல்லாஹ் எனப்படுபவனும் ஒருவனே.) இதைப் பற்றித் தெரிந்தவர்களைக் கேட்டறிந்து கொள்ளுங்கள்.
(அல்குர்ஆன்: 25:59)

ட்ரில்லியன் ட்ரில்லியன் நட்சத்திரங்களும், கோள்களும் இருக்கும் அண்டத்தில் 73% நிறைந்திருக்கும் இந்தக் கரும் சக்தியை, எப்போது மனிதன் தன் கைவசப் படுத்துகிறானோ, அப்போது அண்டத்தின் வலுமிக்க முக்கிய அங்கமாக மாறிவிடுவான். இன்று அது சாத்தியமாகாமல் போனாலும், இன்னும் நூறு ஆண்டுகளில் அல்லது ஆயிரம் ஆண்டுகளில் அல்லது பத்தாயிரம் ஆண்டுகளிலாவது இது மனிதனுக்குச் சாத்தியப்படலாம். அப்போது மனிதனால் முடியாதது எதுவும் இல்லை என்றாகிவிடும்.

اَوَلَمْ يَتَفَكَّرُوْا فِىْۤ اَنْفُسِهِمْ مَا خَلَقَ اللّٰهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَاۤ اِلَّا بِالْحَقِّ وَاَجَلٍ مُّسَمًّى وَ اِنَّ كَثِيْرًا مِّنَ النَّاسِ بِلِقَآىِٕ رَبِّهِمْ لَـكٰفِرُوْنَ
(இதனை) அவர்கள் தங்களுக்குள்ளாகவே கவனிக்க வேண்டாமா? வானங்களையும். பூமியையும், இவைகளுக்கு மத்தியில் உள்ளவைகளையும் நியாயமான காரணமின்றியும், குறிப்பிட்ட தவணையின்றியும் அல்லாஹ் படைக்கவில்லை. எனினும், மனிதரில் பெரும்பாலானவர்கள் தங்கள் இறைவனைச் சந்திப்பதையும் நிராகரிக்கின்றனர். (குர்ஆன் : 30:8)

ர.ரா

அணு முதல் அண்டம் வரை 07

(வானத்தின் பாதையா? வானத்தின் கருந்துளையா ? )



வானத்தில் மேடு , பள்ளங்கள் , வெடிப்புகள் , பிளவுகள் இருக்கிறதா என்றால் வான பௌதிகம் வானத்தில் கருந்துளைகள் (Black Holes) இருக்கிறது என்கிறது .
ஆனால் குர்ஆன் ..

اَ فَلَمۡ يَنۡظُرُوۡۤا اِلَى السَّمَآءِ فَوۡقَهُمۡ كَيۡفَ بَنَيۡنٰهَا وَزَ يَّـنّٰهَا وَمَا لَهَا مِنۡ فُرُوۡجٍ
அவர்களுக்கு மேலிருக்கும் வானத்தை நாம் எவ்வாறு அதை (ஒரு கட்டுக் கோப்பாக) அமைத்து, அதை அழகு செய்து, அதில் எவ்வித வெடிப்புகளும் இல்லாமல் (ஆக்கியிருக்கின்றோம்) என்பதை அவர்கள் பார்க்கவில்லையா?
(அல்குர்ஆன்: 50:6)

குர்ஆனில் வானத்தில் பள்ளங்கள் வெடிப்புகள் எதுவும் இல்லை என்கிறது. ஆனால் வானத்தில் பாதைகள் குறித்து நிறைய சொல்லப்பட்டிருக்கிறது !
அழகிய பாதைகளை உடைய வானத்தின் மீது சத்தியமாக !
குர்ஆன் : (51 : 07 )
உயர் பாதைகளை உடைய அல்லாஹ்வினால் வேதனை சம்பவிக்கும் .குர்ஆன் (70 : 03 )

تَعۡرُجُ الۡمَلٰٓـئِكَةُ وَ الرُّوۡحُ اِلَيۡهِ فِىۡ يَوۡمٍ كَانَ مِقۡدَارُهٗ خَمۡسِيۡنَ اَلۡفَ سَنَةٍ
அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.
(அல்குர்ஆன்: 70:4)

சரி, விஞ்ஞானம் கூறும் பிளாக் ஹோல் பற்றி சொல்றேன் .
வானத்தின் கருந்துளை என்னும் பிளாக் ஹோல் இருக்கலாம் என்று **( Astro Physics)** என்ற வான பௌதிக துறை சிந்திக்கிறது !
ஹோல் என்பது ஓட்டை, பள்ளம் , வெறுமை , வண்ணம் இல்லாதது , இருட்டு இது இருக்கிறதை எல்லாம் ஈர்த்து விட்டுப் பழையபடி வெறுமையாகி விடும் ஒன்றும் செய்யாத மாதிரி இருந்துவிடும். இந்த கருந்துளைகள் வானில் நிறைய இருப்பதற்கு நியூட்டன் மற்றும் ஐன்ஸ்டீனின் ஈர்ப்பாற்றல் தத்துவம் பல காரணங்களை சொல்கிறது
1919 நவம்பர் சூரிய கிரணத்தின் போது சந்திரன் மறைக்கிறது அப்போது அதன் பின்னால் இருந்த நட்சத்திரங்களில் இருந்து புறப்பட்ட ஒளி சூரியனின் ஈர்ப்பாற்றலால் விளிம்பில் வளைந்து நம்மால் பார்க்க முடிந்தது. ஒளி நேர்கோட்டில்தான் பயணிக்கும் என்ற கொள்கை உடைந்து ஈர்ப்பாற்றல் காரணமாக பக்கத்தில் உள்ள வெளியை ஈர்ப்பாற்றல் வளைக்கிறது !
ஈர்ப்பாற்றல் அதிகமாக அதிகமாக வளைவும் அதிகமாகும் மித மிஞ்சி போய் வளைந்து வளைந்து உள்ளுக்குள் சுருளாக சுருண்டு கொள்ளும் இதைத்தான் கருந்துளை என்கிறார்கள்

நட்சத்திரங்களின் எரிபொருள் தீர்ந்து தனக்குள் சுருங்க ஆரம்பித்து கருந்துளை உண்டாக ஏதுவாகிறது ஐன்ஸ்டீன் சமன்பாட்டின்படி . மிக மிகக் குறைவான பொருளை சக்தியாக மாற்றினாலே ஏராளமான சக்தி வெளிப்படும் என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை
இதைப் போல் காலவெளி**( Time space )** பரப்பில் ஏற்படும் பாதைகள் (கவனிக்கவும் பாதைகள் ) ஒரே ஒரு சென்டி மீட்டரில் பத்து லட்சம் கோடி கோடி யில் ஒரு பங்கு அளவே நீளமுடையவை இதனை (Plank Length ) என்கிறார்கள்
எனவே கால வெளி சுருட்டப்படுவதால் காலமும் சுருங்கிவிடுகிறது !
அதாவது பூமியின் காலம் யுகங்களாக இருக்கும் போது கருந்துளையின் மறுபுறம் அங்குள்ள நாளின் மிகச் சிறிய ஒரு பொழுதாக இருக்கும்
இதைத்தான் குர்ஆன்
ஐம்பதினாரயிரம் வருடங்களுக்கு சமமான ஒரு நாள் . குர்ஆன் (70 :04)
என்று குறிப்பிடுகிறது

கருந்துளைக்கு முன்னால் உள்ள சிறு கல் கருந்துளைக்கு மறுபுறத்தில் பெரிய மலையாகவும் சிறு செடி அங்கு பெரும் சோலைகளாகவும்(சுவனத்தின் சோலைகள் ) சின்ன குழி பெரும் பள்ளத்தாக்குகளாகவும் ( நரகம் )
உருவாகுவதை மறுதலிக்க முடியாது
அதைப் போல் கருந்துளை தாண்டிய வெளியில் மனித வாழ்வு இருக்குமானால் அது காலம் காலமான யுகங்களாகத்தான் இருக்கும்

சுவனவாசிகள் . . என்றென்றும் அதில் தங்கிவிடுவார்கள் என்று குறிப்பிடுகிறது . குர்ஆன் (3 : 15)
ஸஹீஹ் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 211ல் . "வான எல்லையில் உள்ள இலந்தை மரம் என்கிற சித்ரத்துல் முன்தஹா பற்றிய குறிப்பில மேற்கண்ட அத்தனை விஷயங்களை உண்மைப்படுத்தி நம்மை வியக்கச் செய்கிறது
சித்ரத்துல் முன்தஹா என்பது வான எல்லையில் உள்ள ஓர் இடத்தின் பெயர் ( வான் கருந்துளையின் மறுபக்கமா ? ) ' சித்ரத் ' என்பதற்கு இலந்தை மரம் (jujube) என்று பொருள்.
முன்தஹா 'என்றால் இறுதியானது என்று பொருள் இறுதி எல்லையில் உள்ள இலந்தை மரம் என்று பொருள் விரியும் .

வான எல்லையில் உள்ள பிரம்மாண்டமான இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் யானையின் காதுகளைப் போன்றும் பழங்கள் பெரிய கூஜாவைப் போன்றும் இருக்கும்
6 வது வானத்தில் இதன் வேர் உள்ளது 7 வது வானத்திற்கும் மேல் வரை இம்மரம் நெடிதுயர்ந்து உள்ளது
பொன் வண்டுகள் அந்த மரத்தை மொய்த்துக் கொண்டிருக்கிறது அந்த மரம் பல வண்ணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது அதன் அழகை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை
பூமியில் உள்ளவர்கள் புரியும் செயல்கள் பற்றிய குறிப்பு இங்குதான் செல்கிறது
பூமியில் கைப்பற்றப்படும் உயிர்களும் இங்கேதான் வந்து சேர்கின்றன
இதற்கு மேலிருந்து வரும் இறைக் கட்டளைகள் இங்குதான் முதலில் இறங்குகின்றன
வானவர்களின் அறிவு இந்த இடத்தோடு முற்றுப் பெறுவதாலேயே இதற்கு எல்லை (முன்தஹா ) எனும் பெயர் வந்தது

இங்கிருந்து 4 ஆறுகள் ஓடுகின்றன இரண்டு உள் நோக்கி பாயும் சல்சபீல் மற்றும் கவ்ஸர் ஆகிய சுவனத்தின் ஆறுகள் மற்றது இரண்டும் வெளியே பாயும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதிகளாகும்
சித்ரத்துல் முன்தஹா வழியே நபிஸல் அவர்களின் விண்ணுலக பயணம் நடந்தது .
சித்ரத்துல் முன்தஹா கருந்துளையின் மறுபக்கமா ?
"அழகிய பாதைகள் உடைய வானத்தின் சத்தியமாக " குர்ஆன் 51 : 07
வானத்தில் இருப்பது கருந்துளையா ?
வானத்தின் பாதையா ? நீங்கள்தான் சொல்ல வேண்டும் .
ர.ரா

**Rahmath Rajakumaran**
நம் பிரபஞ்சத்திலுள்ள கருந்துளை என்பது அறிவின் மொத்த உறைவிடமாகவோ அல்லது தேவலோகமாகவோ கருதப்பட இடமுண்டு விஞ்ஞானத்தால் அறுதி இட முடியாத விஷயங்களில் இதுவும் ஒன்று

ஞான ஜோதி சம்மங்கி எழுதிய . " "மரணம் ,மறுமை , முக்தி "எனும் ஆய்வு நூலில் ,பிரபஞ்சத்திலுள்ள கருந்துளைச் சுற்றி நான்கு வளையங்கள் உள்ளன
ஊர்வன பறப்பன இவற்றோடு தீய எண்ணங்களால் தீய காரியங்களையே செய்த மனித ஆத்மாக்கள் யாவும் முதல் வளையத்தை அடைகிறது
நல்லதும் கெட்டதும் கலந்து ஓரளவு மனிதத் தன்மையோடு வாழ்ந்த ஆன்மாக்கள் இரண்டாவது வளையத்தையும் அடைகிறது
நல்ல எண்ணங்களுக்கு மட்டுமே இடம் கொடுத்து நல்ல செயல்களால் மட்டுமே வாழ்ந்தார்களின் ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு மூன்றாவது வளையத்தை அடைகிறது
வணக்க வழிபாடு தியானம் பிறருக்காகவே வாழ்ந்த புனித ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு நான்காவது வளையத்தை அடைகிறது
யோக நெறிகளான தியானத்தில் முதிர்ந்து முக்தி அடைந்து சமாதி நிலையை அடைந்த பூரண யோகியரின் ஆன்மாக்கள் உடலை நீர்த்ததும் நேராக இந்த கருந்துளைக்குள்ளே நுழைந்து அதில் சங்கமாகி விடுகின்றன என்பதாக கருந்துளையின் அமைப்பையும் அதன் பயன்பாட்டையும் குறிப்பிட்டுள்ளார்

அணு முதல் அண்டம் வரை 08

(ஒன்றுமில்லா சூன்யம்)




மஹா வெடிப்புக்குப் பின்தான் எல்லாமே தோன்றின என்றால் மஹா வெடிப்புக்கு முன் அந்த படைப்புகள் எங்கே இருந்தன ? இது கேள்வி .
காலியான விண்வெளி என்பதை ஒருவாறு புரிந்து கொள்ள அதில் ஏதோ ஒரு பொருளை , அது ஒரு கிரிக்கெட் பந்தையோ அல்லது கல்லையோ , ஏதோ ஒரு பொருளை வைத்தால் அதைச் சுற்றிலும் விண்வெளி பரவி இருக்கிறது என்பதை எண்ணிப் பார்க்க முடியும். ஆனால் ஒன்றுமே இல்லாததை எப்படி கற்பனை பண்ணுவது ...? முடியாது .இது மனித மனத்தின் குறைபாடு . ஆனால் ....
கற்பனை செய்து கொள்ள முடியாத ஒன்றுமில்லாததில் இருந்து திடப்பொருள் தோன்றின என்று விஞ்ஞானமே சொன்னால் நீங்கள் நம்புவீர்களா ? மாட்டீர்களா ?
நம்ப வேண்டும் நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும் என்கிறது நவீன குவாண்டம் இயற்பியல் என்கிற அதி நவீன விஞ்ஞானம் .

ஒன்றுமில்லாத சூன்யத்திலிருந்து திடப்பொருள் ( matter) தோன்ற முடியும்.
அ - பொருளான (Anti-matter ) அந்த உடனேயே தோன்றி அவையிரண்டும் சேரும் போது ஒன்றை ஒன்று ரத்து செய்து கொண்டு ஒன்றுமில்லை ஆகலாம் .இந்த நிகழ்வு நம்மால் அளக்க முடியாத விரைவில் நிகழலாம் என்கிறது குவாண்டம் இயற்பியல்.
புரியும்படி சொல்றேன் . ஒரு மணற்பரப்பில் பிடி மணலை தோண்டி எடுத்து குவித்தால் ஏற்படும் பள்ளம் (Antimatter) .மண் குவியல் இப்போ ( matter ). மீண்டும் குவித்த மணலை அப்பள்ளத்தில் நிரப்பி விட்டால் பரப்பு சூன்யம் . அதாவது ஒன்றுமே இல்லை.

-1 +1 = 0 . இப்படியா ? இல்லை இதை விடவும் சூன்யம் . இந்த பூஜ்யம் கூட இல்லா சூன்யம் . எப்படி விளக்க ?

இது போலத்தான் பிரபஞ்சத்தில் அவ்வப்போது பொருளும், எதிர் பொருளும் சூன்யத்தில் இருந்து தோன்றி அழிந்து கொண்டிருக்கின்றன .
இந்த நிகழ்வு வெறும் தத்துவம் மட்டும் அல்ல ; எலக்ட்ரான் என்னும் மின் துகள், சூன்யத்தில் இருந்து பொருளும் ,

அ-பொருளும் தோன்றும் சமயத்தில் அருகில் இருந்தால், அதன் பாதை சற்று மாறுகிறது என்பதைப் விஞ்ஞானிகள் பரிசோதனைகளில் இருந்து கண்டறிந்திருக்கிறார்கள் .
எனவே வெற்றிடமான சூன்யம் என்பது பொரும் ,அ-பொருளும் தோன்றி மறையும் களம் என்கிறார்கள் .
கிமு 2600 ஆண்டுகளுக்கு முன்னாள் வாழ்ந்த சீன ஞானி "லாவோட்சு " தன் மெஞ்ஞான கவிதைத் தொகுப்பு நூலான "டௌடேஜிங் " - ' டௌ ' என்றால் பிரபஞ்சம் . ' டே' என்றால் பாதை ' ஜிங் '
என்றால் சக்தி . அதாவது "சக்தியை அடையும் பிரபஞ்சத்தின் பாதை ".
அதில் ' எது தெரியாமல் மறைவாக இருக்கிறதோ , அதைப் பயன்படுத்திக் கொள். எது தெரிந்து இருக்கிறதோ அதன் நன்மைகளைப் பெற்றுக் கொள் ' .
எடுத்துக்காட்டாக , எண்ணங்களை நம்மால் பார்க்க முடிவதில்லை .. ஆனால் அவற்றைத்தான் நாம் அன்றாடம் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறோம். எண்ணத்தின் விளைவுதான் இவ்வுலகின் செயல்பாடுகளாக பரிணமிக்கிறது.

நமது எண்ணம் ஒரு வெற்றிடமாகத்தான் காட்சி அளிக்கிறது . அந்த வெற்றிடத்தில் இருந்துதான் எல்லா ஆக்கபூர்வமான செயல்பாடுகளும் வெளிவருகிறது ' என்ற உண்மையை நீங்கள் அறிவீர்கள்
உதாரணமாக , அங்கே போகிற கட்டைவண்டியின் சக்கரத்தின் எல்லா
ஆரங்களும் அழகாக வடிவமைக்கப்பட்டு
எல்லா ஆரங்களும் சக்கரத்தின் நடுவில் இணைக்கப்பட்டுள்ளது . ஆனால் சக்கரத்தின் மையப்புள்ளியோ ஒரு வெற்றிடம் . அந்த வெற்றிடத்தை உபயோகக்கா விட்டால் சக்கரம் உருளாது !
குவளை அழகாகத்தான் இருக்கிறது ஆனால் நாம் தண்ணீரை குடிக்க அதன் நடுவே உள்ள வெற்றிடம்தான் நமக்கு உதவுகிறது !

களிமண்ணால் பானை செய்கிறோம்... ஆனால் நாம் பயன்படுத்துவதோ உள்ளே இருக்கிற வெற்றிடம் ! பானை உடைந்து விட்டால் உள்ளே இருக்கிற வெற்றிடமும் ' வெளி ' வெற்றிடத்தோடு கலந்துவிடுகிறது !
ஞானி சிவவாக்கியர் சொல்வது ,
" வெட்ட வெளியதன்றி மற்று வேறு தெய்வம் இல்லையே ! "

ஒன்றுமில்லா சூன்யம் பற்றி நிறையவே இறைவனும் குர்ஆனில் ....

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـًٔـا مَّذْكُوْرًا
ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான்.
(அல்குர்ஆன்: 76:1)

الَّذِىْ خَلَقَكَ فَسَوّٰٮكَ فَعَدَلَـكَۙ
அவன்தான் ஒன்றுமில்லாதிருந்த உன்னை படைத்து மேலான விதத்தில் மிக ஒழுங்காக உன்னை அமைத்தான்.
(அல்குர்ஆன்: 82:7)

قَالَ كَذٰلِكَ قَالَ رَبُّكَ هُوَ عَلَىَّ هَيِّنٌ وَّقَدْ خَلَقْتُكَ مِنْ قَبْلُ وَلَمْ تَكُ شَيْـًٔـا
அதற்கவன் "(நான் கூறிய) அவ்வாறே நடைபெறும். அவ்வாறு செய்வது எனக்கு மிக்க எளிதானதே. இதற்கு முன்னர் நீங்கள் ஒன்றுமில்லாமலிருந்த சமயத்தில் நானே உங்களை படைத்தேன் என்று உங்களது இறைவனே கூறுகிறான்" என்றும் கூறினான்.
(அல்குர்ஆன்: 19:9)
சூன்யத்தைப் பற்றியும் , வெட்ட வெளியைப் பற்றி படுக்கும் இரவில் சிந்தித்தால் , யாரும் அற்ற அந்த வனாந்தர வெளியில் நீங்கள் மட்டுமே இருப்பதை உணர்வீர்கள் .
" இருப்பது நீங்களா? "
ர.ரா

அணு முதல் அண்டம் வரை 09

(அவனின்றி ஓர் அணுவும் அசையாது!)







மேற்கத்திய மனிதன் தன்னைப் புறப்பொருள்களிலிருந்து முழுவதும் பிரித்துக் கொண்டு சிந்திக்க தூண்டிய விஷயம் டெஸ்கார்ட் டெஸ்ஸின் கோட்டுபாடுகள் .
அப்படி அது என்ன கோட்பாடுகள் ?
அவர் 17 ம் நூற்றாண்டில் வாழ்ந்த தத்துவ ஞானி . " நான் சிந்திக்கிறேன். அதனால் நான் இருக்கிறேன் "
"தான் " என்பது தன் உடலிலிருந்து வேறுபட்டு சிந்திக்கும் பகுதி இந்த சிந்திக்கும் பகுதிக்கு வெளிப்பட்டவை அத்தனையும் இயங்கும் விதம் அவர்களுக்கு தெளிவாக தெரிந்து விட்டது.

நியூட்டனின் விதிகள் மூலம் , மிகச் சரியான கணிதக் கோட்பாடுகள் மூலம் நம்மைச் சுற்றியுள்ள இயக்கங்கள் அத்தனையையும் தெளிவாக புரிந்து கொள்ள முடிந்தது .
நியூட்டனின் விதிகளை உன்னதப்படுத்தி பிரெஞ்சு நாட்டின் மிகப் பெரிய கணித அறிஞர் லாப்லஸ் என்பவர் மிகப் பிரமாண்டமான புத்தகம் 'மெக்கானிக் ஸெலஸ்ட் ' எழுதி வெளியிட்டார் .
அந்த புத்தகத்தை படித்துப் பார்த்த சக்கரவர்த்தி நெப்போலியன் , "லாப்லஸ் ! பிரபஞ்சம் முழுவதும் இயங்கும் நியதிகளைப் பற்றி நீங்கள் எழுதியுள்ள இந்த புத்தகத்தில் ஒரு இடத்திலாவது பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவைப் பற்றி ஒரு வார்த்தை கூட இல்லையே ! "
" என்னுடைய அந்த சித்தாந்தத்திற்கு கடவுள் தேவை இருக்கவில்லை "
வேதாந்தமோ கடவுள் தத்துவமோ விஞ்ஞானிகளுக்கு அப்போது தேவை இல்லாமல் இருந்தது. எதுவரை என்றால் ஐஸ்டைன் சார்பியல் கோட்பாடுகளை வகுக்கும் வரை ...

ஜே.எஸ் பெல் என்பவர் 1964-ல் ஒரு புரட்சிகரமான விஷயத்தைச் சொன்னார்
" பிரபஞ்சத்திலுள்ள அத்தனை விஷயங்களும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டுள்ளது என்பதை நிரூபித்தார்
"குவாண்டம் தத்துவத்தின் கணக்குகள் சரியென்றால் உண்மையைப் பற்றி நம் பகுத்தறிவு கூறுவதெல்லாம் தப்பு .குவாண்டம் தத்துவத்தின் கணக்குகள் எல்லாமே சரி என்றால் ,பகுத்தறிவு தவறு ! " என்றார்
எப்படி ?
பகுத்தறிவுக்குப் புறப்பானது என்பது எது ? நீங்கள் மேலப்பாளையம் வந்து என்னை சந்திக்கிறீர்கள் .நாம் இருவரும் பேசிக் கொண்டே இருக்கிறோம். நம்முடைய உரையாடல் நம் இருவரையும் மட்டுமே பாதிக்கிறது .பிரபஞ்சத்தின் மற்ற அங்கங்களை பாதிப்பதே இல்லை .இது பகுத்தறிவு .

நாம் இருவரும் பேசிக்கொள்வது பிரபஞ்சம் முழுவதையுமே ஏதோ ஒரு விதத்தில் பாதிக்கிறது , பதிவாகிறது என்று சொன்னால் அது நம் பகுத்தறிவுக்கு ஒவ்வாதது என்றால் குவாண்டம் தத்துவம் சரி . ஆனால் .. .

وَمَا تَكُوْنُ فِىْ شَاْنٍ وَّمَا تَتْلُوْا مِنْهُ مِنْ قُرْاٰنٍ وَّلَا تَعْمَلُوْنَ مِنْ عَمَلٍ اِلَّا كُنَّا عَلَيْكُمْ شُهُوْدًا اِذْ تُفِيْضُوْنَ فِيْهِ‌ وَمَا يَعْزُبُ عَنْ رَّبِّكَ مِنْ مِّثْقَالِ ذَرَّةٍ فِى الْاَرْضِ وَلَا فِى السَّمَآءِ وَلَاۤ اَصْغَرَ مِنْ ذٰ لِكَ وَلَاۤ اَكْبَرَ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
நீங்கள் என்ன நிலைமையில் இருந்தபோதிலும், குர்ஆனிலிருந்து நீங்கள் எ(ந்த வசனத்)தை ஓதியபோதிலும், (உங்களுடைய காரியங்களில்) நீங்கள் எதைச் செய்தபோதிலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போதே உங்களை நாம் கவனிக்காமல் இருப்பதில்லை.
பூமியிலோ, வானத்திலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் (நபியே!) உங்களது இறைவனுக்குத் தெரியாமல் தவறிவிடுவதில்லை. இவற்றைவிட சிறிதோ அல்லது பெரிதோ (எதுவாயினும்) அவனுடைய விரிவான பதிவுப் புத்தகத்தில் தெளிவாகப் பதிவு செய்யப்படாமலில்லை. (குர்ஆன் : 10:61)

பிரபஞ்சத்தின் நிகழ்ச்சிகளுக்கு ஒருவித உள்ளூர்த் தன்மை காரணம் (Local Cousality) இருக்கிறது என்பது பகுத்தறிவு . ஒவ்வொரு நிகழ்ச்சிகளுக்கு ஒருவித பிரபஞ்சத்தன்மை இருக்கிறது என்பது குவாண்டம் கோட்பாடு. இதுதான் பெல்லின் வாதம் .
இதை அவர் சும்மா சொல்லவில்லை . எலக்ட்ரான்களின் சில நடவடிக்கைகளை வைத்துக்கொண்டு அதன் ஆதாரத்தில்தான் சொல்கிறார்.

சில சமயம் எலக்ட்ரான்கள் ஜோடி ஜோடியாய் வெளிப்படுகின்றன .இந்த இரட்டையைப் பிரித்து ஒன்றை கிழக்கேயும் , மற்றதை மேற்கேயும் போகச் சொல்லுமாறு காந்த பரிசோதனைகள் மூலம் அமைக்க முடியும்.
இவ்வாறு பிரிந்த எலக்ட்ரான்களில் ஒன்றை , கிழக்கே போனதை என்று வைத்துக் கொள்ளலாம் . காந்த சக்திக்கு உட்படுத்தி வலதுபக்கம் திருப்ப வைத்தால், மேற்கே போன எலக்ட்ரான் அது பிரபஞ்சத்தில் எங்கு சென்றாலும் அதை எப்போது அதே வகை காந்த திருப்பத்துக்கு உட்படுத்தினாலும், முன் எலக்ட்ரான் எந்தப் பக்கம் திரும்பியதோ அதற்கு எதிர்ப்பக்கம் திரும்புகிறது !

அது வலது என்றால் , இது இடது . அது இடது என்றால் இது வலது !
எலக்ட்ரான் என்பது ஒரு துகள்.உயிர், தன்னிச்சை என்று ஏதும் இல்லாதது . கிழக்கே சென்ற எலக்ட்ரானைப் பற்றி மேற்கே சென்றதற்கு , எப்படியோ ஒரு செய்தி போய்ச் சேருகிறது .அதுவும் கால இடைவெளியில்லாமல் ! கிழக்கு எலக்ட்ரானின் திருப்பம் மேற்கு எலக்ட்ரானின் திருப்பத்தை , விதியை உடனே நிர்ணயித்து விடுகிறது .
ஐன்ஸ்டைனின் தத்துவப்படி ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு
செய்திபோக ஒரு வேக எல்லை உண்டு அது ஒளியின் வேகம். அதற்கு மேல் செய்தி போவதற்கு ஐன்ஸ்டைனின் தத்துவத்தில் சாத்தியமே இல்லை !
ஆனால் இங்கு இரு எலக்ட்ரானிகளின் செய்தி தொடர்பு ஒளியின் வேகத்தை விட மேலான வேகத்தில் அல்லது கால இடைவெளியில்லாத ஒரு தொடர்பு எங்கோ நிகழ்வது வேறு எங்கோ நிகழ்வதை உடனே பாதிக்கிறது .

قَالَ رَبُّنَا الَّذِىْۤ اَعْطٰى كُلَّ شَىْءٍ خَلْقَهٗ ثُمَّ هَدٰى
அதற்கு மூஸா "எவன் ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய இயற்கைத் தன்மையைக் கொடுத்து (அவைகளை பயன்படுத்தும்) வழியையும் (அவைகளுக்கு) அறிவித்தானோ அவன்தான் எங்கள் இறைவன்" என்றார்.
(அல்குர்ஆன்: 20:50)
எனவே பிரபஞ்சம் முழுவதும் ஒரு விதமான காரணத்தால் தொடர்பு கொண்டிருக்கிறது என்கிறது விஞ்ஞானம் . அது அவனோடு தொடர்பு கொண்டிருக்கிறது என்கிறது மெஞ்ஞானம் .
ஓர் எல்லையைக் கடந்தபின் விஞ்ஞானமும் , வேதாந்தமும் (metaphysics ) ஒரே இலக்கை நோக்கி பயணிக்கிறது .
ஞானம் என்பது புலன் அறிவிற்கு அப்பாற்பட்டது என்பதை பல விஞ்ஞானிகள் இப்போது தயக்கத்துடன் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் .
இதற்குப் பிறகு சொல்ல என்ன இருக்கிறது ?
அவனின்றி ஓர் அணுவும் அசையாது !
ர.ரா

அணு முதல் அண்டம் வரை 10

(சின்னஞ் சிறு உலகம்)




நவீன விஞ்ஞானம் அணுக்குள் புகுந்து அந்த சின்னஞ் சிறு உலகில் பார்த்ததில் அத்தனையுமே மெஞ்ஞான கோட்பாடுகள் ! இதை எங்கே போய் சொல்வது ?

அணுக்குள் இருக்கும் துகள்கள் எல்லாம் சக்தியின் வடிவங்கள்! அவை சதாசஞ்சரித்துக் கொண்டே இருக்கின்றன. ஒன்றுடன் ஒன்று சதா உறவாடுகின்றன. தத்தம் சக்திகளைப் பரிமாறிக் கொள்கின்றன. சக்திகளை இழக்கின்றன. அவைகளை இன்ன இடத்தில்தான் ஸ்திரிமாக இருக்கின்றன என்று தனிப்படுத்திச் சொல்ல யாராலும் முடியவில்லை .புதிது புதிதாக தோன்றுகின்றன . மாறுகின்றன. எப்போதுமே அவை அசைந்தாடுகின்றன சதா சுறுசுறுப்பான இந்த இயக்கத்தின் மூலம் ஏற்படும் ஒட்டுமொத்தமான இந்த வடிவமைப்புதான் வெளி உலகத்தில் நீங்களும் நானும் காணும் எல்லா வஸ்துகளின் தோற்றங்கள் என்றால் , எவ்வளவு பெரிய ஆச்சரியங்கள்

உன்னிப்பாகப் பார்த்தால் பிரபஞ்சம் முழுவதுமே ஓர் இயக்கம்தான் . சதா துடிப்புத்தான்; சக்தியின் உத்வேகம்தான் செயல்பாடுகள்தாம் இதை விஞ்ஞானமே சொல்கிறது.

அணுக்கருவுக்குள் இருக்கும் துகள்களை ஆராயும் போது ஒரு வித ஒழுங்கை கவனிக்கிறார்கள் . நம்மைச் சுற்றியுள்ள பொருட்கள் அனைத்தும் எலக்ட்ரான் , புரோட்டான் , நியூட்ரான் இம் மூன்றும் ஸ்திரமான துகள் இவைகளுக்கு எடை உண்டு. நியூட்ரான் என்பது சுயமாக அழியக் கூடியது - அழிவது என்றால் கலைந்து போய் விடுவது. இதனை "**பீட்டா டீ க்கே ( Beta decay )** என்கிறார்கள் .
மின்காந்த சக்தி ஏற்படுத்தும் போது எலக்ட்ரான் , புரோட்டான் , ஃபோட்டான். ஏற்படுகிறது இதில் ஃபோட்டானுக்கு எடை இல்லை .
நியூட்ரான் தானாகவே கலைந்து போகும் போது புரோட்டானாக மாறுகிறது . அத்துடன் ஓர் எலக்ட்ரானும் உண்டாகிறது .மேலும் நியூட்ரீனோ என்று ஓர் எடையில்லாத ஸ்திரமான துகளும் ஏற்படுகிறது.
இந்த ஒவ்வொரு துகளுக்கும் ஓர் எதிர்த்துகள் **(anti particle)** ஏற்படுகிறது.
எலக்ட்ரானுக்குப் பாஸிட்ரான் , புரோட்டானுக்கு ஆண்ட்டி புரோட்டான் , நியூட்ரானுக்கு ஆண்டி நியூட்ரான் ,
நியூட்ரீனோக்கு ஆண்டி நியூட்ரீனோ. இப்படி ஜோடிகள் .
" அவன்தான் சகலவற்றையும் (ஆணும் பெண்ணும் கலந்த) ஜோடி ஜோடியாக படைத்தான் " –
(அல்குர்ஆன்: 43:12)
நியூட்ரான் கலைவில் வெளிப்படும் இந்த மாதிரி துகள்கள் நூற்றுக்கணக்கில் இருக்கிறது. இவை யாவும் மிக மிக தற்காலிகமான துகள்களே. சிறிது காலம் மிகச் சிறிது காலம் வாழும் விட்டில் பூச்சிகள் இந்தத் துகள்கள். ஒரு செகண்டில் பத்து லட்சத்திற்கு ஒரு பங்கே வாழக்கூடியவை . இருந்தும் இந்தத் துகள்களின்

மிகச் சிறிய அளவுடன் ஒப்பிட்டால் , இந்தச் சிறிது காலம் கூட நம்முடைய 100 வருட முழு வாழ்நாளுக்கு ஒப்பாகும் . அது சரி 50 ஆயிரம் வருடங்கள் பூமியில் ஆகும் போது தங்களுக்கு ஒரு நாள்தான் ஆகும் என்று மலக்குமார்கள் , 100 வருடம் வாழும் மனித குலத்தின் வாழ்வு ,
மலக்குமார்களுக்கு துச்சமாக இருப்பது போல , இந்த சிறிய துகள்களின் வாழ்வு காலம் நமக்கு மிக துச்சமாக தெரிகிறது.

நியூட்ரான் கலைவில் நூற்றுக்கணக்கான துகள்களுக்கு பெயர்கள் : ஹேட்ரான்ஸ் ,லெப்டான்ஸ் . மெஸான் ,ம்யூவான் , பையான் ,கவான் இப்படி .... இந்தத் துகள்கள் எல்லாம் ஒன்றோடு ஒன்று மிகச் சிக்கலான முறையில் உறவாடும் போது மிகச் சிறிய காலம் உயிர் வாழ்கின்றன . அழிகின்றன . வேறு துகள்களாக மாறுகின்றன . இங்கே கூட வாழ்வும் , மரணமும் , மீண்டும் உயிர்பித்தலும் நடைபெறுவதை விஞ்ஞானிகளால் காண முடிகிறது.

قُلْ سِيْرُوْا فِى الْاَرْضِ فَانْظُرُوْا كَيْفَ بَدَاَ الْخَـلْقَ ثُمَّ اللّٰهُ يُنْشِئُ النَّشْاَةَ الْاٰخِرَةَ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
(பின்னும் மனிதர்களை நோக்கிக் கூறும்படி இப்ராஹீமுக்கு கட்டளையிட்டோம்.) பூமியில் நீங்கள் சுற்றித் திரிந்து பாருங்கள். ஆரம்பத்தில் படைப்புகளை எவ்வாறு உற்பத்தி செய்கிறான். (அவ்வாறே மரணித்த) பின்னரும் அல்லாஹ் (மறுமையில்) மறுமுறையும் உற்பத்தி செய்வான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக்க ஆற்றலுள்ளவன்.
(அல்குர்ஆன்: 29:20)

இந்தச் சின்னஞ் சிறு உலகத்தில் துகள்கள் சக்தியாகவும் , சக்தி துகளாகவும் அடிக்கடி விந்தையாக மாறிக்கொண்டே இருக்கிறது . சற்று நேரம் ஒரு துகள் நகர்கிறது .மற்றொரு துகளுடன் மோதுகிறது. அல்லது இணைகிறது . அப்போது சக்தி வெளிப்படுகிறது. அந்தச் சக்தியின் பாதிப்பால் புதிய துகள்கள் பிறக்கின்றன. இந்த விந்தையான வாழ்வை விஞ்ஞானிகள் 'பபிள் சேம்பரில் அழகாக படம் பிடித்துக் காட்டுகிறார்கள் . 'பாருங்கள் பாருங்கள்... மனித வாழ்வு மாதிரியே அணுக்குள்ளும் உள்ள துகள் வாழ்விலும் எல்லாம் உண்டு' என்கிறார்கள்.
மிகச் சிறிய துகள்களின் வாழ்வும் மரணமும் அப்படியே மனித வாழ்வோடு மிகக் கச்சிதமாக ஒத்துப் போகிறது .

وَهُوَ الَّذِىْۤ اَحْيَاكُمْ ثُمَّ يُمِيْتُكُمْ ثُمَّ يُحْيِيْكُمْ اِنَّ الْاِنْسَانَ لَـكَفُوْرٌ
"அவன்தான் உங்களை உயிர்ப்பித்தான். அவன்தான் உங்களை மரணிக்கச் செய்வான். பின்னும், அவனே உங்களை உயிர்ப்பிப்பான். எனினும், நிச்சயமாக மனிதன் மிக நன்றி கெட்டவனாக இருக்கிறான்" .
(அல்குர்ஆன் : 22:66)

இயற்கையிலும் இந்த வகை மாறுதல்கள் சதா நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன . விண்வெளியான அண்டத்திலிலிருந்து வரும் காஸ்மிக் கதிர்கள் - அவை எங்கிருந்து வருகின்றன என்பது இதுவரை யாராலும் , எந்த விஞ்ஞானத்தாலும் சொல்ல முடியவில்லை . சதா பற்பல துகள்கள் சக்தி வெளிப்பாடுகள் மூலம் நம் பூமியைத் தாக்கிக் கொண்டே இருக்கின்றன .நம் உலகத்து காற்று வெளியைத் தாக்கும் போது , காற்றின் அணுக்கள் சிறு சிறு துகள்களாகச் சிதறி 'துகள் மழை ' ஏற்படுவதுண்டு. இது சாஸ்வதமானது. இதை இயற்கையான சக்தியின் நடனம் என்கிறார்கள். இதனால் புதிய துகள்கள் பிறக்கின்றன பழைய துகள்கள் அழிக்கின்றன. வேஷம் மாறுகின்றது . அரங்கம் மாறுகிறது . காட்சியும் மாறுகிறது .
அந்த சின்னஞ் சிறு உலகில் அங்கேயும் அவனின் ஆட்சி நன்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும் ?
ர. ரா

அணு முதல் அண்டம் வரை 11

(குவாண்டத்தின் வெளிப்பாடு)



குவாண்டம் கோட்பாட்டின்படி, இயற்கையின் அடிப்படைக் கூறுகள் தொடர்ந்து பிரிக்கக்கூடியவை அல்ல. உதாரணமாக, ஒளி அலை எனக் கருதப்பட்டாலும் அது ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழ் பிரிக்கப்பட முடியாததாகும் .
இது போலவே இடமும் , காலமும் கூட ஒரு அளவுக்கு மேல் சிறியதாக்கப்பட முடியாது என்பது குவாண்டம் கோட்பாட்டின் முடிவு ஆகும்.

குவாண்டம் இயற்பியல் நியூட்டனின் இயற்பியலுடன் அடிப்படையிலேயே வேறுபடுகின்றது .
நியூட்டனின் இயற்பியலில் " "நாம் இயற்கையின் போக்கை மாற்றாமல் அதனை ஆராய முடியும் " எனக் கருதப்பட்டது.

ஆனால் ஹைஸன்பர்க், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில், இக்கருத்து தவறு என நிறுவினார்.
" நாம் இயற்கையின் ஒரு பகுதியைக் கவனிக்கும் செயலே (the act of observation) அதன் போக்கை மாற்றும் " என அவர் நிறுவினார்.
இதனால் நியூட்டனின் இயற்பியலில் இருந்து வந்த பிரபஞ்சத்திலிருந்து முழுக்க விலகிய நோக்கு (entirely objective view of the universe) எனும் கோட்பாடு நீங்கியது.

அளவீடு என்பது ஒதுக்கப்பட முடியாத ஒரு பகுதியானது. மேலும், ஒரு எலெக்ட்ரானின் இடத்தை நிர்ணயிக்கச் செய்யப்படும் ஒரு அளவீட்டினால் அதன் திசைவேகம் மாறிப்போகிறது.அதன் திசைவேகத்தை கணிக்கும் போது எலக்ட்ரானின் இருப்பிடம் மாறிப் போய் விடுகிறது .
எனவே ஒரே நேரத்தில் மிகச்சரியாக திசைவேகத்தையும் இடத்தை நிர்ணயிக்க முடியாது என்று அறிவித்தார் ஹைஸன்பர்க் .

இது இன்னாளில் ஹைஸன்பர்க்கின் ஐயப்பாட்டுக் கொள்கை என அழைக்கப்படுகிறது. இது குவாண்டம் இயற்பியலின் ஓர் அடிப்படைக் கோட்பாடாகும். இதனால் இயற்கையின் நிலையையோ போக்கையோ மனிதன் முழுமையாக அறிந்து கொள்ள முடியும் என்ற கொள்கை வீழ்ந்தது.
இயற்கையின் மகத்தான அதன் செயல்பாட்டை , மனிதன் ஒரு போதும் அறிந்து கொள்ள முடியாத மர்மமாகவே இருக்கும்

ஆனால் இறை ஞானிகளால் இயற்கையின் மர்மத்தை மட்டும் அல்ல,
அதன் எளிய செயல்பாட்டை அழகாக தானே செய்து காட்டுகிறார்கள் .
இப்படி செய்துகாட்டும் செயல்பாடுகள் சிறுபிள்ளைத்தனமாகவும் , கேலியும் கிண்டலுமாயும் நகைப்பிற்குரியதாகவும் ஆகி , அந்த இறைஞானியை மிக சுலபமாக " பைத்தியக்காரர்" என்ற முத்திரையை குத்தி விடுகிறது .
ஹஜரத் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஒரு நிறைவான (மஜ்தூப்) தீவிர இறை நேசராக இருந்தார்கள் கலீஃபா ஹாரூன் ரஷீத் காலத்தில் பாக்தாத்தில் இருந்து வந்தார்கள்

ஒரு நாள் மாலை அந்தி சாயும் நேரத்தில் கலீஃபா ஹாரூன் ரஷீத் தன் மனைவி ஜுபைதா காத்தானுடன் டைகரீஸ் நதி (தஜ்லா நதி) நதிக்கரையோரம் உலாவச் சென்றார் அங்கு புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஈரமான ஆற்று மண்ணில் மணல் வீடுகள் கட்டிக் கொண்டு இருந்தார்கள்

அதைப் பார்த்த ஜூபைதா "பாபா , தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ? "
"நான் சுவனத்தில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறேன்."
" இந்த வீடுகளைத் தாங்கள் விற்பனை செய்வீர்களா?
. "ஆமாம் ' ஒரு வீட்டின் விலை உமது கழுத்தில் கிடக்கும் முத்துமாலை "
உடனே ஜூபைதா முத்துமாலையை கழற்றிக் பாபாவிடம் கொடுத்து விட்டார்.
புஹ்லூல் மாலையை வாங்கிக் கொண்டு "செல்லுங்கள் இதுதான் உம்முடைய சுவனமாளிகை' " என்றார்கள்
இதைப் பார்த்துக் கொண்டிருந்த கணவர் ஹாரூன் ரஷீத் தன் மனைவியிடம் , "ஒரு மஜ்தூபிடம் விலை மதிப்பற்ற உன்னுடைய முத்து மாலையை கொடுத்து விட்டாயே , நீ ஒரு சரியான முட்டாளாக இருக்கிறாய் " என்று சற்று கோபப்பட்டார்

அன்று இரவு உறக்கத்தில் கலீஃபா ஹாருன் ஒரு கனவு கண்டார். சொர்க்கத்தில் அவர் உலாவிக் கொண்டிருக்கும் போது மிக உயரமான அழகான முத்துக்களால் ஆன ஒரு மாளிகையைக் கண்டார் அதன் அழகில் அவர் அப்படியே சொக்கி நின்று விட்டார் அதன் வாயிலில் "ஜூபைதா காத்தூன் " என்று பொறிக்கப்பட்டிருந்தது

ஹாரூன் , அட நம்ம மனைவியின் மாளிகைதானே என்று உள்ளே நுழைய முயற்சிக்கும் போது ஒரு வானவர் அவரைத் தடுத்து " இது ஜூபைதா காத்தூனுடைய மாளிகை நேற்றுதான் தம்முடைய முத்துமாலையை விலையாகக் கொடுத்து வாங்கிக்கிறார் அவர் இதனுள் நுழையாதவரை வேறு யாருக்கும் நுழைய அனுமதி இல்லை" என்றார்
ஹாரூன் ரஷீத் திடுக்கிட்டு எழுந்து டைக்ரீஸ் நதிக் கரைக்கு ஓடோடி விரைந்தார் அங்கு புஹ்லூல் தானா அவர்கள் நிறைய வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார் . ஹாரூன் அவரிடம் "பாபா எனக்கும் ஒரு வீடு தாருங்கள் அதற்குரிய தொகையைக் கொண்டு வந்திருக்கிறேன் என்றார்.
புஹ்லூல் புன்னகைத்தபடி "சுவனத்தில் எவர்கள் முத்து மாளிகையைக் காணவில்லையோ அவர்களுக்கே நாம் இந்த வீடுகளை விற்பனை செய்வோம். எவர்கள் சுவனத்து முத்து மாளிகையைக் கனவில் கண்டார்களோ அவர்களுக்கு நாம் ஒருபோதும் இந்த வீடுகளை விற்பதில்லை எனக் கூறி விட்டு சென்று விட்டார்.

புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் பூமியின் நதிக்கரையில் கட்டப்பட்டும் சிறிய சிறிய மணல் வீடுகள், அவைகள் சுவனத்தின் பெரிய பெரிய மாளிகையாக பரிணாமம் பெறுவதில்தான் குவாண்டம் கோட்பாட்டின் தாக்கம் தெரிகிறது
இயற்பியலில் நாம் இயற்கையின்
போக்கை மாற்றாமல் அதனை ஆராய முடியும் என்ற நியூட்டனின் கோட்பாட்டை
நாம் இயற்கையின் ஒரு பகுதியைக் கவனிக்கும் செயலே (the act of observation) அதன் போக்கை மாற்றும் என்ற சொன்ன ஹைஸன்பர்க் கோட்பாடு மேற்சொன்ன எளிய நிகழ்வில் ஹாரூன் ரஷீது அரசர் மூலம் நிரூபணமாகி இருக்கிறது .
"விண்ணிலும் மண்ணிலும் வலிமார்களுக்கு எந்த தடையும் கிடையாது அவர்கள் விரும்பினால் (மரணத்திற்குப் பின்னரும்) தம் சொந்த உடலுடன் இப்பூமிக்கு வர முடியும்.
- கௌதுல் அஃலம் அப்துல் காதிர் ஜிலானி இது குவாண்ட தத்துவத்தின் வெளிப்பாட்டை அப்படியே பிரதிபலிக்கிறது
ர.ரா

**Rahmath Rajakumaran**
இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் மாக்ஸ் ப்ளாங்க் என்பவரின் குவாண்டம் தத்துவமும் , 1905 -ல் மாபெரும் விஞ். மேதை ஐன்டைனின் ரிலேட்டிவிட்டி தத்துமும் பௌதிகத்தின் புதிய சிந்தனைகளை துவக்கியதோடு இதுவரை தெரிந்த விஞ்ஞான கோட்பாடுகளின் விளக்கத்தைக் கேள்விக்குறியாக்கியது .
இதனால் நவீன விஞ்ஞானிகளால் பிரபஞ்சத்தின் புறநிலையில் நிகழும் பற்பல விஷயங்களைத் தெளிவாக விளக்க முடிந்தது .
ஆனால் அணுவினுள் நடைபெறும் சில நேரம் துகள் , சில நேரம் அலை என்று அது பேசிய உண்மைகள் வினோதமாக இருந்தது .

உண்மை என்பது ஒன்றுக்கு மேற்பட்ட அனந்த கோடி உண்மை இப்பூமியில் உள்ளன என்பதை விஞ்ஞானிகள் ஒத்துக் கொண்டனர் .
உண்மை என்றால் ஒன்றே ஒன்றுதானே என்று நீங்கள் எடுத்துக் கொண்டால் , அணுக்கள் பேசிய பரிபாஷை தெரியாத மொழிகளின் விளக்கமாக எடுத்துக் கொள்ள வேண்டும் .
ஆக உண்மைக்கு மிக அருகில் விஞ்ஞானம் இருக்கலாம் .

அணு முதல் அண்டம் வரை 12

(ஷ்ரோடிங்கர் பூனை தத்துவம்)







இக்கட்டுரையை படிப்பதற்கு முன் உங்களின் புற உந்துதல்களில் இருந்து நீங்கள் முழுவதும் புறம்பான பின் படிக்கவும். காரணம் உரத்த சிந்தனை உங்களுக்கு புரியவைக்க வேண்டும் என்று மிக்க சிரத்தை எடுத்துள்ளேன்.
ஷ்ரோடிங்கர் (1887 - 1961 ) ஆஸ்திரிய நாட்டு பௌதிக விஞ்ஞானி. எலக்ட்ரான் செல்லும் பாதையையும், அவை அலைகளாக மாறும் சமன்பாட்டையும் கண்டதால், அவருக்கு1933 நோபல் பரிசு

விஷயத்தைச் சொல்றேன் . முந்தைய பதிவில் சொன்னபடி குவாண்டம் தியரியின் மையக் கருத்து அணுவுக்குள் இருக்கும் துகள்களின் இயற்கையைப் பற்றியது. அந்தத் துகள்களை துகள்கள் என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாது ! இந்த இன்ன இடத்தில் தான் இருக்கும் என்று சொல்லவும் முடியாது ! அவைகளின் சக்தி , அவைகளின் ஸ்தலம் எல்லாமே இருக்கலாம் இல்லாமலும் இருக்கலாம் என்கிற சாத்தியக் கூறுகள்தாம் .

ஒரு துகளின் உண்மையைப் பற்றி ஒரு அளவுக்குமேல் அறிந்து கொள்ள முடியாது . அப்படி அறிய முயற்சித்தால் அதன் நிச்சயமற்ற தன்மையை அதிகரிக்கிறது.
ஒரு துகள் ஒரு இடத்தில்தான் இருக்கிறது என்று திட்டவட்டமாக சொன்னால் உடனே அதன் வேகத்தைப் பற்றிய உண்மையை குழப்பாகி விடுகிறது. சரி , வேகத்தை வைத்து அது இந்த இடத்தில்தான் உள்ளது என்றால் அதுவும் குழப்பாகி விடுகிறது. இதை "ஹைசர்பர்கின் நிச்சயமில்லாத தத்துவம் " என்கிறார்கள்.
நீங்கள் ஒரு அறைக்குள் நுழைகிறீர்கள் , சோபா கசங்கி இருக்கிறது. யாரோ உட்கார்ந்திருக்கிறார்கள் என்று நீங்கள் முடிவுக்கு வருவது போல இது !

பார்ப்பவனையும் , பார்த்ததையும் இந்த முறையில் தனிமைப்படுத்த முடியாது.
பார்க்கிறவன் யாருமே இல்லையெனில் ஆகாயம் நீல நிறமாக இருக்குமா என்று ஆதிசங்கரர் கேட்டார் .
பார்க்கிறவன் இல்லையெனில் விளைவு இல்லை. விளைவு இல்லையெனில் விளைவுகளின் மூலம் அந்தத் துகளின் இயற்கையைப் பற்றி இவன் ஆராய்ந்து கண்டு பிடிக்கும் முடிவும் இல்லை. இதனால் நம் பிரபஞ்சத்தின் இயற்கையை நம்மால் தனிப்பட்டு ஆராயவே முடியாது.
குவாண்டம் தத்துவம் என்பதே தனிப்பட்ட ஒரு சித்தாந்தமில்லை . பார்க்கிறவன் பார்க்கிறது இரண்டும் ஒருமித்து இணைந்த விஷயம் . தனிப்பட்ட துகள்கள் என்று சொல்வது ஒரு வித சௌகரியத்துக்காகத்தான்.
உண்மையிலேயே அவை துகள்களா என்று யாருக்கும் தெரியாது . தெரிந்து கொள்ளவும் முடியாது.
நம்மிலிருந்து விலகின ஓர் உண்மையை நம்மால் அறிந்து கொள்ளவே முடியாது.

அணுவின் உள்ளே உள்ள துகள்கள் சில சமயம் துகள்கள் , சில சமயம் அலை. அதெப்படி இரண்டு உண்மைகள் இருக்க முடியும் என்பதற்கு ஷ்ரோடிங்கர் பூனை வைத்து விளக்கினார்.
ஷ்ரோடிங்கரின் பூனை சோதனை என்பது , உள்ளே மூன்று கூறுகளைக் கொண்ட ஒரு ஒளிபுகா பெட்டியை உள்ளடக்கியது: ஒரு உயிருள்ள பூனை, சயனைட் விஷ வாயு கொண்ட ஒரு பாட்டில் மற்றும் ஒரு கதிரியக்கத் துகள் கொண்ட ஒரு கருவி, இது 50% சிதைவதற்கான வாய்ப்பைக் கொண்டுள்ளது. அவ்வாறு செய்தால், பாட்டில் விஷ வாயுவை விடுவித்து பூனையைக் கொல்லும். அது சிதறவில்லை என்றால், பூனை வாழும்.

முரண்பாடு என்னவென்றால், பொது அறிவுப்படி, பூனை உயிருடன் அல்லது இறந்திருக்கும், ஆனால் பெட்டி திறக்கும் வரை நாம் இந்த இரண்டு உண்மையையும் அறிய முடியாது. குவாண்டம் இயற்பியலின் விதிகளின்படி, அது நிரூபிக்கப்படும் வரை பூனை ஒரே நேரத்தில் உயிருடன் இறந்து கிடக்கிறது. புரிகிறதா...? சரி புரியும்படி ஒரு வரலாறு சொல்றேன்.

மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் "அனல் ஹக் " (நானே உண்மை) இறைவனுக்கு ஹக் என்ற பெயர் உண்டு.
ஆகையால் தன்னை இறைவன் என்று சொல்கிறார் என்று குற்றம் சாட்டி சிறை வைக்கப்படுகிறார்கள் .
ஓரிரவு சிறைக்காவலர்கள் திடுக்கிற்றார்கள் காரணம் மன்சூர் ஹல்லாஜ் அவர்களை சிறையினுள் காணவில்லை. இருந்தாலும் காவலர்கள் ஹல்லாஜ் தப்பி ஓடக்கூடியவர் அல்லர் எப்படியோ வெளியே போனவர் எப்படியேனும் திரும்ப வருவார் என்று எண்ணினர் .
பொழுது புலர்ந்தும் வரவில்லை, பகல் முழுவதும் வரவில்லை . அடுத்த இரவும் வந்தது இந்த இரவில் ஒரு விந்தை நடந்தது . சென்ற இரவில் ஹல்லாஜைத்தான் காணவில்லை இன்றிரவு ஹல்லாஜ் சிறை வைக்கப்பட்டிருந்த அறையையே காணவில்லை. அரசாங்கமே பதறிவிட்டது .

பொழுது புலர்ந்து மூன்றாம் இரவு வந்தது . திடீரென ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சிறையில் காணப்பட்டார்கள் .
" தாங்கள் இரண்டு இரவுகளாக எங்கே சென்றிருந்தீர்கள்? சென்ற இரவு இந்த அறையைக் கூட காணோமே ?
"முதல் நாள் இரவு இறைவனின் திருச்சந்நிதானத்தில் வீற்றிருந்தேன் எனவே நீங்கள் என்னை இங்கு கண்டிருக்க மாட்டீர்கள். இரண்டாம் நாள் இரவு இறைவனே இங்குத் தரிசனம் தந்தான் .எனவே என்னையும் இந்த அறையையும் நீங்கள் கண்டிருக்க மாட்டீர்கள் .இப்பொழுது ஷரீஅத்தைப் பேணுவதற்காக மீண்டும் இங்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளேன் " .
இப்போது நீங்கள் சொல்லுங்கள் மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சிறையில் இருந்து தப்பித்தார்களா ? இல்லையா ?

"அப்பாடா !....குவாண்டம் தத்துவம் உங்களுக்கு புரிந்திருக்கும் "
(பூனை தத்துவத்தை இன்னும் இலேகுவாக பின்னூட்டத்தில் விவரித்துள்ளேன்)
ர.ரா

அணு முதல் அண்டம் வரை 13

(மாற்றத்தின் தோற்றங்கள்)



பௌதிக விஞ்ஞானத்தில் இரண்டு விதமான இயற்பியல்கள் உண்டு. அவை,
1. நியூட்டனின் இயற்பியல் (Newtonian Physics),
2. குவாண்டம் இயற்பியல் (Quantum Physics).

அணுக்கள், அணுக்கள் அணுக்களாக சேர்ந்து உருவாகும் மூலக்கூறுகள், மூலக்கூறுகளால் உருவான பொருட்கள், பொருட்களால் உருவான உலகம், உலகங்களால் உருவான அண்டம் என, மிகச் சிறு அணு , மிகப் பெரிய அளவில் இருக்கும் அண்டம் அனைத்தும் 'நியூட்டோனியன் பிசிக்ஸ்' என்னும் ஒரு தொகுதிக்குள் அடங்குகிறது.

இதில் இருக்கும் எதுவுமே ஒளியின் வேகத்தில் பிரயாணம் செய்ய முடியாத தன்மைகளைக் கொண்டிருக்கும். இன்னும் இலகுவாகச் சொல்லப் போனால், ஐசக் நியூட்டன் என்னும் விஞ்ஞானியின் காலத்தில், அவரால் வரையறை செய்யப்பட்ட விதிகளுக்குட்பட்டவை இவைகள் .
ஆனால் 'குவாண்டம் பிசிக்ஸ்' என்பது அப்படியே அதற்கு நேரெதிரானது. அணுவைப் பிளந்து, அதனுள்ளே ஆராய்ந்து பார்த்த போது, அதனுள்ளே உப அணுத்துகள்கள் **(Subatomic particles)** என்று அழைக்கப்படும் அணுவை விட மிகமிகச் சிறிய துகள்களாலான மாபெரும் உலகமே அங்கு இயங்கிக் கொண்டிருக்கிறது !
அந்த துகள் உலகம் அண்டத்துக்கே நிகராக, உப அணுத்துகள்களின் செயல்பாடுகள் அணுக்களின் உள்ளே அண்டமாகவே செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன !
அணுக்களுக்குள்ளே இயங்கிக் கொண்டிருந்த அந்த நுண்ணிய அண்டமே, 'குவாண்டம்' என்று அழைக்கப்படுகிறது.

ஒன்று, அணுக்களை விடப் பெரிய அளவிலான அண்டம். மற்றது, அணுக்களுக்குள்ளே இயங்கும் நுண்ணிய வடிவிலான குவாண்டம்.
குவாண்டம் என்பது பிற மொழிச் சொல்லாக இருந்தாலும், தமிழில் 'அண்டம்', 'குவாண்டம்' என்னும் இரண்டு சொற்களும் பொருந்தியது போல வேறு எந்த மொழியிலும் பொருந்தவில்லை. அண்டத்துக்கு எதிர், குவாண்டம் என்று தமிழில் அமைந்தது ஒரு மாபெரும் தற்செயலே!
எலக்ட்ரான் **(Electron)** என்பது குவாண்டம் நிலையில், இரண்டு விதத்தில் இயங்குகிறது என்று ஏற்கனவே சொல்லியிருந்தேன்.
அது சாதாரண நிலையில் அலைகளாகவும் **(waves),** வேறொரு நிலையில் துகள்களாகவும் (particles) காணப்படுகிறது. ஒரே எலக்ட்ரான் இப்படி இரண்டு விதமாகவும் இருப்பது என்பது சாத்தியமாக இருக்க முடியாதது என நம் பகுத்தறிவு சொன்னாலும் , எலக்ட்ரான் இந்த இரண்டு நிலைகளிலும் இருப்பது என்பது ஆராய்ச்சிகளின் மூலம் கண்டறியப்பட்டது.

மேலிருந்து கீழாக மெல்லிய, நீண்டதொரு துளையுள்ள ஒரு தகட்டினூடாக எலக்ட்ரான்களைத் தொடர்ச்சியாகச் செலுத்தி, அவை அந்தத் துளையினூடாக வெளிவந்து தகட்டின் பின்னால் உள்ள திரையில் படும்படி விட்டபோது, அங்கு நேர் கோட்டில் எலக்ட்ரான்கள் படிந்ததை அவதானிக்க முடிந்தது. அதாவது துப்பாக்கிக் குண்டுகள் நேராக செலுத்தப்பட்டு துளைப்பது போல, நேர்கோட்டில் அவை அந்தத் திரையில் படிந்து காணப்பட்டன. இது எலக்ட்ரான்கள் துகள்களாக இருக்கும் தன்மைக்கு உதாரணமாகிறது.

அடுத்து முன் இட்ட துளை போல, இரண்டு துளைகளை அருகருகே இட்டு, எலக்ட்ரான்களை அவற்றினூடாகத் தொடர்ச்சியாகச் செலுத்தியபோது, பின்னால் உள்ள திரையில், இரண்டு கோடுகளாக எலக்ட்ரான்கள் படிவதற்குப் பதிலாக, வரிசையாகப் பல கோடுகள் படிந்து காணப்பட்டன. இவை எலக்ட்ரான்கள் அலைகளாக இயங்குவதற்கான ஆதாரமாக அமைகின்றது.

ஒரே எலக்ட்ரான் எப்படி ஒரு சமயத்தில் துகளாகவும், இன்னுமொரு சமயத்தில் அலையாகவும் இயங்குகிறது என்று ஆச்சரியத்தின் உச்சிக்குச் சென்ற ஆராய்ச்சியாளர்கள், எலக்ட்ரானின் இன்னுமொரு செயலைக் கண்டு சிலையாகிப் போனார்கள்.

அதாவது இரண்டு துளைகளினூடாகச் செலுத்தப்பட்ட ' எலக்ட்ரான்கள் அலைகளாக செல்கின்றனவே!' என்று ஆச்சரியத்துடன் அவற்றை அவதானிக்கச் சென்றபோது, நாம் அவதானிப்பது எப்படியோ தெரிந்து கொண்ட எலக்ட்ரான்கள், உடனடியாக அலைகளாகச் செயல்படுவதை நிறுத்திவிட்டு, துகள்களாகச் செல்ல ஆரம்பித்தன. அதாவது பின்னால் உள்ள திரையில் நாம் அவதானித்த போது, இரண்டு நேர்கோடுகள் போல எலக்ட்ரான்கள் பதிய ஆரம்பித்தன. நாம் அவதானிக்காத போது, அலைகளாகவும், நாம் அவதானிப்பது தெரிந்ததும் துகள்களாகவும் எலக்ட்ரான்கள் இயங்கின. ஏற்கனவே எலக்ட்ரான் அலையாகவும், துகளாகவும் எப்படி இயங்குகிறது என்று ஆச்சரியப் பட்டுப் போன இயற்பியலாளர்கள், நாம் அவதானிப்பதால் தன் செயலை மாற்றிக் கொள்ளும் எலக்ட்ரானைப் புரிந்துகொள்ள முடியாமல் தவித்தனர்.

அப்போ 'எலக்ட்ரானுக்கு உயிர் இருக்கிறதா?' எனச் சந்தேகிக்கலாம் போலக் கூட இருந்தது. இப்படிப்பட்ட செயல்பாடு எலக்ட்ரானுக்கு மட்டுமல்லாமல், பெரும்பான்மையான உப அணுத்துகள்களுக்கும் இருந்ததையும் கண்டுபிடித்தனர்.
நாம் அவதானிக்கும் போது, வேறு விதமான நிலையில் துகள்கள் இயங்குவதை, அந்தத் துகள்களின் 'உச்ச நிலை' **(Superposition)** என்று இயற்பியலாளர்கள் அழைத்தனர். இறைவன் அதை தன்னை துதி செய்கிறது என்கிறான் .

تُسَبِّحُ لَهُ السَّمٰوٰتُ السَّبْعُ وَالْاَرْضُ وَمَنْ فِيْهِنَّ وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا يُسَبِّحُ بِحَمْدِهٖ وَلٰـكِنْ لَّا تَفْقَهُوْنَ تَسْبِيْحَهُمْ اِنَّهٗ كَانَ حَلِيْمًا غَفُوْرًا
ஏழு வானங்களும் பூமியும் இவற்றிலுள்ள அனைத்தும் அவனைப் புகழ்ந்து கொண்டே இருக்கின்றன. (இவற்றில்) ஒன்றுமே அவனைத் துதி செய்து புகழாதிருக்கவில்லை. எனினும், அவை துதி செய்து புகழ்வதை நீங்கள் அறிந்து கொள்வதில்லை. நிச்சயமாக அவன் பொறுமையுடையவனும், மன்னிப்புடையவனாகவும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன்: 17:44)

அந்த துகள்களின் உச்ச நிலை குறித்து இறைவனும் குர்ஆனில் சில நிகழ்வுகளாக சொல்லி காட்டி நம்மை வியப்பின் எல்லைக்கே கொண்டு செல்கிறான் .

وَمَا تِلْكَ بِيَمِيْنِكَ يٰمُوْسٰى
"மூஸாவே! உங்களது வலது கையில் இருப்பது என்ன?" என்று கேட்டான்.
(குர்ஆன்: 20:17)

قَالَ هِىَ عَصَاىَ اَتَوَكَّؤُا عَلَيْهَا وَاَهُشُّ بِهَا عَلٰى غَنَمِىْ وَلِىَ فِيْهَا مَاٰرِبُ اُخْرٰى
அதற்கவர் "இது என்னுடைய கைத்தடி. இதன்மீது நான் சாய்ந்து கொள்வேன். இதைக் கொண்டு என்னுடைய ஆடுகளுக்குத் தழை (குழை)களைப் பறிப்பேன். இன்னும் இதில் எனக்கு வேறு பல பயன்களும் இருக்கின்றன" என்று கூறினார். (குர்ஆன் : 20:18)

قَالَ اَلۡقِهَا يٰمُوۡسٰى
அதற்கு (இறைவன்) "மூஸாவே! நீங்கள் அதனை(த் தரையில்) எறியுங்கள்" எனக் கூறினான். (குர்ஆன் : 20:19)
فَاَلۡقٰٮهَا فَاِذَا هِىَ حَيَّةٌ تَسۡعٰى
அவர் அதனை எறியவே அது ஒரு பெரிய பாம்பாகி ஓடிற்று. (குர்ஆன்: 20:20)
قَالَ خُذۡهَا وَلَا تَخَفۡ سَنُعِيۡدُهَا سِيۡرَتَهَا الۡاُوۡلٰى
(அப்போது இறைவன்) "நீங்கள் அதைப் பிடியுங்கள்; பயப்படாதீர்கள். உடனே அதனை முன் போல் (தடியாக) ஆக்கி விடுவேன். (குர்ஆன்: 20:21)
இப்போது தடி பெரிய தடித்த பாம்பாகவும் மாறும் என்பதை தன் நபிக்கு இறைவன் சொல்லிக் கொடுத்தான் .
நபி மூஸா (அலை) அவர்களின் எதிரி
ஃபிர்அவ்ன், மூஸா மாயம் மந்திரத்தோடு சூனியமும் செய்கிறார் எனவே இவரை வெல்வதற்கு இவரை விட பெரிய சூனியக்காரர்களை நாடெங்கும் தேடி திரட்டி வந்து , நபி மூஸா (அலை) அவர்களை போட்டிக்கு அழைக்கிறான் .

قَالُوۡا يٰمُوۡسٰٓى اِمَّاۤ اَنۡ تُلۡقِىَ وَاِمَّاۤ اَنۡ نَّكُوۡنَ اَوَّلَ مَنۡ اَلۡقٰى
பின்னர் (சூனியம் செய்ய வந்த) அவர்கள் (மூஸாவை நோக்கி) "மூஸாவே! (சூனியத்தை) நீங்கள் எறிகின்றீர்களா? அல்லது முதலாவதாக நாங்கள் எறியவா?" என்று கேட்டார்கள்.
(குர்ஆன்: 20:65)

قَالَ بَلۡ اَلۡقُوۡا‌ ۚ فَاِذَا حِبَالُهُمۡ وَعِصِيُّهُمۡ يُخَيَّلُ اِلَيۡهِ مِنۡ سِحۡرِهِمۡ اَنَّهَا تَسۡعٰى
அதற்கவர் "நீங்களே (முதலாவதாக) எறியுங்கள்" என்று கூறினார். (அவர்கள் எறியவே எறிந்த) அவர்களுடைய கயிறுகளும், அவர்களுடைய தடிகளும் அவர்களுடைய சூனியத்தின் காரணமாக மெய்யாகவே அவை (பாம்புகளாகி) ஓடுவது போல் இவருக்குத் தோன்றின. (குர்ஆன் : 20:66)

فَاَوۡجَسَ فِىۡ نَفۡسِهٖ خِيۡفَةً مُّوۡسٰى
ஆகவே, மூஸா தன் மனதில் பயத்தை உணர்ந்தார். (குர்ஆன் : 20:67)

قُلۡنَا لَا تَخَفۡ اِنَّكَ اَنۡتَ الۡاَعۡلٰى
(அச்சமயம் நாம் அவரை நோக்கி) "நீங்கள் பயப்படாதீர்கள்! நிச்சயமாக நீங்கள்தான் உயர்ந்தவர்" என்று கூறினோம். (குர்ஆன் : 20:68)

وَاَ لۡقِ مَا فِىۡ يَمِيۡنِكَ تَلۡقَفۡ مَا صَنَعُوۡا ؕ اِنَّمَا صَنَعُوۡا كَيۡدُ سٰحِرٍ‌ ؕ وَلَا يُفۡلِحُ السّٰحِرُ حَيۡثُ اَتٰى
அன்றி, உங்களது வலது கையில் இருப்பதை நீங்கள் எறியுங்கள்! அவர்கள் செய்த (சூனியங்கள்) அனைத்தையும் அது விழுங்கிவிடும். அவர்கள் செய்ததெல்லாம் சூனியக்காரர்களின் (வெறும்) சூழ்ச்சியே(யன்றி உண்மையல்ல). சூனியக்காரர்கள் எங்கிருந்து வந்தபோதிலும் வெற்றி பெறவே மாட்டார்கள்" (என்றும் கூறினோம்). (குர்ஆன் : 20:69)

فَاُلۡقِىَ السَّحَرَةُ سُجَّدًا قَالُوۡۤا اٰمَنَّا بِرَبِّ هٰرُوۡنَ وَمُوۡسٰى
(மூஸா தன் தடியை எறியவே அது பெரியதொரு பாம்பாகி, அவர்கள் செய்திருந்த சூனியங்கள் அனைத்தையும் விழுங்கி விட்டது. இதனைக் கண்ணுற்ற) அச்சூனியக்காரர்கள் சிரம் பணிந்தவர்களாக வீழ்த்தப்பட்டு "நாங்களும் மூஸா, ஹாரூன் (ஆகிய இவ்விருவருடைய) இறைவனை நம்பிக்கை கொண்டோம்" என்று கூறினார்கள்.(குர்ஆன் : 20:70)

சூனியக்காரர்களுக்கு தாங்கள் செய்தது மற்றவர்களின் கணணை கட்டி செய்யும் வெறும் செப்படி வித்தை ஆனால் நபி மூஸா (அலை) அவர்கள் செய்தது பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட பொருட்களின் உண்மை நிலை என்பதை நன்கு விளங்கி இருந்தார்கள் .எனவே தங்களின் இறைவனாக வணங்கி வந்த ஃபிர்அவ்னை காட்டிலும் உண்மையான இறைவன் , மூஸா, ஹாரூன் (ஆகிய இவ்விருவருடைய) இறைவனை நம்பிக்கை கொண்டோம்" என்றார்கள்.
ர.ரா

அணு முதல் அண்டம் வரை 14

(ஹிக்ஸ் போஸான்)




இந்த பிரபஞ்சம் உருவான ரகசியத்தை மெஞ்ஞானம் கடவுள் படைத்தார் என்கிறது. . மொத்த பிரபஞ்சமும் அணுக்களால் ஆனது என்கிறது விஞ்ஞானம்.

லியோன் லேடர்மான் என்பவர்தான் ஹிக்ஸ் போஸானுக்கு 'கடவுள் துகள்' என்று பெயர்வைத்தார். இவர் எழுதிய 'கடவுள் துகள்' (தி காட் பார்ட்டிக்கிள்) என்னும் புத்தகத்திலிருந்தே இந்தப் பெயர் பிரபலமானது. லியோன் லேடர்மான், நோபல் பரிசு வென்ற இயற்பியலாளர்
" (அவன் எப்பொருளாலும் ஆனவன் இல்லை) அவன்தான் இவ்வுலகிலுள்ள ஒவ்வொன்றையும் படைப்பவன் அல்லாஹ்தான். அவன் ஒருவனே! அவனுக்கு இணைதுணையில்லை அவனே உலகிலுள்ள அனைத்தையும் அடக்கி ஆளுகின்றான் "
(அல்குர்ஆன்: 13:16)

இப்பேர்பட்ட இறைவனை படைப்பாளனை படைப்பாக்கி , அந்த படைப்பின் துகளை கடவுள் துகள் என்கிறார்கள் . இது முற்றிலும் முட்டாள்தனமான சொற்றொடர்தான் இந்த கடவுள் துகள் அதை " ஹிக்ஸ் போஸான் " என்றே நாம் அழைப்போம் .
ஹிக்ஸ் போஸான் இருப்பது 99.999% உறுதி செய்யப்பட்டுள்ளதாக இது தொடர்பான ஆராய்ச்சியை நடத்தி வரும் விஞ்ஞானிகள் அறிவித்துள்ளனர்.
இதன்மூலம் ஹிக்ஸ் போஸான் இருக்கிறதா இல்லையா என்பது தொடர்பான கேள்விகளுக்கு ஓரளவுக்கு விடை கிடைத்திருக்கிறது.
Big Bang எனப்படும் பெரு வெடிப்பைத் தொடர்ந்தே அணுக்களும், மூலக்கூறுகளும், கிரகங்களும், இந்த பேரண்டமும் (universe) உருவாயின என்பது விஞ்ஞான தியரி.
" ஆரம்பத்தில் வானம் என்றும் பூமி என்றும் தனித்தனியாக இல்லாமல் இருந்ததை நாமே பிரித்தமைத்தோம் "
(அல்குர்ஆன்: 21:30)

இதன்படி பிக் பேங் வெடிப்பு நிகழ்ந்த கணத்தில் அணுக்கள் ஒளியை விட பயங்கரமான வேகத்தில் எல்லா திசைகளிலும் சிதறின. அப்போது அந்த அணுக்களுக்கு எந்த நிறையும் (mass) இல்லை.
ஆனால், ஹிக்ஸ் போஸான் எனப்படும் 'சக்தியோடு' அவை தொடர்பு கொண்ட பிறகே அந்த அணுக்களுக்கு நிறை கிடைத்தது. இதன் அடிப்படையில்தான் இந்த பேரண்டம் உருவானது என்று சொல்கிறது ஸ்டாண்டர்ட் மாடல் தியரி.
இதையை எளிமையான உதாரணத்தால் சொல்கிறேன். கட்டடத்தை கட்டுவதற்கு செங்கற்களை அடுக்கி கட்டும் போது அவற்றிற்கு இடையே சிமிண்ட்டை வைத்து செங்கற்களை ஒன்றோன்று பிணைக்கப்படுகிறதல்லவா.. இந்த மாதிரியான பிணைப்பை ஏற்படுத்தும் சிமிண்ட்தான் இந்த ஹிக்ஸ் போஸான் என்ற அணுத்துகள்களை ஒன்றொடு ஒன்று ஒட்டும் சக்தி .
" பின்னர், வானத்தைப் படைக்கக் கருதினான். அது ஒருவகை புகைதான். அதனையும் பூமியையும் அவன் நோக்கி "நீங்கள் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி (வழிபட்டு) என்னிடம் வாருங்கள்" என்று கூறினான். அதற்கு அவைகள், "இதோ நாங்கள் விருப்பத்துடனேயே வந்தோம்" என்று கூறின
(அல்குர்ஆன் : 41:11)

விருப்பத்துடன் வந்த துகள்கள் எல்லாம் ஒன்றாகி கோள்கள் , நட்சத்திரங்கள் என அவன் நாடியபடியெல்லாம் உண்டாகின.

இந்த கோட்பாட்டின்படி (தியரி) இந்த யுனிவர்ஸ் உருவாக முக்கிய அடிப்படையாக இருந்தவை 12 வகையான அணுத் துகள்கள். அடுத்தடுத்து நடந்த ஆய்வுகளில் 11 அணுத் துகள்கள் அடையாளம் காணப்பட்டுவிட்டன. அவை இருப்பதையும் பார்த்துவிட்டோம்.

ஆனால், இதுவரை கண்ணுக்குப் புலப்படாத 'சூப்பர் ஸ்டார்' தான் ஹிக்ஸ் போஸான். சரி, இதைத் தான் கண்டுபிடிக்கவே முடியவில்லையே, விட்டுவிட வேண்டியது தானே என்றால், அதுவும் முடியாது. காரணம், அது இந்த யுனிவர்ஸ் உருவானது தொடர்பான ஒட்டு மொத்த தியரிகளையும் இது குப்பைக்குக் கொண்டு போய்விடும்.
சுவிஸ் நாட்டு இப்பரிசோதனைக்கு முன்னர் அமெரிக்காவில் பெரிய நிலத்தடி வட்டப் பாதையொன்று அமைக்கப்பட்டு, முறையாகப் பரிசோதனைகள் நடத்தப்பட்ட இன்னுமொரு பரிசோதனைச் சாலையொன்று அமெரிக்காவில் இருக்கிறது. அதை 'ஃபெர்மி லாப்' என்பார்கள். இது சிகாகோ மாகாணத்தில் உள்ள இல்லிநாய்ஸில் இருக்கிறது. இந்த ஃபெர்மி லாப் மூலம் பல அடிப்படைத் துகள்களை ஏற்கெனவே கண்டுபிடித்திருக்கிறார்கள் இந்த ஃபெர்மி லாபின் நிர்வாகத் தலைவராக இருந்தவர்தான், ஹிக்ஸ் போஸானுக்கு 'கடவுள் துகள்' என்னும் பெயரைச் சூட்டிய இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சொன்ன லியோன் லேடர்மான்.

அமெரிக்காவில் பல ஆண்டுகள் நீடித்த இந்த சோதனைகள் எந்த முடிவையும் எட்டாததால், அந்த ஆய்வுகளுக்கு நிதி தருவதை அமெரிக்க அரசு நிறுத்திவிட்டது.
இதைத் தொடர்ந்தே பிரான்ஸ்-சுவிஸ் எல்லையில் ஜெனீவா அருகே 27 கி.மீ நீளம் 574 அடி ஆழம் (அரை கி.மீ ஆழம்) சுரங்கம் தோண்டி ,113 நாடுகளிலுள்ள 608 பல்கலை கழகத்தில் உள்ள 7931 அறிவியல் விஞ்ஞானிகள் ஆய்வு செய்ய, ஐரோப்பிய அணு ஆராய்ச்சிக் கழகம் (CERN) அமைத்த மாபெரும் வட்ட சுரங்க ஆய்வகத்தில் இந்தச் சோதனைகள் தொடங்கின.

அணுத் துகள்களுக்கு நிறையைத் தருவதாகக் கருதப்படும் ஹிக்ஸ் போஸான் தான் நம்மைச் சுற்றியுள்ள இந்த பேரண்டத்தின் பெரும் பகுதியை நிறைத்திருக்கிறது.
ஹிக்ஸ் போஸானால் பாதிக்கப்படாத ஒரே அணுத் துகள் ஒளிக் கதிர்களான போட்டான்கள் மட்டுமே. இதனால் தான் போட்டான்களுக்கு நிறை இல்லை. மற்ற எல்லா அணுத் துகள்கள் மீதும் இந்த ஹிக்ஸ் போஸான் தனது ஆதிக்கத்தைச் செலுத்தி நிறையைத் தந்துவிடுகிறது என்று சொல்கிறது ஸ்டாண்டர்ட் மாடல் தியரி.

ஆனால், அதில் விடுபட்டு நிற்கும் ஒரே கேள்வி அணுத் துகள்களுக்கு நிறையைத் தரும் ஹிக்ஸ் போஸானின் எடை என்ன என்பதே. (நிறை என்றால் என்ன?. ஒரு பொருளின் எடை மைனஸ் புவிஈர்ப்பு விசை தான் நிறை. அதாவது நமது எடை 55 கிலோ என்றால் நம் உடலின் மீது புவிஈர்ப்பு விசை செலுத்தும் இழுவிசையைச் சேர்த்தது தான் 55 கிலோ எடை. இதில் புவிஈர்ப்பு விசையை கழித்துவிட்டால் மிச்சமிருக்கும் எடையே நிறை)
பார்க்கவே முடியாத ஹிக்ஸ் போஸானை நிரூபிக்க ஒரே வழி. அதன் எடையைக் கண்டுபிடிப்பதே. இந்த ஆய்வைத் தான் CERN நடத்தியது.
இதற்காகத் தான் சிறிய அளவிலான Big Bang வெடிப்பை செயற்கையாக நடத்திப் பார்த்தனர். இதற்காகத் தான் நியூட்ரான்-புரோட்டான்களின் அதி பயங்கர மோதலை நடத்தினர். இந்த மோதலில் வெடித்துச் சிதறிய பல்வேறு அணுத் துணைத் துகள்கள், கதிர்வீச்சுகளுக்கு இடையே ஹிக்ஸ் போஸானையும் (அதன் எடையை) தேடினர்.
ஸ்டாண்டர்ட் மாடல் தியரியின் படி ஹிக்ஸ் போஸானின் எடை 125 கிகா எலெக்ட்ரோ வோல்ட்ஸ் (GeV) என்ற அளவில் இருக்க வேண்டும். அதாவது அணுக்களுக்குள் இருக்கும் துணைத் துகளான புரோட்டானின் எடையை விட 125 மடங்கு அதிகமாக இருக்க வேண்டும்.
CERN விஞ்ஞானிகள் நடத்திய ஆராய்ச்சியில் 125.3+ GeV எடை கொண்ட துகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இது 99.999% ஹிக்ஸ் போஸானாகத் தான் இருக்க வேண்டும் என்கிறார்கள்.
ஆனால், 0.1% சந்தேகக் கேள்வி இன்னமும் மிச்சமிருக்கிறது கண்டு பிடித்தது ஹிக்ஸ் போஸான்தானா ...?
பிரபஞ்சத் தோற்றத்தைப் பற்றிய ஆய்வுகள் மிகவும் அவசியம்தான். ஆனாலும், பிரபஞ்சத்தின் முடிவுக்கு அவையே காரணமாக ஆகிவிடுமோ என்று பொதுமக்களைப் போலவே விஞ்ஞானிகளும் அஞ்சும்போது அந்த அச்சத்தை அவ்வளவு எளிதாகப் புறந்தள்ளிவிட முடியாது.
ர.ரா

அணு முதல் அண்டம் வரை 15 .

(நாலே நாலு சக்திதான் அடிப்படை)




பிரபஞ்சத்தில் நான்கு விதமான சக்திகள் எல்லா சக்திகளுக்கும் அடிப்படை .

- புவி ஈர்ப்பு சக்தி
- மின்காந்த சக்தி
- அணுக் கருவிற்குள் இருக்கும் வலுவான சக்தி
- அணுக்கருவைச் சுற்றி இருக்கும் மெலிதான சக்தி

புவி ஈர்ப்பு சக்தி உங்கள் எல்லோருக்கும் தெரியும். எறிந்த பந்து கீழே விழுவது மாதிரி . மரத்திலிருந்து ஆப்பிள் பழம் ஏன் கீழே விழ வேண்டும் மேலே போனால் என்ன ? என்று யோசித்த நியூட்டன் நிரூபித்த சக்தி மின்காந்த சக்தியும் உங்களுக்கு நல்ல பரிச்சயம் .காரணம் கரண்ட் , காந்த சமச்சாரங்கள் அத்தனையும் அடங்கும் . ஃபாரடே , மாக்ஸ்வெல் போன்ற விஞ்ஞானிகள் அலசி ஆராய்ந்து சொன்ன விஷயங்கள் .
ருதர் போர்டு என்கிற விஞ்ஞானி அணுக் கட்டத்தின் அமைப்பைச் சொன்னார் வலுவான அணுசக்தி அதன் உட்கருவில் உள்ளது . சூரியனை சுற்றி வரும் கோள்களை தகர்த்தலைக் காட்டிலும் சூரியனையே தகர்த்தால் எப்படியோ அப்படி , அதாவது அணுவின் உட்கருவை தகர்த்தால் 900 கோடி மடங்கும் மேலான அபரிதமான சக்தி வெளிப்படும் .

அணுவின் உட்கருவைச் சுற்றி வரும் எலக்ட்ரானிலிருந்து வெளிப்படும் மெலிதான சக்தி மேடம் கியூரி என்கிற பெண் விஞ்ஞானி மெலிதான அணுக் கரு வெளியிடும் கதிரியக்கம் பற்றி ஆராய்ந்து சொன்னார் .
அவ்வளவுதான் இந்த நாலே சக்திதான் இந்த நாலு சக்திகளைக் கொண்டு பிரபஞ்ச இயக்கங்கள் அனைத்தையும் புரிய வைத்திட முடியும் என்று விஞ்ஞான உலகம் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கும் போதுதான் ......

ஏன் நான்கு ?...இந்த நான்கையும் ஒன்று என்று சொல்ல முடியாதா ? என்று உங்களுக்கு தோன்றும் முன் இந்த நூற்றாண்டின் மஹா மாமேதை ஐன்ஸ்டைனுக்குத் தோன்றியது .
அவர் ஏற்கனவே திடப்பொருளையும் , சக்தியையும் இணைத்து ஆற்றல் என்பது பொருண்மையையும், மடங்கு விகிதத்தில் ஒளியின் வேகத்திற்கும் சமமாக இருக்கும் என்றார்

E = MC 2 அதாவது C2 அல்ல (C Squres)
ஐன்ஸ்டைன் இந்த நான்கு சக்திகளையும் இணைத்து கிராண்ட் யூனிஃபைடு ஃபீல்டு தியரி (Grand unified Field theory) ஒன்றை உருவாக்கினார் .இதில்
புவி ஈர்ப்பு சக்தி இத்துடன் சேர மறுப்பதால், இப்போதைக்கு அதை விட்டு விட்டு , மின்காந்த சக்தியையும் , மெலிதான அணுக்கரு சக்தியையும் இணைத்து பாகிஸ்தான் விஞ்ஞானி அப்துஸ் ஸலாம் என்பவர் நிரூபித்தார் .

ஓர் எலக்ட்ரான் நசிவு ( நகர்வதால்) ஏற்படும் மின்காந்த விசையைத் தக்க கருவிகளைக் கொண்டு அதிக தூரத்தில் கூட உணர முடியும் .ஆனால் அணுக்கருவிற்குள் இருக்கும் மெல்லிய விசை அதன் ஆதிக்கத்தில் மிக மிக கம்மியானது. ஒரு சென்டிமீட்டரில் நூறு கோடி பாகம்தான் அதன் ஆதிக்கம் பரவுகிறது. இது ரொம்ப ரொம்ப குட்டியான சக்தி . இதனுடன் பரவலாக ஆதிக்கம் கொண்ட மின்சக்தியை இணைத்து இரண்டும் ஆதாரமாக ஒன்றோடு ஒன்றுதான் என்று நிரூபிக்க ரொம்ப சிரமப்பட்டு வெற்றி கண்டார் அப்துஸ் ஸலாம் .

"ஸலாம் ...! எப்படி இந்த இரண்டு சக்தியும் ஒரு ஜோடியாக உங்களால் எப்படி கற்பனை செய்ய முடிந்தது ? "

"குர்ஆன்தான் சொல்லிக் கொடுத்தது "

" எப்படி சொல்லிக் கொடுத்தது ?

وَمِنْ كُلِّ شَىْءٍ خَلَقْنَا زَوْجَيْنِ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ

"ஒவ்வொரு வஸ்துக்களையும் (ஆண், பெண் கொண்ட) ஜோடி ஜோடியாகவே நாம் படைத்திருக்கின்றோம். (இதனைக் கொண்டு) நீங்கள் நல்லுணர்ச்சி பெறுவீர்களாக! " (குர்ஆன் : 51:49)

" வெல்டன் ஸலாம் வெல்டன் "

" ஸலாம் ...! ஆரம்பத்தில் இந்த நாலு சக்தியும் ஒரே சக்தியாக இருந்ததற்கு என்ன காரணத்தை முன் வைக்கிறீர்கள் ? "

"அதற்கும் குர்ஆன்தான் "

" எப்படி ? "

اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَـتَا رَتْقًا

(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் இருந்ததை நாமே பிரித்து அமைத்தோம் (குர்ஆன்: 21:30)

1967 -ம் ஸலாம் அறிவித்த இந்த ஒருங்கிணைந்த சித்தாந்தம் மெல்ல மெல்ல ஒப்புக் கொள்ளப்பட்டதற்குக் காரணம் பரிசோதனைகளில் அவை நிருபிக்கப்பட்டது

ஜெனீவாவில் ஆறு கிலோ மீட்டர் நீள காந்தம் அமைத்து , ஆக்ஸலரேட்டர்களில் மின்துகளைத் துரத்தி , வேகப்படுத்தி , மோத வைத்து , பிரபஞ்சத்தின் ஆரம்ப காலத்து உஷ்ண நிலையை உண்டாக்க முடிந்தது .

வெக்டர் போஸான்கள் (Vector Bosons ) என்கிற கண நேரத்துகள்கள் உண்டாக வேண்டும் .

உண்டானது . நோபல் பரிசு வழங்கப்பட்டது.

அப்துஸ் ஸலாம் ஒரு பக்தியுள்ளவர் . தன் எல்லா பிரச்சனைகளுக்கும் திருக்குர்ஆனில் தீர்வு காண்பவர் .தன் விஞ்ஞான சிந்தனைகள் எல்லாமே திருக்குர்ஆன் போதனைகளிலிருந்து மாறுபடவில்லை" என்கிறார் .மேலும்

"திருக்குரஆன் போதிப்பது இயற்கையின் இயக்கங்களைச் சிந்தித்து பார்த்து சிருஷ்டியில் உள்ள ஆச்சிரியத்தை அறிவதே " என்கிறார்.

"நீங்க என்ன சொல்லப் போறீங்க?"

ர.ரா

குறிப்பு :- அணு முதல் அண்டம் வரை பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது .

" அணு முதல் அண்டம் வரை " இந்த தொடர் பதிவில் பல நண்பர்கள் பாராட்டினாலும் சிலர் அதி நவீன விஞ்ஞானத்தின் தாக்கத்தால் நிலை குலைந்து போயினர்.

" என்னப்பா இது? "

கிளாஸிகல் பிசிக்ஸ் ஓரளவு படித்தவர்களால் அஸ்ட்ரோ பிசிக்ஸ் மற்றும் குவாண்டம் பிசிக்ஸை ஏற்றுக் கொள்ள முடிகிறது . ஆகையால் ஒருவாறாக கரையை கடந்த புயல் போல நிறைவை கண்டது இந்த தொடர் .

அடுத்த தொடர் இன்ஷா அல்லாஹ் "இஸ்லாமிய தாம்பத்யம் " 20 தொடர் பதிவோடு நிறைவேறியதை இன்னும் 20 பதிவுகள் தொடராக எழுதுவதற்கு அப்போது தயார் நிலையில் ஆய்வை முடித்திருந்தேன் .

இஸ்லாமிய தாம்பத்யத்தின் இரண்டாம் பாகத்திற்கு வேறு தலைப்பு பெயர் வைத்து தொடர உள்ளேன்.

என்ன தலைப்பு வைக்கலாம் ?

ஏதாவது பட்சி சொல்லும் .

ர.ரா

வானங்கள் பூமியின் எல்லை



சில விஞ்ஞான கட்டுரைகள் படித்துக் கொண்டிருக்கும் போதே குர்ஆனின் சில வசனங்கள் குளத்து மீன்கள் தலையை காட்டுவது போல தலையை காட்டி செல்லும் .அதுபோல இந்த விஞ் . கட்டுரை படிக்கும் போது என்னுள் தலையை காட்டிய வசனம் இது .

يٰمَعْشَرَ الْجِنِّ وَالْاِنْسِ اِنِ اسْتَطَعْتُمْ اَنْ تَنْفُذُوْا مِنْ اَقْطَارِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ فَانْفُذُوْا لَا تَنْفُذُوْنَ اِلَّا بِسُلْطٰنٍ

மனித, ஜின் கூட்டத்தார்களே! நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்றுவிட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள். ஆயினும், (அவைகளை ஆட்சி புரியக்கூடிய) மிகப்பெரும் பலத்தைக் கொண்டே தவிர நீங்கள் செல்ல முடியாது. (குர்ஆன்: 55:33)

வொயேஜர் 1 (Voyager 1) என்பது ஐக்கிய அமெரிக்காவின் நாசா விண்வெளி ஆய்வு மையத்தினால் 1977 செப்டம்பர்
5 ல் சூரியக் குடும்பத்தின் வெளிப்புறத்தை ஆராய்வதற்காக ஏவப்பட்ட ஓர் ஆளில்லா விண்ணுளவி ஆகும். 722 கிலோகிராம் எடையுள்ள இந்த விண்கலம் 19 நவம்பர் 2019 வரை 42 ஆண்டுகள், 2 மாதங்கள், 14 நாட்கள் காலத்தை விண்வெளியில் நிறைவு செய்துள்ளது. 2013 ல் சூரியனை தாண்டி சென்று கொண்டிருக்கும் இவ்விண்கலம் பூமியில் இருந்து மிக அதிக தூரத்திற்குச் சென்ற மனிதனால் உருவாக்கப்பட்ட ஒரு பொருள் ஆகும்.
1979 ல் வியாழனையும்
1980ல் சனியையும் அணுகியதன் மூலம் தனது திட்டத்தின் முக்கிய குறிக்கோளை இவ்விண்கலம் 1980 நவம்பர் 20 - ல் நிறைவு செய்தது. இவ்விரு கோள்களினதும் அவற்றின் நிலாக்களினதும் விரிவான படங்களைப் பெற்று பூமிக்கு அனுப்பிய முதலாவது விண்ணாய்வி இதுவாகும்.

நாசாவின் வொயேஜர் திட்டத்தின் ஒரு பகுதியாக வொயேஜர் 2 என்ற சகோதர விண்கலத்துடன் சேர்ந்து ஏவப்பட்டிருந்தது. தனது முதன்மைக் குறிக்கோளை நிறைவு செய்த வொயேஜர் 1 இற்கு கைப்பர் பட்டை, சூரியன்சூழ் வான்மண்டலம் உட்பட்ட சூரியக் குடும்பத்தின் எல்லைகளைக் கண்டுபிடித்து அவற்றை ஆராயவும், அதன் பின்னர் விண்மீன்களிடை ஊடகத்தை ஆராயவும் திட்டம் வகுக்கப்பட்டது.
வொயேஜர் 1 விண்கலம் 2012 ஆகஸ்ட் 25 -ல் விண்மீனிடைப் பகுதி என்ற முன்னர் அறியப்படாத வெளியை அடைந்துள்ளதாக 2013 செப்டம்பர் 12 ல் நாசா நிறுவனம் அறிவித்தது. இதன் மூலம், சூரியக் குடும்பத்தை விட்டு வெளியே சென்ற முதலாவது விண்கலம் என்ற சாதனையையும் இது படைத்தது .

40 வருடங்களுக்குப் பிறகு நாசாவின் வாயேஜர்-2 விண்கலம் விண்மீன்களுக்கு இடையேயான, அதாவது இன்டர்ஸ்டெல்லர் பகுதியை நெருங்கிக் கொண்டிருக்கிறது. சூரியக் குடும்பத்தை விட்டு வெளியேறுவதற்கான அறிகுறியாக வாயேஜர்-2 ஐச் சுற்றி காஸ்மிக் கதிர்வீச்சு அதிகரித்து வருவதாக அமெரிக்க விண்வெளி நிறுவனமான நாசா தெரிவித்துள்ளது. 1977-ம் ஆண்டு சூரிய குடும்பத்தின் கோள்கள் பற்றிய ஆராய்ச்சிக்காக வாயேஜர்-2 விண்கலம் விண்ணில் ஏவப்பட்டது. அன்று தொடங்கிய

இதன் பயணம் தற்போது 40 ஆண்டுகளை கடந்தும் இன்னும் முடியவில்லை. தற்போது இந்த வாயேஜர்-2 எங்கிருக்கிறது தெரியுமா?

பூமியிலிருந்து கிட்டத்தட்ட 17.7 பில்லியன் கிலோமீட்டர் தொலைவைக் கடந்து பயணித்துக்கொண்டிருக்கிறது. சுருக்கமாகச் சொன்னால் நமக்கும் சூரியனுக்கும் இடையிலான தொலைவைப் போல் 118 மடங்கு தொலைவில் பயணித்துக்கொண்டிருக்கிறது.

சூரியன் மற்றும் கோள்கள் உள்ளிட்ட சூரிய குடும்பத்தின் பொருள்கள் மற்றும் காந்த சக்தி செறிவுடன் காணப்படும் பகுதியே ஹெலியோஸ்பியர் (Heliosphere) எனப்படுகிறது. வாயேஜர்-2 இந்த ஹெலியோஸ்பியரின் எல்லைப் பகுதியை 2007-ம் ஆண்டு சென்றடைந்திருந்தது. தற்போது விஞ்ஞானிகள் வாயேஜர்-2 ஹெலியோஸ்பியர் எல்லையைக் கடந்து ஹெலியோபாஸ் பகுதியை அடையும் தருணத்துக்காகக் காத்திருக்கிறார்கள். அப்படி வாயேஜர்-2 ஹெலியோஸ்பியர் பகுதியைத் தாண்டும் பட்சத்தில், வாயேஜர்-1ஐத் தொடர்ந்து இன்டர்ஸ்டெல்லர் பகுதியை இரண்டாவதாக அடையும் மனிதனால் உருவாக்கப்பட்ட பொருள் என்ற பெருமையை வாயேஜர் 2 பெறும்.

கடந்த ஆகஸ்ட் மாதத்தில் வாயேஜர் 2-வில் இருக்கும் காஸ்மிக் கதிர் வீச்சை அளவிடும் கருவி முன்பைவிட 5 சதவிகிதம் அதிக கதிர்வீச்சு விண்கலனை தாக்குவதாக அளவிட்டு இருக்கிறது. சூரிய குடும்பத்துக்கு வெளியே அதிவேகத்தில் இயங்கும் துகள்களே காஸ்மிக் கதிர்கள் ஆகும். வாயேஜர்-2-ன் மற்றொரு குறைந்த ஆற்றல் உபகரணமும் காஸ்மிக் கதிர்வீச்சு அதிகரிப்பைக் கண்டறிந்துள்ளது. ஹெலியோஸ்பியர் பகுதியில் காஸ்மிக் கதிர்வீச்சு குறைவாகவே இருக்கும். ஹெலியோஸ்பியர் பகுதியைக் கடந்து ஹெலியோபாஸ் பகுதியை அடையும் போது இன்னும் அதிகக் கதிர்வீச்சு விண்கலனைத் தாக்கும்.

2012-ம் ஆண்டு மே மாதம் வாயேஜர்-1-ம் ஹெலியோஸ்பியர் பகுதியைக் கடக்கும் போது காஸ்மிக் கதிர்வீச்சு அதிகரிப்பை எதிர்கொண்டது. மூன்று மாதங்களுக்கு முன்புதான் வாயேஜர்-1 ஹெலியோபாஸ் பகுதியையும் கடந்து, இன்டர்ஸ்டெல்லர் பகுதிக்குள் நுழைந்தது. வாயேஜர் திட்ட உறுப்பினர்கள் காஸ்மிக் கதிர்வீச்சு அதிகரிப்பை மட்டும் வைத்து வாயேஜர்-2 விண்கலம் ஹெலியோபாஸ் பகுதியைக் கடப்பதாக உறுதியாகக் கூற இயலாது எனத் தெரிவிக்கிறார்கள். வாயேஜர்-1 மற்றும் வாயேஜர்-2 செல்லும் பகுதி பெருமளவில் வேறுபட்டுக் காணப்படுகிறது. மேலே இருக்கும் முதல் படத்தைப் பார்த்தால் இந்த வேறுபாடு புரியும்.

வாயேஜர்-1ஐக் காட்டிலும் 6 வருடம் கழித்து வாயேஜர்-2 ஹெலியோபாஸ் பகுதியில் நுழைவதால் அதிக மாற்றங்களைச் சந்திக்கிறது. இதற்குக் காரணம் சூரியனின் 11 வருடச் சுழற்சியின் காரணமாக ஹெலியோபாஸ் முன்னும் பின்னும் நகர்வதே ஆகும். இந்த 11 வருடச் சுழற்சியின் போது சூரியன் அதிகபட்ச மற்றும் குறைந்தபட்ச செயலாக்கத்தை அடைகிறது. ``வாயேஜர்-2ஐச் சுற்றியுள்ள பகுதியில் ஏற்படும் மாற்றங்களை மிகவும் உன்னிப்பாகத் தொடர்ந்து கவனித்து வருகிறோம். வரும் மாதங்களில் இன்னும் நிறைய கற்றுக்கொள்ள போகிறோம். ஆனால், இன்னும் வாயேஜர்-2 எப்பொழுது ஹெலியோபாஸ் பகுதியில் நுழையும் என்று கூற இயலாது. ஆனால், நிச்சயம் நுழையும் என்பதை மட்டும் உறுதியாகக் கூற முடியும்” என்று நம்பிக்கையுடன் தெரிவித்தார் வாயேஜர் திட்ட விஞ்ஞானி எட் ஸ்டோன். இருந்த போதிலும் …விண்கலத்தைச் செலுத்துவதற்குத் தேவையான ஆற்றல் குறைந்து வருவதால், 2025 ஆம் ஆண்டில் பின்னர் இவ்விண்கலத்தில் இணைக்கப்பட்டிருக்கும் எந்தவொரு உபகரணமும் இயங்கமுடியாமல் போகலாம்.

இக்கட்டுரையை படிக்கும் போது மேற்கண்ட குர்ஆன் வசனம்தான் என் மனதில் நிழலாடியது .
ர.ரா

தோற்றப் பிழை " 01



அடுத்த என்ன தொடர் ஆரம்பிக்கலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கும் போது பாரதியாரின் பாடலைக் கேட்டேன்

தோற்றம் குறித்து பாரதியார் அது மாயை என்பதாக குறிப்பிடுகிறார் .

- நிற்பதுவே,நடப்பதுவே,பறப்பதுவே,
- நீங்களெல்லாம்
- சொற்பனந் தானோ?-பல தோற்ற மயக்கங்களோ?
- கற்பதுவே,கேட்பதுவே,கருதுவதே,
- நீங்களெல்லாம்
- அற்பமாயைகளோ?-உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?
- வானகமே,இளவெயிலே,மரச்செறிவே,
- நீங்களெல்லாம்
- கானலின் நீரோ?-வெறுங் காட்சிப் பிழைதானோ?
- போன தெல்லாம் கனவினைப்போற் புதைந்தழிந்தே போனதனால்
- நானுமோர் கனவோ?-இந்த ஞாலமும் பொய்தானோ?
- கால மென்றே ஒரு நினைவும் காட்சியென்றே பலநினைவும்
- கோலமும் பொய்களோ?-அங்குக் குணங்களும் பொய்களோ?
- சோலையிலே மரங்க ளெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால்,
- சோலை பொய்யாமோ?-இதைச் சொல்லொடு சேர்ப்பாரோ?
- காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம் காண்ப மன்றோ?
- வீண்படு பொய்யிலே-நித்தம் விதிதொடர்ந் திடுமோ?
- காண்பதுவே உறுதிகண்டோம் காண்பதல்லால் உறுதில்லை
- காண்பது சக்தியாம்-இந்தக் காட்சி நித்தியமாம்.

இந்தப் பாடல் என் எண்ணச் சிந்தனையை தூண்டி விட்டது .அதில் திளைத்து உருவான தலைப்புதான்

## கானல் நீர்

(தோற்றப் பிழை 02)



தோற்றப்பிழை என்பது ஒருபடத்தையோ , நிகழ்வையோ கூர்ந்து பார்த்த பிறகு அதன் 'ஆப்டிகல் 'என்று தோன்றும். அந்த முதல் பார்வையில் சட்டென்று ஒரு தோற்றமும்,கூர்ந்து நோக்கும் போது வேறு தோற்றமும் புலப்படும் நிலைதான் **'இல்யூஷன்' எனப்படுவது** .இது நமது மூளையும் கண்களும் சேர்ந்து நம்மை ஏமாற்றும் ஒரு சித்து வேலைதான் அது.

பொதுவாக நமது மூளை எதையும் இப்படித்தான் இருக்கும் என்ற ஒரு எதிர்பார்ப்புடனே பார்க்க முனையும் போது கண்களும் அத்துடன் ஒத்துழைத்து பிம்பத்தை புலப்படச் செய்து விடுகின்றன !
இப்படித்தான் இல்லாததை ' இருப்பதாக கற்பனை ' செய்வதில் மூளைக்கு பெரும்பங்கு இருக்கிறது . அதற்கு ஏற்ப கண்களுக்கும் அந்த காட்சி தெரிவது போல் ஒரு மாயை உருவாக்கி விடுகிறது.இரவு நேரத்திலோ, இருட்டான வேளைகளிலோ சற்று நீளமான கயிற்றை கற்பனையான எதிர்பார்ப்புடன் நாம் பார்க்க, அந்த கயிறு காற்றில் நகர்வதாக தெரிந்தால் கூட கண்கள் அதை பாம்பு போல சந்தேகத்துடன் பார்க்க பயப்படுகிறோம்.
இந் தோற்றப் பிழையை இறைவன் குர்ஆனில் கானல் நீரை உதாரணம் காட்டுகிறான் .

وَالَّذِيْنَ كَفَرُوْۤا اَعْمَالُهُمْ كَسَرَابٍۢ بِقِيْعَةٍ يَّحْسَبُهُ الظَّمْاٰنُ مَآءً حَتّٰۤى اِذَا جَآءَهٗ لَمْ يَجِدْهُ شَيْــٴًـــا وَّ وَجَدَ اللّٰهَ عِنْدَهٗ فَوَفّٰٮهُ حِسَابَهٗ‌ ؕ وَاللّٰهُ سَرِيْعُ الْحِسَابِ ۙ‏
அன்றியும், எவர்கள் ஓரிறை மறுப்பாளர்களாக இருக்கிறார்களோ, அவர்களுடைய செயல்கள் பாலைவனத்தில் (தோற்றமளிக்கும்) கானல் நீரைப் போலாகும்; தாகித்தவன் அதைத் தண்ணீரென்றே எண்ணுகிறான்
- (எது வரையெனில்) அதற்கு (அருகில்) அவன் வரும் பொழுது ஒரு பொருளையும் (அங்கே) காணமாட்டானே (அது வரை);
ஆனால், அங்கு அவன் அல்லாஹ் (அவனுக்கு விதித்திருக்கும் முடி)வை(யே) காண்கின்றான்; (அதன் படி அல்லாஹ்) அவன் கணக்கைத் தீர்க்கிறான்; மேலும், அல்லாஹ் கணக்குத் தீர்ப்பதில் துரிதமானவன்.
(அல்குர்ஆன்: 24:39)

கானல் நீரைப் பற்றி முதல்ல சொல்றேன் . வெப்பமான காலநிலைகளில் பாலைவனங்களிலோ அல்லது நேரான தார்ப் பாதைகளிலோ நீர்த்தடாகம் போன்று தோற்றமளிக்கும் தோற்றப்பாடு ஆகும்.
இது வளியில் ஒளியின் ஒளிமுறிவு (ஒளிவிலகல்) மற்றும் முழு அகத் தெறிப்பு நிகழ்ந்து வானின் எதிரொளிப்பால் தோன்றும் ஒரு 'மாயத்தோற்றம் 'ஆகும்.
கோடைக் காலங்களில் மிகுந்த வெப்பங் காரணமாக தரையை ஒட்டிய வளிப்படை சூடாகின்றது . இதனால் இப்பகுதியில் உள்ள வளிபட்டை அடர்த்தி குறைந்து காணப்படும். இந்த நிலமட்டத்திற்கு மேல் உள்ள வளிப்படையின் சூடையும் அளவு குறைவடைந்து இருப்பதால் வெவ்வேறு விரிவு நிலையில் வளி காணப்படுகின்றது.
இதன் காரணமாக வெவ்வேறு ஊடகம் போல் தொழிற்படுகின்றது. இதில் ஒளி ஊடுருவும்போது முழு அகத்தெறிப்பு நிகழுவதால் ஒளி முறிவடைந்து ' போலி தோற்றப்பாடு' நிகழுகின்றது.

ஓரிறை மறுப்பாளர்கள் இவ்வுலகில் சில நற்செய்கைகளையும் செய்திருப்பார்கள்.
மறுமை நாளில் அவற்றிற்கு உரிய நற்கூலி கிடைக்கும் என்று இறை ஆதரவும் வைத்திருப்பர்கள் . ஆனால் அல்லாஹ்வை ஏகன் என்று விசுவாசங் கொண்டவர்களல்லர் . மேலும் அவனின் திருத்தூதரையும் ஏற்காதவர்கள்.
இத்தகையோர் எண்ணிக் கொண்டிருந்த மறுமையில் எந்த நற்கூலியையும் கிடைக்கப் பெற மாட்டார்கள் .
நடுமதியத்தில் கடுந்தாகங் கொண்ட ஒருவன் , பரந்த பாலைவனத்தில் நடந்து செல்லும் போது தூரத்தில் அலை மோதுவது போல் காட்சி அளிக்கும் கானலைக் காண்கிறான் . அது அவனுக்குத் தண்ணீர் நிரம்பிய ஒரு பெரிய தடாகம் போன்று தோற்றமளிக்கும். காரணம் அவன் கண்ணும் , மூளையும் சேர்ந்து செய்த மாய ரூபம் அது .
தாக மிகுதியால் அதனை நோக்கி ஓடி வருகின்றான். ஆனால் அவன் எண்ணியது போல் அது தண்ணீரில்லை வெறும் பாலைவனத்தையே அவன் காண்கிறான் என்பது அதன் அருகில் போனதும் அது அவனுக்கு புலப்படுகிறது
இந்த செயல் தான் உலகில் செய்துள்ள நற்செயல்களுக்காக அல்லாஹ்விடம் மிகப்பெரிய நற்கூலி தனக்கு இருக்கின்றது என்று எண்ணுகிறான்.
ஆனால் அப்படி ஒன்றும் இருப்பதில்லை கானல் நீரைப் போல் அவன் அல்லாஹ்வையும் , அவனுடைய வேதனையும்தான் அவன் காண்கிறான் .
அதோடு அவனது கணக்கையும் முடித்து விடுகிறான் .
வானகமே,இளவெயிலே,மரச்செறிவே,
நீங்களெல்லாம்
கானலின் நீரோ?-வெறுங் காட்சிப் பிழைதானோ?
போன தெல்லாம் கனவினைப்போற் புதைந்தழிந்தே போனதனால்
நானுமோர் கனவோ?-இந்த ஞாலமும் பொய்தானோ?
ர.ரா

ஒளியியற் கண்மாயம் (Optical illusion)

(தோற்றப் பிழை 3)





இன்றிலிருந்து 40 வருடத்திற்கு முன்பாக இரும்புக்கை மாயாவி என்கிற முத்து காமிக்ஸ் புக் விரும்பிப் படிப்பேன். அதில் மாயாவி தன் ஒற்றை இரும்புக் கரத்தால் மின்சாரத்தைத் தொட்டதும் இரும்புக்கையைத் தவிர உடலெல்லாம் மறைந்து போகிறது . இது என் 17 வயதில் இந்த சாகஸத்தை நினைத்து நினைத்துப் பார்ப்பேன் .

2000 ல் Hallow man என்கிற ஆங்கில சினிமா, பயத்தோடு பல கற்பனையை துவக்கி விட்டது எனக்கு .அமெரிக்க - ஜெர்மன் அறிவியல் புனைக்கதையின் புதிய சாகஸம் இந்த சினிமா படம் .
மேலேயுள்ள **Hallow man** சினிமாவுக்கு ஊற்றுக்கண்ணாக கற்பனைக் கதை களம் வகுத்துக் கொடுத்த Ralph Ellison எழுதிய**" invisible man "** என்ற 1952 ல் வெளியான நாவல் . ரொம்பவும்
**அருமையான** நாவல் .

ஆக, மனிதன் தன்னை மறைத்துக் கொள்வதில் ஆர்வப்படுகிறான் .இதில் அவனுக்குப் பல சௌகரியங்கள் இருப்பதாகக் நிறைய கற்பனையும் செய்கிறான்.

இப்படி மறைத்துக் கொள்ள வேண்டி , பல விஞ்ஞான துறைகளும் தங்கள் துறை வளர்ச்சிக்கு " மறைதல் " என்பது அத்தியாசிமாக அவசியப்படுகிறது. இதனால் மறைதல் விஷயத்தில் விஞ்ஞானம் முனைப்புடன் ஆய்வு செய்தது.

இதன் தேவையை முன்னிறுத்தி டோக்கியோ பல்கலைகழகத்தைச் சார்ந்த "சுசுமா" என்ற ஜப்பானியர் ஒருவிதமான அங்கியைக் கண்டு பிடித்துள்ளார் .அந்த அங்கியை அணிந்ததும் உடம்பு மறைந்து விடுகிற மாதிரி ஒரு மாயத் தோற்றத்தை தோற்றப் பிழையை ஏற்படுத்துகிறது. இதற்கு optical illusion என்கிற விஞ்ஞான யுக்தியைப் பயன்படுத்துகிறார். இதனை ஒளியியற் கண்மாயம் (Optical Illusion)
என்ப்படுகிறது .அதாவது பொருளின் உண்மைத் தோற்றத்திலிருந்து காட்சிப் புலனுணர்வு மூலம் பெற்ற படிமம் வேறுபடுதல் ஒளியியற் கண்மாயம் எனப்படும்.

அதாவது காரின் வியூ ஃபைன்டர் என்ற கண்ணாடி உதவியுடன் இதை சாதித்திருக்கிறார் .இந்த மாய அங்கி அணிந்ததும் அணிந்திருப்பவரின் உடல் மறைந்து விடுகிறது .இதன் வழியாக பின்புறம் இருக்கும் காட்சிகள் முன்புறம் இருந்து பார்பவர்களுக்குத் தெரிகிறது .
இந்த ஆப்டிக்கல் இல்லியூஷனைப் பயன்படுத்தி மருத்துவ துறையில் பெரும் மாற்றம் வர இருக்கிறது.
ஆப்ரேஷன் செய்யும்போது சர்ஜியன்களுக்கு அவர்கள் செய்யும் ஆப்ரேஷனை அவர்களது கைகளே மறைத்து விடுகின்றன . இதனால் ஆப்ரேஷனில் முழு திருப்தி ஏற்படுவதில்லை. தங்கள் கைகள், கருவிகள் எல்லாம் மறைந்து போய் விட்டால் ஆப்ரேஷன் செய்கிற இடம் தெளிவாக தெரிந்தால், எவ்வளவு நல்லதாக இருக்கும்.

அடுத்து , விமானம் அவசர அவசர தரையிறங்க "லேண்டிங் " செய்ய முயலும் போது .விமானிகளுக்கு "காக்பிட் "டின் கீழ் பகுதி கண்ணாடிபோல் இருந்தால் வசதியாக இருக்கும் .காக்பிட் சரியாக தெரியாததால்தான் லேண்டிங் செய்யும் போது நிறைய விமானம் விபத்துக்குள்ளாகிறது . எனவே ஏரோனாட்டிக் துறை மறைதல் விஷயத்தை விரும்புகிறது .
போதும் விஞ்ஞானம் . மேட்டருக்கு வரேன் .

" அழியட்டும் அபூலஹபின் இரு கரங்களும் அவனுமே நாசமாகஅழியட்டும் "
குர்ஆன் (111 : 1 - 5)
என்ற வசனம் இறங்கியதும் மக்கமா நகர் பரப்பரப்பாகியது. அபூலஹபின் மனைவி "உம்முல் ஜமீலுக்கு " விஷயம் தெரிய வருகிறது .உடனே இவள் கூர்மையான கல்லை எடுத்துக் கொண்டு கஃபாவிற்குள் வருகிறாள் .அங்கே ரசூல் (ஸல்) அவர்களும் அபூபக்கர் ( ரலி) பக்கத்தில் பக்கத்தில் இருக்கிறார்கள்.
அபூபக்கர் (ரலி) அவர்கள் :
"யா ரசூல்லாஹ் .... இதோ உம்மு ஜமீல் கையில் கூர்மையாக கல்லைக் கொண்டு வருகிறாளே ... தங்களைப் பார்த்து விடப் போகிறாள். " என்று கூறிய போது , என்னை அவளால் காண முடியாது என்று கூறி,
"நபியே... நீர் குர்ஆனை ஓத ஆரம்பித்தால் உங்களுக்கும் மறுமையை நம்பாதவர்களுக்கும் இடையில் தடுத்துக் கொள்ளக் கூடிய ஒரு திரையை நாம் ஆக்கி விடுவோம் "
குர்ஆன் ( 17 : 45)
என்ற வசனத்தை நபியவர்கள் ஓதுகிறார்கள் .
"எங்கே உமது தோழர் முஹம்மது?" என்று அவள் கேட்க, "அபூ குஹாபா மகன் அபூபக்கரைக் காட்டிலும் அல்லாஹ்வே அவர்களைப் பார்த்த வண்ணம் இருக்கிறான் " என்றார்கள் அபூபக்கர் (ரலி) அவர்கள்
"நான் கோபத்துடன் தாக்க வந்ததை அவரிடம் சொல்லி வையும் " என்றாள் உம்மு ஜமீல் .
அபூபக்கர் (ரலி) அவர்களின் கண்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தெரிந்தாலும் உம்மு ஜமீல் கண்களுக்குத் தெரியவில்லை !
ஆப்டிக்கல் இல்லியூஷன் உடலை மறைத்து ஒளி ஊடுருவி அப்புறமாக உள்ள காட்சி தெரிகிறது . இந்த இளந் துறை இன்னும் வளர்ச்சி அடைந்து, இரும்புக்கை மாயாவி மாதிரியோ , Hallow man மாதிரியோ, Invisible man மாதிரியோ மறைந்தாலும் , நபி (ஸல் ) அவர்கள் மாதிரி முழுமையாக எப்போதுமே மறைய முடியாது.
அறிவியலுக்குக் கூட அழகிய முன்மாதிரி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களிடம் மட்டுமே உள்ளது.
"காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம் காண்ப மன்றோ?
வீண்படு பொய்யிலே-நித்தம் விதிதொடர்ந் திடுமோ? "
ர.ரா

மூளையும் பார்வையும்

(தோற்றப் பிழை 04)



காட்சிப்பிழை அல்லது தோற்றப்பிழை என்றால் என்னெவென்று தெரியுமா உங்களுக்கு?அடைத்தான் ஆங்கிலத்தில் 'இல்யூஷன்' 'ஆப்டிகல் இல்யூஷன்' னு சொல்வார்கள்.

இங்க கீழேயிருக்கும் படத்தைப் பாருங்க.ஆப்டிகல் இல்யூஷ்ன்னு எழுதியிருக்கா? அதையே இன்னும் கொஞ்சம் கூர்ந்து பாருங்க. ஆப்டிகல் என்று தோன்றும்.
முதல் பார்வையில் சட்டென்று ஒரு தோற்றமும்,கூர்ந்து நோக்கும் போது வேறு தோற்றமும் புலப்படும் நிலைதான் இல்யூஷன் எனப்படுவது.

நமது மூளையும் கண்களும் சேர்ந்து நம்மை ஏமாற்றும் வேலைதான் அது.
பொதுவாக நமது மூளை எதையும் இப்படித்தான் இருக்கும் என்ற ஒரு எதிர்பார்ப்புடனே பார்க்க முனையும் போது கண்களும் அத்துடன் ஒத்துழைத்து பிம்பத்தை புலப்படச் செய்கின்றன.
கீழே உள்ள படங்களில் முதல் படத்தில் TEACH என்றும் இரண்டாவது படத்தில் ME என்றும் இருப்பது கூர்ந்து பார்த்தால் LEARN என்றும் YOU என்றும் தெரியும்.
இப்படித்தான் இல்லாததை 'இருப்பதாக கற்பனை 'செய்வதில் மூளைக்கு பெரும்பங்கு இருக்கிறது என்றால் அதற்கு 'ஆமாம் சாமி' போடுவது நம் கண்கள்.
பார்க்கப்படும் பொருட்களை வைத்து நம் பார்வையும் மூளையும் இணைந்து நம் மனதில் ஒரு கருத்தை பதிவு செய்து விடும் . அதைத்தான் நாம் நம் கண்ணால் பார்த்த உண்மை என்று நம்பி விடுகிறோம் .
இந்த யுக்தியை பயன்படுத்தி குர்ஆனில் அல்லாஹ் ...

وَ اِذْ يُرِيْكُمُوْهُمْ اِذِ الْتَقَيْتُمْ فِىْٓ اَعْيُنِكُمْ قَلِيْلًا وَّيُقَلِّلُكُمْ فِىْٓ اَعْيُنِهِمْ لِيَقْضِىَ اللّٰهُ اَمْرًا كَانَ مَفْعُوْلًا وَاِلَى اللّٰهِ تُرْجَعُ الْاُمُوْرُ
பத்ரு யுத்தத்தில் அவர்களும நீங்கள்களும் சந்தித்துக் கொண்ட சமயத்தில் அவர்களுடைய தொகை உங்கள் கண்களுக்குக் குறைவாகவும் உங்களுடைய தொகையை அவர்களின் கண்களுக்கு குறைத்துக் காண்பித்ததெல்லாம் அல்லாஹ் முடிவு செய்த காரியம் நடைபெற்று அவர்களை அழித்துத் தீருவதற்காகத்தான் எனபதை நீங்கள் அறிந்துக் கொள்ளுங்கள் அல்லாஹ்விடமே எல்லா காரியங்களும் சென்று முடிவடைகின்றன குர்ஆன் 8 : 44

பத்ரு யுத்த களத்தில் இரு படையினரும் சந்தித்த பொழுது முஸ்லிம்களின் கண்களுக்கு அவர்களுடைய எதிரிகளின் எண்ணிக்கையை மிகக் குறைவாக இறைவன் காட்டினான் .
பத்ரு யுத்தத்தில் எதிரிகளைக் குறித்து இப்னு மஸ்ஊத் ரலி அவர்கள் பக்கத்தில் இருந்த ஸஹாபியை நோக்கி, "எதிரிகள் 70 பேர்கள் இருப்பார்களா ? " என்று கேட்டதற்கு
அந்த சஹாபி, " 100 பேராக் காண்கிறேன் " என்றார்
எதிரிகளில் ஒருவரைக் கைதியாக பிடித்து , "நீங்கள் எத்தனை பேர்கள் ?" எனக் கேட்ட போது , " நாங்கள் சுமார் 1000 பேர்கள் வநதுள்ளோம் " என்றார்

இவ்வாறே எதிரிகளின் கண்களுக்கும் முஸ்லிம்களைக் குறைவாக இறைவன் காட்டினான் .
எதிரிகளின் தலைவன் அபூஜஹில் கூறுகையில் , " முஹம்மதும் அவருடைய தோழர்களும் அறுக்கப்படும் ஓர் ஒட்டகத்தின் அளவே உள்ளனர் . ஆகவே அவர்களைக் கொல்லாதீர்கள் கயிறுகளில கட்டி இழுத்து வாருங்கள் " என்றான் .
யுத்தத்தில் கண்ணால் கண்ட உண்மை 70 பேர் விசாரித்த உண்மை
100 பேர் ஆனால் இறைவன் நாடிய உண்மை 1000 பேர்.
ஒரு படையினருக்கு மற்றைய படையினரை இப்படி குறைவாக இறைவன் ஏன் காட்ட வேண்டும் ?

1) முஸ்லிம்களுடைய கண்களுக்கு எதிரிகளைக் குறைவாகக் காட்டும் போது துணிச்சலுடனும் ,வீரத்துடனும் அவர்கள் எதிரிகளுடன் போர் செய்வர் என்பதாகும் .
2) எதிரிகளுடைய கண்களுக்கு முஸ்லிம்களை குறைவாகக் காட்டும் போது மிக இலேசாக மதித்து ப்பூ..... இத்தனை குறைவான நபர்கள்தானா .. என்றெண்ணி , சரியான ஆயத்தமின்றி சாதாரணமாகத் தாக்க வந்து , அவர்கள் அனுபவிக்க வேண்டிய தோல்வியை அனுபவிப்பர் .
இவைதான் யுத்தத்தின் யுக்தி குறைத்துக் காட்டுவதின் உள்நோக்கம் இக்கருத்தினையே இவ்வசனமும் எடுத்துக் காட்டுகிறது.
" கால மென்றே ஒரு நினைவும் காட்சியென்றே பலநினைவும்
கோலமும் பொய்களோ?-அங்குக் குணங்களும் பொய்களோ ? "
ர.ரா

எளிமைப்படுத்தி பார்க்கும் மனித மனம்

(தோற்றப் பிழை 05)



மனித மனத்தின் பற்பல விசித்திரங்களை ஆராயும் போது, ஒரு திறமை விஞ்ஞானிகளை இப்போதும் வியப்பில் ஆழ்த்துகிறது .
அது என்ன ஒரு விஷயம் ?
எளிமைபடுத்துவது . எதையுமே எளிமைப்படுத்தி சிந்தித்திப்பதுதான் மனித மனத்தின் குணம்.
இது பற்றி எழுத்தாளர் சுஜாதா தன் கட்டுரையில் சொன்னதை அப்படியே சொல்றேன்.
" நான் சென்னை விமான நிலையத்தில் பணிபுரிந்து கொண்டிருக்கும்போது
ரேடியோ டிரான்ஸ் மிட்டர்கள் நிறைந்த ஓர் அறையின் அருகில் என் அலுவலகம் இருந்தது.
விமான நிலையத்தைப் பார்க்க வரும் அத்தனை கூட்டமும் அந்த அறையில் எட்டிப் பார்த்து விட்டுத்தான் போவார்கள்.
திருப்தி மொட்டை , கோவிந்தா கும்பல், பட்டா பட்டி டிராயர் அணிந்த கிராமத்து சனங்கள் என்று அணி அணியாகக் கடந்து எட்டிப் பார்க்கையில் அந்த எலக்ட்ரானிக் சாதனங்களின் சிவப்பு , பச்சை விளக்குகளின் கண் சிமிட்டல்களைனைத்தும் அவர்களைப் பெரும் வியப்பில் ஆழ்த்தும்.
ஒரு முறை கிராமத்தவர்கள் இருவர் அம்மாதிரி எட்டிப் பார்த்து விட்டு , பேசிக் கொண்டார்கள் .

" என்னங்கண்ணே இது? "
மற்றவர் நன்றாக பார்த்து விட்டு ,
"அச்சாபீஸு " என்றார்.
முதலில் எனக்கு சிரிப்பு வந்தாலும் , அந்த கிராமத்தவர் ரேடியோ டிரான்ஸ்மிட்டர்களைப் பார்த்ததில்லை. அவர் மனதில் அடையாளம் எளிதாக பண்ணிக் கொள்ளக் கூடிய மிக நெருங்கிய இயந்திர ரூபம் அச்சாபீஸ்தான் . அதனால் அதை அப்படி சொன்னார் " என்கிறார் சுஜாதா
இது முட்டாள்தனம் அல்ல . இது மனசின் முக்கியமான குணங்களில் எளிமைபடுத்திய பார்க்கும் குணம் . அதனால்தான் கிராமத்தவர்களுக்கு ரேடியோ டிரான்ஸ்மிட்டர்கள் அச்சாபீஸ் ஆன கதை,
இதற்கு காரணம் புதிதான ஒன்றை நாம் தெரிந்து கொள்ள ஏற்கனவே தெரிந்ததைக் கொண்டு புரிந்து கொள்கிறோம்.
புதியது எதையும் பழைய அனுபவத்தை வைத்துக் கொண்டு அதன் மர்மத்தை தெளிவாக்கிறோம் . அதை எளிமைப்படுத்துகிறோம் .
மனத்தின் ஒப்பிட்டு எளிமைப்படுத்தும் இந்த குணத்தை சுவனவாசிகளிடம் காண முடிகிறது என்பதை அல்லாஹ் தன் குர்ஆனில் அழகாக படம் பிடித்துக் காட்டுகிறான் .

." .....அவற்றிலிருந்து (அவர்களுக்கு) ஒரு கனி புசிக்கக் கொடுக்கப்படும் போதெல்லாம் முன்னர் நமக்குக் கொடுக்கப்பட்டதும் இதுதானே! என (ஆச்சரியப்பட்டு)க் கூறுவார்கள். (ஏனென்றால்) பார்வைக்கு ஒரே விதமாகத் தோன்றக் கூடியவைகளையே கொடுக்கப் பெறுவார்கள்.
(எனினும் அவை சுவையில் விதவிதமாக இருக்கும்) . அன்றி அவர்கள் அதில் என்றென்றும் தங்கி விடுவார்கள் " .
(குர்ஆன்: 2:25)

சுவனத்தில் கனிகள் நிறைந்த தோட்டங்கள் அவர்களுக்கு உண்டு . அத்தோட்டத்தில் உற்பத்தியாகும் கனிகள் விதவிதமான சுவையுடையவனவாக இருக்கும்.
அக்கனிகள் உருவத்திலும் , அளவிலும் ,சுவையிலும் ஒரு கனி மற்றொரு கனி போன்று பார்வைக்கு தென்பட்டாலும் இரண்டின் சுவையும் வெவ்வேறாக இருக்கும் .
ஏதாவதொரு கனி அவர்களுக்கு வழங்கப்பட்டால் , அதன் வடிவத்தையும் , நிறத்தையும் நோக்கும் அவர்கள் " இதை நேற்றே நாம் புசித்து விட்டோமே " என்பார்கள்.- இக்ரிமா (ரஹ்) .
" இது முன்னர் உலகத்திலேயே எங்களுக்கு வழங்கப்பட்டதுதானே " என்பார்கள் - சுத்தீ (ரஹ்)
ஆனால் புசித்துப் பார்க்கும் பொழுது , முன்னர் அனுபவிக்காத புதிய இன்பத்தையும் ,சுவையையும் கண்டு வியப்பில் ஆழ்ந்து போவார்கள் .
புதிதான ஒன்றை நாம் தெரிந்து கொள்ள ஏற்கனவே தெரிந்ததைக் கொண்டு புரிந்து கொள்ளும் மனித மனத்தின் விகற்பங்களையெல்லாம் தாண்டி இறைவனின் கருணை கடாச்சாரம் பொருந்திய அருளாக பொழியும் .
...." சோலையிலே மரங்க ளெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால்,
சோலை பொய்யாமோ?-இதைச் சொல்லொடு சேர்ப்பாரோ? "
ர.ரா

தோற்றப்பிழை…! 06



நம் ஒவ்வொருவர் மனதிலும் ஒவ்வொன்றும் எப்படி இருப்பது நல்லது, சிறந்தது என்று வரையறை வைத்திருக்கிறோம்.

ஒவ்வொரு மனிதரும் எப்படி இருந்தால் சிறப்பு, நல்லது என்று ஒரு கற்பனை வடிவம் வைத்திருக்கிறோம். நாம் சந்திக்கும் ஒவ்வொரு கணமும் அந்த வரையறையுடன் ஒப்பிடப்பட்டே தீர்மானிக்கப்படுகிறது. சந்திக்கும் ஒவ்வொரு மனிதனும் அந்தக் கற்பனை வடிவத்துடன் ஒப்பிடப்பட்டே நம்மால் நிர்ணயிக்கப்படுகிறான்.
இந்தக் கற்பனை வடிவத்திற்கு முழுமையாகப் பொருந்துகிற கணமும், மனிதனும் கிடையாது என்பதால் இந்த ஒப்பீடு துன்பத்திற்கு ஆணி வேராக இருக்கிறது.
முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியையும், தற்போது நடக்கும் ஒரு நிகழ்வையும் ஒப்பிட ஆரம்பிக்கிறோம். ஒரு மனிதனை இன்னொரு மனிதனுடன் ஒப்பிடுகிறோம். இந்த ஒப்பிடும் பழக்கம் நம் இரத்தத்தில் ஊறிப் போய் விடுகிறது.
அதனால் என்ன தவறு என்று கூட சிலர் கேட்கலாம். இந்த ஒப்பிடும் பழக்கத்தால் நம்மால் நடப்பதை ரசிக்க முடியாமல் போகிறது, மனிதர்களைத் தனித்தன்மையை சிலாகித்து ஏற்றுக் கொள்ள முடியாமல் போகிறது என்பதே கசப்பான உண்மை.

இதோ ஒரு காட்சி: ஒரு பௌர்ணமி இரவில் ஒரு அழகான குளம் நிலவொளியில் மின்னிக் கொண்டு இருக்கிறது. சில்லென லேசான காற்று அடிக்க, தொலைவில் இருந்து ஒரு புல்லாங்குழல் இசை இனிமையாகக் கேட்டுக் கொண்டு இருக்கிறது.

அந்த ரம்மியமான சூழ்நிலையை ஒருவன் குளத்தின் கரையில் இருந்து ரசித்துக் கொண்டு இருக்கிறான். அந்த நேரம் பார்த்து ஒரு அழகான வெண்ணிறப் பறவை ஆகாயத்தில் பறந்து செல்ல அதன் பிரதிபிம்பம் குளத்தின் நீரில் விழ அந்த கணம் பூரண அழகு நிறைந்த ஒரு கச்சிதமான கணமாக அமைந்து விட்டது. குளக்கரையில் இருந்தவன் மெய்மறந்து அந்தக் கணத்துடன் ஐக்கியமாகி விட்டான்.

அதற்குப் பிறகு தினமும் இரவு அவன் அந்தக் குளக்கரைக்குப் போக ஆரம்பித்தான். பல நாட்களில் புல்லாங்குழல் இசை கேட்கவில்லை. சில நாட்களில் நிலவொளி இல்லை. சில நாட்களில் சில்லென்ற காற்று இல்லை. அந்த அழகான வெண்ணிறப் பறவையோ பின் எந்த நாளும் குளத்தின் மீது பறக்கவே இல்லை. அவன் அந்தக் கச்சிதமான கணத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் அந்தக் குறைபாடுகள் பிரதானமாகத் தெரிய அவனால் பின் வந்த நாட்களின் இரவுகளை ரசிக்க முடியவில்லை.

ஒரு நாள் அந்தக் குளத்தில் சில சிறுவர்கள் நீந்தி விளையாடிக் கொண்டு இருந்தார்கள். இன்னொரு நாள் சில அழகான மலர்கள் நீர்பரப்பில் மிதந்து கொண்டு இருந்தன. இன்னொரு நாள் ஒரு சிறு சத்தம் கூட இல்லாமல் அபூர்வமான மௌனத்தில் அந்தப் பகுதியே இருந்தது. இப்படி எத்தனையோ வித்தியாசமான, கூடுதல் அம்சங்கள் ரசிக்க இருந்தாலும் அவனால் ரசிக்க முடியவில்லை. காரணம் அவனை மெய்மறக்க வைத்த அந்த ஒரு இரவுடன் அவன் ஒவ்வொரு இரவையும் ஒப்பிட ஆரம்பித்ததுதான்.

எந்த ஒரு கணமும் அப்படியே திரும்ப நிகழப்போவதில்லை. அது இயற்கையின் நியதி. அப்படி நிகழும் என்று எதிர்பார்க்கும் போது, ஒப்பிட்டுப் பார்க்க ஆரம்பிக்கும் போது மற்ற கணங்களின் தனியழகை, தனிப் பயன்பாட்டைக் காண முடியாமல் போகிறது. ஒவ்வொரு கணத்தையும் ரசியுங்கள். ஆனால் அதே போல திரும்ப வரமுடியாது என்பதை மறந்து விடாதீர்கள்.
அப்படி வந்து கொண்டிருக்குமானால் அதுவே நமக்கு சலித்து விடாதா? அதே போலத் தான் மனிதர்களும். ஒவ்வொருவரும் தனித் தன்மை வாய்ந்தவர்கள். உலகம் இயங்க அனைத்து வித மனிதர்களும் அவசியமானவர்கள். அதனால் ஒருவரைப் போல இன்னொருவர் இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்காதீர்கள்.

ஒவ்வொருவரையும் அவர்கள் இயல்பின் படியே ஏற்றுக் கொள்ளுங்கள். ஒவ்வொருவரிடத்திலும் ஏதோ ஒன்று கற்றுக் கொள்ள இருக்கிறது. அதற்கு மதிப்பு கொடுத்து அவர்களைஅங்கீகரியுங்கள். ஒரே மாதிரி மனிதர்கள் மட்டுமே இருந்தால் உலகம் ஸ்தம்பித்து விடும் என்பதை மறந்து விடாதீர்கள்.

ஜெயகாந்தனின் "ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்" என்ற நாவலில் கதாநாயகி கல்யாணி தன் கணவனிடம் மிக அழகாகச் சொல்வாள். "நம்ம வீட்டில பூக்கற ரோஜாப்பூ இருக்கு பாருங்க... இதை நான் ரொம்ப ரசிக்கிறேன்... நீங்களும் ரசிப்பீங்க. ஆனா யாரும் ஒரு ரோஜாப்பூவை விமரிசனம் பண்றது இல்லை. இல்லைங்களா. ஒரு ரோஜாப்பூவிலே இன்னும் ஒரு இதழ் கூட இருந்தா தேவலாம்னோ, இந்த வாசனையோட கொஞ்சம் மல்லிகை வாசமும் கலக்காம இருக்கிறது ஒரு குறைன்னோ நாம்ப நினைக்காம இருக்கறதுக்குக் காரணமே நாம்ப ரோஜாவை ரோஜாவா எடுத்துக்கறது தான். அதைப் பத்திக் கற்பனைகளோ எதிர்பார்க்கிற காரியமோ இல்லை. நாம்ப ரோஜா கிட்டே எதிர்பார்க்கிறது ஒரு ரோஜாதான். அந்த மாதிரி மனுஷாள் கிட்டயும் இருந்திட்டா... அவங்க இருக்கற மாதிரியே அவங்களை ஒப்புத்துக்கறதுன்னு இருந்தா இந்த மாதிரி பிரச்னையே இருக்காது"
நம் மனதில் உள்ள வரையறைகள் கற்பனையானவை. அதற்கு ஏற்ப நிஜத்தில் எதிர்பார்க்கும் போது நாம் ஏமாற்றத்தையே சந்திக்க நேர்கிறது. அதே போல ஒரு கணத்தைப் போல இன்னொரு கணமோ, ஒருவரைப் போல இன்னொருவரோ இருக்க முடியாது என்பதையும் நாம் நன்றாக மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். நமது மனம் வழக்கம் போல ஒப்பிட்டுப் பார்க்குமானால் அது முட்டாள்தனம் என்பதை அக்கணமே உணர்ந்து தெளிய வேண்டும். அப்படிச் செய்தால் மட்டுமே நாம் வாழ்க்கையை ரசிக்க முடியும். சந்திக்கும் மனிதர்கள் மூலம் பலனடைய முடியும். மன அமைதி பெற முடியும்
தா.ஜபருல்லாஹ்

## தோற்றப் பிழை இல்லாத குர்ஆன் 07



"இக்குர்ஆனை போன்ற ஒன்றை கொண்டு வருவதற்காக மனிதர்களும் (கண்ணனுக்கு புலப்படாத) ஜின்களும் ஒன்று திரண்டாலும் இதை போன்றதொன்றை கொண்டு வர முடியாது
(எதுவரை என்றால்) அவர்களில் ஒருவர் மற்றையவருக்கு உதவியாளராக இருந்தாலும் சரியே"
குர்ஆன் (17:88)

அடுத்து இரண்டாவதாக சவாலை கொஞ்சம் குறைத்து ....
" நம்முடைய தூதர்) இதனைப் பொய்யாகக் கற்பனை செய்து கொண்டார் என அவர்கள் கூறுகின்றனரா? அவ்வாறாயின் (நபியே! அவர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள்: இதைப்போன்ற பத்து அத்தியாயங்களையேனும் நீங்கள் கற்பனை செய்து கொண்டு வாருங்கள்.
அல்லாஹ்வையன்றி உங்களுக்குச் சாத்தியமான அனைத்தையும் இதற்காக அழைத்து (உங்களுக்குத் துணையாக)க் கொள்ளுங்கள். மெய்யாகவே (இது கற்பனை என்று) நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் (இவ்வாறு செய்யலாமே!) " (குர்ஆன் : 11:13)

அதற்கு அடுத்து மூன்றாவதாக இன்னும் சவாலை எளிதாக்கி ....
" இன்னும், (முஹம்மது ((ஸல்)) என்ற) நம் அடியாருக்கு நாம் அருளியுள்ள (வேதத்)தில் நீங்கள் சந்தேகம்உடையோராக இருப்பீர்களானால், (அந்த சந்தேகத்தில்) உண்மை உடையோராகவும்
இருப்பீர்களானால் அல்லாஹ்வைத் தவிர உங்கள் உதவியாளர்களை (யெல்லாம் ஒன்றாக)அழைத்து (வைத்து)க்கொண்டு இது போன்ற ஓர் அத்தியாயமேனும் கொண்டு வாருங்கள்"
குர்ஆன் 2:23

ஒரு அத்தியாத்தை கொண்டு வரமுடியவில்லையா சரி உங்களுக்கு பாவப்பட்டு சவால் மிக மிக இலகுபடுத்தப்படுகிறது இதையாவது செய்யட்டும் .
இறுதியாக சவாலின் நான்காவது கூற்றாக "ஒரு அத்தியாயம் வேண்டாம் அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது போன்று ஒரு செய்தி ஒரே ஒரு செய்தி போதும்.
"அவர்கள் உண்மையாளர்களாக இருந்தால் இது போன்ற ஒரு செய்தியை அவர்கள் கொண்டு வரட்டும்" (52:34)
இதுவரை உலகில் யாருமே இப்படி ஓர் அறைகூவலை விடுத்ததே இல்லை. ஆனால் இந்த சவாலை எவரேனும் ஏற்றுக் கொண்டது உண்டா...? எனப்பார்த்தால் குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருந்த காலத்திலேயே இந்த சவாலை ஒருவர் ஏற்றுக் கொண்டார் என வரலாறு கூறுகிறது.
ஆம். அரபு உலகிலே தனது ஆற்றல் மிகு கவிதைகளாலும், வீறு கொண்ட உணர்வுகளாலும் புகழ் பெற்றல லபீத் என்பார் இதை ஏற்று போட்டியிட முன் வந்தார். அரபு நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் கவிதை வெள்ளம் கரைபுரண்டு கொண்டிருந்த காலத்தில் கஃபாவில் தொங்க விடப்படுகின்ற கவிதைகளுக்குத் தனிபுகழ் இருந்தது.

மிகச் சிறந்த கவிதைக்கு மட்டுமே அந்த மரியாதை கிடைத்தது. எழுவர் கவிதைகளே அத்தகைய சிறப்பை பெற்றிருந்தன. ஏழு தொங்கல் கவிதைகள் (ஸப்அமுஅல்லகாத்) என்பவை அரபு இலக்கியத்தில் அழியா இடம் பெற்றவையாகும்.

அந்த எழுவரில் ஒருவர் தான் இந்த லபீத். லபீத் ஒரு கவிதை எழுதி கஃபாவின் வாயிலில் தொங்கவிட்டார். இவ்வாறு அவர் தொங்கவிட்ட நிகழ்ச்சி நடந்த உடனே முஸ்லிம் ஒருவர் குர்ஆனிலிருந்து ஓர் அத்தியாயத்தை எழுதி அதற்கு அருகிலேயே மாட்டி வைத்தார்.

இஸ்லாத்தை அது வரை ஏற்றுக் கொள்ளாதிருந்த கவிஞர் லபீத் மறுநாள் கஃபா ஆலயத்தின் வாயில் அருகே வந்தார். திருக்குர்ஆன் அத்தியாயத்தை வாசித்தார். அத்தியாயத்தி ஆரம்ப வரிகளிலேயே அவர் அசாதாரண முறையில் ஒருவித மாறுதலுக்கு ஆளானார்.
இவை மனிதனின் வார்த்தைகளே அல்ல. இவை இறைவசனங்கள் தாம் என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று உரத்துக் கூறினார். ( MOHAMED THE HOLY PROPHET BY H.G SARWAR, P.448 ) அரபு உலகின் ஓர் ஒப்பற்ற கவிஞர் இவர். திருக்குர்ஆனின் இலக்கிய நடையால் மிகப்பெரிய அளவில் ஆட்கொள்ளப்பட்ட இவர் கவிதை எழுதுவதையே விட்டுவிட்டார்.

பின்னர் ஒருமுறை உமர் (ரலி) அவர்கள் இந்த கவிஞரிடம் கவிதை வேண்டிய போது லபீத் (ரலி) பின்வருமாறு பதிலளித்தார்கள்.
"அல்பகரா மற்றும் ஆல இம்ரான் போன்ற அத்தியாயங்களை அல்லாஹ் எனக்கு வழங்கியிருக்கும் போது கவிதையை தொடுவதே எனக்கு அழகல்ல."
பிற்காலத்தில் இன்னொருவர் இதை ஏற்றார். இப்னுல் முகப்பஉ என்பார் இந்தச் சவாலை ஏற்க முன் வந்தார். இவரைப் பற்றிய பிரபல கீழைக் கல்வியாளர் ஓல்ஆடன் என்பவர் வியப்புடன் குர்ஆன் ஓர் அற்புதம் என்பதைப் பற்றி முஹம்மது நபி பெருமிதத்தோடு கூறுவது உண்மைதான். பொய்யல்ல. இந்த உண்மையை இஸ்லாம் தோன்றி 100 ஆண்டுகளுக்கு பின்னர் நடந்த நிகழ்ச்சி ஒன்று உறுதிபடுத்துகிறது என்று எழுதுகின்றார்.

அந்த நிகழ்ச்சி இது தான். மதங்களையே மறுக்கும் ஒரு குழுவினர் குர்ஆன் வெகு வேகமாக தன் ஈர்ப்பதையும் அதனால் மக்கள் இஸ்லாத்தை தழுவதையும் கண்டு குர்ஆனின் சவாலை ஏற்று அதற்கு எதிராக ஒரு வேதத்தை உருவாக்க தீர்மானித்தார்கள்.
இந்த நோக்கத்திற்காக அவர்கள் இப்னு முகஃப்பஉ தங்கியிருந்த அறைக்குச் சென்றார்கள். அவர் உட்கார்ந்திருந்தார் அவரது கையில் பேனா இருந்தது. ஆழ்ந்த வாசிப்பில் ஈடுபட்டிருந்தார். அவர் அமர்ந்திருந்த இடத்திற்கு அருகே ஒரு கூடை இருந்தது. எழுதி, எழுதி கிழிக்கப்பட்ட காகிதங்கள் பெரும் குவியலாக அதில் கிடந்தன. அங்கு மட்டுமல்ல அறை முழுவதுமே அத்தகைய குவியல்கள் காணப்பட்டன.
அவை வெறும் தாள்கள் ஒரு வரி கூட அதில் எழுதப்படவில்லை. அளவு கடந்த திறமையுடைய மிகச் சிறந்த மொழி அறிவு படைத்த அந்த ஈரான் நாட்டு மேதை தன்னுடைய எல்லா சக்திகளையும் பிரயோகித்து குர்ஆனுக்கு எதிராக ஒரு நூலை எழுதுகின்ற தமது முயற்சியில் ஈடுபட்டு ஒரு வரி கூட எழுத முடியாமல் தோற்றுப் போய் உட்கார்ந்திருந்தார்.

அவர் தன்னுடைய தோல்வியை ஏற்றுக் கொண்டார் ஒரு வரி எழுத முயன்று ஆறு மாதங்கள் ஆகியும் அவரால் எழுத முடியவில்லை. அவர் நம்பிக்கை இழந்து வெட்கமுற்று அந்த பணியை விட்டே ஒதுங்கிக் கொண்டார்.
(MOHAMED, HIS LIFE AND DOCTRINES BY WOLLATON. P.143)
மனிதனின் அகத்தில் சிந்திக்கும் திறன் உண்மையிலேயே இருந்தால் இந்த நிகழ்ச்சியே அவர் ஈமான் கொள்வதற்கு போதுமானதாகும்.

ளம்மாது அஜ்தி என்பவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவர் முஸ்லிமல்ல அவரிடம் நபி (ஸல்) அவர்கள் குர்ஆனிலிருந்து சில வசனங்களை ஓதிக் காட்டினார்கள். இதைக் கேட்டவுடன் அவர் திகைத்து திகைத்தபடியே நின்று விட்டார்.

அவரை அறியாமலேயே அவருடைய நாவிலிருந்து "அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் சோதிடர்களின் அடுக்குச் சொற்களையும் மந்திரவாதிகளின் ராகம் மிகுந்த மந்திரங்களையும் கவிஞர்களின் பாடல்களையும் செவிமடுத்துள்ளேன். ஆனால் உங்களுடைய வார்த்தைகள் - அவை தனித் தன்மையுடையவைகளாக இருக்கின்றன. இவை சமுத்திரம் வரைக்கும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடியாக இருக்கின்றன என்ற சொற்கள் அவரையறியாமலேயே வெளிப்பட்டன.
இவை போன்ற ஏராளமான ஏற்பு மொழிகள் ஏராளம் ஏராளம்.

பண்டைக் காலத்தில் மட்டுமல்ல அண்மைக்காலத்திலும் இத்தகைய நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருக்கின்றன.
"(முஹம்மதே!) இது ஒரு வேதமாகும். இதனை நாம் உம் மீது இறக்கியுள்ளோம். மக்களை அவர்களுடைய இறைவனின் உதவி கொண்டு இருளில் இருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் நீர் கொண்டு வரவேண்டும் என்பதற்காக" (14:1) என்றும் இறைவன் திருக்குர்ஆனில் கூறுகின்றான்.
திருக்குர்ஆனை இறைவன்தான் இறக்கி அருளினான் என்று குர்ஆனே திட்டவட்டமாகக் கூறுகிறது.
திருக்குர்ஆன் அரபி மொழியின் மிகச்சிறந்த இலக்கியமாகக் கருதப்படுகிறது. அரபி மொழிக்கு இலக்கணம், சொல் வளம், சொற்றொடரியல் ஆகியவற்றுக்கான அடித்தளமாக அமைந்தது குர்ஆனே.
திருக்குர்ஆன் 23 ஆண்டு கால இடைவெளியில் சிறிது சிறிதாகப் பல்வேறு சூழ்நிலைகளில் அருளப்பட்டது. ஆனாலும் தொடக்கத்தில் இருந்து இறுதிவரை குர்ஆனின் உரை அனைத்தும் ஒழுங்காகவும், சீராகவும் அமைந்துள்ளதைக் காணலாம். அதில் முரண்பாடுகள் எதையும் காண முடியாது. ஏக இறைவனின் வார்த்தையாக இருந்தால் மட்டுமே முரண்பாடுகள் இல்லாமல் இருக்கும்.

இதுகுறித்து திருமறையில், "இந்தக் குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடம் இருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் காண்பார்கள்" (திருக்குர்ஆன்-4:82) இறைவன் கூறுகின்றான்.

திருக்குர்ஆனில் முரண்பாடுகள் இல்லை என்பது அது இறைவேதம் என்பதற்கு போதுமான சான்றாகும்.
குர்ஆனின் நடை உரைநடையும் அல்ல; கவிதையும் அல்ல. இவைகளில் இருந்து முற்றிலும் மாறுபட்ட ஈர்க்கும் இசைநயம் கொண்ட ஓசையுடன் புதிய பாணியில் அமைந்துள்ளது. பாமர மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும், அதே நேரத்தில் அறிஞர்களும் ஆச்சரியப்படத்தக்க வகையிலும் அதன் வசனங்கள் அமைந்துள்ளன. இவ்வளவு உயர்ந்த இலக்கிய தரத்தில் ஒரு நூலை இயற்ற வேண்டும் என்றால் நபிகளார், அறிஞராகவோ, அரபி மொழியில் கரை கண்டவராகவோ இருக்க வேண்டும். ஆனால் அவர்களோ எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் .

இதையே, “(நபியே!) நீங்கள் இதற்கு முன்னர் யாதொரு வேதத்தை ஓதி அறிந்தவருமல்ல; உங்களுடைய கையால் அதை எழுதி(ப் பழகி)யவருமல்ல. அவ்வாறு இருந்திருக்குமாயின், நிராகரிப்பவர்கள் (இதனை நீங்கள் தாமாகவே கற்பனை செய்து கொண்டீரே தவிர இறைவனால் அருளப்பட்டதல்ல என்று) சந்தேகம் கொள்ளலாம்” (29:48) என்று இறைவன் திருமறையில் கூறுகின்றான்.

திருக்குர்ஆனின் நடையும் நயமும், நபிகளாரின் மொழி ( ஹதீஸ் ) நடையில் இருந்து முற்றிலும் மாறுபட்டது;
சில பல சமயங்களில் சிக்கலான பிரச்சினைகள் வரும்போது இறை வழிகாட்டுதல் வரும் வரை நபிகளார் காத்திருந்தார்கள். இவை அனைத்தும் திருக்குர்ஆன் இறைவாக்கு என்பதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.
திருக்குர்ஆனில் உள்ள கம்பீரம், தொனி, உவமை, சொல்லாட்சி, இலக்கிய நயம் ஆகிய அனைத்தும் மனித ஆற்றல் களுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கின்றன.

இந்த குர் ஆனை அன்று தொடக்கம் இன்றுவரை பொய்ப்பிக்க முனைந்தவர்கள் பல பேர். இலக்கண பிழை என்றும் சரித்திர பிழை என்றும் கருத்துக்கள் பிழை , தோற்றப் பிழை என்றும் பல்லாயிரக் கணக்கான பிழைகளை கண்டு பிடிக்க முனைந்தார்கள் இன்று வரை முனைந்து கொண்டுதான் இருக்கிறார்கள் ஆனாலும் என்ன இதுவரை யாரும் தங்கள் முயட்சியில் வெற்றிபெற்றதாக தெரியவில்லை.
இறைவன் கொடுத்த வாக்குறுதி அப்படிப்பட்டது
"நாமே அல்குரானை இறக்கினோம்நாமே அதை பாதுகாப்போம்" குர்ஆன்(5:9)
இறைவன் விடுத்த இந்தச் சவால் திருக்குர்ஆன் அருளப்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு மட்டுமல்ல; உலக முடிவு நாள் வரையுள்ள அனைத்து மக்களுக்கும் விடப்பட்ட சவால் ஆகும். குர்ஆன் அருளப்பட்டு 1,500 ஆண்டுகள் ஆகி விட்டன. இந்தச் சவாலுக்கு இன்று வரை எவராலும் பதில் அளிக்க முடியவில்லை.
" கற்பதுவே கேட்பதுவே கருதுவதே,
நீங்களெல்லாம்
அற்பமாயைகளோ?-உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ? "
ர.ரா

நம்முடைய ஆவியை அனுப்பினோம் .

(தோற்றப் பிழை 08)


ஆவிக்கு இன்னொரு பெயர் ஒளியா ? முதல்ல ஒளியைப் பற்றி கொஞ்சம் சொல்றேன்...
ஒளியில் பல வகைகள் உள்ளன நம் கண்களுக்கு தெரியும் ஒளியும் உள்ளது .நம் கண்களுக்கு தெரியாத ஒளியும் உள்ளது. கண்களுக்கு தெரியாத ஒளி கண்களுக்கு தெரிய வந்தால் அது ஒளியின் தோற்றப் பிழை தானே ?
இதற்கு நீங்கள் நிறப்பிரிகை என்ற ஒளியைப் பற்றிய அறிவியலை தெரிந்தே ஆக வேண்டும் . அதையும் சொல்றேன் .

சூரிய ஒளி (வெள்ளொளி) ஒரு கண்ணாடிமுப்பட்டகத்தின் வழியே செல்லும் போது ஏழு நிறங்களாகப் பிரிவதைக் காணலாம்.
நிறங்களின் அணிவகுப்பு **VIBGYOR** என்ற நினைவுச்சொற்றொடர் (விப்ஜியார்) மூலம் அறியப்படுகிறது; உண்மையில், முதலில் கிடைக்கும் நிறம் சிவப்பு (Red), இறுதியில்தான் ஊதா (Violet) கிடைக்கின்றது.
சரி , அடுத்து நாம் காணும் வெள்ளோளியில் பார்க்கக் கூடிய
ஏழு வர்ணக் கதிர்கள் உள்ளன இக்கதிர்கள் அலை நீளங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை

சிவப்புக் கதிரின் நீளம் 0.00007 செ.மீ இருந்து ஊதாக் கதிரின் அலை நீளம் 0.00004செ.மீ வரைதான் நம் கண்களால் காண முடியும் .சிவப்புக் கதிருக்கு மேலயுள்ள இன்ஃபரா சிவப்பு கதிரின் நீளம் 0.00008 செ.மீ அதைப் போல் ஊதாக் கதிருக்கு கீழேயுள்ள அல்ட்ரா வயலட் அலை நீளம் 0.00003 செ.மீ இக் கதிர்களை நம் கண்களால் காண முடியாது .

இதே ஒளியில்தான் ரேடியத்திலிருந்து வீசும் காமா கதிர்கள், எக்ஸ்ரே கதிர்கள், காஸ்மிக் கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் இவைகளையும் நம் கண்களால் காண முடியாது.

அதேப்போல இன்ஃபரா சிவப்புக் கதிருக்கு மேலே உள்ள கதிர்களான
வெப்பக் கதிர்கள் , மின்பொறி கதிர்கள் , ராடார் கதிர்கள் . டெலிவிஷன் கதிர்கள் , குட்டையான ரேடியோ அலைக்கதிர்கள் , நீளமான ரேடியோ அலைக்கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் .
இவைகளையும் நாம் பார்க்க முடியாத கதிர்கள் . இந்த ஒளி நிறக் கதிர்களில் எந்த மலக்கை எந்த ஒளிக்கதிரில் படைத்திருப்பான் என்று யாருக்குத் தெரியும் ?
ஒரு விஷயம் சொல்றேன். நமது கண்களுக்கு எக்ஸ் ரே கதிர்கள் புலப்படுவதாக வைத்துக் கொண்டால் , நாம் இப்போது பார்த்துக் கொண்டிருக்கும் பிரபஞ்சத்தின் தோற்றம் முற்றிலும் மாறுபட்டிருக்கும் பிரபஞ்சத்தைப் பற்றிய நமது சிந்தனையும் வேறுபட்டிருக்கும் .
ஒளியின் மூலப் பொருள் " போட்டான்" என்கிற துகள் . மலக்குமார்களை போட்டான் என்ற ஒளி துகள்களால் படைக்கப்பட்டிருக்கலாம். அவர்களும் படைப்பினங்கள்தானே ....!
ஆனால் இறைவனின் ஒளியோ எப்பொருளுமானதாக இல்லாதது .

" அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவன் தான் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன்.
(அல்குர்ஆன் :42:11)
மலக்குமார்களை ஒளியினால் படைத்த இறைவன் , தான் தனக்குத் தானே வெளியானவன். கால வெளியாய் இருப்பவன் . மலக்குகள் இந்த வெளியில் பறப்பவர்கள் .அவ்வளவே.
இரண்டும் வேறு வேறு ஒளிகள். அதற்கு மேல் சிந்திக்க வேண்டாம் .
நம் கண்களுக்கு தெரியாத ஒளிக்கதிரில் படைக்கப்பட்ட மலக்கு ஜிப்ரயீல் (அலை) , மர்யம் (அலை) அவர்களின் கண்களுக்கு தெரியும்படியான தோற்றத்தில் , வானயுரத்தில் 600 இறக்கைகளோடு வானவராக இல்லாமல் தோற்றப் பிழையில் அழகிய மனித இளைஞராக உருவெடுத்து ,

"மர்யம் தன் குடும்பத்தினரை விட்டு விலகி கிழக்குத் திசையிலுள்ள (தன்னுடைய) அறைக்குச் சென்று, (குளிப்பதற்காகத்) தன் மக்களின் முன் திரையிட்டுக் கொண்ட சமயத்தில் (ஜிப்ரீல் என்னும்) நம்முடைய தூதரை அவரிடம் அனுப்பி வைத்தோம். அவர் முழுமையான ஒரு மனிதனுடைய கோலத்தில் அவர் முன் தோன்றினார்.
(அவரைக் கண்டதும்) "நிச்சயமாக நான் உங்களிடமிருந்து என்னை பாதுகாக்க ரஹ்மானிடம் பிரார்த்திக்கிறேன். நீங்கள் பரிசுத்தமானவராக இருந்தால் (இங்கிருந்து அப்புறப்பட்டு விடுங்கள்)" என்றார்.
அதற்கவர், பரிசுத்தமான ஒரு மகனை "உங்களுக்களி(க் கப்படும் என்பதை உங்களுக்கு அறிவி)ப்பதற்காக நான் உங்கள் இறைவனால் அனுப்பப்பட்ட (மலக்காகிய) ஒரு தூதர்தான்" என்றார்.
அதற்கவர் "எனக்கு எவ்வாறு சந்ததி ஏற்படும்? எம்மனிதனும் என்னைத் தீண்டியதில்லையே; நான் கெட்ட நடத்தையுள்ளவளும் அல்லவே" என்று கூறினார்.
அதற்கவர் "அவ்வாறே (நடைபெறும் என்று) உங்கள் இறைவன் கூறுகின்றான் (என்றும்), அது தனக்கு எளிது (என்றும்), அவரை மனிதர்களுக்கு ஒரு அத்தாட்சியாகவும், நம்முடைய அருளாகவும் நாம் செய்வோம் (என்றும்) இது முடிவாக உறுதி செய்யப்பட்ட ஒரு விஷயம்" என்றும் கூறுகின்றான்.
பின்னர், மர்யமுக்கு(த் தானாகவே) கர்ப்பமேற்பட்டு கர்ப்பத்துடன் (அவர் இருந்த இடத்திலேயே வெளியேறி) தூரத்திலுள்ள ஒரு இடத்தைச் சென்றடைந்தார் " (குர்ஆன் : 19 :16 -22)
மர்யம் (அலை) அவர்களும் நபி ஈஸா (அலை) அவர்களை குழந்தையாக பெற்றெடுத்தார்கள் .
நிற்பதுவே,நடப்பதுவே,பறப்பதுவே,
நீங்களெல்லாம்

சொற்பனந் தானோ?-பல தோற்ற மயக்கங்களோ?
ர.ரா

**Rahmath Rajakumaran**

**R.M. Nowsaath** தோற்றப் பிழை பதிவில் விஞ்ஞானம் அதிகம் . புரிதலுக்கும் சிரமமாக இருப்பதால் , சூஃபியாக்களின் பரிபாஷை மாதிரியான பதிவுகளை தொடருங்கள் என்று நேரிலும் , போனிலும் கேட்டுக் கொண்டார்கள் .
வரலாறு எழுதுவது சுலபம் .ஆய்வுக்கு ஒரிரு புத்தகங்கள் போதும் .
ஆனால் விஞ்ஞானம் சொல்லி பதிவு போடுவது , மற்றவர்களுக்கு ரொம்ப சிரமம் .ஆனால் எனக்கு அல்லாஹ் இலேகுவாக்கி தந்துள்ளான் .
இது தொடர்பு கொண்ட நண்பர்களுக்கு தெரியவில்லை .
தோற்றப் பிழை பதிவுக்காக சுஜாதா எழுதிய "கொலையுதிர் காலம் " புக் வாங்கி அதில் optical illusion பற்றி சொல்லியிருப்பதை மாஞ்சி மாஞ்சி படித்து அதை குர்ஆனின் நிகழ்வுகளோடு சொல்ல ரொம்பவும் ஆசைப்பட்டேன் .
Computing System of Quran Verses என்று குர்ஆன் வசன அமைப்பைப்பைப் பற்றி ஆய்வு அதை பதிவா சொல்ல முடியாது . சொன்னால் நண்பர்களுக்கு போரடிக்கும் . புரியாது . எனக்கும் அதை எளிமைப்படுத்தி சொல்லவும் தெரியவில்லை . "யான் பெற்ற இன்பம் எனக்கே எனக்காக " என்று ஆய்வு டைரியை பீரோ அடியில் வைத்து விட்டேன்.
இதுமாதிரி நிறைய பதிவுகள் சொல்லா முடியாமல் முதிர்க் கன்னியாகவே இருக்கிறது .
அத்தோடு தோற்றப் பிழையும் சேர்ந்து கொண்டது .
அடுத்த தொடர் பதிவு " வித்தியாசமான மரணங்கள் " வரலாறு வரலாறு
விஞ்ஞானம் கலவாத வரலாறு மட்டுமே

புரிந்து கொள்ள முடியாத உயிர்.

(தோற்றப் பிழை 09)



உயிருள்ளது எது , உயிரற்றது எது ; என்பது பற்றி நம்மிடம் சந்தேகம் எப்போதும் இருந்ததில்லை. காரணம் உயர்திணைக்கெல்லாம் உயிர் இருக்கிறது ; அஃறிணைக்கெல்லாம் உயிர் இல்லை. சரியாகத்தானே புரிந்து வைத்திருக்கிறோம் . வேறு என்ன ?
உயிர் என்றோ பிராணன் என்றோ தனியாக நமக்குள் இருப்பதாகவும், அது ,
சாகும் தருவாயில் சினிமாவில் காட்டுவது போல மெழுகுவர்த்தியோ, அகல் விளக்கோ அணைந்து போன பின் நம்மை விட்டு உயிர் விலகுகிறது . உயிர் இல்லாத உடல் ஜடம் என்று ஏறக்குறைய அஃறிணைக்கு இணையாக மதிக்கிறோம் .ஆனால் ....
அப்படி இல்லை என்பதுதான் இப்போது தெரிய வருகிறது
கிபி 624 மார்ச் 16 நடைபெற்ற பத்ரு யுத்தத்தில் இஸ்லாத்தின் எதிரிகளான 24 குறைஷித் தலைவர்கள் கொல்லப்பட்டு , அவர்களின் சடலங்கள் கிணற்றில் தூக்கி எறியப்படுகிறது.

நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் எதிரிகளின் சடலஙகள் போடப்பட்ட கிணற்று அருகில் நின்று ,
" இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே ! முன்பே அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கட்டுப்பட்டிருந்தால் இப்போது நீங்கள் மகிழ்ச்சியாக இருந்திருக்கலாமே ! நிச்சயமாக எங்கள் இறைவன் எங்களுக்கு வாக்களித்ததை நாங்கள் உண்மையாக பெற்றோம். உங்கள் இறைவன் உங்களுக்கு வாக்களித்ததை உண்மையாக நீங்கள் பெற்றீர்களா ? "
அப்போது உமர் (ரலி) அவர்கள் :

" அல்லாஹ்வின் தூதரே! உயிரற்ற
சடங்களிடம் என்ன பேசுகிறீர்கள் ? "
" முஹம்மதின் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ! அவன் மீது சத்தியமாக !
நான் கூறுவதை அவர்களைவிட நீங்கள் அதிகம் கேட்கும் திறன் உள்ளவர்களாக இல்லை . ஆனால் அவர்களால் பதில் தர முடியாது " என்றார்கள் நபிகளார் .
புகாரி 3976
அப்போ, உயிர் என்பது சடலங்களுக்கு இல்லாவிட்டாலும் அவைகளால் நாம் பேசுவதை செவியேற்க முடியும் . ஆனால் பதில் தரவோ இயங்கவோ முடியாது . இந்த அளவுகோலை எடுத்துக் கொள்ளலாம் அல்லவா ?
அதுவும் இல்லை என்கிறது . கீழ்க்கண்ட வசனங்களை உள்வாங்கி உற்றுநோக்குங்கள் .
1) "அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என நீங்கள் ஒரு போதும் எண்ண வேண்டாம் அவர்தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள் அன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது. தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்" குர்ஆன் ( 3:169, 170 )

2) "(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன " .
(குர்ஆன்: 6:122)

ஆக உயிர் என்பது புரிந்து கொள்ள முடியாத அது ஒரு தோற்றப் பிழையானது நமக்கு என்பது தவிர வேறு என்ன சொல்வதற்கு இருக்கிறது ?
" ஓயாக் கவலையினால் உள்ளுடைந்து வாடாமல் மாயாப் பிறவி மயக்கு அறுப்பது எக்காலம்?
மாயாப் பிறவி மயக்கத்தை ஊடறுத்துக்
காயா புரிக்கோட்டை கைக் கொள்வது எக்காலம் ? "
ர.ரா

உருமாறும் தகவல்கள்

(தோற்றப் பிழை 10)



சங்கர் பாலி டெக்னிக்கில் EEE (1978 - 1981) படித்துக் கொண்டிருக்கும் போது
NCC மாஸ்டர் திரு. ராமையா அவர்கள் NCC யில் தகவல் பரிமாற்றம் பற்றி செயல்முறை பாடத்திற்காக 40 மாணவர்கள் அணிவகுத்து கிரவுண்டில் நிற்கிறோம்.

முதல் மாணவரிடம் ரகசியமாக ஒரு படத்தை காண்பித்து , அடுத்த மாணவரின் காதில் அதை ரகசியம் சொல்ல வேண்டும் . சேதியைக் கேட்ட மாணவன் , அடுத்த மாணவனின் காதில் கேட்ட சேதியை ரகசியமாக அவன் காதில் சொல்ல வேண்டும் . இப்படியாக 40 வது மாணவன் தன் காதில் சொல்லப்பட்ட சேதியை ஸ்டேஜ் மேலே ஏறி உரக்க சொன்னான் .

" கலைஞர் கருணநிதி அவர்கள் கல்லக்குடியில் ரயில் மறியல் போட்டம் நடத்துகிறார் அவரைச் சுற்றி அரசியல்வாதிகள் நிற்கிறார்கள் " என்றான்

ராமையா சார் முதல் மாணவரிடம் காட்டிய படத்தை ஸ்டேஜில் ஏறி காட்டினார் . அதில் கிராமத்தில் உள்ள பையன்கள் ரயில்வே ஸ்டேஷன் பக்கம் உள்ள கிரவுண்டில் கிரிக்கெட் விளையாடுகிறார்கள் மேலும் அந்த படத்தில் இரயில் வருவதாக என்ஜின் மட்டும் தெரிகிறது . இவ்வளவுதான் .
" அடே கலைஞர் எங்கே?
மற்ற அரசியல்வாதிகள் எங்கே ? இப்படித்தான் தகவல்கள் ஒவ்வொருவரிடமிருந்து வெளிப்படும் போது கை, கால் , காது , மூக்கெல்லாம் சேர்த்து வைத்து பரப்பப்படுகிறது அதுவும் உண்மைக்கு புறப்பாக " என்றார் ராமையா சார் .

தோற்றப் பிழையினால் ஏற்படும் தகவல்களால் கண்ட காட்சியே சந்தேகத்திற்கு இடமாகி , அந்த சந்தேகமான விஷயத்திற்கு கை , கால்களை ஒட்டி இறக்கை முளைக்க வைத்து பறக்கவும் விடுவார்கள் என்பதை நபிமொழியில் ஒரு நிகழ்வு

நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஸஃபிய்யா(ரலி) கூறினார்.

ரமளான் மாதத்தில் கடைசிப் பத்து நாள்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாஃப் இருந்து கொண்டிருந்தபோது நான் அவர்களைச் சந்திக்கச் சென்றேன்;
(சந்தித்து முடித்த) பின்பு திரும்பிச் செல்ல எழுந்தேன். என்னுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் எழுந்தார்கள். தம் (மற்றொரு) மனைவி உம்மு ஸலமா(ரலி) அவர்களின் வீட்டு வாசலை ஒட்டியுள்ள பள்ளிவாசல் கதவுக்கு அருகே வந்து சேர்ந்தபோது எங்கள் இருவரையும் இரண்டு அன்சாரிகள் கடந்து சென்றனர்.
அவ்விருவரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி சலாம் கூறிவிட்டுச் சென்றுவிட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி, 'அவசரப்படாதீர்கள். (இவர் என் மனைவி தான்.)' என்று கூறினார்கள்.
நபி(ஸல்) அவர்கள் இப்படித் தங்களிடம் சொன்னது அவர்களுக்க மன வருத்தத்தை அளித்தது. அதற்கு அவ்விருவரும், 'அல்லாஹ் தூயவன். இறைத்தூதர் அவர்களே! (தங்களை நாங்கள் சந்தேகிப்போமா?)' என்று கேட்டார்கள்.
அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'மனிதனின் இரத்தம் சென்றடையும் இடங்களில் எல்லாம் ஷைத்தானும் சென்றடைகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் சந்தேகம் எதையேனும் போட்டு விடுவானோ என்று நான் அஞ்சினேன்' என்று பதிலளித்தார்கள்.(புகாரி 3101)
ர.ரா

சந்தேகமும் , அவதூறும்

(தோற்றப் பிழை 11)



ஒரு வீட்டில் சந்தேகம் முன் வாசலால் வந்தால் சந்தோஷம் பின் வாசலால் போய்விடும்.

ஆம்! இன்று சந்தேகம் என்ற மன வியாதி சமுகத்தில் மிகப் பெரிய தோற்றப் பிழையை ஏற்படுத்தி ஊறு விளைவிக்கும் ஒரு விஷக்கிருமியாக அது ஊடுருவி உயிரையே கொன்றுவிடும். அதிலும் சந்தேகம், கணவன், மனைவி விடயத்தில் வரவே கூடாது. இன்று பெரும்பாலான தம்பதிகளிடம் நிலவும் விடயமாக இது இருக்கிறது.

ஒரு ஒரு கணவன் மனைவி மீதோ, மனைவி கணவன் மீதோ வீணான சந்தேகங்களை உண்டாக்கி கொள்வது குடும்ப வாழ்விற்கு பெரும் ஆபத்தாக அமையும். இல்லற வாழ்க்கையில் சந்தேகம் என்பது தம்பதியருக்கு இடையில் ஏற்படவே கூடாது என்கின்றனர் உளவியல் நிபுணர்கள். கணவரிடம் மனைவிக்கோ மனைவியிடம் கணவருக்கோ சந்தேகம் ஏற்பட்டால் அந்த வீட்டில் ஷைத்தான் குடியேறிவிடுவான் என்கின்றனர் சான்றோர்கள்.

நபி (ஸல்) அவர்கள் விஷயத்தில் தன் மனைவி மீது சமுகம் சந்தேகப்பட்டு சொல்லப்பட்ட அவதூறு காரணமாக நபிகளார்கள் மிகுந்த மன வேதனைப்படுகிறார்கள் .
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணம் போது மனைவிமார்களிடையே யாரை அழைத்துச் செல்வது என சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். அவர்களில் எவருடைய பெயர் சீட்டு வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு பயணம் புறப்படுவார்கள். இவ்வாறே, அவர்கள் மேற்கொண்ட ('பனூ முஸ்தலிக்' என்ற) ஒரு புனிதப் போரின்போது என்னுடைய பெயருள்ள சீட்டு வந்தது. , நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் பயணம் புறப்பட்டுச் சென்றேன்.

நபி (ஸல்) அவர்கள் போர் முடிந்து திரும்பிக் கொண்டிருந்த நிலையில் நாங்கள் மதீனாவை நெருங்கியபோது, இரவு நேரத்தில் ஓரிடத்தில் தங்கும் படி அறிவித்தார்கள்.

அப்போது நான் (சிவிகையிலிருந்து) எழுந்து (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக மறைவிடம் தேடி) படையைக் கடந்து சென்றேன். என் (இயற்கைத்) தேவையை நான் முடித்துக் கொண்ட பின் முகாமை நோக்கிச் சென்றேன். அப்போது என் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தேன். என் கழுத்திலிருந்த யமன் நாட்டு 'ழஃபாரி' நகர முத்து மாலையொன்று அறுந்து கீழே விழுந்து விட்டது. எனவே, நான் திரும்பிச் சென்று என்னுடைய மாலையைத் தேடலானேன்; அதைத் தேடிக் கொண்டிருந்தேன் .அது கிடைத்து விட்டது.
அதற்குள் அங்கிருந்த அனைவரும் சென்று விட்டிருந்தனர்.

படையினர் தவறவிட்டுச் சென்ற பொருள்களை எடுத்துச் செல்வதற்காக ஸஃப்வான் இப்னு முஅத்தல் அஸ்ஸுலமீ அத் தக்வானீ என்பவர் அங்கு இருந்தார். நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் அவர் காலையில் வந்தார்.
அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை .
பிறகு, அவர் விரைவாக தம் ஒட்டகத்தை மண்டியிடச் செய்து நான் ஏறிக் கொள்ள வசதியாக அதன் முன்னங்காலை தன் காலால் மிதித்துக் கொள்ள நான் எழுந்து சென்று அதில் ஏறிக் கொண்டேன். அவர் என்னுடன் ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டு நடக்கலானார். இறுதியில் நாங்கள் படையினரை வந்தடைந்து சேர்ந்து கொண்டோம்.

இதனால் ஆயிஷா (ரலி) அவர்களைப் பற்றிய அவதூறு சமூகத்தாரால் பேசப்பட்டது. இதன் காரணமாக இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் மனைவியை ஆயிஷாவை பிரிந்து விடுவது குறித்து ஆலோசனை நடத்தினார்கள். அலீ இப்னு அபீ தாலிப் அவர்களையும், உஸாமா இப்னு ஸைத் அவர்களையும் அழைத்தார்கள்.

உஸாமா(ரலி) அவர்களிடம் கேட்டபோது நபிகளாரின் குடும்பத்தார் மீது தாம் கொண்ட பாசத்தை வைத்து, "இறைத்தூதர் அவர்களே! தங்களின் துணைவியரிடம் நல்ல குணத்தைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை' என்று உஸாமா கூறினார்கள். அலீ(ரலி) அவர்களோ, நபி(ஸல்) அவர்களின் மனவேதனையைக் குறைக்கும் விதமாக, "இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. ஆயிஷா அன்றிப் பெண்கள் நிறையப் பேர் இருக்கின்றனர் என்று சொல்லியதோடு,"பணிப்பெண் பரீராவைக் கேளுங்கள்" என்று ஆலோசனை வழங்கினார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பணிப்பெண் பரீராவை அழைத்துக் கேட்டபோது, "இறைவன் மீதாணையாக! அவர் குழைத்த மாவை அப்படியே போட்டுவிட்டு உறங்கிப் போய் விடுவார்; வீட்டிலுள்ள ஆடு வந்து அதைத் தின்று விடும்; அத்தகைய கவனக்குறைவான இளவயது பெண் என்பதைத் தவிர அவரைக் குறை சொல்லக் கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை" என்று பதில் கூறினார்.

தனது ஈரல் பிளந்துவிடும் அளவுக்கு அழுது கொண்டிருந்த ஆயிஷா(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். ஆயிஷாவிடம் நபிகளார், "உன்னைக் குறித்து எனக்குச் சில செய்திகள் வந்துள்ளது. நீ நிரபராதியாக இருந்தால் அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று அறிவித்து விடுவான். நீ குற்றமேதும் செய்திருந்தால் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கேட்டுவிடு. பாவத்தை ஒப்புக் கொண்டு மனம் திருந்தி பாவமன்னிப்புக் கோரினால், அல்லாஹ் மன்னித்துவிடுவான்" என்று கூறினார்கள்.
அதற்கு ஆயிஷா, "நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும். எனக்கும் உங்களுக்கும், யூசுஃப் (அலை) அவர்களின் தந்தை நபி யாகூப் (அலை) அவர்களையே உவமையாகக் கருதுகிறேன். அதாவது இதைச் சகித்துக் கொள்வதே நல்லது; நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம் தான் நான் பாதுகாப்புக் கோர வேண்டும்" என்று கண்ணீர் மல்க மிகத் திடமாக திருக்குர்ஆனின் 12-ஆம் அத்தியாயத்தின் 18-வது இறைவசனத்தை நினைவுபடுத்தினார்.

அதற்குள் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் மீது திருக்குர்ஆன் வசனங்கள் அருளப்படத் தொடங்கிவிட்டன. உடனே வேத வெளிப்பாடு வருகிற நேரங்களில் ஏற்படும் கடுமையான சிரம நிலை நபிகளாருக்கு ஏற்பட்டது; அது கடும் குளிர் காலமாயிருந்தும் அவர்களின் மேனியிலிருந்து சின்னஞ்சிறு முத்துகளைப் போல் வியர்வைத் துளிகள் வழியத் தொடங்கின.
அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு விலகியவுடன் அவர்கள் சிரித்துக் கொண்டே பேசிய முதல் வார்த்தையாக, 'ஆயிஷா! அல்லாஹ் உன்னைக் குற்றமற்றவள் என அறிவித்துவிட்டான்' என்று கூறினார்கள்.
உடனே ஆயிஷா(ரலி) அவர்களின் தாயார் ஆயிஷாவை அல்லாஹ்வின் தூதரிடம் செல்லச் சொன்னார்கள். அதற்கு ஆயிஷா(ரலி), 'மாட்டேன்; அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் செல்ல மாட்டேன். அல்லாஹ்வை மட்டுமே புகழ்ந்து, அவனுக்கே நன்றி செலுத்துவேன்' என்றார்கள்.
ஆயிஷா(ரலி) அவர்களின் குற்றமற்ற நிலையைத் தெளிவுபடுத்தி அல்லாஹ் பத்து வசனங்களை அருளியிருந்தான். குர்ஆன் (24:11-20.) புகாரி :2661,
அவதூறு தோற்றப் பிழை நீங்கிய பின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் நபிகளாருடன் சேர்ந்து கொண்டார்கள் .
ர.ரா

குர்ஆன் வசன ஆய்வு 01




நண்பர் Sheik Jailani கேட்டதற்கு இணங்க குர்ஆன் வசன அமைப்பைப் பற்றிய ஆய்வு .

அல்-ஃபாத்திஹா (தோற்றுவாய்)

1) அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் (ஓதுகிறேன்)

2) எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! (அவன்தான்) அகிலத்தார் யாவரையும் படைத்து வளர்த்து தகுந்த பக்குவப்படுத்துபவன்.

3) (அவன்தான்) அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையவன்.

4) தீர்ப்பு நாளின் அதிபதி(யும் அவனே.)

5) (அல்லாஹ்வே!) நாங்கள் உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம்.

6) நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!

7) (அவ்வழி) எவர்களுக்கு நீ அருள்புரிந்தாயோ அவர்கள் (சென்ற) வழி. (உன்) கோபத்திற்குள்ளானவர்களோ வழிதவறியவர்களோ சென்ற வழியல்ல.

(அல்குர்ஆன் 1 - 7)

" மேற்கண்ட அல்-ஃபாத்திஹா என்கிற தோற்றுவாய் சூரா சொல்வதை சுருக்கமாக ஒரிரு வார்த்தையில் அதாவது ஒரே ஒரு வசனத்தில் சொல்ல முடியுமா?

" புரியலையே "

உதாரணமாக வெளிநாட்டில் இருந்து அந்தக் காலத்தில் கடிதாசி வரும் .மூத்த மகன் எழுதிய கடிதாசியை இளைய மகனிடம் கொடுத்து தாயார் மிகுந்த ஆர்வத்தோடு படிக்க கேட்க அமர்வார் .

இளைய மகன் படு சுட்டி . கடிதம் முழுவதையும் அவன் மனதிற்குள்ளே படித்து முடித்துவிட்டு , " அண்ணன் அடுத்த மாசம் 6 ந் தேதி ஊர் வருகிறான். மாமா வீட்டில் இறங்காமல் நம்ம வீட்டிலே வந்து இறங்குவானாம் "

"ஏப்பா நாலு பக்கம் எழுதியதை நாலு வார்த்தையிலே சொல்லிட்டியேப்பா கொஞ்சம் விவரமா படிச்சி சொல்லுப்பா "

" நாலு பக்கத்திலே இந்த நாலு வார்த்தைதான் முக்கியம் போம்மா

...... அது மாதிரி மேற்கண்ட ஏழு வசனத்தில் எந்த வசனம் எல்லா வசனத்தையும் தாங்கி நிற்கிறது அந்த முக்கியமான வசனம் எது?

"உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம் " - இது தான் அந்த முக்கியமான வசனம்.

" எப்படி? "

முதல் வசனத்தில் "அல்ஹம்து " _ எல்லா புகழும் . (எல்லா புகழும் உனக்கு இருப்பதால்தால்தான் #உன்னைவணங்குகிறோம் )

இரண்டாவது வசனத்தில் " அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையவன்"

(அருளும் , அன்பு உன்னிடமே இருப்பதால்தான் #உன்னிடமேஉதவியும்தேடுகிறோம்)

தீர்ப்பு நாளின் அதிபதி ( அதிபதியாக இருப்பதால்தானே #உன்னையேவணங்குகிறோம் )

நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக! ( நேரான பாதையில் நடப்பதற்கு #உன்னிடமேஉதவியும்தேடுகிறோம்

அவ்வழி) எவர்களுக்கு நீ அருள்புரிந்தாயோ அவர்கள் (சென்ற) வழி. (உன்) கோபத்திற்குள்ளானவர்களோ வழிதவறியவர்களோ சென்ற வழியல்ல

(அதற்கு #உன்னிடமேஉதவிதேடுகிறோம்)

இந்த ஏழு வசனத்திற்கு தொடர்புடைய ஒரே ஒரு வசனம் " உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம் "

என் சிற்றிறவுக்கு தென்பட்ட சின்ன சின்ன விஷயங்கள் .

ர.ரா

குர்ஆன் வசன ஆய்வு 02

| | | | | |
|---|---|---|---|---|
| ஏக இறைவன் ஒருவன் தான் என நபியே நீர் கூறுவீராக | أَحَدٌ<br>அஹதுன்<br>ஒருவனே | ٱللَّهُ<br>அல்லாஹு<br>அல்லாஹ் | هُوَ<br>ஹுவ<br>அவன் | قُلْ<br>குல்<br>கூறுங்கள் |
| அவன் (யாவற்றைவிட்டும்) தேவையற்றவன் (யாவும் அவனிடம் தேவையாகியிருக்கிறது) | | | ٱلصَّمَدُ<br>அஸ்ஸமது<br>தேவையற்றவன் | ٱللَّهُ<br>அல்லாஹு<br>அல்லாஹ் |
| அவன் (எவரையும்) பெறவுமில்லை மேலும் அவன் (எவராலும்) பெறப்படவுமில்லை | | | وَلَمْ يُولَدْ<br>வலம் யூலத்<br>பெறப்படவுமில்லை | لَمْ يَلِدْ<br>லம் யலித்<br>பெறவில்லை |
| மேலும் அவனுக்கு நிகராக எவரும் இல்லை | أَحَدٌ<br>அஹதுன்<br>ஒருவரும் | كُفُوًا<br>குஃபுவன்<br>நிகர் | لَّهُ<br>லஹு<br>அவனுக்கு | وَلَمْ يَكُنْ<br>வலம் யகுன்<br>மேலும் |

சூரா : இக்லாஸ் = ஏகத்துவம் என்ற ஓரிறைமை

- கூறுவீராக ;" அல்லாஹ் ஒருவனே "
- அல்லாஹ் தேவையற்றவன்
- அவன் பெறவுமில்லை அவன் (பிறரால்) பெறப்படவுமில்லை
- இன்னும் அவனுக்கு நிகராக ஒருவரும் இல்லை " .
- இந்த இக்லாஸ் அத்தியாயமான இந்த சூராவில் இஸ்லாத்தின் அடிப்படை கொள்கையான ஏகத்துவம் என்ற ஓரிறைமை குறித்து இரத்தினச் சுருக்கமான நான்கே நான்கு திருவசனங்களில் சொல்லப்படுகிறது !
- சொல்லப் போவதை சற்று உன்னிப்பாக கவனியுங்கள். " இக்லாஸ் " என்ற இந்த சொல் மற்ற சூராக்களில் உள்ளதைப் போன்று , இந்த அத்தியாயத்தின் வசனங்களில் எந்த இடத்திலும் சொல்லப்படாத ஒற்றைச் சொல் இக்லாஸ் . இதன் காரணத்தை உங்கள் இல்ஹாம்தான் உங்களுக்கு சொல்ல வேண்டுமே தவிர பிறர் அல்ல !

இந்தப் பதிவில் ' அஹத் ' என்ற ஒற்றை சொல்லை மட்டும் எடுத்து உங்களுக்கு விளங்குவதற்கு முயற்சிக்கிறேன்.
" சர்வ இலட்சணங்களும் பூரணமாய் அமையப் பெற்ற தனக்கு நிகரில்லாத உள்ளமையை அரபி மொழியில் "அல்லாஹ்" என்று சொல்லப்படுகிறது!
"அல்லாஹ் அஹத் அல்லாஹ் ஒருவன் ,தனித்தவன் , ஏகன் .
'ஒன்று' என்ற பொருளைக் குறிக்க அரபி மொழியில் "வாஹித் " , " அஹத் " என்று இரு பதங்கள் இருக்க , இந்த சூரா வில் அஹத் என்ற சொல்லை அவன் பயன்படுத்தியுள்ளான் .
காரணம் எண்ணிக்கையில் குறைந்த எண்ணாகிய ஒன்று என்பதைக் குறிப்பதற்காக மட்டும் " வாஹித் " என்ற பதம் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் "அஹத் " என்ற பதமானது " எந்த ஒன்றும் அந்த ஒன்றுக்குச் சமமாக இருக்க முடியாத அந்த ஒன்றை மட்டுமே குறிக்கும் .
உதாரணமாக ஒரு மனிதன் என்பதை ரஜுலுன் வாஹிதுன் என்று சொல்லலலாம் . ரஜுலுன் அஹதன் என்று சொல்லக் கூடாது . புரியும் என நினைக்கிறேன் .
அஹத் என்ற பதமானது , தனக்கு எவ்வகையிலும் நிகரில்லாத அல்லாஹ் ஒருவனை மட்டுமே குறிப்பதற்காக அவனுக்காகவே படைக்கப்பட்ட பதம்தான் "அஹத் "
இதை எப்படி இன்னும் உங்களுக்கு விளக்குவது ?

அஹத் - 1 ) அநாதித்துவம் ,
2) நித்தியத்துவம் ,
3) சர்வ வியாபகத்துவம் முதலிய அவனுக்கு மட்டுமே சொந்தமான பூரண சிறப்பு வாய்ந்தது அஹத்
அஹத் என்பது.....
1 ) ஆரம்பமில்லாதிருப்பது
2) என்னென்றும் நிலைத்திருப்பது
3) எங்குமிருத்தல்.
" இந்த பொருள் எங்கு தயாரித்தது? சீனாவா ? ஜப்பானா ? "

" ஜப்பான் "
"சரிதான் அதன் நேர்த்தியை ஜப்பான் என்று சொல்கிறதே .. "
அது மாதிரி அஹதாகவன் படைத்ததும் அவனைப் போன்றே அஹதானதாகத்தானே இருக்க முடியும் ?
" எப்படி? "
உங்களை மாதிரி வேறு ஒருவன் இருக்கமுடியுமா ? அப்படியே இருந்தாலும் உங்களை மாதிரித்தானே யொழிய நீங்கள் அல்ல . உங்கள் கண் கருவிழி, உங்கள் கை விரல்ரேகை யாருக்கும் இதுவரையிலும் இல்லை , இனிமேலும் இருக்கப்போவதில்லை . உங்களை மாதிரி எத்தனயோ பேர்கள் , எத்தனையோ படைப்பினங்கள் , அட ஓடுகிற நதி நீரில் முதலில் நீங்கள் தொட்ட தண்ணீர் மறுதடவை தொடும் போது , அது வேற தண்ணீரே தவிர அதுவல்ல .
அப்படியென்றால் அஹதானவன் படைத்தெல்லாமே அஹத் .
இப்பேர்ப்பட்ட இறைவனை சொற்களில் வைத்து வர்ணிக்க முடியாது என்பதாக நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் ....
" சொல்லினால் தொடர்ச்சி நீ
சொல்லப்படும் பொருளும் நீ
சொல்லினால் சொல்லப்படாது
தோன்று கின்ற பொருளும் நீ
தோன்றா பொருளும் நீ ! "
மக்கள் கவிஞர் கபீர் ....
" ஓ...! எப்படி என்னால் , அந்த ரகசிய வார்த்தையை உணர்த்த முடியும் ?
அவன் இப்படி இருக்கிறான் , இப்படி இல்லை என்று எப்படி என்னால் சொல்ல முடியும் ?
அவன் என்னுள் இருக்கிறான் என்றால் பிரபஞ்சமே வெட்கப்படும் . அவன் எனக்கு வெளியே இருக்கிறான் என்றால், .அது பொய்.
அவன் உள் உலகத்தையும் , வெளியுலகத்தையும் பிரிக்காமல் ஒன்றாக்கிறான் .
உணர்வதும், உணரப்படாததும் அவன் இரு பாதங்கள் . அவன் எங்கும் விரவியுமில்லை ; மறைந்தும் இல்லை .
அவன் வெளிப்பட்டதும் இல்லை . வெளிப்படாமலும் இல்லை. அவனை எது என்று சொல்ல வார்த்தைகள் இல்லை .
" ஹக் "_ உண்மை என்பது வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது
" ஞானம் " என்பதும் புலன் அறிவிற்கு அப்பாற்பட்டது.
இதனால்தானாலும் கூட இருக்கலாம் அவன் " அஹத் ".
ர.ரா

குர்ஆன் வசன ஆய்வு 04

لَمْ يَلِدْ ۙ وَلَمْ يُوْلَدْ ۙ
அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை.
(அல்குர்ஆன்: 112:3)
இந்த அத்தியாயத்தில் இந்த வசனம் , மனிதக் கற்பனையெல்லாம் தாண்டிய சிந்தனை . எப்படி .... எப்படி ...அவனை எவரும் பெறவுமில்லை; அவன் எவராலும் பெறப்படவும் இல்லை மூலாதாரம் இல்லாத சுயம்புவா ? அது எப்படி ?
இதற்கு முன் அவன் படைக்கும் விதத்தை குர்ஆனில் சொல்லி இருப்பதைக் கவனிக்க வேண்டும் .

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْــٴًـــا مَّذْكُوْرًا
ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையில் இருந்தான். (குர்ஆன் : 76:1)
அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; (குர்ஆன் : 42:11)
அவன் எப்பொருளுமாய் இல்லாதவன் ; அவன் படைக்கும் படைப்பிற்கும் இன்ன பொருள் என்று எதுவும் தேவை இல்லை .
அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை என்கிற குர்ஆன் வசனத்தை குர்ஆன் அருளப்படுவதற்கு முன் வந்திறங்கிய மற்ற வேதங்களிலும் இவ்வாறே சொல்லியுள்ளான் என்பது வியப்புக்குரிய விஷயம்

உபனிஷத் இந்து மதத்தின் முக்கிய
வேத நூல்
'ஏகாம் எவாத்விதியாம்'
'அவன் ஒருவனே!
அவனன்றி மற்றொருவர் இல்லை'
-சந்தோக்யா உபனிஷத் 6:2:1
(The principal Upanishad by S.Radha Krishnan page 447&448)
(Sacred books of the east volume1> ? 6 : 9
'நசாஸ்யா காஸிக் ஜனிதா நா சதிபஹ்'
'அவனைப் பெற்றவர் யாரும் இல்லை. அவனைப் படைத்தவர் யாரும் இல்லை'
(The principal Upanishad by S. Radha krishnan page 745)
(And in sacred books of the east volume 15> The Upanishadpart 2, page 263)
ஸ்வேதாஸ்வதாரா உபனிஷத் அத்தியாயம் 4 :19
'நா தாஸ்ய ப்ரதிமா அஸ்தி'
'அவனைப் போன்று வேறு யாரும் இல்லை'
(The principal Upanishad by S.Radha Krishnan page 736-737)
(And sacred books of the east volume 15, the Upanishad part 2, page 253)
ஸ்வேதாஸ்வதாரா உபனிஷத் அதிகாரம் 4 : 20
'நா சம்த்ரஸே திஸ்தாதி ரூபம் அஸ்யாஇ நா சக்சுஸா பாஸ்யாதி காஸ் கனைனாம்'
'அவன் உருவத்தை யாரும் பார்க்க முடியாது. அவனது உருவை பார்க்கும் சக்தி எந்த கண்களுக்கும் இல்லை'
(The principal Upanishad by S.Radhakrishnan page 737)
(And in sacred books of the east volume 15, The Upanishad part 2, page 253)
யஜீர் வேதா அதிகாரம் 32 🙂
'நா தஸ்யா பிரதிமா அஸ்தி'
'அவனுக்கு இணை வேறு எவரும்இல்லை'
யஜீர் வேதா அதிகாரம் 32 : 3
'அவன் யாருக்கும் பிறக்கவுமில்லை.அவனே வணங்குவதற்கு தகுதியானவன்.'
(The Yajurveda by Devi Chand M.A page 377)
யஜீர்வேதா அதிகாரம் 40 :9
'அந்தாத்மா பிரவிசந்தி யே அஸ்ஸாம்புதி முபஸ்தே'
'இயற்கை பொருட்களை வணங்கியவர்கள் இருளில் நுழைந்து விட்டனர்.' அதாவது காற்று தண்ணீர் நெருப்பு போன்றவற்றை வணங்குபவர்கள் மறுமையில் நஷ்டவாளிகள் என்று கூறப்படுகிறது.
பகவத் கீதை அதிகாரம் 10 🙂
'நான் இவ்வுலகில் ஜனிக்கும் முன்பே என்னைப் பற்றி அறிந்தவன் இறைவன். இந்த உலகின் ஈடு இணையற்ற அதிபதி'
ர ரா

வித்தியாசமான மரணங்கள் 01



உலக அரங்கில் சிலரின் மரணங்கள் வித்தியாசமான செய்தியை கொடுத்துக் கொண்டே இருக்கிறது . சாக்ரடீஸ் மரணம் முதல் சதாம் உசேன் மரணம் வரை அரசியல் கொலைகளாக பார்க்கப்படுகிறது . சில ஆன்மிக வாதிகளின் மரணங்களும் சில அறிவியிலாளார்களின் மரணங்களும் கூட ஏன் இப்படி நடந்தது என்று வரலாற்றில் மிகப் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி , அவர்களின் மரண சேதி அவர்களைப் புதைத்த புதைகுழிகளோடு புதைந்து போகாமல் இன்னும் இப்பூமியில் வாழ்ந்து கொண்டேதான் இருக்கிறது .

அப்படிப்பட்ட சில வித்தியாசமான மரணங்களை தொகுத்து சொன்னால் என்ன என்று எனக்கு மனதில் பட்டது .

இத்தொடரில் ஆன்மிகவாதிகள் , அரசியல்வாதிகள் , அறிவியலாளர்கள் போன்றவர்களின் மரணங்கள் குறித்து நீண்ட பட்டியலை தயார் செய்து வைத்திருக்கிறேன் . நல்லோர்கள் மட்டும் இன்றி மற்றோரையும் சொல்ல வேண்டும் என்று அபுலஹப் முதல் ஹிட்லர் வரையும் உள்ள வித்தியாசமான மரணங்களை சொல்ல இருக்கிறேன்.

பெண்ணுக்காக கொலை செய்யப்பட்ட யஹ்யா (அலை) அவர்கள்

'யஹ்யா' என்றால் வாழ்பவர் என்று பொருள். யஹ்யா (அலை) இறைவழியில் கொல்லப்பட்டிருந்தாலும் மக்கள் மனதில் வாழ்ந்தார்கள். அவருடைய உபதேசங்களை மதிக்காதவர்கள் மடிந்து அழிந்தனர்

நபி ஜக்கரிய்யா (அலை) அவர்களுக்கு மகன் பிறக்கிறான். இறைவனின் கட்டளையின் படி அந்தக் குழந்தைக்கு யஹ்யா என்று பெயர் வைத்தார்கள்.

யஹ்யாவை நல்லமுறையில் வளர்க்கிறார் ஜக்கரிய்யா (அலை). மக்களுக்குப் போதனை செய்வதையும் நல்லுபதேசம் செய்வதையும் யஹ்யா (அலை) பார்த்தே வளர்ந்தார்கள். மர்யம் (அலை) அவர்களின் நற்செயல்களையும், அவர்கள் பள்ளியில் தங்கியிருந்து ஆற்றும் பணிகளையும் பார்த்து வளரும் யஹ்யா (அலை) அவர்கள் மற்ற குழந்தைகளைப் போல் விளையாடுவது, மிருகங்களைச் சீண்டுவது என்றில்லாமல் ஆழ்ந்து 'தவ்ராத்' வேதத்தைப் படித்துக் கற்றார்கள்.

அல்லாஹ்வின் அருளின்படி யஹ்யா (அலை) அவர்களும் நபித்துவத்தைப் பெற்றார். தந்தை மகன் இருவரும் நபியாக எந்நேரமும் இறைவனுக்கு நன்றி செலுத்துபவராகவும், மக்களுக்கு நல்லுபதேசம் செய்பவராகவும் தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். பனீ இஸ்ராயீலர்களை நல்வழிப்படுத்த முற்பட்டார்கள்.

இந்நிலையில் இறைவழியில் கொல்லப்பட்டார் ஜக்கரிய்யா (அலை) அவர்கள் . ஆனாலும் யஹ்யா (அலை) அவருடைய உபதேசங்களை நிறுத்தவில்லை. ஏக இறைவனை மட்டும் வணங்கும்படியும் அவனுக்கு இணை வைக்காமல் இருப்பது குறித்தும் போதித்தார். “இறைவன் எல்லாவித பாவங்களையும் மன்னித்தாலும் மன்னிப்பான் ஆனால் இணை வைத்தலை மன்னிக்கவே மாட்டான்” , என்று மக்களுக்கு எடுத்துரைத்தார்கள்.

அவர் வாழ்ந்த இடத்தின் மன்னர், தன் சகோதரனின் மகளை விரும்பி மண முடிக்க இருந்தார். ஆனால் தவ்ராத்தின்படி, இறைவனின் கட்டளையின்படி தமது சகோதரனின் மகளைத் திருமணம் செய்து கொள்வது தவறான உறவுமுறையென்று யஹ்யா (அலை) செய்த பிரச்சாரம் மன்னரையும் அவர் மணம் முடிக்க விரும்பிய பெண்ணையும் எட்டியது. அப்பெண் தன்னுடைய இச்சைக்கு மன்னரை உற்படுத்தி

எப்படியாவது யஹ்யா (அலை) அவர்களின் தலையை கொண்டு வர வேண்டுகிறாள். மன்னரும் தான் அடையவேண்டிய பெண்ணின் வாக்குக்கிணங்க யஹ்யா (அலை) அவர்களின் தலையை வெட்டி பாவத்தில் மூழ்கிவிடுகின்றனர்.

'யஹ்யா' என்றால் வாழ்பவர் என்று பொருள். யஹ்யா (அலை) இறைவழியில் கொல்லப்பட்டிருந்தாலும் மக்கள் மனதில் வாழ்ந்தார்கள். அவருடைய உபதேசங்களை மதிக்காதவர்கள் மடிந்து அழிந்தனர்.
அவர் பிறந்த நாளிலும், அவர் இறந்த நாளிலும், மறுமையில் அவர் உயிர் பெற்றெழும் நாளிலும் அவர் மீது ஸலாம் (சாந்தி) நிலைத்திருக்கும்.

"எவர் அல்லாஹ்வின் வசனங்களை நிராகரித்துக் கொண்டும் நீதமின்றி நபிமார்களைக் கொலை செய்து கொண்டும் மனிதர்களிடத்தில் நியாயமாக நடக்கவேண்டும் என்று ஏவுவோரையும் கொலை செய்து கொண்டும் இருக்கின்றார்களோ அவர்களுக்கு நோவினை மிக்க வேதனை உண்டு. அவர்கள் புரிந்த செயல்கள் இம்மையிலும் மறுமையிலும் பயனற்றவையாக அழிந்துவிடும். அவர்களுக்கு உதவியாளர்கள் எவருமில்லை" குர்ஆன் (21:90, 19: 7-15,
3: 21-22)
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் O2



(அல்லாஹ் மீது நம்பிக்கை கொண்ட தன் அடியானை உயிருடன் இருக்கும் போது பாதுகாத்தது போன்று அவரின் மரணத்திற்குப் பின்னும் பாதுகாக்கிறான்)
உஹுத் போரில் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட பின்னடைவால் பிரச்சனைகள் அதிகரித்தன அனைத்து திசைகளிலிருந்தும் மதீனாவை ஆபத்துகள் சூழ்ந்தன. வெவ்வேறு பிரச்சனைகளையும் நபி முஹம்மது (ஸல்) மிகச் சிறப்பாகக் கையாண்டு எல்லாவற்றையும் முறியடித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்துப் பேர்கள் கொண்ட ஒரு குழுவினரை உளவுப்படையாக அனுப்பி வைத்தார்கள். ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரியை உளவுப் படைக்குத் தலைவராக்கினார்கள். அவர்கள் புறப்பட்டு, உஸ்ஃபான் என்ற இடத்திற்கும் மக்காவுக்கும் இடையிலுள்ள 'ஹத்ஆ'

என்னுமிடத்திற்கு வந்தபோது வேறொரு கிளையினருக்கு இந்த உளவுப் படையினர் வரும் விவரம் தெரிந்துவிட்டது.

உடனே அக்கிளையினர் அவர்களைப் பிடிப்பதற்காக அம்பெய்வதில் தேர்ச்சி பெற்ற வீரர்களைத் திரட்டிக் கொண்டு இந்த உளவுப் படையினரின் சுவடுகளைப் பின்பற்றி, மதீனாவிலிருந்து பயண உணவாகக் கொண்டு வந்திருந்த பேரீச்சம் பழங்களைத் தின்று அவற்றின் கொட்டைகளைப் போட்டுவிட்டுச் சென்றதையும், அவர்களின் கால் சுவடுகளைப் பின்பற்றியும் ஆஸிம்(ரலி) இப்னு ஸாபித் அல் அன்சாரி,மற்றும் குழுவினரைச் சூழ்ந்தனர்.
அக்கிளையினர், உளவுப் படையினரிடம், 'நீங்கள் இறங்கி வந்து எங்களிடம் சரணடைந்து விடுங்கள். உங்களில் எவரையும் நாங்கள் கொல்லமாட்டோம்' என்று உறுதிமொழியும் வாக்கும் அளிக்கிறோம்' என்று கூறினர்.

அப்போது ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள், தம் சகாக்களை நோக்கி, 'என் சமூகத்தாரே! நான் ஓர் இறை மறுப்பாளனின் வாக்குறுதியை நம்பி அவனுடைய பொறுப்பில் இறங்கிச் செல்ல மாட்டேன்' என்று கூறிவிட்டு, 'இறைவா! எங்கள் நிலை பற்றிய செய்தியை உன் தூதருக்குத் தெரிவித்து விடு' என்று பிரார்த்தித்தார்கள். ஆஸிம் நினைத்ததுபோலவே இறைநிராகரிப்பாளர்கள் வாக்குறுதியைக் காப்பாற்றாமல் முஸ்லிம்களின் மீது அம்பெய்து ஆஸிம் உட்பட ஏழு பேரைக் கொன்றனர்.

ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள் கொல்லப்பட்டபோது, அவர்கள் செய்த பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக் கொண்டு அவர்களின் நிலைகுறித்துத் தன் தூதருக்குத் தெரிவித்துவிட்டான்.
நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களுக்கு உளவுப் படையினரின் செய்தியையும், அவர்களுக்குக் குறைஷி குல நிராகரிப்பாளர்களில் சிலருக்கு ஆஸிம் அவர்கள் கொல்லப்பட்டது குறித்துத் தெரிவிக்கப்பட்டவுடன் கொல்லப்பட்டது அவர்தான் என்று அவரை அடையாளம் தெரிந்து கொள்ள அவரின் அங்கம் எதையாவது தமக்குக் கொடுத்தனுப்பும் படி கேட்டு அவர்கள் ஆளனுப்பினார்கள்.
அப்போது ஆஸிம் அவர்களுக்காக அவர்களின் உடலுக்குப் பாதுகாப்பாக ஆண் தேனீக்களின் கூட்டம் ஒன்று நிழல் தரும் மேகத்தைப் போன்று அவரைச் சுற்றிலும் அரணாகப் படர்ந்திருக்கும் படி அனுப்பப்பட்டது. அது அவர்களைக் குறைஷிகளின் தூதுவரிடமிருந்து காப்பாற்றியது. எனவே, அவர்களின் சதையிலிருந்து அவர்களால் எதையும் துண்டித்து எடுத்துச் செல்ல முடியவில்லை.

அல்லாஹ் நம்பிக்கை கொண்ட தன் அடியானை உயிருடன் இருக்கும் போது பாதுகாத்தது போன்று அவரின் மரணத்திற்குப் பின்னும் பாதுகாக்கிறான். ஸஹீஹ் புகாரி 3:56:3045, 4:64:3989, 4:64:4086

அவர்களின் உடலைப் பாதுகாக்க ஆண் தேனீக்கள் படை என்றும் கரு நிற குளவிகள் படை என்றும் சொல்லப்படுகிறது .பின் அந்த நபித்தோழர் ஆஸிம் இப்னு ஸாபித் அவர்களின் உடலை பூமி பிளந்து உள்வாங்கிக் கொண்டதாகவும் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர் .
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 03

(அறிவியலாளர்களின் மர்ம மரணங்கள்)



உலகில் நடக்கும் சில விஷயங்கள் நமக்குப் புலப்படாத புதிராக இருந்தாலும் அந்த புதிருக்கான விடைகள் நவீன விஞ்ஞான காலமான இன்றும் நம்மால் அறிந்து கொள்ள முடியாத மர்மங்களாக உள்ளன

**" டைட் லோவ் பாஸ் மைஸ்டரி "**உலகில் இன்று வரை தீர்க்க முடியாத மர்மங்களில் ஒன்றாக இருக்கிறது

1959 ஆம் வருடம் சோவியத் ஒன்றியத்தில் உள்ள யூரல் மலைப் பகுதி ஒன்றில் நிகழ்ந்த 9 பேர் கொண்ட மலையேற்ற அறிவியல் குழுவினரின் மர்மமான மரணங்கள்

அறிவியல் கல்லூரி சேர்ந்த மாணவர்கள் விடுமுறை தினத்தை கழிக்க மலையேற்றத்திற்காக அருகில் இருந்த டைட் லோவ் பாஸ் என்ற பனி நிறைந்த மலைப் பகுதிக்கு சென்றனர் .
பல வாரங்கள் ஆகியும் சென்றவர்கள் வராததால் சந்தேகம் அடைந்து தேடச் சென்றவர்கள் , விநோதமான முறையில் அம்மாணவர்கள் இறந்து கிடந்ததைக் கண்டு அதிர்ச்சி அடைந்துள்ளனர்.
அவர்களில் ஒருவருக்கு நாக்கு மட்டும் வெட்டப்பட்டும் , .மற்றொருவருக்கு கண்கள் மட்டும் வெளியே எடுக்கப்பட்டும் , இன்னொருவருக்கு நெஞ்சில் காடை எலும்புகள் மட்டும் வெளியே எடுக்கப்பட்டும் ஏதோ மருத்துவ அறிவியல் ஆய்வுக்காக கொடூரமான முறையில் கொல்லப்பட்டிருக்கிறார்கள் .
அங்கிருந்து கண்டெடுக்கப்பட்ட உடல்களை ஆராய்ந்ததில் அவை கண்டிப்பாக எந்த மிருகங்களினாலும் கொலை செய்யப்படவே இல்லை.
மேலும் அவ்வுடல்கள் மிக நெருக்கத்தில் கிடந்ததை நிலையில் ஒருவரின் உடல் உறுப்புகள் பிடுங்கி கொலை செய்யப்படும் போது மற்றவர்கள் பார்த்ததையும் உறுதி செய்யப்படுகிறது .
ஆனால் பல கிலோ மீட்டர் தூரம் வரை யாருமற்ற பனிப் பிரதேசத்தில் ஏற்பட்ட இவ் விநோத மரணங்கள் குறித்து மர்மங்கள் இதுவரை கண்டுபிடிக்கப்படாமல், யார் இப்படி கொலை செய்திருப்பார்கள் ? எதற்காக கொலை செய்திருப்பார்கள் ? என்ற கேள்விகள் இன்னும் கேட்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது . விடை தான் கிடைக்கவே இல்லை .
இது போன்று உலகளவில் புதிய கண்டுபிடிப்பாளர்கள் பலர் மர்மமான முறையில் மரணம் அடைந்துள்ளனர். அவர்களின் மர்ம மரணத்திற்கு காரணம் அவர்களின் கண்டுபிடிப்புகளே என்பது மட்டும் புலனாகிறது . அவர்களின் மரணத்திற்கு காரணமானவர்கள் யார் என்று இதுவரை தெரியவில்லை .

**ஜி இச் சி மார்கோனி**
1980களில் மிகவும் நம்பகத்தன்மை வாய்ந்த **STRATEGIC DEFENCIVE INTIATIVE** எனும் பாதுகாப்பு முயற்சியை ரோனல்ட் ரீகன் அறிமுகம் செய்தார். இதன் மூலம் விண்வெளியிலிருந்து வரும் ஏவுகணைகளை லேசர் கொண்டு தாக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. 1982 முதல் 1990 வரை ஜி இச் சி மார்கோனி தலைமையில் 25 பிரிட்டன் ஆய்வாளர்கள் பணியாற்றினர். இவர்கள் அனைவரும் மர்மமான முறையில் இறந்து விட்டனர். சிலர் இவர்கள் சோவியத் உளவாளிகளால் கொல்லப்பட்டிருக்கலாம் எனவும் சிலர் அரசாங்கமே இவர்களைக் கொலை செய்திருக்கலாம் எனவும் கூறுகின்றனர்.

டேவிட் கெல்லி
2003 ஆம் ஆண்டு உயிரியல் போர்முறை வல்லுநர் டேவிட் கெல்லி இராக்கில் பிரிட்டன் அரசாங்கம் பயன்படுத்திய ஆயுதங்கள் குறித்து வழங்கிய பொய் தகவல்களை ரகசியமாக அம்பலப்படுத்தினார். இந்தத் தகவல் பிரதமர் டோனிப்ளேருக்கு தெரிய வந்ததும் இது குறித்து ஒரு குழு அமைத்து விசாரணை மேற்கொள்ள உத்தரவிடப்பட்டது. உத்தரவு பிறப்பிக்கப்பட்ட இரண்டாவது நாள் கெல்லி தனது வீட்டில் இறந்து கிடந்தார். காவல்துறை இதனைத் தற்கொலை என்று கூறியது.
டான் வைலே
2001 ஆம் ஆண்டில் அணு ஆயுத வல்லுநராகத் திகழ்ந்த டான் வைலேவின் கார் மிசிசிபி ஆற்றின் பாலம் ஒன்றில் ஆன் செய்யப்பட நிலையில் நிறுத்தப்பட்டிருந்தது. அப்போது அந்த்ராக்ஸ் தாக்குதல் பரவி வந்த நேரம். சில நாட்கள் கழித்து இவர் மற்றும் இன்னொரு ஆராய்ச்சியாளரான விளாடிமிர் சைனிக் ஆகியோரின் உடல் ஆற்றிலிருந்து கண்டெடுக்கப்பட்டது.
ரோட்னி மார்க்ஸ்
ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த வானவியல் நிபுணர் ரோட்னி மார்க்ஸ் சவுத் போல் ஆய்வு மையத்தில் மர்மமான முறையில் இறந்து கிடந்தார். பின்னர் மெதனால் விஷம் மூலம் இறந்ததாக அறிவிக்கப்பட்டது.
போலார் ஆய்வாளர்கள்
2013 ஆம் ஆண்டு உலா வெப்பமயமாதலின் தாக்கம் குறித்த ஆய்வுகள் செய்து வந்த மூன்று ஆய்வாளர்கள் மர்மமான முறையில் இறந்து கிடந்தனர். இவர்கள் அமெரிக்க அரசாங்கத்தாலோ அல்லது எண்ணெய் நிறுவன அதிபர்களாலோ கொல்லப்பட்டிருக்கலாம் எனக் கூறப்படுகிறது.
இன்று வரை இவர்களின் மரணங்கள் குறித்த மர்ம முடிச்சுகள் அவிழ்க்கப் படாமல்தான் உள்ளன.
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 04

(யார் அந்த மர்ம பெண் ?)



செல்லும் இடமெல்லாம் கைகுலுக்கல்கள், ஆரவாரம் என மக்கள் மத்தியில் கென்னடிக்குப் பெரும் வரவேற்பு. 1963-ம் ஆண்டு நவம்பர் 22-ம் தேதி அமெரிக்க டெக்சாஸ் மாகாணத்தின் `டாலாஸ்' என்ற பகுதியில் காரில் மெதுவாகச் சென்றபடியே மக்களைப் பார்வையிட்டு கொண்டிருக்கிறார் கென்னடி.
காரின் பின்புறம் தன் மனைவி ஜாக்குலின் உடன் அமர்ந்திருந்த கென்னடியின் மீது திடீரென்று மூன்று குண்டுகள் பாய்கின்றன. தலையிலும் கழுத்திலும் பலத்த காயமடைந்த கென்னடி, மனைவியின் மீது சுருண்டு விழுகிறார். அந்த இடமே பரபரப்புக்குள்ளாகிறது. அருகில் உள்ள மருத்துவமனையில் கென்னடிக்குத் தீவிர சிகிச்சை அளிக்கப்படுகிறது.
ஆனால், அடுத்த அரைமணி நேரத்தில் கென்னடியின் உயிர் பிரிந்தது. மொத்த அமெரிக்காவும் கதறி அழுதது.

லிங்கனைப் போல் கறுப்பின மக்கள் மீது கரிசனப்பட்டார். தனிப்பட்ட வாழ்வில் பெண்கள் சார்ந்து பல சர்ச்சைகள் இருந்தாலும், (அட , அதை விட்டுத் தள்ளுங்க ) கென்னடியின் பொது
வாழ்வு அவரை ஒரு நாயகனாகக் காட்டியது !
அவர் சுட்டுக் கொல்லப்பட்ட போது பதிவான பல்வேறு புகைப்படங்கள் அனைத்திலுமே ஒரு குறிப்பிட்ட சிரித்த முகத்தோடு பெண்ணின் உருவம் அதிக முறை பதிவாகி இருந்தது !
யார் அந்தப் பெண் ? எதற்காக இங்கு வந்தார் ? இதுவரை தெரியவில்லை .
கென்னடியை கொல்ல உதவிய ரஷ்ய உளவாளியாக இருக்கலாம் , ஆனால் அப்பெண்ணின் முக சாயலில் ரஷ்ய இல்லை !
அங்கிருந்த பலரது கேமிராக்களிலும் விதவிதமான கோணத்தில் அந்த பெண்ணின் உருவம் அதே சிரித்த முகத்தோடு .!... மேலும் அப்பெண் அப்பகுதியை விட்டு போன சில நொடிகளில் கென்னடி சுட்டுக் கொல்லப்பட்டிருக்கின்றார் .
என்ன நடந்தது?

கென்னடி சுடப்பட்ட அடுத்த 70-வது நிமிடத்தில் லீ ஹார்வி ஆஸ்வல்ட் என்ற முன்னாள் கடற்படை வீரர் கைது செய்யப்பட்டார். இரண்டு நாள் சிறையில் இருந்த ஆஸ்வல்டு, நீதிமன்ற விசாரணைக்காக நவம்பர் 24-ம் தேதி வெளியே அழைத்துவரப்பட்டார். அந்தப் புகைபடத்திலும் அந்தப் பெண் அதே சிரிப்போடு !
சிறையில் பெரும் கூட்டத்துக்கு நடுவே நின்றுகொண்டிருந்த `ஜாக் ரூபி' என்பவர் சுட்டதில், ஆஸ்வல்ட் இறந்தார். உணவு விடுதி ஒன்றின் உரிமையாளரான ஜாக் ரூபி ஒரு மன நோயாளி என்று கூறப்பட்டது.
1967-ம் ஆண்டு அவர் சிறையிலேயே மரணமடைந்தார். கென்னடியை ஆஸ்வல்டு எதற்காகச் சுட்டார் ? அவரின் பின்னணி என்ன ? அவரைத் தூண்டியது யார் ? ஆஸ்வல்டை சுட்ட ரூபி யார் ? ஆஸ்வல்டுக்கும் ரூபிக்கும் என்ன தொடர்பு ? ரூபி உண்மையிலேயே மனநோயாளியா ? சிரிக்கும் அந்தப் பெண்தான் யார் ? எனத் தொடர் கேள்விகளை உலகம் எழுப்பியது.

வழக்கை விசாரிக்க அமைக்கப்பட்ட `வாரன் கமிஷன்' இதுவரை எந்தத் துல்லியமான முடிவையும் வெளியிடவில்லை.

மாஃபியா கும்பல்களில் தலையீடு, பிடல் காஸ்ட்ரோவின் சதி, கம்யூனிஸ்ட்களின் வஞ்சகம், அமெரிக்க உளவுத்துறை சி.ஐ.ஏ வின் வெறுப்பு என்பது வரை பல கோணங்களில் சந்தேகங்களையும், விவாதங்களையும் எழுப்பினார்கள். கென்னடியின் கொலையில் இலுமினாட்டிகளின் சதி உள்ளது என்ற பேச்சும் உள்ளது. இதுவரை பல ஆயிரக்கணக்கான ரகசிய ஆவணங்களை அமெரிக்க அரசு வெளியிட்டுள்ளது . அந்த சிரித்த பெண் புகைப்படம் உட்பட !

சமீபத்தில் கூட அமெரிக்க அதிபர் டொனால்டு ட்ரம்பின் உத்தரவின் பேரில் பல புதிய ஆவணங்கள் வெளியிடப்பட்டன. ஆனால், அதுபற்றிக் கருத்து தெரிவித்த வாரன் கமிஷன், படுகொலை குறித்த முழுமையான தகவல்கள் இல்லை என அதை ஏற்க மறுத்தனர். `வெளியுறவு நிர்வாகத்தின் காரணமாகவும், தேசத்தின் பாதுகாப்பு கருதியும், கொலை குறித்த அனைத்துத் தகவல்களையும் வெளியிட முடியாது என்ற நிர்வாகத் துறைகளின் கோரிக்கையை மீற முடியாது' என்றார் ட்ரம்ப்.
இது சந்தேகங்கள் மேலும் தொடரவே வழிவகை செய்தது.
கென்னடி இறந்துவிட்டார் என்பதைத் தவிர, அவர் இறப்பு சார்ந்த அனைத்தும் இன்று வரை மர்மமாகவே உள்ளது.
..அந்த சிரித்த பெண் யார்?
இதுவரை மர்மம் தொடர்கிறது .

## வித்தியாசமான மரணங்கள் 05

(ஹிட்லரின் கடைசி நிமிடங்கள்...



71 ஆண்டுக்குப் பின் முதன்முறையாக ஹிட்லரின் நர்ஸ் பேட்டி)

கடந்த 71 ஆண்டுகளுக்கு முன்பு, இரண்டாம் உலகப் போர் முடியும் தருணத்தில், தன்னைத்தானே சுட்டு (1945,ஏப்.30). ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டாதாக செய்தி வெளியிடப்பட்டது. நம்புங்கள் !

ஹிட்லரின் இறப்புக்கு சில நிமிடங்களுக்கு முன்பு வரை, அவருடைய நர்சாக பணிபுரிந்த எர்னா பிளஜல் (93), ஜெர்மனியில் உள்ள பெர்லினில் வாழ்ந்து வருகிறார். இத்தனை ஆண்டு காலம் எதுவும் பேசாமல் மவுனமாக இருந்த அவர் முதல் முறையாக பேட்டியளித்தார். உலக வரலாற்றிலிருந்து அழிக்க முடியாத ஹிட்லரின் முக்கிய கடைசி நிமிடங்களை இங்கு அசை போடுகிறார்...

"இரண்டாம் உலகப் போர் முடியும் நேரத்தில், நீங்கள் ஹிட்லரின் பதுங்கு குழியில் இருந்தீர்களா? "
" ஆம். 1945ல் போர் முடியும் போது, நான் பதுங்கு குழியில்தான் இருந்தேன். பெர்லின் பல்கலைக்கழக கிளினிக்கில் நர்சாக பணிபுரிந்து வந்தேன். அங்கிருந்து ஹிட்லர் பதுங்கியிருந்த ரகசிய இடத்துக்கு கிளினிக் மாற்றப்பட்டது. எல்லாம் முடியும் வரை அங்கேயேதான் வாழ்ந்தேன்."
" உங்களுக்கு அங்கு எப்படி வேலை கிடைத்தது? "

" ஹிட்லரின் ரகசிய இடத்தில் வேலை இருப்பதாக எங்கள் நர்ஸ் தலைமை சகோதரி கூறினார். உங்களுக்கு விருப்பமா என்றும் கேட்டார். நானும் ஒப்புக்கொண்டேன். அதன்படி உத்தரவும் வந்தது. நான் அங்கு சென்று, ஹிட்லரின் மறைவிடத்தைப் பார்த்த போது, அது பதுங்கு குழி போல் அல்லாமல் தரைக்கடியில், கட்டடங்களுடன் பெரியதாகவும், மிகவும் அழகாகவும் இருந்தது.எனக்கு அங்கு தனி இடம் ஒதுக்கப்பட்டது. ரஷ்யப் படைகள் பெர்லினை நெருங்கிய போது, நாங்கள் அனைவரும் சிறிய இடத்துக்குள் பங்கு போட வேண்டியிருந்தது. எனக்கும் இன்னொரு நர்சுக்கும் ஓர் அறை ஒதுக்கப்பட்டது. சின்னதாக ! "
" நாஜி கொள்கைகளின் பிரச்சார பீரங்கியான "கோயபல்சின் " மனைவி " "மாக்டாவை " நீங்கள் பதுங்கு குழியில் சந்தித்திருக்கிறீர்கள். அவரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? "
" மாக்டா தனது முதல் கணவரை பிரிந்து பின்னர் கோயபல்சை திருமணம் செய்து கொண்டார். ஆனால் சூழ்நிலை காரணமாக அவரது இரண்டாவது திருமணமும் மகிழ்ச்சிகரமாக இல்லை. கோயபல்சைப் பற்றி பலப் பெண்கள் பற்றி கிசுகிசுக்கள். எனக்கு பெரிதாக ஒன்றும் தெரியாது. ஹிட்லர் தற்கொலை செய்து கொண்ட பின்னர் கோயபல்சின் அழகான ஆறு குழந்தைகளை கோயபல்சின் மனைவி மாக்டா கொன்றுவிட்டார்."

"குழந்தைகளை கொல்ல வேண்டாம் என்று நீங்கள் கூறவில்லையா? "
" நாங்கள் வாழ்ந்த சூழ்நிலை வெளியில் இருந்ததைப் போல் சாதாரணமானது அல்ல. குழந்தைகளை பெர்லினுக்கு வெளியே கொண்டு சென்று விடுங்கள் என்று நான் கெஞ்சினேன். ஆனால் கோயபல்ஸ்,"குழந்தைகள் எனக்கு சொந்தமானவர்கள். அவர்களை என்ன வேண்டுமானாலும் செய்வேன்' என்று கோபத்துடன் கூறிவிட்டார். ஹிட்லர் மாதிரியே . (பழைய விஷயங்களை ஞாபகத்திற்கு கொண்டு வர யோசிக்கிறார்...) ஒரு நாள்... மாக்டா பல் மருத்துவரிடம் செல்வதாக என்னிடம் கூறினார். ஆகவே அன்றிரவு குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்றும் கூறியிருந்தார் "

" பதுங்கு குழியில் ஒன்றின் மீது ஒன்றாக அமைந்திருந்த இரு படுக்கைகளில் குழந்தைகள் படுத்திருந்தார்கள். அவர்கள் படுக்கை அருகே மெல்லிய கயிறு இருக்கும். ஏதாவது தேவை என்றால் அதை இழுத்தாலே போதும். அவர்கள் பார்க்கவே மிகவும் மிக அழகாக இருந்தார்கள். அவர்களை வாழவிட்டிருக்க வேண்டும். (குழந்தைகளுக்கு சயனைட் மிட்டாய் கொடுத்து கொன்றுவிட்டு கோயபல்ஸ் தம்பதிகள் 1945, மே 1ல் தாங்களும் தற்கொலை செய்து கொண்டனர்.) "
" நாஜி கொள்கைகளின் பிரச்சாரத் தலைவர் கோயபல்ஸ் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? "
நான் அவரை வெறுக்கிறேன். யாருமே அவரை விரும்ப மாட்டார்கள் அவரது மனைவி உட்பட . அவரை சுற்றி உறவினர் சிலர் இருந்து கொண்டே இருப்பார்கள். பதவிக்காகத்தான் அவர் வாலைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அழகிய இளம் பெண்களும் அவரிடம் நிறையப் பேர் இருந்தார்கள். அந்த பெண்களை யார் யாரெல்லாம் உபயோகிப்பார்கள் என்பது எனக்குத் தெரியாது .எங்களை விட அந்த பெண்களுக்கு அதிக சலுகைகள் இருந்தன !

" காதலி ஈவா பிரவுனை ஹிட்லர் மணம் முடிக்க சம்மதம் தெரிவித்தவுடனே, எல்லாம் முடியப் போகிறது என்பதை உணர்ந்ததாக, போர் முடிந்தவுடன் அமெரிக்க விசாரணை அதிகாரிகளிடம் தெரிவித்திருந்தீர்களே? "
" ஈவாவுக்கு பெரிய முக்கியத்துவம் ஹிட்லரிடம் இல்லை. அவரிடம் இருந்து யாரும் பெரிதாக எதிர்பார்க்கவில்லை. அவர் உண்மையிலேயே ஹிட்லரின் மனைவியே அல்ல. "

" கடைசி நேரத்தில் ஈவா கர்ப்பமாக இருந்ததாகவும், ஆனால் அக்குழந்தைக்கு, ஹிட்லர் தந்தை இல்லை என்று கூறப்பட்டதே? "
" அது உண்மையாக இருக்கலாம் எனக்கு இது பற்றித் தெரியாது. பதுங்கு குழியில் ஹிட்லர் தங்கி இருந்த அறைக்கு அருகில் உள்ள அறையில் தான் ஈவா இருந்தார். அவ்வளவுதான் எனக்குத் தெரியும் . அவரைப் பற்றி பேச பெரிதாக ஒன்றும் இல்லை."

" நீங்கள் ஹிட்லரை முதன் முதலில் எப்போது சந்தித்தீர்கள்? அந்த பதுங்கு குழியில் 1944 முதல் அவர் இருந்திருக்கிறார். அவரிடம் உங்களுக்கு பிடித்தது என்ன? "
" ஹிட்லர் இங்கு இருக்கிறார் என்று என்னிடம் சொன்னார்கள். என்னை பெரிதும் அது பாதிக்கவில்லை. ஆனால் அதன் பிறகு அவர் வெளியேறிவிட்டார். மீண்டும் அவர் திரும்பி வந்தவுடன் அவர் இந்த கட்டடத்துக்குள்தான் இருக்கிறார் என்று சொன்னார்கள். அதைப் பற்றியே ஒவ்வொருவரும் பேசிக் கொண்டார்கள். ஹிட்லர் அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் தாமாக வந்து சிரித்துக் கொண்டே கை குலுக்கினார். "
" பதுங்கு குழியில் கடைசி நிமிடங்களைப் பற்றி சொல்ல முடியுமா?"
" ஹிட்லர் திடீரென உள்ளே போய்விட்டார். எல்லோரும் பரபரப்பாக இருந்தார்கள். அது பற்றியே அங்கு பேச்சு இருந்தது. சிலர் தற்கொலை செய்து கொண்டார் என்றார்கள். சிலர் உயிரோடு இருக்கிறார் என்றார்கள். அவர் தப்பித்து போய்விட்டார் என்றார்கள் . அப்போ சிரித்து கை குலுக்கிய ஹிட்லர் எங்கே ? "
"அவர் ஹிட்லர் மாதிரி ஆனால் ஹிட்லர் அல்ல என்று சொல்லப்பட்டது அவரது இறந்த உடலை இதுவரை யாருமே பார்த்ததில்லை "

" தற்கொலை செய்வதற்கு முன்பாக, உங்களிடம் 1945 ஏப். 29ல் மாலையில் விடை பெற்றுக் கொண்டாராமே? "
"அன்று அவருடைய அறையிலிருந்து வெளியில் வந்த ஹிட்லர், எல்லோரிடமும் கைகுலுக்கினார். ஆறுதலாக நான்கு வார்த்தைகள் பேசினார். அதன் பிறகு அந்த சத்தத்தை (தன்னைத் தானே சுட்டுக் கொண்டது) சிலர் மட்டும் கேட்டதாக சொன்னார்கள். அது உண்மை என்று எனக்குத் தெரியாது . அதன்பிறகு அவரைப் பார்க்கவே முடியவில்லை. அங்கு பணிபுரிந்தவர்கள் இருக்க வேண்டுமா… போக வேண்டுமா.. என்று குழப்பம். எதும் உறுதியாகத் தெரியவில்லை. ஹிட்லர் இறந்துவிட்டார் என்று எனக்கு தெரிவிக்கப்பட்டது . நம்பினோம் . அதன் பின்னர், பேராசிரியர் வெர்னர் ஹேஸ்சே (ஹிட்லரின் டாக்டர்) உட்பட டாக்டர்கள் திடீரென மாயமாகிவிட்டார்கள். நான் ஹிட்லரின் உடலை கடைசி வரைப் பார்க்கவில்லை. அது தோட்டப்பகுதிக்கு எடுத்து செல்லபட்டதாக கூறப்பட்டது "

" அடுத்து என்ன நடந்தது? "
" உலகம் முழுவதும் ஹிட்லர் இறந்துவிட்டார் என்ற செய்தி பரவியது. அதன் பிறகு எல்லாம் கட்டவிழ்ந்த நிலைதான்."
" பதுங்கு குழியிலிருந்து உயிரோடு திரும்பிவிடுவோம் என்று எப்போதாவது நினைத்தீர்களா? "
" நாங்கள் அதைப் பற்றி கவலைப்படவில்லை. பதுங்கு குழியிலிருந்து ஒவ்வொரு வீரரும் கழன்று கொண்டார்கள். ஒரு சமயம் திடீரென எல்லோரும் காணாமல் போய் விட்டார்கள். ரஷ்ய படைகள் வந்தால் கூட தப்பிக்கும் நிலையில்தான் நாங்கள் இருந்தோம்."
" ஹிட்லர் தற்கொலைக்குப் பின்னர் எந்த நம்பிக்கையில் நீங்கள் அங்கே இருந்தீர்கள்? "
" ரஷ்யப் படைகள் வந்து கொண்டிருப்பது
எங்களுக்கு தெரியும். என்னை தலைமை நர்ஸ் சகோதரி போனில் அழைத்தார். ரஷ்யப் படைகள் வந்து கொண்டிருப்பதாக தெரிவித்தார். அதேபோல் படையினரும் வந்துவிட்டார்கள். நுழைவாயிலில் இருந்தவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்திவிட்டு உள்ளே நுழைந்தார்கள். அங்கிருந்த ஜெர்மானியர்களை வெளியேற்றினார்கள். நர்ஸ் என்பதால் எங்களை ஒன்றும் செய்யவில்லை. எங்களை மிகவும் நன்றாக நடத்தினார்கள். நாங்கள் ஆறேழு பேர்தான் எஞ்சியிருந்தோம். ரஷ்யர்கள் என்னை மிகவும் மதித்தார்கள். நான் அடுத்த பத்து நாட்கள் வரை அங்கே இருந்தேன்."
" போர் முடிந்தவுடன் அமெரிக்க உளவுத் துறையினர் உங்களிடம் பேசினார்களே?"
" ஆம். என்னிடம் விஷயங்களை கறக்கப் பார்த்தார்கள். எனக்கு விருந்தளித்தார் கள். தொடர்ந்து
**அருமையான**
சாப்பாடு தந்து கொண்டிருந்தார்கள். இருமுறை அவர்களுடன் சேர்ந்து சாப்பிட்டிருக்கிறேன். "
" கடந்த 60 ஆண்டுகளாக ஏன் நீங்கள் வாய் திறக்கவில்லை? "
" 1945க்குப் பின்னர் என்னுடன் பணிபுரிந்தவர்களும் அமைதியாகவே இருந்தார்கள். ஏதும் பேசினால் சர்ச்சை ஏதும் ஏற்படுமோ என்றும் அவர்கள் பயந்தார்கள். நான் என் குடும்பத்தாரிடம் கூட ஏதும் பேசவில்லை. நான் பதுங்கு குழிக்குள் இருந்த போது, என் பெற்றோர்கள் இறந்துவிட்டார்களா உயிரோடு

இருக்கிறார்களா என்று கூட தெரியவில்லை. ஆனால் போரில் அவர்கள் இறக்கவில்லை என்பது எனக்கு மிகவும் சந்தோஷத்தை அளித்தது."

"ஹிட்லரின் பதுங்கு குழியைப் பற்றி சமீபத்தில் வெளியான "டவுன்பால்' எனும் படத்தை பார்த்தீர்கள். அதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? "

" நன்றாக இருந்தது. அவர்களுக்கு கொஞ்சத் தகவல்கள் மட்டுமே கிடைத்திருக்கிறது. இன்னும் சொல்லப்பட வேண்டிய விஷயங்கள் நிறைய பதுங்கு குழியில் இருக்கிறது ! சிற்சில தவறுகள் செய்திருந்தார்கள். ஆனால் பொதுவாக அது நன்றாகத்தான் இருந்தது. "

" நீங்கள் பதுங்கு குழியில் இருந்ததற்காக வருத்தப்படுகிறீர்களா? அல்லது அதை நினைத்து பெருமைப் படுகிறீர்களா? "

" இதற்கு பதில் அளிப்பது கஷ்டம்தான். ஒரு சமூகத்தைப் (நாஜிகள்) பற்றி சரியா தவறா என்று கூற முடியாது. ஆனால் பொதுவாக அது தவறு என்றுதான் தெரிகிறது. எனினும் எல்லோரும் தங்களுக்கு என ஒரு கருத்து வைத்திருக்கிறார்கள். அதை வெளியே சொல்ல முடியாது .

மீண்டும் மௌனமாகி விட்டார் நர்சாக பணிபுரிந்த எர்னா பிளஜல் (93),

ர.ரா

அடுத்து ஹிட்லரின் இறுதி நாட்கள்

வித்தியாசமான மரணங்கள் 06

(ஹிட்லரின் மரணத்தில் இருந்த மர்மம்)

உலக வரலாற்றில் தன் பெயரை அழிக்க முடியாத கறையுடன், ஆழமாக 'அடால்ஃப் ஹிட்லர்' (Adolf Hitler) என்று எழுதியவர்

1945 இல் உலக வரலாற்றையே தலை கீழாகத் திருப்பிப் போட்டவர் இந்த அடாலஃப் ஹிட்லர் (Adolf Hitler) இரண்டாம் உலக யுத்தத்தின் முடிவில் ஹிட்லரும், அவனது மனைவியான ஏஃபா பிரௌனும் தற்கொலை செய்து இறந்தது மட்டுமல்லாமல், அவர்கள் உடல்கள் எதிரிகளின் கைகளில் கிடைக்கக் கூடாது என்பதால் பெட்ரோல் ஊற்றிக் கொளுத்தப்பட்டார்கள் என்பதுதான் நாம் இதுவரை நம்பிக்கொண்டிருக்கும் வரலாறு. ஹிட்லரின் இறப்பு இப்படித்தான் நடந்தது என்று ஒரு வடிவம் நம்மால் நம்பப்பட்டுக் கொண்டிருக்கையில், ஹிட்லர் இறக்கவில்லை, தன் மனைவியுடன் தப்பிச் சென்று விட்டார் என்னும்செய்தி 66 வருடங்களுக்குப் பின்னர் கிடைத்திருக்கிறது.

"என்ன ஹிட்லர் சாகவில்லையா' என வாய் பிளந்தபடி கேள்வி கேட்பதை உங்களால் தவிர்க்கவே முடியாது. . நீங்கள் இதை மறுக்கும் பட்சத்தில், இதை ஏன் நம்ப வேண்டும் என்பதற்குரிய தெளிவான விளக்கத்தை கொடுக்க நாம் 30.04.1945 அன்று ஜெர்மனியின் தலைநகரான பெர்லின் (Berlin) நகருக்குச் செல்வோமா...

இரண்டாம் உலகப் போரின் உச்சத்தில் ஜெர்மனியின் ஆக்ரோசமான சக்தியைத் தனித்தனியாக எதிர்கொள்ள முடியாத நாடுகள், 'நேச நாடுகள்' என்னும் பெயரில் ஒன்று சேர்ந்து ஜெர்மனியைத் தாக்கின. அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் என்பன ஒரு பக்கத்தில் அணி சேர்ந்து தாக்க மறுபக்கத்தில் சோவியத் ரஷ்யா தாக்கத் தொடங்கியது. இந்த நான்கு நாடுகளின் ஒன்று சேர்ந்த தாக்குதலுக்குத் தாக்குப் பிடிக்க

முடியாமல் 30.04.1945 இல் ஜெர்மனி தனது தோல்வியைத் தழுவிக் கொண்டது. இறுதிக் கட்டப் போரின் போது ஹிட்லர் பெர்லின் நகரில் அமைந்த அரசுத் தலைவரின் கட்டடத் துக்கு கீழே இருந்த ஒரு நிலக்கீழ் சுரங்கத்திலேயே இருந்தார் . முந்தைய பதிவில் சொல்லப்பட்டிருக்கிறது

எதிரி நாடுகளின் குறிப்பாக ரஷ்யாவின் விமான குண்டுத் தாக்குதலில் இருந்து தப்பிக் கொள்ள அங்கேயே பதுங்கி
இருக்க வேண்டிய சூழ்நிலை இருந்தது. அதுவே ஹிட்லரின் இறப்புக்கான கடைசி இடமாகவும் மாறியது என்றும் சொல்லப்பட்டது.

ஹிட்லரின் இறுதி நாளில் என்ன நடந்தது என்று வெளி உலகிற்கே கொண்டு வந்தவர், 95 வயதாகியும் இன்றும் உயிருடன் இருக்கும் ஹிட்லரின் மெய்ப்பாதுகாப்பாளராக இருந்த 'ரோஹுஸ் மிஷ்' (Rochus Misch) என்பவர்தான். இந்த ரோஹுஸ் மிஷ் பிறந்தது 29.07.1917 ஆம் ஆண்டு. தனது 28 வது வயதில் அவர் ஹிட்லருடன் கடைசியாக இருந்திருக்கிறார். அவர் ஹிட்லரின் இறுதி நாள் பற்றி என்ன சொல்கிறார் என்பதைப் பாருங்கள்.....!

"ஏப்ரல் 30" தேதி பங்கரில் உள்ள அனைவரையும் ஹிட்லர் அழைத்து எல்லாம் முடிந்து விட்டது. அவரவர் விரும்பிய இடங்களுக்குச் செல்லலாம். தேவையானவர்கள் மட்டும் இங்கு இருந்து கொள்ளட்டும். இப்படி அவர் சொன்னதால் அங்கு இருக்க வேண்டியவர்களில் நானும் ஒருவனானேன். ஹிட்லரும், ஏஃபாவும் தற் கொலை செய்வது என்னும் முடிவும் அப்போது எடுக்கப்பட்டது.

'முதலில் சயனைட் மாத்திரைகளை விழுங்கி விட்டு, துப்பாக்கியால் சுட்டுக் கொள்வது நல்லது' இதைக் கேட்ட பின்னர் ஹிட்லரும், ஏஃபாவும் தங்கள் அறையை நோக்கிச் சென்று கதவைச் சாத்திக் கொண்டார்கள். நெடுநேரம் எந்த அசைவுகளும் இல்லை. அப்புறம் ஹிட்லரின் அறையைத் திறப்பது என்ற முடிவுக்கு வந்தோம்.
திறந்த போது நான் மெல்ல எட்டிப் பார்த்தேன். நான் கண்ட காட்சி, ஹிட்லர் பெரிய சோபாவில் இரத்தக் கறையுடன் இறந்து கிடக்க, அருகில் இருந்த சிறிய சோபாவில் ஏஃபா பிரௌன் தலை சாய்ந்து விழுந்து கிடந்தார். பின்னர் சிலர் அவர்கள் இருவரையும் தூக்கிச் சென்று பங்கருக்கு வெளியே இருந்த இடத்தில் வைத்து பெட்ரோல் ஊற்றிக் கொளுத்தினார்கள்".

ஹிட்லரின் இறப்பைப் பற்றி முழுமையானதொரு அறிக்கையக் கொடுத்த ஒரே நபரும், ஹிட்லருடன் இருந்து தப்பி ஒரே நபருமாக இருந்தவர் இந்த ரோஹுஸ் மிஷ்தான். ஹிட்லர் இறப்பதற்கு இரண்டு நாட்களின் முன்னர்தான் ஹிட்லரின் நண்பரும், இத்தாலியின் தலைவருமான முஸோலினியும் (Dr. Werner Hasse) அவரது மனைவியும் கொல்லப்பட்டு,

ஒரு பெட்ரோல் நிலையத்தில் அவர்களது உடல்கள் தலை கீழாகத் தொங்க விடப்பட்டு அவமரியாதை செய்யப்பட்டிருந்ததை ஹிட்லர் அறிந்திருந்தார். அதனால்தான் எதிரிகளிடம் தங்களின் உடல்கள் அகப்படக் கூடாது என்று ஹிட்லர் முடிவு செய்து, அதனால் எரிக்கப்பட்டது என்றும் ஒரு கதை சொல்லப்பட்டது.
மே 1 ஆம் தேதி ஜெர்மனிய வானொலி, 'ஹிட்லர் இறந்துவிட்டார்' என்ற செய்தியை தொடர்ந்து அறிவித்தது. அதற்கு அடுத்த தினம் அதாவது 02.05.1945 இல் ஹிட்லர் இருந்ததாகச் சொன்ன பங்கரை ரஷ்யா கைப்பற்றியது.
அத்தோடு ஹிட்லர் சம்பந்தமாகத்
தங்களுக்கு எந்த ஆதாரமும்
கிடைக்கவில்லை என்று அறிக்கையும்
கொடுத்தது. ஆனால் சில மணி நேரங்களில் அவர்களுக்கு ஹிட்லரின் முழுமையான உடல் கிடைத்ததாகச் சொல்லி, அந்த உடலுடன் நின்று படங்களை எடுத்து ரஷ்யா வெளியிட்டது.
ஆனால் அடுத்த நாட்களிலேயே அது ஹிட்லரின் உடலல்ல என்றும், ஹிட்லர் தனக்னெ வைத்திருந்த 'டூப்' என்றும் அறிவித்தது ரஷ்யா. அந்த ஹிட்லரின் டூப்பாக இருந்த நபர், எதிரிகளின் இராணுவத்தை, ஹிட்லர் இறந்துவிட்டார் என்று நம்ப வைப்பதற்காக ஹிட்லரின், பாதுகாப்புப் படையினராலேயே கொல்லப்பட்டு அங்கு போடப்பட்டிருந்தார்.

ஹிட்லர் தனக்கென ஒரு டூப்பை எதற்காக வைத்திருந்தார் என்பதற்கும் ஒரு காரணம் இருந்தது. ஹிட்லரைக் கொல்வதற்கு ஜெர்மனியிலேயே சிலரால் ஒரு சதித்திட்டம் தீட்டப்பட்டது. அந்த

சதித்திட்டத்தில் ஜூலை மாதம் 1944 இல் ஹிட்லர் சாலையில் ஊர்வலமாக வரும்போது கொல்லப்பட வேண்டும் என முடிவாகியது. அதற்கு ' 'ஆபரேசன் வால்கிரீ ' என்று பெயரும் இடப்பட்டிருந்தது.
ஆனால் அது படுதோல்வியில் முடிவடைந்தது. அந்தச் சதியில் ஈடுபட்டார்கள் என்று 300க்கும் அதிகமானவர்கள் சரமாரியாகக் கொல்லப்பட்டனர். அன்றிலிருந்து ஹிட்லர் மக்கள் அதிகம் நடமாடும் இடங்களில் தனக்கென ஒரு டூப்பை அனுப்பி வைப்பார். அப்படி மொத்தமாக ஹிட்லருக்கு ஆறு டூப்புகள் இருந்ததாகச் சொல்வார்கள். அதில் ஒருவன்தான் இறந்து காணப்பட்டான்.

இதன் பின்னர் ஹிட்லரும் ஏஃபாவும் தற்கொலை செய்து அவர்கள் இருவரது உடல்களும் எரிந்த நிலையில் கண்டெடுக்கப்பட்டது என்று ரஷ்யாவினால் அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது. உலகமும் அதை ஏற்று நிம்மதி பெருமூச்சு விட்டது. ஹிட்லரின் உடல் கிடைத்ததோ இல்லையோ, அவன் இறந்தது என்று செய்தியே நமக்குப் போதும் என்று மகிழ்ச்சியுடன் இருந்தது.
ரஷ்யா விட்ட அறிக்கைகள் இத்துடன்முடிந்துவிடவில்லை.
இறுதியாக 1993 இல் ஹிட்லரின் இறப்புடன் சம்பந்தமான கடைசி அறிக்கையையும் ரஷ்யா வெளியிட்டது.
*" Chancellor Adolf Hitler and Reichsarbeitsfuehrer Generalmajor Konstantin Hierl stand before 47,000 members of the German Labor Service at Reichsparteitag (Reich Party Day) ceremonies in Nuremberg.*
*(September 10-16, 1935) "*

*அந்த* அறிக்கை இதுதான். 'ஹிட்லர் இறந்தபோது, எந்த சோபாவில் இருந்து கொண்டு தன்னைச் சுட்டுத் தற்கொலை செய்தாரோ, அந்த இரத்தம் தோய்ந்த சோபாவையும் ஹிட்லர் இறந்ததாகச் சொல்லப்பட்ட இடத்தில் எரிந்த நிலையில் துப்பாக்கிக் குண்டு ஒன்று துளைத்த அடையாளத்துடன் கூடிய அவரின் மண்டையோட்டையும் மட்டும் எடுத்துப் பாதுகாத்து வைத்திருக்கிறோம்' என்று இருந்தது.

ஹிட்லரின் மரணம் சம்பந்தமாக உலகமே நம்பியிருக்கும் சம்பவங்கள் இவைதான். இவையெல்லாவற்றிலும் இறுதியாக எஞ்சும் முடிவுகள் என்னவோ ஹிட்லரும் ஏஃபாவும் இறந்து விட்டார்கள் என்பதுதான். ஆனால் இவையெல்லாமே பொய் யென்று நிரூபணமாகி, ஹிட்லரும் ஏஃபாவும் உயிருடன் தப்பினார்கள் என்னும் செய்தி இப்போது நம்மை அதிர வைக்கிறது.

ஹிட்லர் இறந்து விட்டார் என்று உலகமே சொல்லிக் கொண்டிருக்க ஒருவர் மட்டும் திட்டவட்டமாக ஹிட்லர் தப்பிவிட்டார் என்று ஜூலை 1945லேயே சொன்னார். சொன்னவர் சாதாரணமானவர் என்றால் யாரும் அதைக் கவனத்தில் எடுத்திருக்கத் தேவையில்லை. ஆனால் அப்படிச் சென்னவர் மிகப் பெரியவர். அவர் வேறு யாருமல்லை. அந்தக் காலத்தில் 'இரும்பு மனிதர்' என்று அழைக்கப்பட்டவரும், சோவியத் ரஷ்யாவின் அதிபருமான ஜோசப் ஸ்டாலினேதான்.
அதுவும் முக்கிய தலைவர்களான ட்ரூமன், சர்ச்சில் ஆகியோரைச் சந்தித்த ஒரு விழாவில் பகிரங்கமாக "ஹிட்லர் சாகவில்லை. ஸ்பெயினுக்கோ, அர்ஜென்டீனாவுக்கோ நீர்மூழ்கிக் கப்பலில் தப்பிவிட்டார்" என்று கூறினார். அது மட்டுமில்லாமல், ஹிட்லரின் இறப்பு சம்பந்தமாக ரஷ்யா தயாரித்த கோப்பை 'ஆபரேசன் மித்' என்று பெயரிட்டு அதை ஆராயும்படி கட்டளையும் இட்டிருந்தார் ஸ்டாலின்.
ஹிட்லர் இறக்கவில்லை என்னும் சந்தேகத் துளி இங்கிருந்துதான் முதலில் தூவப்பட்டது.
உலகிலேயே மிகவும் பலமான உளவுப்படை என்று அழைக்கப்படுவது ரஷ்யாவின் உளவுப்படையான (Konmitet Gesudarstvennoy Bezopasnosti).அப்படி ஒரு படையையே வைத்துக் கொண்டிருக்கும் ஸ்டாலின், ஹிட்லர் இறந்ததற்கான சாட்சியங்களை எல்லாம் தன்னுடனே வைத்திருக்கும் போது, எதற்கு ஹிட்லர் தப்பிவிட்டார் என்று சொல்ல வேண்டும்? ஹிட்லர் நீர்மூழ்கிக் கப்பலில்தான் தப்பினார் என்று எப்படி அவர் அடித்துச் சொன்னார்? ஸ்டாலின் அப்போதே எதையோ அறிந்திருக்க வேண்டும். அதற்கான சாட்சியங்களை இல்லாததால் அவரால் வெளிப்படையாகச் சொல்ல முடியாமல் இருந்திருக்க வேண்டும்.
இதன் தொடர்ச்சியாக நடந்த பல சம்பவங்கள் ஹிட்லர் ஆர்ஜென்டீனாவுக்கு நீர் மூழ்கிக் கப்பலின் மூலம் தப்பிவிட்டார் என்பதைப் பலமாக உறுதி செய்தன. இறுதியில் அமெரிக்காவின் பிகியி ஹிட்லர் தப்பியது உண்மைதான் என்பதை உறுதி செய்தது. அதை அடிப்படையாக வைத்து, ஆதாரங்களுடன் 700 பக்க அறிக்கையை பிகியி வெளியிட்டது. நடந்தது இதுதான் (என்று சொல்லப்படுகிறது).

30.04.1945 அன்று ஹிட்லரும் ஏஃபாவும் இறந்தது போல இரண்டு பிணங்கள் தயார் செய்யப்பட்டுக் கொளுத்தப்பட்டன. ஆனால் ஹிட்லரும், மனைவியும் அவர்கள் மறைந்திருந்த பங்கரின் இன்னுமொரு இரகசிய வழியாக வெளியே வந்து அப்படியே நார்வே நாட்டுக்குச் சென்றிருக்கிறார்கள்.
நார்வேயில் ஹிட்லருக்காகவே காத்திருந்த நீர்மூழ்கிக் கப்பலில் அர்ஜென்டீனா நோக்கிப் பிரயாணம் செய்திருக்கிறார்கள். 2ம் உலகப் போரின் இறுதிக் கட்டங்களில் ஹிட்லரின் படையில் இருந்த, மிக

முக்கியமான, போர்க் கைதிகள் என வர்ணிக்கப்படும், பல நாஸித் (NAZI) தலைவர்கள் ஏற்கனவே ஆர்ஜென்டீனாவுக்குச் சென்றிருந்தார்கள்.

அவர்களில் மிக மிக முக்கியமானவர்களாகக் கருதப்படுபவர்கள், ஜோசப் மெங்கெலே (Josef Mengele) அடோல்ஃப் ஜக்மான்(Adolf Eichmann),, பிரான்ஸ் ஸ்டாங்கிள் (Franz Stangl) எரிக் பிரீப்கே (Erich Priebke) க்ளௌஸ் பார்பீ(Klaus Barbie) என்பவர்களாவார்கள். இவர்கள் எல்லாரும் நாஸிப் படையில் மிக உயர்ந்த பதவிகளில் இருந்தவர்கள். அர்ஜென்டீனாவில் 30000க்கும் அதிகமான நாஸிப் படையினர் தப்பியோடி வாழ்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்

.

ஜுலை 10ம் தேதி 1945 இல் அர்ஜென்டீனாவை ஸி530 என்னும் நீர்மூழ்கிக் கப்பல் அடைந்தது. அந்த நீர்மூழ்கிக் கப்பல் ஜெர்மனிக்குச் சொந்தமானது. அது பற்றிய விபரங்களை அமெரிக்கா கேட்ட போது, அதில் வெறும் கப்பல் மாலுமிகள் மட்டுமே இருந்தார்கள் எனக் கூறி, அவர்களை அமெரிக்கா விசாரிக்க அர்ஜெட்டீனா ஒத்துழைத்தது. அதில் யார் யார் வந்தார்கள் என்ற விபரமே இல்லை. வெறும் மாலுமிகள் மட்டும்தான்.

அதற்கு ஐந்து வாரங்களுக்குப் பின்னர் ஸி977 என்னும் ஜெர்மனிக்குச் சொந்தமான இன்னுமொரு நீர் மூழ்கிக் கப்பல் தெற்கு அர்ஜென்டீனாவை வந்து அடைந்தது. இதற்கும்அதே கதைதான் அமெரிக்காவுக்குச் சொல்லப்பட்டது.

ஆனால் ஹிட்லர் இறந்தார் என்று ஜெர்மனி அறிவித்த அன்றுவரை அதாவது மே மாதம் 2ம் தேதி வரை நார்வே துறைமுகத்தில்தான் ஸி977 என்ற நீர் மூழ்கிக் கப்பல் நின்று கொண்டிருந்தது. ஆனால் மே 2ம் தேதி திடீரென நார்வே துறைமுகத்தில் இருந்து மாயமாக மறைந்தது அந்த நீர்மூழ்கிக் கப்பல் அதற்கு அப்புறம் பல நாட்களாக அது காணப்படவே இல்லை. ஆனால் ஜெர்மனி தோற்றிருந்த வேளையில் அனைவரும் சரணடைந்து கொண்டிருந்த நேரமது.

மொத்தமாக 102 நாட்கள் கடலினடியிலேயே பிரயாணம் செய்த ஸி977 பின்னர் அர்ஜென்டீனாவை வந்து அடைந்தது. அதில் யார் வந்தார்கள்? சரணடையும் சாத்தியம் இருந்தும், இவ்வளவு ஆபத்தான நீண்ட நாள் கடலடிப் பிரயாணத்தை அது ஏன் மேற்கொண்டது என்ற கேள்விகளுக்கு ஆர்ஜென்டீனா எந்தப் பதிலும் கொடுக்கவில்லை. பல தலைவர்களுடனும், அளவுக்கு மிஞ்சிய பணத்துடனும், சொத்துக்களுடனும் அர்ஜெடீனாவை வந்தடைந்தார் ஹிட்லர் என்று சொல்கிறார்கள்.

அதன் பின்னர் அர்ஜென்டீனாவின் பல இடங்களிலிருந்து இரகசியமா, மிகவும் நம்பகத்தன்மை உடையவர்களிடமிருந்து, ஹிட்லரைக் கண்டதாகச் செய்திகள் பிகியிஜ வசம் வந்தடைந்தது. ஹிட்லருக்கு இரண்டு பெண்கள் பிறந்ததாகவும், அவர்கள் அங்கேயே வாழ்ந்து வருவதாகவும் தகவல்கள் கிடைத்தன. அந்த பெண்களைச் சந்தித்த பலர் சாட்சிகளாகவும் இருந்திருக்கின்றனர். ஏஃபா ஜெர்மனியில் இருந்து தப்பும்போதே கர்ப்பமாக இருந்ததாகவும் சொல்கின்றனர்.

'கிரே வோல்ஃவ்' (Gray Wolf) என்னும் புத்தகத்தை எழுதிய இங்கிலாந்தின் பிரபல பத்திரிகையாளர் ஜெரார்ட் வில்லியம்ஸ் (Gerrard Williams) Sky News க்குக் கொடுத்த பேட்டியின்படி நாம் தற்போது ஹிட்லர் இறந்ததாக நம்பும் ஆண்டுக்கு 17 ஆண்டுகள் கழித்து 1962 இல் ஆர்ஜென்டீனாவில் ஹிட்லர் இறந்தார் என்று தெரிய வருகிறது. அதாவது வயது போன நிலையில் இயற்கையாக இறந்தார் ஹிட்லர்.
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 07

(பிரிட்டிஷ் இளவரசி டயானா மரணம்




20 ஆண்டுகால மர்மத்தை உடைத்த உளவுப்பிரிவு ஏஜென்ட் ஜான் ஹோப்கின்ஸ்)

சாதாரண குடும்பத்தில் பிறந்த டயானா பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸை காதலித்து திருமணம் செய்து கொண்டார். இவர்களது திருமணம் உலகையே திரும்பி பார்க்க வைத்தது.

இங்கிலாந்து இளவரசி டயானா, தனது 36-வது வயதில் 1997-ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 31-ந்தேதி பிரான்ஸ் தலைநகர் பாரீசில் நடந்த விபத்தில் பரிதாபமாக உயிரிழந்தார். ஒட்டு மொத்த மனித குலத்தின் அன்பை ஒருசேரப் பெற்றிருந்த அவரது மரணம், உலக வரலாற்றில் ஒரு கரும்புள்ளியாக அமைந்தது.

இளவரசர் சார்லஸ்சை பிரிந்து வாழ்ந்த நிலையில் அவர் இறந்தது பல்வேறு சர்ச்சைகளை அப்போது கிளப்பியது. சார்லஸ்-டயானா தம்பதியின் மகன்களான இளவரசர்கள் வில்லியமும், ஹாரியும் தங்கள் தாயின் மரணம் குறித்து வெளிப்படையாக பேசியது இல்லை.

இப்போது இளவரசி டயானா இறந்தது குறித்து புதிய தகவல் வெளியாகி உள்ளது. அந்த தகவல்கள் உண்மைதானா என்று விசாரணை நடத்தி வருகிறோம்' என்று இங்கிலாந்து போலீசார் கூறியுள்ளனர். இதனால் பெரும் பரபரப்பு ஏற்பட்டுள்ளது.

இங்கிலாந்து இளவரசி டயானா கடந்த 1997ம் ஆண்டு தனது நண்பர் டோடி பயட்டுடன், பாரிசில் உள்ள ஓட்டலுக்கு சென்றிருந்தார். அவர்களை படம் பிடிக்க 'பாப்பராசி' என்றழைக்கப்படும் போட்டோகிராபர்கள் ஏராளமானோர் அங்கு குவிந்தனர். அவர்களின் கண்ணில் படாமல் இருக்க ஹோட்டலின் மற்றொரு வழியாக டயானா, பயட் இருவரும் சொகுசு காரில் அவசரமாக புறப்பட்டு சென்றனர். டயானாவின் டிரைவர் காரை ஓட்டி சென்றார். டயானா வெளியில் செல்வதை பார்த்துவிட்ட போட்டோகிராபர்கள் அவர்களை துரத்தினர்.

அவர்களிடம் இருந்து தப்பிக்க அதிவேகமாக சென்ற போது ஒரு பாலத்தில் கார் பயங்கரமாக மோதி விபத்தில் சிக்கியது. இதில் டயானா, பயட் ஆகியோர் இறந்தனர். இந்த விபத்து குறித்து ஸ்காட்லாந்து யார்டு போலீசார் விசாரித்து வந்தனர்.

கடந்த 2008ல் பிரிட்டிஷ் நீதிமன்றத்தில் டயானா இறப்பு குறித்து விசாரணை நடந்தது. அப்போது, டயானா தனது நண்பர் பயட்டுடன் சென்ற போது போட்டோ கிராபர்களிடம் இருந்து தப்பிக்க சாலை விதிமுறைகளை மீறி கார் வேகமாக புறப்பட்டு சென்றது. டிரைவர் போதையில் இருந்ததால் விபத்து ஏற்பட்டது என்று தெரிவிக்கப்பட்டது.

இளவரசர் சார்ல்ஸுடனான மணவாழ்வை முறித்துக் கொண்டு, டோடி ஃபயத் என்னும் எகிப்திய வணிகப் பிரமுகருடன் காதல் கொண்டிருந்த டயானாவை இங்கிலாந்து அரசக் குடும்பமே திட்டமிட்டுக் கொன்று விட்டதாக அப்போது பேசப்பட்டது.

ஆயினும், விபத்து நிகழ்ந்த நாடான ஃபிரான்ஸின் விசாரணை அறிக்கைப் படி, ஓட்டுநர் மது அருந்தியபடி வாகனத்தை அதிவேகத்தில் செலுத்தியதால் விபத்து ஏற்பட்டதாகக் கூறப்பட்டது.

இங்கிலாந்து நாட்டின் விசாரணை அறிக்கையும் பின்னர் இத்தகவலையே உறுதிப்படுத்தியது.

டயானாவை கொலை செய்தது பிரிட்டன் ராணுவத்தைச் சேர்ந்த ஒருவர் என்று வெளியான புதிய தகவல் குறித்து லண்டனின் ஸ்காரட்லாந்து யார்டு போலீசார் விசாரணையைத் தொடங்கியுள்ளனர்.

இது விபத்து அல்ல திட்டமிட்டு செய்யப்பட்ட கொலை என டயானா மரணம் 20 ஆண்டு காலமாக விளங்காத மர்மாகவே இருந்து வந்தது. தற்போது இந்த மர்மத்திற்கான பதிலை மாஜி உளவுப்பிரிவு ஏஜென்ட் ஜான் ஹோப்கின்ஸ் கூறியுள்ளார்.

' நாட்டிற்காகவும், அரச குடும்பத்திற்காகவும் நான் தான் டயானாவைக் கொன்றேன் ' என்று அவர் தெரிவித்துள்ளார். மேலும், அவர் உளவுப்பிரிவு ஏஜென்டாக பணியாற்றிய போது, பத்திரிக்கையாளர்கள், அரசியல்வாதிகள், அரசுக்கு எதிராக செயல்படும் சமூக செயற்பாட்டாளர்கள் என பலரை கொன்றுள்ளதாகவும் தெரிவித்துள்ளார்.
என்னே இவர் உளவு ஏஜெண்டா ?
மரண ஏஜெண்டா ?
டயானா கொலை செய்யப்பட்டதற்கான காரணமும், அவரை யார் கொலை செய்ய சொன்னார் என்பதையும் அவர் தெரிவித்துள்ளார். " இளவரசி டயானா சார்லஸ் உடன் வாழ்ந்து கொண்டிருந்த போதே தனது நண்பர் டோடி பயட் என்ற இஸ்லாமிய எகிப்து வணிகப் பிரமுகரை காதலிப்பதையும் , இதனால் கர்ப்பம் தரித்திருப்பதையும், சார்லஸை விவாகரத்து செய்ய முடிவு செய்திருப்பதையும் பிரிட்டிஷ் அரச குடும்பத்திற்கு தெரிய வந்தது . இது அரச குடும்பத்திற்கு பெருத்த அவமானத்தை ஏற்படுத்தியது.
மேலும் டயானா அரசு குடும்ப ரகசியங்கள் பலவற்றையும் தெரிந்து வைத்திருந்ததால் , அவரைக் கொல்ல வேண்டும் என்று பிரிட்டிஷ் அரச குடும்பத்தில் இருந்து நேரடி உத்தரவு வந்தது. இந்த உத்தரவை இளவரசர் பிலிப் பிறப்பித்தார்.
ஆனால், இது கொலை என யாருக்கும் தெரிய கூடாது என்பதையும், இது ஒரு விபத்தாகதான் இருக்க வேண்டும் எனவும் உத்தரவு பிறப்பித்தார். எனவே, இதை ஒரு விபத்து போல் சித்தரித்து திட்டமிட்டு டயானை கொல்லப்படார் என தெரிவித்துள்ளார்.
டயானாவைக் கொன்றதைக் கண்டுபிடிப்பது முடியாத காரியம், இதற்கு ஒரு சில ஆதாரங்கள் மட்டுமே உள்ளது என தெரிவித்துள்ளார். மேலும், கடைசி நேரத்திலாவது உண்மையை சொன்னால் தான் என்னுடைய உயிர் போகும் என்பதால் டயானா கொலை மர்மங்களை உடைப்பதாகவும் ஜான் ஹோப்கின்ஸ் தெரிவித்துள்ளார்.
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 08

(புரூஸ் லீ யின் மர்ம மரணம்)




சிந்தனையை உடைய நபரை இந்த உலகம் அதிகமாகக் கண்டதில்லை. லீ ஜுன் ஃபான் என்ற இயற்பெயரோடு, சான் ஃப்ரான்ஸிஸ்கோவின் சைனாடெளனில் 1940 நவம்பர் 27ல் பிறந்த ப்ரூஸ் லீ, தனது 32ம் வயதில் ஜூலை 20, 1973யிலேயே மறைந்துவிட்டாலும், சைனாவிலும் பிற நாடுகளிலும் இன்னும் அவருக்கு இருக்கும் பிரம்மாண்டமான இளைஞர் கூட்டம் இதனாலேயே சாத்தியம்.

இளமைப் பருவத்தில் அனைத்து உலக இளைஞர்களின் ஆதர்சமாக இருக்கும் புருஸ் லீயை இன்றும் நாம் கொண்டாட பின்வரும் ஏழு காரணங்கள்
1. புருஸ் லீ தன்னுடைய டீன் வயதில் 'Tigers Of Junction Street' என்ற பெயரில் இயங்கிவந்த ஹாங்காங்கின் கேங்ஸ்டர் குழுவில் இணைந்தார். எங்கே சண்டை என்றாலும் சும்மா தேடித் தேடிவந்து இந்தக் குழு உறுப்பினர்களைத்தான் மொத்தியிருக்கிறது மற்ற பெரிய சைஸ் குழுக்கள். இதுக்கும் மேலயும் பாடி

தாங்காது என்ற உண்மை உறைத்த பிறகுதான், தன் தாயிடம் சொல்லி கராத்தே வகுப்பில் சேர்ந்திருக்கிறார்.

2. கத்தி, சைக்கிள் செயின் சகிதம் வளையவந்த லீ, ஒருசமயம் லோக்கல் கவுன்சிலரின் மகனை பெண்டு நிமிர்த்திவிட்டார். தொடர்ச்சியாக நிறைய வம்புகளில் மாட்டிவந்த லீயை அமெரிக்கா அனுப்பிவிட பெற்றோர் முடிவு செய்தனர். அவர்மீதான சில சில்லறை வழக்குகளுக்காக போலீசாருக்கு 'கப்பம்' கட்டி வெற்றிகரமாக விசாவை சேஸ் செய்தனர்.

3. புரூஸ்லி சண்டை போட்டு பார்த்திருப்பீங்க, பஞ்ச் பண்ணி பார்த்திருப்பீங்க, டான்ஸ் ஆடி பார்த்திருக்கீங்களா... பார்த்திருக்கீங்களா?
கராத்தே வகுப்புக்குச் சென்ற அதேநேரத்தில், 'காதலியை கரெக்ட் பண்ண உதவும்' என்ற ஒரே காரணத்துக்காக புரூஸ் லீ 'சா சா' நடனமும் கற்றிருக்கிறார். 18- வயதில் அவர் ஹாங்காங்கின் 'சா சா' சாம்பியன். அமெரிக்காவுக்கு வண்டி கட்டியபோது அவரிடம் இருந்தது 100 டாலர்கள் மட்டுமே. உடன் பயணித்த பயணிகள் சிலருக்கு சா சா நடன உத்திகளை சொல்லிக்கொடுத்து ஃப்ளைட் தரைதொடும் முன்னே சில எக்ஸ்ட்ரா டாலர்களை சம்பாதித்தார்.

4. அமீர்கானை அறைந்தால் ஒரு லட்சம், அந்த சவால் விட்டவரை அறைந்தால் பதிலுக்கு ஒரு லட்சம் என இங்கே கும்மியடிப்பதுப் போல ஒரு சவால் புரூஸ் லீக்கும் வந்தது. சீனர்களுக்கு மட்டுமே உரிய குங்ஃபூவை அமெரிக்கர்களுக்கு கற்றுத் தந்த புரூஸ் லீயிடம் சீன பழமைவாத குரூப் ஒன்று உரண்டை இழுத்தது. தங்களுடன் புரூஸ் லீ சண்டையிட்டு தோற்றால், சீனர்களைத் தவிர வேறு யாருக்கும் குங்ஃபூவை கற்றுத்தரக்கூடாது என்பதுதான் போட்டியின் முடிவு. போட்டிக்கான நாள் குறித்தனர். களத்தில் லீயும் எதிராளியும். போட்டி ஆரம்பிப்பதற்கான நேரம் தோராயமாக காலை பத்து மணி என்று வைத்துகொள்வோமே. பத்து மணி மூன்று நிமிடங்களில் அடுத்தடுத்த தன்னுடைய குங்ஃபூ வகுப்புகளுக்கு அமெரிக்ககர்களிடம் சந்தா வசூலிக்க ஆரம்பித்தார் லீ. விளம்பர இடைவேளைக்குக்கூட நேரம் தராமல் போட்டியை முடித்துவிட்டார் லீ.

5. 'உத்யோகம் புருஷ லட்சணம்' என்ற பழமொழிக்கு இணையான சீன பழமொழி ஒன்றையும், மேலும் சில புத்திமதிகளையும் சொல்லித்தான் லீயை வேலைத்தேடச்சொல்லி அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்தனர் பெற்றோர். லீ பார்த்த வேலை என்ன தெரியுமா? அமெரிக்காவின் பெரும் பணக்காரர்கள், நடிகர்கள் என பலருக்கும் குங்ஃபூவை சொல்லிக் கொடுத்தார். 'உத்யோகம் புருஷ லட்சணம்' என்பது 'உதையோகம் புரூஸ் லீ லட்சணமா'கிற அளவுக்கு பிரபலமானார்.

6. 'என்டர் த ட்ராகன்' படத்தில் லீ ஹீரோ. 'யெஸ் பாஸ்' என்று சொல்லி ஹீரோவிடம் அடிவாங்கும் ஸ்டண்ட் ஆர்ட்டிஸ்ட் கேரக்டரில் ஜாக்கி சான். ஒரு சண்டை காட்சியில் கையில் இருக்கும் தடியால் சானின் முகத்தில் விழுகிறது ஒரு கும்மாங்குத்து, அது பஞ்ச்சானாலும் புரூஸ் லீ கையால் பஞ்சராவேன்' என்று லீ புகழ் பாடிச்சென்றார் சான்.

7. புரூஸ் லீ இறந்தபோது 'கேம் ஆஃப் டெத்' என்ற படம் நிறைவடையாமல் இருந்தது. லீயின் பழைய படங்களில் இருந்து சில காட்சிகள், நிறைய டூப்கள் என ஒருவழியாக படத்தை எடுத்து முடித்து வெளியிட்டபோது வாங்கிக்கட்டிக்கொண்டது தயாரிப்பாளர் தரப்பு. காரணம், புரூஸ் லியின் இறுதி ஊர்வலத்தில் இடம்பெற்ற சில உண்மை காட்சிகளையும் படத்தில் இணைத்து வசூல் செய்யப் பார்த்ததால்!

புரூஸ்லீயின் மரணத்திற்கு பின்னாலிருந்த புதிர் என்ன? புரூஸ்லீயின் பாணி
இன்றுவரை தொடர்கிற சூட்சுமம் என்ன?
புரூஸ்லீயின் வாழ்க்கையை பற்றிய அபிலாஷின் இந்த புத்தகம் புரூஸ்லீயின் பாசிட்டிவ் பக்கங்களைச் சொன்னாலும், நமக்குத் தெரியாத புரூஸ்லீயின் பலவீனங்களையும் சமரசமின்றி விமர்சிக்கிறது.
புரூஸ்லீயின் மரணத்துக்கு காரணமான கஞ்சாப்பழக்கம், அவருக்கிருந்த பெண்கள் தொடர்பு, புகழால் உண்டான காமவேட்கை, சிறுவயதிலிருந்து இருந்த மற்றவர்களை பொதுவில் வைத்து அசிங்கப்படுத்தி பார்க்கிற கிறுக்குத்தனம், தோல்வியைக் கண்டு அஞ்சி நடுங்குகிற உள்ளுணர்வு, மீடியாவை சமாளிக்க முடியாமல் திணறியது, தன்னுடைய வெற்றிக்காக நண்பர்களை பயன்படுத்திக்கொண்டு, தூக்கி எறிகிற குணம் என பல விஷயங்களையும் பட்டவர்த்தனமாக முன்வைக்கிறது.
"கடுமையாக உழைத்தால், வெற்றி நிச்சயம்" என்கிற ஒன்லைன்தான் புரூஸ்லீயின் கதையும். சிறுவயதிலிருந்து சண்டைக்காரனாக வளர்ந்து, குங்பூவால் மனதை ஒருநிலைப்பட்டுத்திக்கொண்டவர் புரூஸ்லீ. அவர் முழு சீனர் கிடையாது. ஜெர்மனிய வம்சாவழி தாய்க்கும், சீனருக்கும் பிறந்தவர்.

அதனாலேயே அவர் தன் வாழ்க்கை முழுக்க எந்த அடையாளமும் இன்றி வாழ வேண்டியிருந்தது. அமெரிக்காவில் மிகுந்த சிரமங்களுக்கு நடுவே, ஒரு ஆசியனாக பல்வேறு புறக்கணிப்புக்களுக்கு நடுவே வாழ்ந்து, தொலைக்காட்சி தொடர்களில் நடித்து, முதல் வாய்ப்புக்காக போராடிதான் வெற்றிபெற்றுள்ளார் புரூஸ்லீ!

ஆனால் எந்த வெற்றிக்காக வெறித்தனமாக உழைத்தாரோ, அதே வெற்றியைக் கண்டு அஞ்சி நடுங்கி, அதிலிருந்து விடுபட போதைப் பழக்கத்துக்கு ஆளாகி மாண்டுபோனதுதான் புரூஸ்லீயின் கதை.
குங்பூவை கற்றுக்கொண்டதோடு நிறுத்திக்கொள்ளாமல், உலகின் மற்ற தற்காப்புக்கலைகளையும் படிக்கிற வெறியோடு திரிந்திருக்கிறார் புரூஸ்லீ. தன்னுடைய குங்பூவில் குத்துசண்டை தொடங்கி ஜூடோ வரைக்கும் பல்வேறு அடவுகளை புகுத்தியிருக்கிறார்.

ஒரு நல்ல தற்காப்பு கலைஞன் ஏதோ ஒரு கலையை அதன் தன்மையோடு கற்றுக்கொண்டு முடங்கிவிடக்கூடாது. அவன் மற்ற தற்காப்புகலைகளையும் தனக்கு உள்வாங்கிக்கொண்டு அனிச்சையான உணர்வோடு சண்டையிட வேண்டும் என்கிற கொள்கையைக் கொண்டிருந்தார் புரூஸ்லீ. தன்னுடைய 'கேம் ஆஃப் டெத்' படத்தின் திரைக்கதையை அந்த நோக்கத்திலேயே அமைந்திருந்தார் லீ.
சினிமா இயக்கப் போகிறோம் என்று முடிவானதும், முதலில் புரூஸ்லீ செய்தது சினிமா குறித்து வெறித்தனமாக வாசிக்க ஆரம்பித்ததுதான்! அதை முழுமையாக கற்றுக்கொள்ள வேண்டும் என்று போராடியதுதான்.

தனக்கான வாய்ப்புகளை தானே உருவாக்கிக்கொள்ளும் முனைப்புடன் இருந்திருக்கிறார். முதுகுவலியால் அவதியுற்றபோது, ஒரு ஆண்டுக்கு குங்பூ பயிற்சியை தொடர முடியாமல் போகிறது. அந்த நேரத்தில் தொடர்ந்து நிறைய புத்தகங்கள் வாசித்து (ஜி .கிருஷ்ணமூர்த்தி உட்பட ) தனக்காக 'ஆழ்மன அமைதியை' அடையும் முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்.
ஒருநாளும் தன்னுடைய மனதின் சமநிலை குலையாத வண்ணம் வாழ்ந்தவர் புரூஸ்லீ. அதுதான் அவருடைய ஆற்றலை அதிகமாக்கவும், அதைக் கட்டுப்படுத்தி சரியான நேரத்தில் வெளிப்படுத்தவும் வைக்கிற ஒன்றாக மாற்றியது.

ஆனால் தன்னுடைய முதல் மூன்று படங்களில் கிடைத்த திடீர் புகழும் எக்கச்சக்கமான பணமும், அவருடைய வாழ்க்கை முறையையும் சிந்தனைகளையும் புரட்டிப் போட்டிருக்கிறது. அவருடைய சமநிலை குலைந்ததும் அங்குதான். அதுவரை ஒழுக்கக் கட்டுப்பாடோடு இருந்த புரூஸ் லீக்கு முற்றிலும் எதிர்மறையான ஒரு புரூஸ் லீ ஒருவனாக அவரை வெற்றி மாற்றிவிடுகிறது. அந்த வெற்றி அவரது வாழ்க்கையை தோற்கடித்துவிட்டது .

அவர் சில்லறைத்தனமான சண்டைகள் போடுபவராக, பொறாமையும், வஞ்சகமும் நிறைந்தவராகவும், தன்னைச் சுற்றியிருப்பவர்களைக் கண்டு அஞ்சி, நல்லவர், கெட்டவர் என்று இனம் பிரிக்க முடியாமல், அனைவரையும் வெறுத்து தனிமையில் சிக்கிகொள்கிறார்.
அவர் வெற்றியைக் கண்டு அஞ்சுகிறார். அது அவரை கொன்றுவிடும் என்பதை உணர்கிறார். அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள தொடர்ந்து கஞ்சா பிஸ்கட்டுகளை உண்டார்.
'என்டர் தி டிராகன்' படம் எடுக்கப்படும்போது, அது தன் உச்ச நிலையை அடைகிறது. அப்படத்தின் டப்பிங் வேலைகளின் போதே, மூளையில் நீர்கோர்த்து மரணத்தின் வாயிலை நெருங்கிவிட்டு திரும்புகிறார்.
ஆனால் குணமான பின்னும், கஞ்சா பழக்கத்தை விடமுடியாமல் தொடர்கிறார். அதுதான் அவருக்கு எமனாகியிருக்கிறது. அது 'என்டர் தி டிராகன்' வெற்றி அவரால் கொண்டாட முடியாமல் இறந்து போகிறார்
.
புரூஸ்லீ இறந்த தினத்தில் நடந்த சம்பவங்கள் கூட ஒரு திரைப்படத்தின் பரபரப்பான கிளைமாக்ஸின் திரைக்கதையை ஒத்திருக்கிறது.
தன் காதலியின் வீட்டுக்குச் செல்லும் புரூஸ்லீ தலைவலிக்காக சாப்பிடும் 'EQUAGESIC' என்கிற மருந்துதான் எமனாகிறது. அவர் அரை உயிராக கிடக்கும்போதே மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றிருந்தால், அவரை காப்பாற்றியிருக்கக் கூடும். ஆனால் வளர்ந்து வரும் நடிகையான புரூஸ்லீயின் கள்ளக்காதலியோ, அந்த நேரத்தில் புரூஸ்லீயை தன் வீட்டிலிருந்து மருத்துவமனைக்கு கொண்டு சென்றால் பத்திரிக்கைகள் ஏடாகூடமாக எதையாவது எழுதநேரிடும். அது தன் வளர்ச்சியை பாதிக்கும் என அரைமணிநேரம் தாமதப்படுத்துகிறார். கடைசியில் புரூஸ்லீயின் நண்பர் ரேமன்ட் சாவ் என்பவரை போனில் அழைத்து வரச்சொல்கிறார்.
ஆனால் ரேமன்ட் சாவ் அன்றைய தினம் ஹாங்காங்கின் டிராபிக்கில் மாட்டிக்கொள்கிறார். அன்று அந்நகரை ஒரு புயல் கடக்கிறது. அனைத்தையும் தாண்டி ஒருவழியாக புரூஸ்லீயை மருத்துவமனைக்கு

கொண்டு செல்கிறார்கள். ஆனால் அவரைக் காப்பாற்ற முடியவில்லை. புரூஸ்லீ இறந்துபோகிறார். புரூஸ்லீ இறந்தபின்பும் அவருடைய மரணம் குறித்து, பல்வேறு புனைவுகள் (அவரது மனைவிதான் மெல்ல கொல்லும் விஷம் கொடுத்து கொன்றாள் , வைரத் துகளை உணவில் கலந்து இப்படி ....) தொடர்ந்து ஊடகங்கள் உருவாக்கின.
அதுவெல்லாம் உண்மை அல்ல
உலகம் எப்போதும் மிஸ் செய்யும் நபர்கள் பட்டியலில் புரூஸ் லீக்கு எப்போதும் இடம் இருக்கும்! அது 'கேம் ஆஃப் டெத்' தோடு நிறைவு பெறும்
ஆமாம் . கேம் ஆஃப் டெத்
ர.ரா

வித்தியாமான மரணங்கள் 09

(மர்லின் மன்றோ - சிதைக்கப்பட்ட அழகிய கனவு! )



1950 ஆம் ஆண்டு மர்லின் மன்றோ நடித்த கறுப்பு வெள்ளை திரைப்படத்தின் கால் மணி நேர காட்சியொன்று சமீபத்தில் 1.5 மில்லியன் டாலர்களுக்கு விலைபோனது. மர்லின் முகம் தெரியாத ஏதோ நடிகர் ஒருவருடன் ஓரல் செக்ஸ் வைத்துக் கொள்ளும் காட்சி அது.

FBI- ன் பராமரிப்பில் இருந்த அந்த கால் மணி நேர படத்தை, அதிக விலைகொடுத்து வாங்கிய செல்வந்தர் தன்னை மீடியாவில் வெளிப்படுத்த விரும்பவில்லை. விற்பனை ரகசியமாக நடந்தது.
மர்லின் மன்றோ இறந்து நாற்பத்தைந்து வருடங்கள் கழித்து நடந்திருக்கும் இந்த நிகழ்ச்சி, மர்லின் உயிரோடு இருந்தபோது உலகம் அவரை எவ்வாறு உருவகித்துக் கொண்டது என்பதை பிரதிபலிப்பதாக இந் நிகழ்வு உள்ளது.

1926 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 1 ஆம் தேதி அமெரிக்காவின் லாஸ்ஏஞ்சல்ஸ் நகரில் பிறந்தவர் மர்லின் மன்றோ. உலக இளைஞர்களின் காமத்தின் குறியீடாக கட்டமைக்கப்பட்ட மர்லினின் பிம்பம், இன்றுவரை அதன் மெருகு குலையாமல் அப்படியே உள்ளது. ஒன்றரை மில்லியன் டாலருக்கு கால் மணி நேர படமே இதற்கு சான்று.

மர்லினின் அபிரிதமான அழகும், பார்த்த கணம் கலங்கடிக்கும் கவர்ச்சியும், 36 வயதில் தற்கொலை செய்துகொள்ள நேர்ந்த அவரின் மன நெருக்கடியும் ஆழமான சோகத்தை மறைக்கும் கடினமான திரைச்சீலையாகவே இன்றும் உள்ளது.
மர்லின் மன்றோ பிறக்கும்போது அவரது தாயார் கிளாடிஸ் மன்றோ பேக்கர் தனது முதல் கணவர் ஜாஸ்பர் பேக்கரை பிரிந்து எட்வர்ட் மார்ட்டின்சன் என்பவருடன் வாழ்ந்து வந்தார். மர்லினின் தந்தை யார் என்ற குழப்பம் இன்று வரை நீடிக்கிறது. அப்பாவை தேடிய நீண்ட பயணமாக மர்லினின் வாழ்க்கையை எளிமையாகக் கூறலாம்.

மர்லினின் பிறப்புச் சான்றிதழில் அப்பா என்று எட்வர்ட் மார்ட்டின்சனின் பெயரும், ஞானஸ்தான சடங்கில் அப்பா இடத்தில் ஜாஸ்பர் பேக்கரின் பெயரும் இடம்பெற்றுள்ளது.
மர்லினின் தாயார் கிளாடிஸ் ஹாலிவுட்டிலுள்ள ஆர்.கே.ஓ. ஸ்டுடியோவில் பணிபுரிந்தபோது, அங்கு ·பிலிம் கட்டராக இருந்த ஸ்டாண்லி கிப்போர்டுடன் நெருக்கமான உறவு கொண்டிருந்தார். அதனால் மர்லினின்

தந்தை யார் என்ற கேள்விக்கு மூன்றாவது சாய்ஸாக ஸ்டாண்லி கிப்போர்டின் பெயரும் முன்மொழியப்படுகிறது. தவிர வேறு பலரோடும் தொடர்பு இருந்ததால் தனது கர்ப்பத்திற்கு யார் காரணம் என்று கிளாடிஸாலேயே சொல்லவே முடியவில்லை. முகம் தெரியா பாவம் !

அப்பா என்ற உறவு வாழ்க்கையில் ஏற்படுத்திய வெற்றிடம் மர்லினுக்கு இறுதிவரை ஒரு அலைக்கழிப்பாக தொடர்ந்தது. அறுபது வயதான ஆர்தர் மில்லர் கட்டாயப்படுத்தி மர்லினோடு உடல் ரீதியான உறவு வைத்துக் கொண்டிருந்தாலும் அவரை டாடி ( ? ) என்றே அழைத்து வந்ததை இவ்வாறுதான் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

மர்லினின் இளமைப் பருவம் கொடியது. பிறந்த பன்னிரெண்டாவது நாளே வறுமை காரணமாக வளர்ப்பு பெற்றோர்களிடம் அவள் தாரை வார்க்கப்பட்டாள். பதினாறு வயது வரை வெவ்வேறு இடங்கள், வெவ்வேறு வளர்ப்பு பெற்றோர்கள் என அனாதைத்தனமான வாழ்க்கை. இடையில் மர்லினின் தாயார் மனச்சிதைவுக்கு உள்ளாகி மனநல காப்பாகத்தில் சேர்க்கப்பட, அவள், தான் ஒருபோதும் விரும்பாத அனாதை வாழ்க்கைக்கே திரும்ப வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

16 வயதில் நடந்த மர்லினின் முதல் திருமணமும் மகிழ்ச்சியானதாக இல்லை. வளர்ப்பு பெற்றோர்களால் நடத்தி வைக்கப்பட்ட அவசர திருமணம் அது.

1944-ல் மர்லினின் வாழ்க்கை புதிய மாறுதலுக்குள்ளானது. டேவிட் கொனோவர் என்ற புகைப்படக் கலைஞர் Yank பத்திரிக்கைக்காக மர்லினை சில புகைப்படங்கள் எடுத்தார். மர்லினின் அபிரிதமான அழகை முதலில் கண்டுணர்ந்தவர் கொனோவரே.

ஒரே வருடத்தில், அமெரிக்க முன்னணி பத்திரிக்கைகளின் அட்டைப்பட அழகியாக உயர்ந்தார். சினிமாவின் அது ஆரம்பகட்டம் என்பதால் , நிர்வாணமாகக் கூட காமிரா முன் நிற்க வேண்டியது இருந்தது. மர்லின் மன்றோ. இந்தப் புகழ் வெளிச்சம் மர்லினின் கணவனுக்குப் பிடிக்கவில்லை. கணவனா, வேலையா என்ற கேள்வி வந்தபோது, கணவனை உதறினார் மர்லின். 1942ல் நடந்த 1944ல் கசந்த நினைவுகளுடன் முறிந்துபோனது.

சினிமா உலகின் ஜிகினா விளக்கு வெளிச்சத்தில் சந்தோஷத்தை தேட ஆரம்பித்தார் .
'Genteman prefers blondes ' some like it hot ' போன்ற படங்கள் அவரின் அழகுக்காகவே ஓடியது .புகழும் பணமும் குவிய குவிய... மர்லினுக்கு சந்தோஷம் எதிலும் கிடைக்கவில்லை .

உலகிலேயே புகழின் உச்சியில் இருப்பவரை திருமணம் செய்தால் சந்தோஷம் கிடைக்குமோ ...பேஸ்பால் விளையாட்டு வீரர் **Joe Di Maggio** உடனான இரண்டாவது திருமணமும், ஆர்தர் மில்லர் போன்ற அரை டஜன் நபர்களுடனான மர்லினின் உறவும் மன நிறைவானதாக அமையவில்லை.

அழகின், இளமையின், காமத்தின் குறியீடாக மர்லின் இன்று வரை முன்னிறுத்தப்படுகிறாள். மிதமிஞ்சிய காமத்தை வெளிப்படுத்தும் வேடத்தை ஏற்று நடித்த மர்லின் ஒருபோதும் காமத்தை நாடிச் சென்றதில்லை. மாறாக காமுகர்களால் குதறப்பட்ட வாழ்க்கையாக அவளது வாழ்க்கை திகழ்ந்தது. தனது எட்டு வயதில் வயதான ஒருவரால் பாலியல் சித்திரைவதைக்குள்ளானதை வளர்ந்த பிறகும் வடுவான மனதில் தங்கியிருந்ததை நினைவுகூர்ந்துள்ளார் மர்லின். வளர்ப்பு பெற்றோர்களே பல நேரம் அவளை வன்புணர்ச்சிக்கு உட்படுத்தியுள்ளனர்.

இந்த காலகட்டத்தில் மதுவும், நோயும் மர்லினை கூறுபோட தொடங்க இருந்தன. மனநல மருத்துவரின் ஆலோசனைகளையும் மர்லின் கேட்டு வந்தார்.
" Seven year itch " என்ற திரைப்படத்தில் காற்றிலே பறக்கும் ஸ்கர்ட்டை இவர் சரி செய்ய முயலும் புகழ் பெற்ற காட்சியால் கணவர் ஜோ விவகரத்து செய்ய .. அதே தர்ணத்தில் அன்றைய அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடியுடனான மர்லினின் அறிமுகம், அமெரிக்கா முழுவதுமே பதட்டத்தை உருவாக்கியது.
ஜான் கென்னடியுடன் அவரது சகோதரர் ராபர்ட் கென்னடியுடனும் மர்லின் தொடர்பு வைத்திருந்தார். ஜாதிபதியின் பிறந்தநாள் விழாவில் கலந்துகொண்டு அவர் பாடியது, அரசியல் வட்டாரத்தில் புயலைக் கிளப்பியது.
மர்லின் சிறந்த பாடகி. லேடீஸ் ஆ ·ப் தி கோரஸ் படத்தில் மூன்று பாடல்கள் பாடியிருக்கிறார். இது தவிர அவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை முப்பதை தொடும். உலகின் தலைசிறந்த நாவலாசிரியர்களை,

அவர்களின் படைப்புகளை மர்லின் அறிந்திருந்தார். இந்த பன்முகத்தன்மையை அழித்து, கவர்ச்சி எனும் ஒற்றை பிம்பமாக இந்த சமூகம் அவரை பிரகடனப்படுத்தியது

மர்லின் ஒரு உளவாளி. ஜான் கென்னடி மூலம் அமெரிக்காவின் ரகசியங்கள் தெரிந்துகொள்கிறார் என்பது போன்ற ஹாஸ்யங்கள் கிளம்பின. அமெரிக்க உளவு நிறுவனங்களின், 'நீக்கப்பட வேண்டியவர்கள்' பட்டியலில் அவர் பெயரும் இணைக்கப்பட்டது.

மர்லின் தூய்மையான அன்புக்காக ஏங்கினார் . இதற்காக தனது இரண்டாவது கணவர் ஜோவுடன் மீண்டும் இணைய ஆசைப்பட்டார் .
இந்த இணைப்புக்கு 3 நாளைக்கு முன்னாடி அதாவது1962 ஆகஸ்ட் 5 ஆம் தேதி தனது அறையில் இறந்து கிடந்தார் மர்லின். அளவுக்கதிகமான தூக்க மாத்திரைகளே மரணத்திற்கு காரணம் என கூறப்பட்டது.
இது தற்கொலை அல்ல ; திட்டமிட்ட கொலை . இந்தக் கொலைக்கு பின்னணியில் ஜனாதிபதி கென்னடியின் தம்பி இருக்கிறார் என்பது பட்டவர்த்தனமாக தெரிந்தது .
அதிகாரத்திற்கு முன் இதெல்லாம் செல்லுபடியாகவில்லை . அவரின் மரணம் இன்னும் மர்மமாகவே இருக்கிறது !

இளமையை ஒரு அனாதையைப் போல் காக்க நேர்ந்த மர்லினின் உடல் சவக்கிடங்கில் அதே அனாதைதனத்துடன் கிடந்தது. அவள் உடலைப் பெற்றுக்கொள்ள கணவனோ, காதலனோ, உறவினர்களோ யாருமில்லை. இருந்த ஒரே உறவான மர்லினின் தாயோ மகளின் மரணத்தை உணர முடியாத மனச்சிதைவுடன் மனநல காப்பாகத்தில் இருந்தாள்.
மொத்தத்தில் மர்லின் வாழ்வு சிதைக்கப்பட்ட ஓர் அழகிய கனவு!
ர.ரா

வித்தியாமான மரணங்கள் 10

(உலக சரித்திரத்திலேயே ஓர் ஏழை சக்ரவர்த்தியான வரலாறு)



தலைமையேற்று நடத்த ஒரு தலைவன் இல்லாமல் பிரான்ஸ் தத்தளித்த போது , வீரன் ஒருவன் உதித்தான். அவன் பெயர் நெப்போலியன் போனபார்ட் !

ராஜ வம்சத்தினரும் , நிலப்பிரபுகளும் மட்டுமே ஆட்சியிலும் ராணுவத்திலும் உயர் பதவி வகிக்க முடியும் என்றிருந்த பிரான்ஸ்க்கு 1789 ம் ஆண்டு பிரெஞ்சுப் புரட்சி முடிவு கட்டியது.
அப்போது நெப்போலியன் போனபார்ட்க்கு 20 வயது . நெப்போலியனின் துடிப்பும் வேகமும் 26 வயதிலேயே தளபதியாக உயர்த்தியது !

நெப்போலியனின் போர் திறமை , அதற்கேற்ற வியூகம் , புத்திசாலித்தனம் எல்லாம் ஒன்று சேர்ந்து பிரான்ஸ்க்கு பல வெற்றிகளை குவித்ததான் .

நெப்போலியனின் வளர்ச்சி கண்டு பிரான்ஸியின் ஆட்சியாளர்களுக்கு தூக்கம் வராமல் மிரண்டனர் . மிரண்ட நேரத்திலே திடீரென ராணுவப் புரட்சி , அடுத்து யோசிப்பதற்குள் ஆட்சியாளர்கள் வீட்டிலே சிறை .

'நான் அடைந்திருக்கும் பதவி நானே ஈட்டியது . வேறு யாரும் எனக்குக் கிரீடம் சூட்டத் தேவையில்லை ' என்று தனக்குத்தானே கிரீடம் சூட்டி சர்வதிகாரியாக பிரகடனம் செய்தான்.
உடனேயே நாலரை லட்சம் வீரர்கள் 26 பட்டாலியன்களாக பிரித்துக் கொண்டு ரஷ்யா மீது போர்தெடுக்க , அதன் தலைநகர் மாஸ்கோவை தீயிக்கு இரையாக்கினான் .

' என்னை மன்னித்து விடு மகாராஜா ' என்று ரஷ்யா மன்னன் ஜார் அலெக்ஸாண்டா வருவான் .. வருவான்.. என்று எதிர்ப்பார்த்து , நெப்போலியன் ஏமாந்து போய் இருக்க , சற்றும் எதிர்பாராத பனிமழையும் உயிரையே உறைய வைக்கும் கடுங்குளிரும் 4.5 லட்சம் வீரர்கள் ஒதுங்க கூட இடம் இல்லாத தாங்கள் வைத்த தீயிக்கு இரையான மாஸ்கோ இருந்தது .

போர் வியூகம் வகுக்கத் தெரிந்த சக்கரவர்த்தியால் அண்டை நாட்டின் சீதோஷ்ண நிலை அறியாமல் போய்விட்டதுதான் பரிதாபத்துக்குரியது .
படையில் பலர் படைப்படையாக செத்தனர் . உணவு கிடைக்காமல் ஓட்டி வந்த குதிரையை வெட்டி உலை வைக்க , பிரமாண்டமான படை நோய்வாய்ப்பட்டிருந்த இருபதாயிரம் பேருடன் தங்கள் நாடு வந்து சேர்ந்தனர் .

நெப்போலியன் வாழ்க்கையிலேயே முதன்முதலாக கைது செய்யப்பட்டு சிறை . புயலை எங்கேனும் சிறைபிடிக்க முடியுமா ? தப்பிப்பதற்கு தனி வியூகம் . வெற்றி . மீண்டும் பிரான்ஸ் சக்கரவர்த்தி .
இங்கிலாந்து சும்மா இருக்குமா ?
வெலிங்டன் பிரபு என்ற தளபதியின் தலைமையில் போர் படை . அதே சமயம் பிரஷ்யா நெப்போலியனை நசுக்க இன்னொரு தனி படையை அனுப்பியது .
இரண்டு நாட்டு படையை சந்திக்க

'தனது கடைசி யுத்தம் இதுதான் ' என்று எப்போதும் நம்பும் நெப்போலியன் தன் ஒரு லட்சம் படையை Y வடிவில் அமைத்துக் கொண்டு ' வாட்டர் லூ ' என்ற யுத்த பூமியை நோக்கிப் புறப்பட்டான்
அப்போது குதிரை கால் தடுமாறி கீழே விழ கொஞ்சம் செண்டிமெண்ட் . அடுத்து யுத்தத்திற்கு முந்தய நாள் கடும் மழை .கடும் காய்ச்சல் . இதனால் தன் வியூகத்தை தன் படைக்கு சொல்ல , அது தவறாக புரிந்து கொண்டு யுத்தம் செய்ய மீண்டும் மாபெரும் தோல்வி .
அவனின் வியூக பேப்பரை தளபதிகள் பார்த்த போது அவர்களுக்கு அப்போதுதான் தெரிந்தது மிக எளிதாக கிடைக்க வேண்டிய வெற்றி உருமாறி தோல்வியானது .
மீண்டும் சிறை . ஆப்பிரிக்காவுக்கு பக்கத்தில் செயிண்ட் ஹெலீனா என்ற தீவில் பிரிட்டிஷார் தனிமைப்படுத்தி சிறை வைத்தனர் .

சிறையில் மன உளைச்சலில் அவனின் கடைசி காலம் கழிந்தது.அவனைப் பார்க்க வந்த அவனின் நண்பர் ஒருவர் அவரிடம் ஒரு சதுரங்க அட்டையை கொடுத்து...
“இது உங்களின் சிந்தனையை செயல்பட வைக்கும் தனிமையை போக்கும்” என்று கூறி அவரிடம் கொடுத்தார்.
ஆனால் சிறை படுத்தி விட்டார்களே ... என்ற மன உளைச்சலில் இருந்த மாவீரனுக்கு சிந்தனை செயல்படாமல் அதன் மீது கவனம் போகவில்லை.
சிறிது காலத்தில் இறந்தும் போனான்
பிற்காலத்தில் பிரான்ஸ் அருங்காட்சியகம் மாவீரன் நெப்போலியனிடம் இருந்த சதுரங்க அட்டையை ஏலம் விட அதை ஆய்வு செய்த போது அந்த அட்டையின் நடு பக்கத்தில் சிறிய அளவில் ஒரு குறிப்பு இருந்தது.
அதில் அந்த சிறைச்சாலையில் இருந்து தப்பிப்பதற்க்கான வழியை அந்த குறிப்பு தெளிவாக சொல்லி இருந்தது.ஆனால் அவனின் மன உளைச்சலும்,பதட்டமும் அவனின் சிந்தனையை செயல்படாமல் ஆக்கி வைத்து அவனின் தப்பிக்கும் வழியை மூடி மறைத்தது....
செயிண்ட் ஹெலீனா சிறையில் தனிமையில் அடைத்தார்கள் அவனை நேரடியாக கொலை செய்ய முடியவில்லை. யோசித்தரர்கள்
அவனுடைய சிறையில் பெயிண்ட் அடித்து சுத்தம் செய்தார்கள் . அதிலிருந்து 3 மாதத்தில் நெப்போலின் இறந்தான் பாவம் , ஜாக்குலின் மீது தீராத காதல் கொண்டிருந்தான் அவனின் காதல் கடிதங்கள் அப்பப்பா.. நீங்கள் சொக்கி விடுவீரகள் . இப்படி கூட மனுஷன் கற்பனை பண்ண முடியுமா என்னே.... அதற்கு தனியா ரகசியமாக போஸ்ட் போடணும் .

கொஞ்ச வருடங்களுக்கு முன் அவனுடைய முடியை பரிசோதித்ததில் ஆர்சானிக் விஷம் கலந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது . அன்றைக்கு அவனுடைய சிறையை சோதித்ததில் பெயிண்டுடன் ஆர்சானிக் விஷம் சுவற்றில் அடித்த பெயிண்டிங்கில் கலக்கப்பட்டிருந்தது !
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 11

(மைக்கல் ஜாக்சன் - அமெரிக்க பாப் இசைப் பாடகர்)



மைக்கல் ஜோசஃப் ஜாக்சன் (Michael Joseph Jackson, ஆகஸ்ட் 29, 1958 - ஜூன் 25, 2009) ஓர் ஆப்பிரிக்க அமெரிக்க பாப் இசைப் பாடகர், நடன இயக்குனர், பாடல் ஆசிரியர், தொழில் தலைவர், மற்றும் வள்ளல் எனப் பல முகங்கள் கொண்டவர். உலகப் புகழ்பெற்ற ஜாக்சன், இசைக் குடும்பத்தில் ஏழாம்பிள்ளை.
1964-ல் இவரின் நான்கு உடன் பிறந்தவர்களுடன் சேர்ந்து ஜாக்சன் 5 என்ற இசைக்குழுவில் சேர்ந்தார். பின் 1971 இல் தனியாக பாடத் துவங்கி உலகப் புகழடைந்தார்.

கிங் அஃப் பாப் (பாப் இசையின் மன்னர்) என்றும் எம்.ஜெ என்றும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறார். இவரால் வெளியிடப்பட்ட ஐந்து இசைத்தொகுப்புகள் உலகெங்கும் பெருமளவில் விற்பனை செய்யப்பட்டதாகும்.
1982-ல் வெளிவந்த 'திரில்லர் ' உலகில் பெருமளவில் விற்பனை செய்யப்பட்ட இசைத் தொகுப்புகளின் பட்டியலில் முதலாம் நிலையில் உள்ளது. உலகெங்கிலும் உள்ள பல தரப்பு மக்களின் நடுவில் நாற்பது ஆண்டு காலமாகப் புகழ்பெற்றவராக வாழ்ந்து வந்துள்ளார்.
பாடல் எழுதி, அதற்கு இசையமைத்து, பாடலுக்கு ஏற்றாற் போல் நடனம் ஆடுவது, இடை இடையே நடிப்பு என அனைத்தும் கலந்த 'பாப்' இசையில் புதிய நடனத்தை படைத்து சாதனை புரிந்தார் .
1980 களின் துவக்கத்தில் பாப் இசை உலகில் புகழ் பெற்ற பாடகரானார். அமெரிக்காவில் முதலாகப் பல மக்கள் செல்வாக்குப் பெற்ற கருப்பின இசைக்கலைஞரானார். இவரின் இசை நிகழ்படங்களை எம்.டி.வி. ஒளிபரப்பு செய்து எம்.டி.வி.யும் புகழடைந்தது. இதனாலும் இசை நிகழ்படம் படைப்பு ஒரு தலைமையான கலை ஆனது. ஜாக்சன்படைத்த " ரோபாட் " " " "மூன்வாக் " போன்ற நடன வகைகளும் பிரபலமானது. இவரின் நடனத்தாலும் இசையாலும் பல இசை வகைகள் புத்தாக்கம் பெற்றன.

பல சமூக தொண்டுகளுக்கு உலக முழுவதிலும் இசையரங்கு நிகழ்ச்சிகளை நடத்தி நிதியுதவி செய்துள்ளார் என்பதை உலகம் மறக்காது .
ஆனால் குழந்தைகளுடன் உடலுறவு செய்தார் என்று 1993 ல் இவர் குற்றம் சாட்டப்பட்டார். இறுதியில் இவர் குற்றமில்லாதவர் என்று தெரிவித்து நீதிமன்றம் விடுதலை செய்தது .
ஆனாலும் இவர்பற்றிய பொது மக்களின் கருத்துகள் மோசமானது. இன்று வரையும் அமெரிக்கப் பரவலர் பண்பாட்டில் இவர் ஒரு செல்வாக்கு பெற்றவர் ஆவார்.

1979 -ல் ஒரு நடனப் பயிற்சியின்போது மைக்கேல் ஜாக்சனின் மூக்கு உடைந்தது. அதனால் முதன் முதலில் ஓர் ஒட்டுறுப்பு அறுவை மருத்துவம் செய்து கொண்டார். அதனால் சுவாசிப்பதில் தொந்தரவு ஏற்படவே மீண்டும் ஓர் ஒட்டுறுப்பு அறுவை மருத்துவம் செய்ய வேண்டி வந்தது.

1984 ல் 3000 பார்வையாளர்களுக்கு முன் பில்லி ஜீன் பாடலைப் பாடி ஆடிக் கொண்டிருக்கும்போது, மேடையில் வெடித்த வெடியின் தீ மைக்கேல் ஜாக்சனின் முடியில் பட்டது.
2009, ஜூன் 25 அன்று இவர் லாஸ் ஏஞ்சலஸ் நகரில் உள்ள தனது வீட்டில் மாரடைப்பு காரணமாக இறந்தார். இதனை லாஸ் ஏஞ்சலஸ் தீயணைப்பு துறை கேப்டன் இச்டீவ் ருடா உறுதிப்படுத்தினார். அதிகாரப்பூர்வமாக இவரின் இறப்பிற்கான காரணம் இன்னும் அறிவிக்கப்படவில்லை.
இருப்பினும் ...

உலக அளவில் புகழ்பெற்றவர் மைக்கேல் ஜாக்சன். 50வது வயதில் திடீர் மரணம் அடைந்தார். அவரது மரணத்தில் சந்தேகம் இருப்பதாக கூறப்பட்டது. டாக்டர்கள் அவருக்கு சிகிச்சை அளித்தபோது மார்பு எலும்பு கூடு உடைந்து , அதனால் இறந்ததாகவும் கூறப்பட்டது.
மேலும் தனது ஆசிரமத்தில் வளர்ந்த குழந்தைகளை பாலியல் ரீதியாக இவர் பயன்படுத்தினார் என்றும் அவர் மீது குற்றச்சாட்டு இருந்தது.

சர்வதேச அளவில் புகழ் பெற்றிருந்தாலும் மைக்கேலின் தனிப்பட்ட வாழ்க்கை பல்வேறு முரண்பாடுகளுடன் கூடியதாக அமைந்திருந்தது என்பதை அவரைச் சுற்றி இருந்தவர்கள் யாரும் மறுக்கவில்லை .

எங்க தல உயிரோட தான் இருக்காரு ... அடித்துச் சொல்லும் மைக்கேல் ஜாக்சன் ரசிகர்கள்!!
இளம் பாப் இசைப் பாடகரை பார்த்து, இவர்தான் மைக்கேல் ஜாக்சன் என அவரது ரசிகர்கள் கூறியிருப்பது பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

மறைந்த பாப் இசை மன்னன் மைக்கேல் ஜாக்சன் போல் அச்சு அசலாக உள்ளவருக்கு மரபணு பரிசோதனை (டிஎன்ஏ) செய்ய வேண்டும் என அவரது ரசிகர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

பாப் இசை உலகின் முடிசூடா மன்னனாக திகழ்ந்த மைக்கேல் ஜாக்சன், 2009 ஆம் ஆண்டு இறந்தார். இந்த நிலையில், அர்ஜென்டினா நாட்டின் பார்சிலோனா நகரைச் சேர்ந்த, இளம் பாப் இசைக் கலைஞரான செர்ஜியோ கோர்டெஸின் உருவம், அச்சு அசலாக மைக்கேல் ஜாக்சனின் உருவமாக அமைந்துள்ளது. சமீபத்தில் இவர் வெளியிட்ட வீடியோ சமூக வலைதளங்களில் வைரலாக பரவி வருகிறது.
இந்த வீடியோவை பார்த்து வியந்த மைக்கேல் ஜாக்சன் ரசிகர்கள், செர்ஜியோ கோர்டெஸ் தான், உண்மையான மைக்கேல் ஜாக்சன் என்றும், அவர் மறைந்து வாழ்வதற்காக தான் இறந்துவிட்டதாக நாடகம் ஆடுகிறார் எனவும் கூறி வருகின்றனர்.

செர்ஜியோ கோர்டெஸ், தான் மைக்கேல் ஜாக்சன் இல்லை என்பதை நிரூபிக்க டிஎன்ஏ பரிசோதனை செய்ய வேண்டும் என்றும் ரசிகர்கள் வலியுறுத்தி வருகின்றனர்.
இதுகுறித்து செர்ஜியோ கோர்டெஸ் கூறும்போது, "பத்திரிகையாளர் ஒருவர், நான் மைக்கேல் ஜாக்சன் தோற்றத்தில் இருப்பதாக கூறினார். என்னை மைக்கேல் ஜாக்சன் போன்று மேக்கப் -அப் போட்டு அவரது பத்திரிக்கையில் எனது புகைப்படத்தை வெளியிட்டார்.
அதன்பின் அவர் என்னை சில சுவிஸ் தயாரிப்பாளர்களுக்கு அறிமுகப்படுத்தினார். இவையெல்லாம் என் வாழ்வில் தற்செயலாக நடைபெற்ற நிகழ்வுகள்" என, அவர் கூறியுள்ளார்.
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 12


(மரணிக்காத ஈஸா (அலை) அவர்கள்)

"நிச்சயமாக (வரவிருக்கும்) மறுமைக்குரிய அத்தாட்சிகளில் (ஈஸா) அவருமோர் அத்தாட்சியாவார். ஆகவே, நிச்சயமாக நீங்கள் இதில் சந்தேகிக்க வேண்டாம். என்னையே பின்பற்றி நடங்கள். இதுவே நேரான வழி.(அல்குர்ஆன்: 43:61)

"3448. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! விரைவில் (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மகன் உங்களிடையே நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார்; பன்றியைக் கொல்வார்; ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார்; (இஸ்லாம் ஒன்றையே மக்களிடமிருந்து ஏற்பார்.) செல்வம் (பெரும்) வழிந்தோடும். எந்த அளவுக்கென்றால் அதை வாங்கிக் கொள்பவர் எவரும் இருக்க மாட்டார் " .
மறுமை நாள் வரும் முன் , "அது வர உள்ளது " என்பதை தெரிவிக்கும் அடையாளமாக ஈஸா (அலை) அவர்களின் வருகை இருக்கும் .

2000 வருடத்திற்கு வாழ்ந்த ஈஸா (அலை) இறக்கவில்லையா? என்ற கேள்வி வரும் .அதற்கு குர்ஆன் ....
" அன்றி "அல்லாஹ்வுடைய தூதர், மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை நிச்சயமாக நாம் (சிலுவையில் அறைந்து) கொலை செய்து விட்டோம்" என்று அவர்கள் கூறியதனாலும் அவர்களைச் சபித்தோம். அவரை அவர்கள் கொலை செய்யவும் இல்லை. அவரை அவர்கள் சிலுவையில் அறையவும் இல்லை. (அவர் இருந்த அறைக்குள் அவரைத் தேடிச் சென்றவன் அவரைப்போல் ஆக்கப்பட்டு விட்டான். தேடிச்சென்ற மற்றவர்கள் அவனையே சிலுவையில் அறைந்தனர். இதனால்) அவர்கள் சந்தேகத்திற் குள்ளாக்கப்பட்டு விட்டனர். ஆகவே, எவர்கள் இதற்கு மாறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் வீண் சந்தேகத்திலேயே ஆழ்ந்து விட்டனர். வீண் சந்தேகத்தைப் பின்பற்று வதன்றி அதில் அவர்களுக்கு உண்மையான ஞான(ஆதார)ம் கிடையாது. நிச்சயமாக அவர்கள் அவரைக் கொலை செய்யவே இல்லை. "
(அல்குர்ஆன் : 4:157)

' அவரை அவர்கள் கொல்லவில்லை' என அல்லாஹ் அறிவிப்பதின் மூலம் நபியவர்கள் கொல்லப்படவில்லை என்பதோடு 'உயிருடன் உள்ளார்கள் ' என்பதும் விளங்கும். உடனே உயிருடன் உள்ளார்கள் என்றால் எங்கு என்ற அடுத்த கேள்வி வரும் அதற்கு ஹதீஸ் வாயிலாக தெரிவிப்பது ....

259. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நபி (ஸல்) அவர்கள் விண்ணுலக பயணத்தின் போது,
இரண்டாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி சொன்னார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உங்களுடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப் பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்து வரும்படி என்னை)

அவரிடம் அனுப்பிவைக்கப் பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு சகோதரிகளின் புதல்வர்களான ஈசா பின் மர்யம் (அலை), யஹ்யா பின் ஸகரிய்யா (அலை) ஆகியோரை நான் கண்டேன்.அவர்கள் இருவரும் என்னை வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தனர்.

நபி ஈஸா (அலை) அவர்கள் இரண்டாம் வானத்தில் இருந்து எப்படி இறங்கி பூமிக்கு வருவார்கள் ? எங்கு வந்திறங்குவார்கள் ?
திமிஷ்கின் கிழக்குப் பகுதி அதாவது இன்றைய டமாஸ்கஸ் நகரின் கிழக்குப் பகுதியிலுள்ள பெரிய பள்ளிவாசலான 'மனாரத்துல் பைளாவு ' என்ற வெள்ளை மினராவில் வைக்கப்பட்ட ஏணியின் மீது , இரண்டு வானவர்களின் சிறகுகள் மீது தன் கைகளை வைத்தவராக ஏணியிலிருந்து இறங்கி வருவார்கள் .
(ஏணி ஏன் என்றால் இப்பூமி காரண காரியமான உலகம் விண்ணிலிருந்து வானவர் துணையுடன் வந்தாலும் பூமியைப் பொறுத்தவரை ஏணியிலிருந்து இறங்கி வருவார்கள் )
வந்திறங்கும் நபியவர்களின் தலை குனிந்தால் தலையில் உள்ள நீர் கொட்டும். . அவர்கள் தலையை உயர்த்தினால் முத்துப்போல் தண்ணீர் சிதறும். அவரது மூச்சுக்காற்று படும் எந்த இறை மறுப்பாளரும் இறந்தே போவார் .
பின்னர் தஜ்ஜாலைத் தேடுவார்கள் . °லுத் " என்னும் ஊர்வாசலில் அவனைப் பிடித்துக் கொல்வார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) - திர்மிதீ
தஜ்ஜால் வந்து அதற்குள் பூமியில் , பெரும் பெரும் குழப்பங்களை விளைவிக்கும் காலகட்டத்தில் நபி ஈஸா (அலை ) அவர்கள் இறங்கி வந்து , அவனைத் தேடிக் கொல்வார்கள் .
அதற்கு பின்பு .....
அவர் சிலுவையை உடைப்பார்; பன்றியைக் கொல்வார்; ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார்; (இஸ்லாம் ஒன்றையே மக்களிடமிருந்து ஏற்பார்.) செல்வம் (பெரும்) வழிந்தோடும். எந்த அளவுக்கென்றால் அதை வாங்கிக் கொள்பவர் எவரும் இருக்க மாட்டார் " . ( புகாரி 3448 )

நபி ஈஸா (அலை) அவர்கள் 40 வருடம் இப்பூமியை ஆட்சிசெய்வார்கள். இறுதியாக மரணித்து மதீனாவில் உள்ள மஸ்ஜித்துல் நபவியில் நபி (ஸல்) அவர்களின் புனிதமிகு ரவுளாவிற்கு அடுத்து நபி ஈஸா (அலை) அவர்கள் நல்லடக்கம் செய்யப்படுவார்கள்
ர.ரா
கிறிஸ்துமஸ் நல் **வாழ்த்துக்கள்**

வித்தியாசமான மரணங்கள் 13

(சுபாஸ் சந்திர போஸின் மர்ம மரணம்)



இந்திய தேசியவாத தலைவர் மற்றும் அரசியல்வாதி .நேதாஜி "தலைவர் " என்று இந்திய மக்களால் அழைக்கப்படும் சுபாஷ் சந்திர போஸ் (Subhash Chandra Bose, ஜனவரி 23, 1897 – இறந்ததாகக் கருதப்படும் நாள் ஆகஸ்ட் 18, 1945)
இவர் இந்திய சுதந்திரப் போராட்டத் தலைவராவார். இரண்டாம் உலகப் போர் நடைபெற்ற போது வெளிநாடுகளில் போர்க் கைதிகளாய் இருந்த நூற்றுக்கணக்கான இந்தியர்களை ஒன்றுதிரட்டி இந்திய தேசிய ராணுவத்தை உருவாக்கி அப்போது இந்தியாவை ஆட்சி செய்த ஆங்கிலேயருக்கு எதிராகத் தாக்குதல் நடத்தியவர்.

இவர் 1945 ஆகஸ்ட் 18 அன்று தைவான் நாட்டில் ஒரு விமான விபத்தில் இறந்து விட்டதாகவும், உருசியாவிற்கு சென்று

1970 களில் இறந்துவிட்டதாகவும், அல்லது ஒரு துறவியின் வடிவில் வட இந்தியாவில் மறைமுகமாக வாழ்ந்து 1985 -ல் இறந்து விட்டதாகவும் பல கருத்துக்கள் உள்ளன.

ஆனால் 1945 ஆகஸ்ட் 14 முதல் செப்டம்பர் 20 வரை எந்த விமான விபத்தும் தைவானில் ஏற்படவில்லை என அந்நாட்டு அரசு தெரிவித்திருப்பது போஸ் அவ்வாண்டு இறக்கவில்லை என்பதும் ஏதோ ஜோடிக்கப்பட்ட விபத்தில் போஸ் இறந்தார் என்று பதிவு செய்வதிலும் ஏதோ ஒரு மர்மம் இன்று வரை நீடிக்கிறது .
அதோடு இந்திய அரசால் நியமிக்கப்பட்டு இதைப்பற்றி விசாரித்த முகர்ஜி கமிஷன், நேதாஜி அவ்விமான விபத்தில் இறக்கவில்லை எனத் தெரிவித்து விட்டது.

இரண்டாவது உலகப்போர் மூண்டதும், இந்திய மக்களின் ஒத்துழைப்பைப் பிரிட்டானிய அரசு கோரியது. ஆனால், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், பிரிட்டானிய ஆட்சிக்கு எதிராக மக்களை ஒன்று திரட்டுவதில் ஈடுபட்டார். இதன் காரணமாக 1940 ஜுலையில் நேதாஜியை அரசாங்கம் கைது செய்து சிறையில் அடைத்தது.
உலகப்போரின் ஆரம்பத்தில், பிரிட்டானிய படைகளுக்கு தோல்வியே ஏற்பட்டது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, பிரிட்டனின் எதிரி நாடுகளின் ஒத்துழைப்புடன் இந்தியாவை விடுவிக்கவேண்டும் என்று நேதாஜி எண்ணினார். அதற்கு சிறையில் இருந்து வெளியே வரவேண்டும் என்று கருதினார். 1940 நவம்பரில், சிறையில் உண்ணாவிரதம் தொடங்கினார்.

சுபாஷ் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டால், பெரும் விளைவுகள் ஏற்படும் என்பதைப் பிரிட்டானிய அரசு அறிந்திருந்தது. எனவே, உண்ணாவிரதத்தைக் கைவிடும்படி அவரிடம் அதிகாரிகள் கெஞ்சினார்கள். ஆனால் சுபாஷ் இணங்கவில்லை. உண்ணாவிரதம் தொடங்கி ஒரு வாரம் ஆயிற்று. நேதாஜியின் உடல் நிலை மோசம் அடைந்தது. வேறு வழியின்றி நேதாஜியை அரசாங்கம் விடுதலை செய்தது. ஆனால் அவர் வீட்டைச்சுற்றி ரகசியக் காவலர்கள் சாதாரண உடையில் 24 மணி நேரமும் கண்காணித்தபடி இருந்தனர்.
எப்படியும் இந்தியாவிலிருந்து வெளியேறிவிடவேண்டும் என்று நேதாஜி தீர்மானித்தார். வெளிநாடு செல்ல உதவுவதாக, அவருடைய நண்பர்கள் சிலர் வாக்களித்தனர்.

26 ஜனவரி, 1941 அன்று இரவிலிருந்து நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவருடைய அறையில் காணப்படவில்லை என்றும் இருப்பிடம் பற்றி இதுவரை தகவல் எதுவும் கிடைக்கவில்லை என்றும் தகவல் வெளியிடப்பட்டது.

1941 ஆம் ஆண்டு ஜனவரி 15 ஆம் நாள் நேதாஜி ஒரு முஸ்லிம் போல் தாடி வைத்துக்கொண்டு, மாறு வேடத்தில் தப்பிச்சென்றார். ஒரு காரில், கொல்கத்தாவிலிருந்து தொடர்வண்டியில் இரண்டாம் வகுப்பில் பயணம் செய்தார். பெசாவர் நகரை (தற்போது இது பாகிஸ்தானில் உள்ளது) அடைந்து இந்தியாவின் எல்லையைக் கடந்தார்.

பின்னர் ஆப்கானிஸ்தான்
சென்றார். அங்கு இத்தாலி நாட்டு தூதரக அதிகாரிகளுடன் நேதாஜி தொடர்பு கொண்டு இத்தாலிக்குச் செல்ல அனுமதி வாங்கினார்.ரஷ்யா வழியாக இத்தாலிக்குச் செல்ல வேண்டும் என்பது நேதாஜியின் திட்டம். ஆனால் எதிர்பாராதவிதமாக ஜெர்மனிக்கு வருமாறு ஹிட்லரிடமிருந்து அழைப்பு வந்தது. அதை ஏற்ற நேதாஜி, தொடர்வண்டி மூலம் மாஸ்கோ சென்று அங்கிருந்து ஜெர்மன் தலைநகரான
பெர்லினுக்குப் போய்ச்சேர்ந்தார். அவர் ஜெர்மனி வந்து சேர்ந்த செய்தியை மார்ச் 28-ந்தேதி ஜெர்மனி பத்திரிகைகள் வெளியிட்டன.

அப்போதுதான், அவர் இந்தியாவில் இருந்து மாறுவேடத்தில் தப்பிச் சென்ற விஷயமே பிரிட்டானிய அரசுக்குத் தெரிந்தது.ஜெர்மனியில் நேதாஜிக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. ஹிட்லரை நேதாஜி சந்தித்துப்பேசினார். இந்தியாவின் விடுதலைக்கு முழு ஆதரவு தருவதாக ஹிட்லர் உறுதி அளித்தார்.
இரண்டாம் உலகப்போரில் ஜெர்மனி, இத்தாலி தோற்கடிக்கப்பட்டு அச்சு நாடுகள் சார்பில் ஜப்பான் மட்டுமே போரில் இருந்தது ஜப்பான் ஆதிக்கத்தின் கீழ் இருந்த மஞ்சூரியா மேல் ரஷ்யா படையெடுத்து அதை ஆகஸ்ட் 9-20, 1945 வரை நடந்த போரில் முழுமையாக கைப்பற்றிக்கொண்டது.
பாங்காகில் இருந்த ஜப்பானிய தொடர்பு அதிகாரி நேதாஜி பாங்காக்கில் இருந்து டோக்கியோ வழியாக மஞ்சூரியாவை அடைந்து அங்கிருந்து ரஷ்யாவை அடைய ஒத்துக்கொண்டார்.

அதே தினத்தில் தைவானில் வானூர்தி தளத்தில் நடந்த விபத்தில் போஸ் இறந்ததாக அறிவித்தது . ஆனால் தைவான் நாடு அப்படி ஒரு வானூர்தி விபத்து நடக்கவில்லை எனக் கூறி மறுத்தது.
இந்தச்செய்தி, இந்திய மக்களை நிலைகுலையச் செய்தது. நேதாஜி இறந்துவிட்டார் என்பதைப் பலர் நம்பவில்லை. "நேதாஜி இறந்து விட்டார் என்றால், அவர் உடலை ஏன் இந்திய மக்களிடம் ஒப்படைக்கவில்லை?" என்று கேட்டனர். ஆயினும் நேதாஜியுடன் பயணம் செய்து, படுகாயத்துடன் தப்பிய ஹபிப்-வுர்-ரஹ்மான், "நேதாஜியின் உடல் தகனம் செய்யப்பட்டதை என் கண்ணால் பார்த்தேன்" என்று கூறினார். ஆயினும்,பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் முதன்முதலாக மற்றும் பல தலைவர்கள், "நேதாஜி உயிருடன் இருக்கிறார்" என்றே கூறி வந்தனர். சிலர் அவர் துறவி வேடத்தில் இந்தியாவில் வசிப்பதாகவும் சிலர் அவர் சோவியத் ஒன்றியத்துக்குத் தப்பி சென்று விட்டதாகவும் நம்புகின்றனர்.

இந்தியா சுதந்திரம் அடைந்த பின், 1956 ஏப்ரல் மாதம், முன்னாள் பிரதமர் நேரு ஆட்சியின் போது நேதாஜி பற்றிய உண்மைகளைக் கண்டறிய மூவர் கொண்ட ஷாநவாஸ் விசாரணை ஆணையம் அமைக்கப்பட்டது. அந்த ஆணையம் டோக்கியோ, தைவான், பாங்காக் உள்பட பல இடங்களுக்குச் சென்று விசாரணை நடத்தியது. இறுதியில், ஆணையத்தின் மூன்று உறுப்பினர்களில் இரண்டு பேர், வானூர்தி விபத்தில் நேதாஜி இறந்தது உண்மை, டோக்கியோவில் உள்ள புத்தர் கோவிலில் இருப்பது அவருடைய அஸ்திதான் என்று அறிக்கை கொடுத்தனர்.மூன்றாவது உறுப்பினர் சுரேஷ் சந்திரபோஸ் (நேதாஜியின் அண்ணன்) இதை ஏற்க மறுத்து தனி அறிக்கை கொடுத்தார். அதன்படி 1970-ம் ஆண்டு ஜூலை மாதம் முன்னாள் பிரதமர் இந்திரா ஆட்சியின் போது ஓய்வு பெற்ற பஞ்சாப் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி ஜி. டி. கோசலாவைக் கொண்ட "ஒரு நபர் விசாரணை ஆணையம்" அமைக்கப்பட்டது. அவர் ஜப்பான், தைவான் உள்பட பல நாடுகளுக்குச் சென்று விசாரணை நடத்தி, "வானூர்தி விபத்தில் நேதாஜி இறந்தது உண்மை" என்று உறுதி செய்து அறிக்கை தந்தார்.

1999-ம் ஆண்டு முன்னாள் பிரதமர் வாஜ்பாய் ஆட்சியின் போது 'முகர்ஜி ஆணையம்', என மூன்று ஆணையங்கள் நியமிக்கப்பட்டது. இதில் முகர்ஜி ஆணைய அறிக்கை 2006-ம் ஆண்டு மே 17-ம் தேதி நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது. ஜஸ்டிஸ் முகர்ஜி கமிஷன் சமர்ப்பித்த அறிக்கையில் நேதாஜி விமான விபத்தில் இறக்கவில்லை என்றும் சோவியத் ரஷ்யாவிற்குத் தப்பிச் சென்று இருக்கலாம் என்றும் கூறியது. அதனாலும் நேதாஜி மரணம் குறித்து தெளிவான முடிவுக்கு இன்னும் வரவில்லை.

உத்திரப் பிரதேசத்தில் 1985 வரை வாழ்ந்த இந்துத் துறவி பகவான்ஜி அல்லது 'கும்னமி பாபா' என்பது சுபாஷ் சந்திர போஸ் என சிலர் நம்புகின்றனர்.
நான்கு சம்பவங்கள் அத்துறவி போஸ்தான் என நம்பக் காரணமாகின. அத்துறவியின் மரணத்தின் பின், அவரது உடமைகள் நீதிமன்ற உத்தரவின்படி உடமையாக்கப்பட்டன. இது பின்பு முகர்ஜி ஆணையத்தினால் சோதனைக்குட்படுத்தப்பட்டன.
துறவி மரணமானதும், முகம் அமிலம் மூலம் சிதைக்கப்பட்டு எரியூட்டப்பட்ட சம்பவம் ஐயப்பாட்டிற்குக் காரணமாகியது. கையெழுத்தியல்
நிபுணர் பி. லால் வாக்குமூலத்தில் பகவான்ஜி மற்றும் போஸின் கையெழுத்துக்கள் ஒத்துப் போயின என்றார்.
ஆயினும், முகர்ஜி ஆணையம் மேலதிக சான்று வேண்டுமென அதனை நிராகரித்த அதேவேளை, இந்திய அரசின் போஸின் இறப்பு 1945ம் ஆண்டில் நடைபெற்றது என்ற பார்வையையும் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே, பகவான்ஜிதான் போஸ் என்ற நம்பிக்கை மேலும் வலுப்பட்டது.
இதன் மர்மம் அல்லாஹ்வே அறிவான்
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 14

யாசர் அரஃபாத் - (பலஸ்தீன சிங்கம்)



( Yasser Arafat) என்று பரவலாக அழைக்கப்படும் முகம்மது யாசிர் அப்துர் ரஹ்மான் அப்துர் ரவூப் அரஃபாத் அல்-குத்வா அல்-ஹுசைனி (ஆகஸ்டு 24, 1929 – நவம்பர் 11, 2004)

அரபாத் கெய்ரோ, எகிப்தில் பாலஸ்தீன பெற்றோருக்கு பிறந்தார்.அவரது தந்தை, அப்தெல் ரௌஃப் அல் குட்வா அல் ஹூஸ்சைனி,அவரது தாயார், ஜாஹ்வா அபுல் சவுத். அரபாதின் தந்தை தனது பரம்பரை குடும்ப நிலங்களுக்கான உரிமைக்காக போராடினார். ஏனெனில் 25 ஆண்டுகளாக எகிப்திய நீதிமன்றங்களில் வழக்கு நடைபெற்றுக்கொண்டிருந்தது.ஆனால் அராபத்தின் தந்தை வெற்றியடையவில்லை.பின் சாகினி மாவட்டத்தில் ஒரு ஜவுளி வியாபாரத்தில் பணியாற்றிக்கொண்டிருந்தார் அராபத்தின் தந்தை.அரபாத் ஏழு குழந்தைகளில் இரண்டாவது இளம் மகனாக பிறந்தார். 1933 ல் அரபாத் நான்கு வயதாக இருந்த போது அவரின் தாய் சிறுநீரக நோயால் இறந்தார்.

பலஸ்தீன விடுதலை இயக்கத்தின் தலைவராக செயலாற்றியவர் "அபூ அம்மார் " என்று அவரது ஆதரவாளர்களால் அழைக்கப்பட்டார்.
1994 இல் அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற மூவரில் ஒருவர் அரபாத் சுயநிர்ணய-பாலஸ்தீனம் என்ற பெயரில் இஸ்ரேலுக்கு எதிராக மிகவும் வலிமையான போராட்டம் நடத்தியவர் அவர் இஸ்ரேல் அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தைகளில் தொடர்ந்து ஈடுபட்டு பல தசாப்தங்களாக நிலவிய மோதலுக்கு முடிவு எட்ட முயற்சித்தார்

யாசிரின் மரணம் தொடர்பாக பல கருத்துகள் கூறப்பட்டன. அதில் மிக முக்கியமானதாக இருப்பது நச்சு உட்கொண்டார் என்னும் காரணம் ஆகும்.மற்ற காரணங்களாக கல்லீரல் நோய், இரத்தத் தட்டுக்களின் சீர்கேடு என பரவலாகக் கூறப்பட்டு வருகின்றது.

2004 ஆம் ஆண்டு அக்டோபர் 25 அன்று திடீரென நோயுற்றதால் கூட்டத்தில் வாந்தி எடுத்தார். துனிசிய , ஜோர்டானிய மற்றும் எகிப்திய மருத்துவர்களின் பரிசோதனைக்குப் பின் இவர் பிரான்சு நாட்டின் ' பெர்சி ராணுவ மருத்துவமனை ' யில் அனுமதிக்கப்பட்ட இவர் நவம்பர் 3 ஆம் நாள் கோமா நிலைக்குச் சென்றார்.நவம்பர் 11 அன்று தனது 75 ஆவது வயதில் அவர் இறந்துவிட்டார்.
கதிரியக்க இயற்பியல் நிறுவனம் மற்றும் நியூயார்க் டைம்ஸ் உட்பட பல ஆதாரங்களின் அடிப்படையில் விஷம் என்று கூறுகின்றனர்.

இவரது இறப்புத் தொடர்பாகச் சந்தேகப்படுவதற்கான காரணிகளைப் பெற்றுக்கொண்ட இவரது மனைவியின் வேண்டுகோளின் பேரில் இவரது ஆடை உட்பட இறப்பின் போது இவரிடமிருந்த பொருட்கள் 2012 இல் சுவிட்சர்லாந்து நாட்டுப் பரிசோதனைக்கூடம் ஒன்றில் வேதியியற் பகுப்பாய்வுக்கு உட்படுத்தப்பட்டன. யாசிர் அரபாத்தின் இறப்புக்குக் காரணம் அவருக்குப் பொலோனியம்-210 நஞ்சூட்டப்பட்டிருப்பதே என்பதை அவ்வாய்வுகள் உறுதிப்படுத்தின.

நஞ்சூட்டியவர்கள் யார் ? என்ற கேள்வி இன்னும் உயிரோடு இருக்கிறது .
அவரது சவப்பெட்டியில் பாலஸ்தீனிய கொடி போர்வையாகச் சூழப்பட்டு 11 நவம்பர் 2004 ல் பிரெஞ்சில் ஒரு சிறிய விழா நடைபெற்றது . ஒரு இராணுவ இசைக்குழு , பிரஞ்சு மற்றும் பாலஸ்தீன தேசிய கீதங்களை

வாசித்தனர். பிரஞ்சு ஜனாதிபதி ஜாக் சிராக் அவரை 'தைரியத்தின் மனிதன் ' என பாராட்டினார். அடுத்த நாள் , அராபதின் உடல் மாநிலங்களில் உள்ள பிரதம மந்திரிகள் மற்றும் வெளியுறவு மந்திரிகளின் பார்வைக்காக வைக்கப்பட்டது.பின் பிரஞ்சு விமானப்படையின் விமானம் மூலம் விமானத்தில் பாரிஸ் இருந்து ஜெருசலெமுக்கு பறந்தது. ரமலாவில் அரபாதை ஒரு " தற்காலிக " கல்லறையில் , 2004 இல் புதைத்தனர்.

இஸ்ரேல் அரசு ஜெருசலேமில் அராபதை புதைக்க மறுத்துவிட்டது .மேலும், இஸ்ரேலிய அமைச்சர் டாமி " ஜெருசலேம் யூத அரசர்களின் புதையிடம் அரபு பயங்கரவாதிகளின் புதையிடம் இல்லை என்று கூறினார். பின் அராபத்தின் கல்லறை முசொலியத்தில் பி.என்.ஏ ஜனாதிபதி தலைமையகத்தில் நவம்பர் 10 , 2007 ல் திறக்கப்பட்டது.
ர.ரா

வித்தியாசமான மரணங்கள் 15

(பிரபாகரன் உயிருடன் இருக்கிறாரா?)



பிரபாகரன் கொல்லப்பட்டுவிட்டது உறுதி என்றால் அவருடைய உடலை ஏன் மரபணு சோதனைக்கு உட்படுத்தவில்லை என்றும், மரண சான்றிதழ் வழங்காதது ஏன் என்றும் கேட்டுள்ளதன் மூலம் மீண்டும் சர்ச்சையைக் கிளப்பி இருக்கிறார், இலங்கை வட மாகாண சபை உறுப்பினர் எம்.கே.சிவாஜிலிங்கம்.
கடந்த 2009ம் ஆண்டு நடந்த ஈழ இறுதிப் போரின்போது, மே 17ம் தேதி, சிங்கள ராணுவத்தினரின் தாக்குதலில்
விடுதலைப்புலிகள் தலைவர் பிரபாகரன் கொல்லப்பட்டுவிட்டதாகச் சொல்லப்பட்டது. அப்போதைய இலங்கை அதிபர் ராஜபக்சேயின் சிங்கள பேரினவாத அரசு,
3 லட்சத்திற்கும் மேற்பட்ட தமிழர்களை கொத்துக் குண்டுகள் வீசி படுகொலை செய்தது.
முள்ளிவாய்க்கால் கடல் பகுதியில் இருந்து அவருடைய சடலம் கண்டெடுக்கப்பட்டதாகவும் இலங்கை ராணுவம் தரப்பில் சொல்லப்பட்டது. எனினும் அவருடைய இறப்பு குறித்து இன்றும் உறுதியான தகவல்கள் எதுவும் வெளியிடப்படவில்லை.
பிரபாகரன் மரணம் குறித்த சந்தேகங்கள் ஆரம்பம் முதலே இருந்து வருகின்றன. இதற்கு சிங்கள அரசின் முந்தைய சில செயல்பாடுகளும்கூட காரணமாக இருக்கலாம். ஏனெனில் ஈழ இறுதிப்போருக்கு முன்பே, ஐந்து முறை பிரபாகரன் மரணம் அடைந்துவிட்டதாக, அவரை கொன்று விட்டதாக சிங்கள ராணுவம் பூச்சுற்றி வந்தது.
ஒருமுறை, மாத்தையாவுடன் ஏற்பட்ட மோதலில் பிரபாகரன் கொல்லப்பட்டு விட்டதாகவும், மக்கள் அஞ்சலி செலுத்துவதற்காக உடல் கிடத்தப்பட்டு உள்ளதாகவும் கூட சிங்கள ராணுவம் தரப்பில் செய்திகள் வெளியானது. பிரிதொருமுறை, சுனாமியில் பிரபாகரன் அடித்துச் செல்லப்பட்டதாகக் கூட அந்நாட்டு அரசுத் தரப்பு செய்தி பரப்பியது.
சிங்கள பேரினவாத அரசின் இதுபோன்ற கட்டுக்கதைகளால், இப்போதும் பிரபாகரன் மரணம் குறித்த செய்தியின் மீது போதிய நம்பகத்தன்மை பொதுவெளியில் இன்னும் ஏற்படவில்லை. அதற்கு ஏற்றால்போல் தர்க்க ரீதியாக பல்வேறு சந்தேகங்களும் எழுகின்றன.
இந்த சந்தேகங்கள் குறித்து, தமிழர் தேசிய இயக்கத் தலைவர் பழ.நெடுமாறனும் கேள்வி எழுப்பி இருந்தார். அவர் முன்வைக்கும் சந்தேகங்கள் இவைதான்...

ஈழ இறுதிப்போரின்போது பிரபாகரன் கொல்லப்பட்டுவிட்டது உறுதி எனில், சர்வதேச ஊடகங்கள் முன் பிரபாகரனின் உடலை காட்டாதது ஏன்?

ராஜிவ் கொலை வழக்கில் தேடப்படும் குற்றவாளியாக பிரபாகரன் அறிவிக்கப்பட்டு உள்ளார். பொதுவாக குற்றாச்சாட்டுக்கு உள்ளான ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய மரண சான்றிதழ் பெறப்பட்டு, நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்பட வேண்டும். ஆனால், சிங்கள அரசு இன்னும் பிரபாகரன் இறப்பு சான்றிதழ் வழங்காதது ஏன்?

பிரபாகரன் உடலுக்கு மரபணு சோதனை (டி என் ஏ டெஸ்ட்) நடத்தியிருக்க வேண்டும். அவ்வாறு மரபணு சோதனை நடத்த வேண்டும் என்றால், பிரபாகரனுடைய பெற்றோர் அல்லது பிள்ளைகளின் ரத்த மாதிரி சேகரித்து அதனுடன் ஒப்பிட்டுப் பார்த்துதான் சோதனை நடத்த முடியும். இறுதிப்போர் நடந்த காலக்கட்டத்தில் பிரபாகரனின் பெற்றோரும் இலங்கையில்தான் இருந்தனர். ஆனால் அவர்களிடம் இதுவரை ரத்த மாதிரிகள் எடுக்கவே இல்லை.

ஏற்கனவே தாணு உடலை மரபணு சோதனை செய்த மருத்துவர் சந்திரசேகரன், இலங்கையில் மரபணு பரிசோதனை செய்வதற்கான வசதிகள் இல்லை என்றும், அதுபோன்ற சோதனைக்கு அவர்கள் சென்னைக்குதான் வர வேண்டும் என்றும் சொல்கிறார். மேலும், ஒரே நாளில் மரபணு சோதனை நடத்திவிட முடியாது. அதற்கு குறைந்தபட்சம் 10 நாள்களாவது ஆகும்.
பிரபாகரனை ஒழித்துக் கட்டுவதற்காக இலங்கை ராணுவத்தில் 3 லட்சம் வீரர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது. பிரபாகரன் கொல்லப்பட்டுவிட்டதாகச் சொல்லி பல ஆண்டுகள் ஆகியுள்ள நிலையில், இப்போது புதிதாக ஒரு லட்சம் வீரர்கள் அந்நாட்டு ராணுவத்தில் சேர்க்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு இந்திய அரசு பயிற்சி அளித்தது.
இதையெல்லாம் வைத்துப் பார்க்கையில், பிரபாகரன் உயிருடன் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் அதிகம் என்கிறார் பழ.நெடுமாறன். இக்கருத்தை அவர் ஆரம்பத்தில் இருந்தே சொல்லி வருகிறார்.
இதற்கிடையே, பிரபாகரன் ரகசிய இடத்தில் பத்திரமாக இருப்பதாகவும், தனி ஈழத்திற்கான ஐந்தாம் கட்டப் போரை அடுத்த ஆண்டு (2018) நடத்த தயாராகி விட்டதாகவும், அதற்காக 14 நாடுகளிடம் உதவிகள் கோரியிருப்பதாகவும் தகவல்கள் வெளியாகி இருக்கின்றன. இதுபோன்ற தகவல்களில் எந்தளவுக்கு உண்மை என்பது தெரியவில்லை.
அதேநேரம், இலங்கையின் வடக்கு மாகாண சபை உறுப்பினரும், தமிழ்த்தேசிய கூட்டமைப்பின் தலைவருமான எம்.கே.சிவாஜிலிங்கம் பிரபாகரன் குறித்த சில சந்தேகங்களை எழுப்பி உள்ளார்.
அவர் இலங்கையில் உள்ள ஒரு தனியார் ஊடகத்திற்கு அண்மையில் அளித்த பேட்டியில், "இலங்கை யுத்தத்தின்போது விடுதலைப்புலிகள் தலைவர் பிரபாகரன் உயிரிழந்துவிட்டதாக அரசாங்க தரப்பினரால் காட்டப்பட்ட உடலம், தலைவர் பிரபாகரனுடையது இல்லை என்று பலமுறை பகிரங்கமாக கூறியிருந்தேன். இதன் காரணமாக பல்வேறு நெருக்கடிகளுக்கு முகம் கொடுக்க நேரிட்டது.
குறித்த விடயம் தொடர்பில் இதுவரை ஏன் மரபணு சோதனை நடத்தவில்லை என கோரியிருந்தேன். உடனடியாக செய்வதாக கூறி இருந்தார்கள். ஆனாலும் இதுவரை மரபணு சோதனை நடத்தப்படவில்லை. அத்துடன், மரணச் சான்றிதழ்கூட இன்று வரையிலும் வழங்கப்படவில்லை.
இன்று கேட்டால், தலைவர் பிரபாகரனுடைய உடல் கடலில் வீசப்பட்டுவிட்டது என்றெல்லாம் கூறுகிறார்கள். ஆகையால் அவர் உயிரிழந்து விட்டார் என்பதை நிரூபிக்கும் வகையிலான ஆதாரப்பூர்வமான தகவல் ஏதும் அரசாங்கத் தரப்பிடம் இல்லை," என்று கூறியிருந்தார்.
இதன்போது, "விடுதலைப்புலிகள் தலைவர் உயிருடன் இருக்கின்றார் என்றால் அதுகுறித்து சிவாஜிலிங்கத்திற்கு தெரிந்து இருக்கக்கூடும் என்று அர்த்தம் கொள்ளலாமா? என்று அந்த ஊடகம் அவரிடம் கேள்வி எழுப்பியது.
அதற்கு பதில் அளித்த அவர், "விடுதலைப்புலிகள் தலைவர் பிரபாகரன் ஏன் எனக்கு சொல்லாமலே அவர் உயிருடன் இருக்கக் கூடாது. அவர் எனக்கு சொல்ல வேண்டும் என்ற அவசியமும் கிடையாது.
சிங்கள மக்களை பொறுத்தவரையில் பிரபாகரன் ஒரு குற்றவாளி. அவருக்கு 200 ஆண்டுகள் சிறை தண்டனை
விதிக்கப்பட்டு உள்ளது. நீங்கள் நினைத்து இருந்தால் அவரின் உடலை கொழும்பில் கொண்டு வந்து காட்சிப்படுத்தியிருக்க முடியும். ஆனாலும் ஏன் அவ்வாறு செய்யவில்லை? என்றும் சிவாஜிலிங்கம் கேள்வி எழுப்பியுள்ளார்.
சிவாஜிலிங்கத்தின் இந்த பேட்டி, இலங்கை ஊடகங்களிலும், சமூகவலைத்தளங்களிலும் வைரல் ஆகியுள்ளது.
பிரபாகரன் உயிருடன் இருக்கிறாரா?
ர.ரா

